(இ-ள்.) இரண்டுவெம்மிசத்தாருக்குஞ் சுவர்க்கமுண்டாகும்படி யோமாகுதி செய்விக்காதவனுஞ் சோராதசபையிற் சேர்ந்து புசித்த பிராமணனுங் கள்ளருந்தும் பெண்களை மருவினவனும் அழிந்த பிராமணன்வீட்டில் அன்னமுண்ட மௌடீகனுஞ் சூத்திரர்கள்வீட்டில் போசனம் பண்ணுகின்றவனும்.—எ-று. (௩௨)

இவரிவர்மதுபானங்கொண் டிழிந்தவரனையரார்த்தக்
கவருறுபாவம்யாவுங் கன்னியோர்பாகனை
சிவகிரிச்சிறிதேகாண்கத் தீயுறுமரக்குபோன்றுந்
தவகயிலாயந்தன்னைச் சார்ந்துசாயுச்சஞ்சேர்வார்.

(இ-ள்.) மறறிவர்களெல்லாங் கட்குடிக்கிற நீசர்களுக்குச் சமானமானபாவிகள் இவர்களைப்பிடித்த பழையவினைகளெல்லாம் உமையொருபாகன் எழுந்தருளிய சிவமலையைச் சிறிதுகண்டால அக்கினியிலிட்ட அரக்குபோலும் அவர்கள்பாவங்கள் விமோசனமாகி கயிலாய பதவியிற் சேர்வார்கள்.—எ-று. (௩௩)

நீங்கருமாபாவத்தி னிலைமையான் மூடர்ந்த
மாங்கருகிரையநந்தன்னி லணுருறும்புழுக்கண்மூளை
யோங்கியவுதிரமுன்று யுறுசலமலாதிதன்னை
யாங்கவர்மீள்வா தீநு பகலுமம்மலையைக்கண்டால்.

(இ-ள்) நீராத மகாபாதகங்களையுடைய மூடர் வர்த்தமானங்கள் எமலோகத்தில் நரகவேதனை பார்க்கக்கூடாத அரிய கிருமிகள் மூளைகள் நிறைந்த விரத்தங்கள் இவைமுதலாகிய சலமலாதி நரகங்களில் அழுந்தி வேதனைப்படுகிற பேர்களுடைய பாவங்களுந் தீரும் திரு நாககிரியைத் தரிசித்தால்.—எ-று. (௩௪)

பாவஞ்செய்தாரைவேலாற் பகைத்திடக்குத்துமாறுந்
தாவியவுதிரக்கூபந் தனில்விழத்தள்ளுமாறு
மேவனலுலிலிட்டு மிடித்தவுதிரத்தங்கொள்கென்
றேய்வறவடிக்குமாறு முபர்புழுவூட்டுமாறும்.

(இ-ள்.) அப்படி மகா பாதகஞ்செய்தவர்களை கூரிய வேல்களால் பகைகுத்துகிறதும், ஓயாமல் இரத்தக்கிணற்றிற் றள்ளுகிறதும், அக்கினி உரலிலேயிடித்து இரத்தங்குடிக்கும்படி ஓயாமலடிக்கிறதும் மிகுந்த புழுக்களை வூட்டுகின்னுஞ் சொல்லுகிறேம்.—எ-று. (௩௫)

நாய்த்தசையருத்துமாறும் நடுங்கனற்பொருத்துமாறுங்
காய்ப்புறுமணலைக்கொட்டுங் கதனமுங்கனல்கூரெண்ணெரய்
வாய்ப்புகவூற்றுமாறும் வைத்தகற்காணத்திட்டு
தேய்ப்பறவாட்டுமாறுந் திரிகையிற்றிரிக்குமாறும்.

(இ-ள்.) செத்தநாய் மாமிசத்தைத் தின்னச்செய்கிறதும், நடுநடுங்க நெருப்பிற்றள்ளுகிறதும், காய்ந்தமணலை மேலேகொட்டுகிறதும், எண்ணெயைக் காய்ச்சிக குடிக்கப் புகட்டுகிறதும், வயிரக்கற் செக்கிலேயிட்டு தேகங்களைய ஆட்டுகின்றதும், திரிகையிலிட்டு வரைக்கின்றதும்.—எ-று (௩௬)

அங்கமீதிரும்வாளா லறுப்பதும்வாளால்வெட்டும்
பங்கமுஞ்சூலங்கொண்டு பதைத்திடக்குத்துமாறும்
வெங்கயமுன்னற்போகும் வினையமும்பன்னகங்க
ளெங்குமேற்கடிக்குமாறு மெரிபுகைகுடிக்குமாறும்.

(இ-ள்.) உடம்பைக்கொண் டறுப்பதுவும், வாளாயுதங்களால் வெட்டிப் பங்கப்படுத்துகிறதும், சூலங்களைக்கொண்டு குத்துகிறதும், வெவ்விய யானையின்காலில் போடுகிறதும், பாம்புகளைவிட்டுக் கடிப்பிக்கிறதும், அக்கினிப்புகையை விழுங்கும்படிச் செய்கிறதும்.—எ-று. (௧எ)

நவதுவாரத்திற்சார நசியம்பெய்திழுக்குந்தீங்கு
மூவர்த்துடற்றசையைத்துண்டித் தருகனலுய்த்துந்தீங்குஞ்
சிவத்துருவுடலைக்கட்டி தீப்பதுமிலிங்கபீசங்
கவைத்தனலிரும்பின்கட்டி கட்டிவிட்டழுத்துமாறும்.

(இ-ள்.) பாவிகளுடம்பி லொன்பதுதுவாரங்களிலும் நசியங்களைவிட்டுக் கீழே யிழுக்கிற தீமையும், சதைகளைத் துணடுதுண்டாய் நறுக்கி யிடுகெகிப் பிடித்து எரிகிற நெருப்பிற் காய்ச்சுகின்ற கொடுமையும், குண்டுமிணடாய்கட்டி உடம்பு சிவப்பாக த தியிற்றீய்க்கிற உபத்திரவமும், பீசங்களிற் காய்ந்த இரும்புக்கட்டியைக்கட்டி தொங்கவிட்டு அழுத்துகின்றது முதலான வனேகவேதனைகள உணடு.—எ-று.(௧அ)

இப்படியனேகம்பின்னு மிருவகைப்பாவத்தார்க்கு
மெய்ப்படிநரகவாதை மெல்லியல்பாகம்நீங்கா
வப்பணிசடையான்சேயோ டமர்ந்துறைநாகவெற்பிற்
பைப்படிதனிற்கண்டாலிப் பாதகம்பறந்துபோமால்.

(இ-ள்.) இந்தப்பிரகாரம் அளவில்லாத வேதனைகள் இரணடுபெங்கிலுமிருகியாகும், நரகவேதனைப்படுகிற பாவிகளெல்லாங்கொன்றைமாலையைத் தரித்த அர்த்தநாரீஸ்வரரும், குமாரசுவாமியும், பிரியாமல் எழுந்தருளிய கிரியைக்கண்டால்மேற்சொன்ன பாவங்கள்போம்.—எ-று. (௧௯)

யாகமூன்றுளதாஞ்செய்யு மியாகமீண்டிடையூறுற்றால்
நாகபொற்கிரியைக்காண நல்குமப்பலன்பொன்னாட்டி
லேகியிந்திரன்போகத்தை யெய்துவர்திண்பார்பொன்மின்
பாகதானங்களீயும் பலனுமவ்வரையிலுண்டாம்.

(இ-ள.) சொல்லப்பட்டயாகங்களி லிஷ்டமானதைநினைத்துச் செய்கிற யாகங்களில் இங்ஙன மத்தியி லிடையூறுவந்தால் கலக்கமில்லாமல் கிரியைக்கண்டு தெரிசித்தா லந்த யாகப்பலனைப் பெறுவார்கள். தெய்வலோகத்திற்சென்று இந்திரபோகத்தை யனுபவிப்பார்கள். திண்ணிய பூமிதானம், சொர்னதானம், கன்னிகாதானம், அன்னதானங் கொடுக்கின்ற பலன்களு மந்தக் கிரிதரிசனத்தி லுண்டாம்—எ-று. ()

திங்களாகாரஞ்சாந்தி ராயணம்பண்ணார்நண்ணி
லங்கதின்பலன்களீயு மவர்க்குயர்பதமுண்டாக்குந்
தங்குமாசெபங்களோமந் தன்மயாகங்கள்செய்வான்
பங்குறச்செய்விப்பானப் பலன்கிரியிரட்டிநல்கும்.

(இ-ள்.) சோமவாரதினத்தில் நிச்சலமானவிரதம் சாந்திராயணவிரதஞ் செய்யாதவர்கள் நாககிரியைச் சென்று தரிசித்தால் அந்தந்த விரதபலன்களைக் கொடுக்கும், அவர்களுக்குத்தக்க பதங்களுண்டாகும், யாவராயினும் ஓமம், தர்மம், யாகங்கள் செய்வாராயினுஞ் செய்விப்பாராயினும் அவர்களுக்கு அந்த யாகபலன்களிரண்டுபெங்கு அதிகமாகத்தரும்.—எ-று. (௬௧)

யர்தொருபொருளேியெண்ணு திறைஞ்சுவார்க்கினியமுத்தி
மாதொருபாகனிங்கார் மகிழ்வுடன்வழங்குங்கண்டார்க்
கோதுமுற்றறுமெல்லா மொன்றொருகோடியாகும்
வாதமர்க்கெழுவார்காணில் வரும்பகையகற்றிவாழ்வார்.

(இ-ள்.) யாதொரு பொருளையுங்குறியாமல் நாககிரியைத் தரிசித்துத் தொழுகின்றவர்களுக்குப் பேரின்ப மோட்சமுடனே வுமையொருபாகம் பிரியாத சிவனது கிரியினிடத்தில் தானேயுண்டாகுங் கண்டவர்களுக்கெல்லா மேற்கூறிய தருமங்களெல்லா மொன்று கோடிபுண்ணியங்களாக விர்த்திக்கும், வாதுசெய்து அமர்புரிகின்றவர் அந்தமலையக்கண்டு வணங்கினர்களாகிற் பகையசற்றி வெற்றியுள்ளவராய் வாழ்வார்கள்.—எ-று. (௬௨)

தவம்பணிவிரதபேனைச் சாத்திரமனந்தவேதம்
நவங்கொள்மாமந்திரார்த்தம் நல்கியபலனுமற்றைச்
சிவன்புணர்நாகவெற்புத் தெரிசனையுடன்முத்தேசத்
துவந்துறைபதங்கடம்மி லுற்றனவுதவுமாலோ.

(இ-ள்.) தவங்கள்செய்வதிலும், திருப்பணிசெய்வதிலும், விரதங்க ளனுஷ்டிப்பதிலும், சாத்திரபுராண பாராயணஞ் செய்வதிலும், அளவில்லாத வேதாகமங்கள் கற்பதிலும், புதுமையாகிய மந்திர தந்திர கர்மங்கள் செய்வதிலும். அவைகள் கொடுக்கப்பட்ட பலன்களைப்பார்க்கிலும் அதிகபலன்களாகுங் கடவுளெழுந்தருளிய திருநாககிரித் தரிசனமானவுடனே; திரிலோகங்களி லின்பமாக வமர்ந்திருக்கும் பதங்களில் நினைந்த பலனைக்கொடுக்கும்.— எ-று. (௬௩)

வேதியர்கண்டநான்கு வேதஞ்சாத்திரங்களாறு
மோதியுங்குணர்ந்துபின்ன ருயர்பிரமத்திற்சேர்வார்
பூதலவரசரேற்பார் புரந்துபோர்புரிந்துவென்றி
நாதராய்சுவர்க்கஞ்செல்வார் நாகபொற்கிரியிற்றேற்றம்.

(இ-ள்.) பிராமணர்கள் கண்டுவணங்கினல் நாலுவேதமும் ஆறுசாஸ்திரமுங் கற்றுணர்ந்த வறிவினராய் வாழ்ந்து முடிவி லுசிதமான பிரமபதத்தைச் சேர்வார்கள். பூமண்டலத்தரசர்கள் கண்டுவணங்கினல் திக்குவிசையஞ்செய்து வெற்றியுடையவர்களாகி அந்தியத்திற் சுவர்க்கபதத்திற்சென்று வாழ்வார்கள். திருநாககிரியின் பெருமையாம்.—எ-று. (௬௪)

வணிகர்கண்டிறைஞ்சிப்பொன்னல் வடாதிபனெனலாய்ச்சொற்க
மணிவதுதிண்ணமாந்தர் மலர்விழிக்கண்டுபோற்றின்
மணிதருசெல்வத்தோற்ற மனைவளம்பலவும்பெற்றுப்
பணிமலையமக்குநல்கும் பலனெனச்சுவர்க்கஞ்சேர்வார்.

(இ-ள்.) வைசியர்கள் கண்டுவணங்கினால் சொர்ன்னங்களால் குபேரனென் னத்தக்கதாய் வாழ்ந்து சுவர்க்கபதஞ் சேர்வார்கள். அது நிச்சயம், சூத்திரர்கள் கண் குளிரக்கண்டு வணங்கித் துதிசெய்வார்களாகில் நவரத்தின நிழல்சாயச் செல்வம் பெருகி மனை வளங்கள் பலவும்படைத்து வாழ்ந்து தேகாந்தியத்தில் திருநாககிரி எ ங்களுக்குச்செய்த வுபகாரமிதுவென்று சுவர்க்கபதஞ் சேர்வார்கள்.—எ-று. (சரு)

விதவையர்போற்றிலங்த விதவைதன்பிறப்புநீங்கி
யுதவுநற்கொழுநனோடு மொழிவிலாதிணங்கிவாழ்வார்
விதவெழிற்கன்னிகாண விரும்புநற்காந்தன்சேர்ந்து
மதனடிபரவவாழ்ந்து வான்கயிலாயம்வாழ்வார்.

(இ-ள்.) பின்னையு மந்தநாககிரியை அமங்கிலிகள் கண்டு வணங்கிப்போவார் களாகில் அந்ததேகம்போய் மறுசென்னத்தில் மணர்ந்துகொண்ட பத்தாவுடனே கூடிவாழ்ந்து அழகிய பதத்தைச் சேர்வார்கள். கன்னிப்பெண்கள் கண்டுவணங்கி னால் மனதுக்கிஷ்டமான புருஷனுடன் வாழ்க்கைப்பட்டு, மன்மதனேவல் செய்யப் பிரியாமல் உசிதமான கயிலாயத்தில் சுகமாக வாழுவார்கள்.—எ-று. (சசு)

வறியவர்சிறிதேநோக்கி வணங்கிலவ்வடபாற்சென்று
செறிதனவியக்கர்வேந்தின் சித்திரவிமானங்கொள்வா
ருறுவயதனந்தம்வேண்டி லுருவரனபிலாதுகாண்பா
ரறிவினிற்கண்டார்பேறுற் றவரிருமையினும்வாழ்வார்.

(இ-ள்.) தரித்திரவான்களானவர்கள் பணிமலையைச் சற்றேகண்டு வணங்கினார் களாகில், வடதிசை யளகாபுரியிற்சென்று மிகுந்ததனத்தையுடைய குபேரனது புட் பகவிமானத்தையுங் கைக்கொண்டு இடைவிடாமல் ரூபத்தியானத்துடனே இருதய த்தில் ஞானவறிவினால் காட்சியோடும் அவர்களிம்மை மறுமை இரண்டிலும் பே றுபெற்று வாழ்வார்கள்.—எ-று. (சஎ)

முருகனுமங்கைபாக முதல்வனுமுளைத்தவெற்பை
யருகுறக்கண்டோர்பாவ மகலுமாறிதற்கொப்பெண்ணி
லிரவிமுன்னிபங்களென்ன யிழிகலையிந்துமன்ன
முரியுரிப்புயங்கமாயு மொழிவிலாப்பாவநீங்கும்.

(இ-ள்.) கந்தசுவாமியும் பரமசிவனு முளைத்தெழுந்தருளிய சிவகிரியைச் சமீப த்திற்கண்டு தெரிசித்து வணங்கினபேர்களுடைய பாவங்கள் தீரும்வகை யவற்றிற் கு உபமானம் எப்படியென்றால், சூரியன்முன் னெதிர்ந்த பனி நீங்குவதுபோல வும் ஒவ்வொருகலையாய்த் தேய்கின்ற சந்திரனைப்போலவுந் தீராத பாவங்களெல் லாந் தீரும்.—எ-று. (சஅ)

காண்டகுதருமங்கூறிற் கனைகடன்மணிகள்போன்று
மீண்டிறம்பிறையைபாயு மெழுபுனற்கங்கைபோன்றும்
வேண்டருங்கயிலைவெற்பில் விளைந்தசெந்தேனைநேர்ந்தும்
பூண்டரன்பாகமான்செய் பெருத்தவெற்புதவுசீலம்.

(இ-ள்.) உமையொருபாகனும் முருகவேளும் பிரியாமல் அமர்ந்திருக்கின்ற அ ரவகிரி தரிசனத்தின் மகிமையைக் காணத்தக்க பக்தர்கள்செய்கின்ற தன்மதானம்

ஒன்று நூறாய் விர்த்தியாகும், அதற்கிணை யாதெனில் ஓசையையுடைய சமுத்திரத்தில் மணிகளைப்போலவும் நாளுநாளும் ஒவ்வொருகலையாய் வளருகின்ற மூன்றாம் பிறையைப்போலவும், செழுமையையுடைய கங்காநதி சலத்தைப்போலவும், வேண்டிய வரங்களைத்தரப்பட்ட கயிலைமலையில் விளைகின்ற தேனைப்போலவும் வளர்ச்சியுண்டாய் மென்மேலும் விர்த்திக்கும்.—எ-று. (சகூ)

தேனுவுந்தருவுஞ்சிந்தா மணியுமச்செங்கோட்டீசன்
றானுக்கிடத்திலெல்லாந் தருநமக்கெனவாங்கெய்தி
மானிதியாவரோனு மழைதானியந்தூசங்கன்
போனவர்க்களித்தார்நாலா யிரமுறைபோய்விண்சேர்வார்.

(இ-ள்.) அந்தத் திருச்செங்கோட்டுமலையில் சுவாமி எழுந்தருளியிருக்கின்றமையால் நம்மைப்போலொத்த முனிவர்களுக்கு வேண்டிய இஷ்டகாமியார்த்தங்களைக் கொடுக்கவேண்டுமென்கிற கருணையினால் காமதேனு, கற்பகவிருட்சம், சிந்தாமணி, சூடாமணி முதலாகியதும் அங்ஙனம் வந்துசேர்ந்து உதவிசெய்யும், இந்தப் பூமியில் யாவராயினு மங்ஙனஞ்சென் றவர்களுக்குச் சொர்ன்னதானம் வஸ்திரதானம் போசனவர்க்கங்கள் முதலாகியதும் கொடுத்தபேர்களுடைய வமிசத்தில் நாலாயிரந்தலைமுறை யுள்ளவர்களாய் சுவர்க்கபதவி அடைவார்கள்.—எ-று. (௫0)

கோதையிற்றனதுகோதை கூடவிலிருந்தோமஞ்செய்
மாதவர்தனக்குத்தானம் வழங்கியாயிரம்பத்தஸ்வ
மாதியமேதையாக மருளியபலன்களாகு
மோதுமிங்கிவனைக்காண்பா ருறுந்துலாவருடதானம்.

(இ-ள்.) யாதாமொருவர் கோதைமலையில் தனது மனைவியுடனேகூட மனையிலிருந்து துடங்கிய ஓமங்கள்செய்கின்ற மகா தபோதனர்களுக்குத் தானஞ்செய்தால் பதினாயிர மஸ்வமேத யாகபலனும் இன்னுமனந்த பலன்களுமுண்டாகும், அவர்களைக்காண்பவர்கள் துலாவருடதானஞ் செய்தபலன்க ளுடனே பெறுவார்களென்று வேதங்கள்சொல்லும்.—எ-று. (௫க)

மேயவெவ்வண்ணத்தேனு வியன்பணிமலையைப்போற்றி
லாயிரம்பிரமஹத்தி யகனறிடுங்கயிலைவாழ்வார்
யேயமெய்த்தியானநதான மியாகமாதவஞ்செய்தார்க்கு
மாயநாலுகத்துஞ்சொர்க்க மாமஃதருளுங்கண்டால்.

(இ-ள்.) எவ்விதமாகிலும் அந்தகிரியை யாவர் கண்டுவணங்கித் துதிசெய்தார்களாயினும் ஆயிரம் பிரமஹத்தி தோஷங்களும் நிவர்த்தியாகி அந்தியத்தில் கயிலைமலையைச்சேர்ந்து வாழுவார்கள். அவரவர்களுக் கிசைந்தபடி தானங்கள், யாகங்கள், அரியதவங்கள் செய்தவர்களுக்கு நான்குயுகத்திலுஞ் சுவர்க்கலோகபோகமுண்டாகும், இவையாவும் கிரிதரிசனத்தின் மகிமையாம்.—எ-று. (௫உ)

பணிமலைச்சருக்கங்கேட்போர் படிப்பவர்படித்தோர்க்கின்பந்
தணிவரச்செய்வோர்மங்கை தனதொருபாகம்நீங்கா
மணிமுடிச்சடையான்வேற்சேய் வரம்பலபடைத்துவாழ்ந்து
திணிதருங்கயிலைவாழ்வார் சிறப்புளர்பிறப்பிலாதார்.

(இ-ள்.) இந்தத் திருநாககிரிச் சருக்கத்தைக் கேட்பவர்களும், படிப்பவர்களும், படித்தவர்களுக்குச் சந்தோஷங் குறைவில்லாமற் செய்தவர்களும், உமையொருபாகம் பிரியாத இரத்தினமயமான சடாமகுடத்தையுடைய அர்த்தநாரீஸ்வரர், குமாரசுவாமி கிருபையினாலே சகல வரப்பிரசாதமும்பெற்று வாழ்ந்து தேகாந்தியத்தில் திண்ணிய கயிலையங்கிரியைச்சேர்ந்து சிறப்புடையவராவார், பிறப்பில்லாதவர்களுமாவார்கள்.—எ-று. (ருரு)

நாககிரிச்சருக்க முற்றிற்று.

பாயிரம் காப்பு உட்பட திருவிருத்தம். அ௦.

---

# கிரிவரலாற்றுச் சருக்கம்.

நாகவரை நானிலந்தனில்வந்தபடி சூதநயமுனிவர் பகருகெனவே, மாகவரமுனிவர் வினவுதலுமவர் மகிழுவனைவரவுசில புகல்வுனெனவே, கோகனகமலரடிவியாதமுனியைத்தொழுது கொம்பிடங் கொண்டுதமையும், போகமலர் கனிவினருள் சிவதிருப்பருப்பதம்போற்றி யருளேற்று மொழிவார்.

(இ-ள்.) இந்தப்பிரகாரந் திருநாசகிரிமான்மியத்தைச் சொல்லக்கேட்டு ஆனந்தப்பரவசத்தையடைந்து அதிசயப்பட்டோம் சூதமுனிவரே அந்த திருநாககிரிவந்தவரலாற்றையுங் கேட்கவேணுமென்று மிகவும் ஆவலாயிருக்கின்றது, தேவரீர்திருவுளம் பற்றியருளவேண்டு மென்று வணங்கினவுடனே அப்படியே சொல்லுகுரேமென்று வேதவியாசருடைய மிருதுவாகிய பாதாரவிந்தங்களைத் தொழுது துதித்து சிவனிடப்பாகத்தில் கற்பகக் கொம்பு தழைத்து போகமாகிய புட்பங்களை கனிவுடனே தருவதாய் விளங்கிய திருநாககிரியைப் போற்றிசெய்து அன்புகூர்ந்து கிரியின் வரலாறு சொல்லத்துடங்கினர் சூதமுனிவர்—எ-று. (க)

தேவரொருதேராக வேதன்விடுபரனெனுச் சிலைமேருவாக புனைநாண்
கோவரவமாகவம் பரியாகவடுகூர் கொடுங்கனலி யாகவேகுந்
துவன்மாருதம் வேகமாகமுப்புரமனற் சுடவெய்தபின்னரணிலம்
பாவனவிராசனெடு பொருதினர்கள்தமது வலிபாருமென மேருவிடையே

(இ-ள்.) தேவர்களெல்லா மிரதமாகவும், பிரமன் சாரதியாகவும், மேருகிரி வில்லாகவும், வாசுகி நாணாகவும், விஷ்ணுவே அம்பாகவம், அக்கினிதேவன் அம்பு முனையாகவும், வாயுவே விசையாகவும் திரிபுரம் அக்கினிப் பிரவேசமாக சிவனெய்து யெரித்தபின்பு நாகராஜன் வாதராஜனுடனே எமது பலத்தைப் பாருமென்று மேருவினிடத்தில் போர்செய்யத் துடங்கினர்கள்.—எ-று. (உ)

சேடனுவாதராஜனுமிகல் புரிந்தமர் செயிர்த்துள மயிற்பதாக
வாடநின்றுயிரம் மணமேரு முறியாயிரங்களி னடுக்கைமூட
நீடநின்றலையலைய வண்டாண்டங்குலைய நிலைமலைகள் கிடுகிடெனவே
வாடமின்றுர கைக்குலமுதிர நிலமதிர மாருதவி ராஜன்மலைய

(இ-ள்.) நாகராஜனும் வாதராஜனு மனக்குரோதங்களுட்னே யுத்தஞ்செய்து வெற்றிதோர்வை தெரிவுதாக நாக னுயிரம்படமு மேருசிகர மாயிரமடுக்கையுஞ் சிக்கெனப்பற்றி மூடிக்கொள்ள கெடிதாக நின்று வாயுவு மோதியடிக்கும்போது, அண்டபகிரண்டங்க ளெல்லாம் அடுக்குகள்குலைய மலைகளும் நிலைபெயர்ந்து கிடுகிடென்று வதிர வொளிமழுங்கி நட்சத்திரங்க ளுதிர பூமியதிர சண்டமாருதமாக மோதியடித்தான் வாதராஜன்.—எ-று. (௫)

முனிவருந்தேவர்களு முனைவாதராசன் முடுக்குபுசெருக்கில்வெருவி
யுனிவருந்தாமலர வரசினையிரத்தலு முளங்கரைந்தரவமேரும்
பனிவருங்கொடிமுடியொராயிரத்தொருமுடி படப்பொருபிலத்துள்வாங்க
த், துனிவருமறுத்தரச னத்தைப்பறிக்கத் துடர்ந்தொடுபறந்ததென்பால்.

(இ-ள்.) இப்படி வாதராஜன் மூடிக்கியடித்த விசைகளில் சகிக்காமல் முனிவர்களுந் தேவர்களு மிகவும்பயந்து யோசனைசெய்து சகலசன வுபத்திரங்கள் தீர நாகராஜனைப் பார்த்து முகமன்கூறி இரந்துகொள்ள, அவருள்ளமிரங்கி மேருசிகர மாயிரத்தில் ஒரு கொடிமுடிபிடித்த படத்தை யெள்ளத்தனை நெகிழ்ந்திவிட ஓசை விசையாலடிக்கின்ற வாதராஜ னந்தச் சிகரத்தைப் பெயர்த்திட விசையினாலே மேருசிகரமொன்று தெற்குத்திசையிற் பறந்துசென்றது.—எ-று. (௬)

ஆயிரம்பணவரவி னோர்பணமுமேருமுடி யோடலைத்தமலவனில
சேயுரம்படவதன் பின்பற்றிநாவலந் தீவுதனில்வீழ்த்திவிடலுந்
றூயரன்னொருநாக கிரியெனவுரைத்தரவ சுடர்முடியின்மணியைந்துமே
வேயுறந்திகழைந்து வெற்புமீசனுமாக மேதினிவிளங்கியுளதால்.

(இ-ள்.) நாகராஜன் ஆயிரம்படத்தி லொருபடமும் மேருசிகரமொன்றோடேகூட வாய்வு பெயர்த்தெடுத் தெறிந்த விசையிற் பின்தொடர்ந்து சென்னிறம்படக் கொண்டுபோய் நாவலந்தீவில் வீழ்த்தியது, அன்றுதொடங்கி நல்லோர்க ளன்புநிறைந்த திருநாககிரியென்றும் பெயராய் விளங்கியிருக்கின்றது. பிரபைபொருந்திய மேருமுடியில் ஐந்துமணி சிதறிவிழுந் தங்கங்கே நிலைமையாக ஐந்துகிரியு மைந்து சிவனுமாக விந்தமண்டலத்தில் விளங்கியிருக்கின்றது.—எ-று. (௭)

மணியுகுஞ்சிகரமுந் துண்டமாயதுசேது மலியிலங்காபுரிமுனீ
ரணிதிருக்கோணமலை யெனவமைந்தனநாக வசலந்தமிழ்க்கொங்கணம்
தணிக்கிரியின்மங்கைபங் காளனும்வேலனு மிருந்துநல்வரமருள்வதாய்ப்
பணியுகமனந்தம் பராவியதுகாந்தப் பரப்புரினுமழிவற்றதால்.

(இ-ள்.) அப்படி மணிகள்சிதறி தெறித்துவிழப்பட்ட மேருசிகரங் காற்றடித்த விசையினாலே மூன்றுதுண்டமாகி தெற்குசமூத்திரத்திலே யொருதுண்டம் விழுந்து அது சேதுபதியைச்சார்ந்த இலங்கைதீவாச்சுது, பின்னொருதுண்டம் திருக்கோணமலையாச்சுது, பின்னொருதுண்டம் தமிழ்விளக்கிய முக்குலத்தரசர்களில் முதன்மையான சோழனுக்குரிய கொங்குநாட்டில்விழுந்து திருச்செங்கோட்டு நாககிரியென்று விளங்குகின்றது. அதில் உமையொருபாகனும் வேலாயுதக்கடவுளும் அமர்ந்திருந்து அனந்த அடியார்களுக்கெல்லாம் வரங்கொடுப்பதாய் தேவர்களருச்சிக்க அனேகயுகமாய்விளங்குகின்றது. அது உகாந்தகாலப் பிரளயத்திலுமழிவில்லாமலிருப்பது.எ-று.

மேருமுடி தருமைந்துமணியிலொருமணியருணை வெற்பாய்மிளிர்ந்ததஃதே
மாரனற்கிரிமணிச் சிகரிபொன்மேருசிலை மலையாம்யுகங்கண்முறையே
பேரனற்கிரிசோண கிரிதேவராயன் பிறங்கலெனவோங்குமலையிற்
காரணவுண்ணாமுலைக் காரணிக்கினியகண் ணுதலிவரெனப்பரவுவார்.

(இ-ள்.) மேருசிகரத்தில் தெறித்துவிழுந்த மணிகள் ஐந்துகிரிகளுமைந்துதல மு மாச்சுதென்று முன்சொல்லியவதனில் ஒன்று சிவப்புமணி ஈசான்யதிக்கில் விழுந்து திருவண்ணாமலை யாச்சுது, நாலுயுகத்திலு முறையே அக்கினிமலை, மணிமலை, பொன்மலை, கல்மலை இப்படியாகி, அருணாசலம் சோணசைலம் அக்கினிமலையென்றும் பெயராகி, அதில் அருணாசலயீஸ்வரரென்றும் உண்ணாமுலையம்மனென்றும் பிரசித்தியாய் எழுந்தருளி யிருக்கின்றார்கள்.—எ-று. (எ)

மரகதமணிச்சிதறி நவகோணமாயது வளதமிழ்க் கும்பனிசையால்
பரவியசுரும்புரு வெடுத்துமதுவபிஷேக பானத்திலர்ச்சித்ததால்
வரவுதிருவீங்கோய் மலைப்பெயர்விளங்குவது மாதுமைமணப்பரமனார்
நரர்வணங்கக்கருணை தருமிரக்கம்புரியும் நாதரெனவோதுமறையே.

(இ-ள்.) ஒரு மரகதமணி கிழக்குத்திசையிலே விழுந்து ஒன்பதுகோணமாக விளங்கியது, தமிழைச்செய்த அகத்தியன் வண்டுருபமெடுத்துப் புட்பங்களில் மதுகிரகித்துச் சிவனுக் கபிடேகஞ்செய்து பூசித்தபடியினாலே திருவீங்கோய்மலை யென்று பெயராய், சிவனுமுமையு மிரக்கம்புரியும் நாதரென்று மலைக்கிழத்தியம்மனென்றும் எழுந்தருளியதென்று வேதங்கள் முறையிடுகின்றது.—எ-று. (அ)

மாணிக்கமொன்றுசூ ரியகிரணமனையவளா வணசிவாயப்பெயர்பெறீஇ
மாணிக்கநாதர்மணி மாணிக்கநடனர்திரு மலையின்கொழுந்தர்சிவதை
மாணிக்கமலைநாத ரந்தியொளிதாங்கினார் மத்யானசொக்கரெனவே
மாணிக்கவடிவர்நா கேசர்முத்தீசர்வடி வாட்போக்கினாரெனவுமே.

(இ-ள்.) பின்னையுமொரு மாணிக்கமணியானது அக்கினிதிக்கில் விழுந்து சூரியப்பிரகாசம்போலு மொளிவிடப்பட்ட மலை, அது வண்மையான சிவாயமலையென்றும் பெயராய் மாணிக்கநாதர், திருமாணிக்கக்கூத்தர்; திருமலைக்கொழுந்தர், சிவதையீசர், மாணிக்கமலைநாதர், அந்தியொளிதாங்கினார், மத்தியானச்சொக்கர், சொர்ன்னமாணிக்கவடிவர், நாகீசுவரர், முத்தீசுவரர், வடிவாட்போக்கினாரென்றும்.—எ-று.

செம்பொற்றியாகனைக் காத்தபரமர்க்கனர் திருமுடியின்றழும்பரிடிபோற்
றம்பொற்பதத்தரா ரங்காட்டினாரரி யர்க்கருளிரத்னகிரியார்
கும்பங்கள்பொரசிவாசி கொண்டவர்சுரும்பார் குழற்கினியகொழுனரெனத்
தம்பண்பிலுண்வேடர் தந்தங்கடந்தவ ரெனத்தலர்ந்தாள்பரவுமால்.

(இ-ள்.) சொர்ன்னத்தியாகருக் கேக்கமணுகாமற் காத்த பரமர், திருமுடித்தழும்பர், இடிவந்துபூசிக்கும் பொற்றாமரைப்பதத்தர், ஆரங்காட்டினார், ஆரியவாசகனுக்குக் கிருபைசெய்தருளிய இரத்னகிரியார், கும்பங்கள் பொரசிவாசிகொண்டவர், சுரும்பார்குழலிக் கின்பமான மணவாளர், பன்றிக்குட்டிக்கு முலையமுதங்கொடுத்தவர், வேடருக்குத் தர்தங்கள் அளித்தவர் என்றிப்படி திருப்பெயர்பெற்றவர்—எ-று.

கொடிமுடிபெயர்ந்ததோர் மணிவச்சிரம்வேணியிற் குளிர்க்கதிர்விரிக்குமதி
போற், கடனுகரகத்தியன் கையிற்றராதலக் கமரினுட்போயஃதினில், வடி
வுடையமங்கைமண வாளனொன்றுலகெண்ண வன்னிநிழலீசனெனவும்,
டவிதனிலினியகா வேரியின்றென்கரை பொலிந்துளதனந்தயுகமாய்.

(இ-ள்.) பின்னையுமொரு வைரமணியானது தெற்குத்திசையில் விழுந்து திருப் பாண்டிக் கொடிமுடியென்றுபெயராகி, தன்சிகரஞ் சந்திரோதயம்போலும் பிரபை விளங்காநிற்குஞ் சமுத்திரபானஞ்செய்த குறுமுனிவன் கைக்கமண்டல சலமாகப் பூமிக்குளமர்ந்தது, அங்ஙனம் வடிவுள்ள மங்கைமணவாளனொன் றுலகந் துதிசெய் துவணவீச வன்னிவனயீசுவரர், மருடீசுவரர் என்றும் பெயராய் பொன்னியாற்றின் றென்கரையில் எழுந்தருளியிருக்கின்றார்.—எ-று. (கக)

நீலமணியொன்றுதென்மேற்றிசைதரித்தனநிலாவலைதைபொதிகையென்பர்
வாலமதிமுடியரன் றிருமணத்தேகுநாள் மலையபாகாயம்விரவப்
பாலுலவுவடநிலம் பாதாளமுறுவதன் பாரத்தைநிகரொன்னவெங்
கோலம்முவாளிகுறுமுனிவனையிருத்தியது குவலயத்தென்றுமுளதால்.

(இ-ள்.) இன்னமொரு நீலமணி நிருதிதிக்கினிற்போய் விழுந்து அது பொதிகைமலையென்று பெயர்பெற்று விளங்குகின்றது, இளம்பிறையைத் தரித்த சடையினையுடைய பரமேஸ்வரன் உமையைத் திருக்கலியாணஞ்செய்ய வெழுந்தருளிய காலத்தில் தேவர்கள் முனிவர்கள் மற்றுமுண்டான சமஸ்தத் திருக்கூட்டங்களும் வடபாற் சேர்ந்தகாலத்தில், பொதிகைமலை உச்சி அண்டமுகடுசேர வடபூமி பாதாளம் புகுவதுகண் டதன்கனத்துக்குச் சமானமென்றறிந்து வெவ்விய மழுவுடைய சிவன் அகத்தியமுனிவனை அங்குயிருக்கும்படி அனுப்பிவைத்தார்.—எ-று. (கஉ)

நாகாசலப்பெய ரனந்தயுகமீதினும் நாகத்தர்முனிவருலகோர்
யோகாவலிற்பணிய வபரிமிதநாமங்க ளுடையவதனிற் சிறிதுயான்
மாகாதவிற்புகல்வ னைமிசாரணியநிறை மாதவர்கள்கேண்மினெனவே
மோகாதரக்கிரி துணித்திடும்பரஞான முனைவச்ரசூதர்மொழிவார்.

(இ-ள்.) இப்படி ஐந்துகிரித்தலமுஞ் சிவனுமாகிய விபரஞ் சொன்னோமே அவைநிற்க, நாககிரியென்று பெயரா யனேக யுகாயுகங்களாய் விளங்குகின்றது, மேலும் திரிலோகங்களிலு முள்ள முனிவரர்களாலும் பூசைபுரிந்து அனேகம் பெயர்க ளுண்டாச்சுது. அவைகளில் சிலது நான் தெரிந்தமட்டும் சொல்லுகிறேன் நைமிசாரணிய முனிவர்களே யென்றார். அதற்கு ஆசையாகிய ஓர்மலையை ஞானமென்னுங் கூரிய குலிசாயுதங்கொண் டறுத்தருளிய சூதமுனிவர் சொல்லத்தொடங்கினார்.—எ-று. (கங)

அத்தநாரிப்பரம ரசலமணிமுருகா சலங்கோதையசலம்ணிசூழ்
முத்துமலைகடகமலை யிடபமலைதுற்கைமலை முத்திமலைசித்தர்மலைவண்
சுத்தகிரிஞானகிரி ரத்னகிரிசோணகிரி ரத்தகிரிபிரமகிரிநீர்
பத்திபெறுதீர்த்தகிரி தன்மகிரிகந்தகிரி பத்மகிரிதேனுகிரியே.

(இ-ள்.) அர்த்தநாரீஸ்வராஸலமென்றும், முருகாஸலமென்றும், அழகிய கோதைமலை யென்றும், மணிகுலவிய முத்துமலையென்றும், கடகமலையென்றும், இடப

மலை யென்றும், துர்க்கைமலை யென்றும், முத்திமலை யென்றும், சித்தர்மலை யென்றும், ஒள்ளிய சுத்தகிரியென்றும், ஞானகிரியென்றும், இரத்தினகிரியென்றும், சோணகிரியென்றும், இரத்தகிரியென்றும், பிரமகிரியென்றும், தீர்த்தகிரியென்றும், தர்ம்மகிரி யென்றும், கந்தகிரி யென்றும், பதுமகிரி யென்றும், தேனுகிரி யென்றும், இன்ன மனந்தம் பேர்களுண்டு.—எ-று. (கச)

திருவேரகந்திருச் செங்கோடுசேடமலை தெய்வமலைசிவமலைவிடா
மருவேறுசஞ்சீவி மலைவாயுமலைவிண்டு மலையிருவர்கூடுமலையாம்
முருவேறுதாருகா சலமரவமிருபாலு முறவணைந்துறுமலைநம்
வருவேதனைப்பரவி மலையுமலைமகவுதவ வந்தமலை யந்தமலையே.

(இ-ள்) திருவேரகமென்றும், திருச்செங்கோடுவென்றும், சேடமலையென்றும், தெய்வமலையென்றும், சிவமலையென்றும், மணம்பொருந்திய சஞ்சீவிமலையென்றும், வாய்வுமலையென்றும், விஷ்ணுமலையென்றும், இருவர் கூடுமலையென்றும், வடிவுயர்ந்த தாருகாசலம் என்றும், பாம்புகள் இரண்டுபக்கமுமழுந்த பிணைந்திணைந்து சிறுமலையென்றும், மேல்வரப்பட்ட பிறப்பசலப் பொருதுமலையென்றும், சந்தானந்தரும் வந்திமலையென்றும், அழகியமலை யென்றும், பின்னையும்.—எ-று. (கரு)

தாருமலைசூதமலை தவமலையனந்தமலை தங்கமலையோகமலைமா
மேருமலைகயிலைமலை சிவனுடைமலைமுனிவர் விரதமலைவேதமலைபொன்
னாரமலையிருடிமலை யமுதமலைசுனைமலை பினேசமலை கூலமலைதண்
கீரமலையுபயமலை யிமயமலைகங்கைமலை சங்கமலைகொங்குமலையே.

(இ-ள்) தாருமலையென்றும், சூதமலையென்றும், தவமலையென்றும், அனந்தமலையென்றும், தங்கமலையென்றும், யோகமலையென்றும், மகா மேருமலையென்றும், கயிலைமலையென்றும், வேதமலையென்றும், சிவனுடைய மலையென்றும், முனிவர் விரதமலையென்றும், பொன்னாரமலை யென்றும், இருடிமலையென்றும், அமுதமலையென்றும், சுனைமலையென்றும், பினேசமலையென்றும், கூலமலையென்றும், தண்ணிய கீரமலையென்றும், உபயமலையென்றும், இமயமலையென்றும், கங்கைமலையென்றும், சங்கைமலையென்றும், கொங்குமலையென்றும், இன்னம் அனேகம்பெயர்களுண்டாயிருக்கும்; அவையெல்லாம் அறிந்து நம்மால் சொல்லமுடியாது.—எ-று. (கசு)

தேனுவரனைத்தொழுது நின்றருச்சிப்பவொரு செயல்திருவுளம்புரியென
ஞானவரனவிலும்வகை நமதைந்துநாடியாய் நமதுபொன் மலைக்குமஃதாய்
ஏனையமதாவிக் கியன்றதாய்மேருவினி லினியமலையைந்துளதுநீ
மாநிலந்தனிலுய்த்து வந்தனைசெய்யெனமிகு வரங்கொடுத்தருளினனரோ

(இ-ள்.) முற்காலத்திற் காமதேனு கயிலாயகிரிக்குச்சென்று பரமசிவனை வணங்கி உம்மைப் பூசிக்கும்படி ஒரு தெய்வத்தலந் திருவுளம்பற்றி யருளவேண்டுமென்று கேழ்க்க, ஞானமூர்த்தியாகிய பரமசிவனார் நமது பஞ்சநாடிகளாயும், நம்முடைய மேருவுக்குச் சமானமானதாயும், நம்முடைய மனதுக்கிசைந்ததாயு மகாமேருகிரியில் பலசிகரங்களில் மேன்மையான கொடிமுடி ஐந்துள்ளது. அவ்வைந்து முடியையும் நீ யெடுத்துக்கொண்டுபோய் தெட்சணபூமியில்வைத்து என்னை உபவாசித்துப் பூசைசெய்யென்று மிகுந்த வரங்கொடுத்தருளினார்.—எ-று. (கஎ)

பெண்பாலதானதிப் பெருநாககிரிமுதற் பிரம்புருடநாகவரைமுன்
வண்பாரில்மாதவி ராஜனுல்வந்ததில் மகாகாமதேனுமேற்கொண
டென்பரவுகொங்குமண் டலமீதுகாவிரியி னீசான்யதிசையில்விடவே
நண்பாகவிருநாக மும்பரன்பனைபோ னயந்துடன்கூடியுளதால்.

(இ-ள்.) முன்னே வாயுராஜன் எடுத்தெறிய வந்துவிழுந்தகிரி ஆண் நாகக்கொடிமுடி, அதன்பேரில் பெண் நாகக்கொடிமுடி முதலாகிய வைந்துசிகரத்தையும் பரமசிவன் சொன்னவளவில், காமதேனு பெயர்த்துக்கொண்டு வந்து புகழ்பரவிய கொங்குமண்டலத்தில் காவேரியி னீசான்யதிக்கில் வைத்தது, ஆண் நாகச்சிகரமும் பெண் நாகச்சிகரமும் சிவனும் உமையும்போலும் பிரியாமலிருக்கும்.—எ-று. (௧அ)

நீலநிறநிறைதனஞ் செயகிரிப்பணிக்கிரியி னேர்கிழக்குறையவதனில்
மூலரதசஞ்சீவியும் முக்கரணிமிக்குற முளைத்தெழுங்கொல்லிமலையாங்
கோலமிருவேதகிரி யோமக்கொழுங்கனற் குவிதலெனலாம்வேதனின்
றோலமிடுவதுநாக வோங்கற்குவடமலை யுளதேவதத்தனெனுமால்.

(இ-ள்.) அப்படி காமதேனு மூலமாய்வந்த வைந்துசிகரத்திற் பெண்ணாகச்சிகரமானது ஆண் ணாகச்சிகரத்தில் கூடிப் பிணைந்துநிற்க, மற்ற நான்குசிகரமும் அங்கங்கே விழுந்திருக்கின்றதுவுஞ் சொல்லுகிறோம். தனஞ்செயநாடிச் சிகரம் நீலநிறமாய் நாககிரிக்கு நேர் கிழக்குத்திக்கில் விழுந்து விளங்கியிருக்கின்றது. அதிலே அனேகஞ்சித்து மூலிகைகளும், ரசகெந்தபாஷாண விளைவுகளும், முக்கரணியாகிய சஞ்சீவிகளு மிகவு முளைத்திருக்கின்றது. அதற்குக் கொல்லிமலையென்றும் பெயர் விளங்கியிருக்கும். அதுநிற்க, இன்னமொருசிகரம் நாககிரிக்கு வடமேற்கில் வீழ்ந்திருக்கின்றது. ஓமாக்கினியைக் குவித்ததுபோலும் அக்கினிநிறமாயிருக்கும், அதில் பிரமன் சிவனை யுபவாசித்துப் பூசைசெய்தது. வேதவொலி விளங்கு மது தேவதத்தநாடிக் கொடிமுடியாம்.—எ-று. (௧௯)

பொன்னிறந்தருபுட்ப கிரிகர்த்தநாடியாய் புகலும்பொருப்பின்வடபால்
மன்னுதன்வடபாங்கு குண்டலாகாரமாய் வண்மைதிகழ்வெண்மைநிறமாய்
இன்னிலம்புகழ்சங்க கிரியெனும்பெயரா மெழிற்கூர்மநாடியெனவும்
பன்னுமொருநால்வெற்பு நாகாசலத்தைப் பரவியுளவிரவியுளதால்.

(இ-ள்.) இன்னமொரு சிகரம் புட்பகிரியென்றும் பெயராய் சொர்ன்னநிறமாய் நாககிரிக்கு வடக்குதிசையில் விழுந்து ஓங்கியிருக்கும்; அது கிருகர்த்தநாடிக் கொடிமுடியென்று பெயராம். இன்னமொருசிகரம் அதற்கு வடக்கேவிழுந்து குண்டலாகார வடிவாய் வெள்ளைநிறமாய், திகழ்ந் துலகம்புகழப்பட்ட சங்ககிரியென்றும் பெயராய் விளங்கியிருக்கின்றது. அது கூர்மநாடிக் கொடிமுடி யென்னப்படும். ஆக யிப்படிசொல்லப்பட்ட நாலுகிரியும் திருநாககிரியைப்பரவி உள்ளேஒன்றுபடக் கலந்திருக்கின்றது.—எ-று. (உ௦)

வெங்கோடுதிகழ்பிறையும் வெண்ணிறத்தொடுபச்சை மென்கொடிவிளங்கு
புறமுஞ், சங்கோடுலாவுகுழை யுங்கனகதோடுமொரு தனமும்படைத்தவ
ரிட, மங்கோடுமொருதம் பொரபணமுடிபெயர்ந் திட்டவையமர்ந்தவதனுற்,
செங்கோடுரத்தகிரி சோணகிரியாம்பெயர் சிறந்துள நிறைந்திங்ஙனே.

(இ-ள்.) வெள்ளிய கொம்புபோலுந் திகழ்ந்த பிறையையணிந்த பால்வண்ண ராய் மற்றொருபர்கம் செவ்விய பச்சைகொடிபோலும் உமையவள் விளங்குதலா லுஞ் சங்கத்தோடு விராவிய குழையுங் கனகத்தாலடக் குழையோடு மொருதனமு டைய மார்புமாய்ச் சிவனெழுந்தருளி யிருக்கின்ற தலமதனில் எங்கனு முலாவும் வாயுபகவான், நாகராஜன் படம்பொருந்திய கொடிமுடியைத் துணடித்தெறிந்த படியினால் திருச்செங்கோடென்றும், அர்த்தகிரியென்றும், சோணகிரியென்றும், நாமங்களையுடையதாய் சிறப்புப்பொருந்தி விளங்கியிருக்கின்றது.—எ-று. (உக)

தெற்றுமாயிரமுடிச் சேடனங்கனம்வந்து சேர்தலாற்பணிவரையுமா
யுற்றசேடன்றினம் பணியுநெறியாலங்ங னுயர்சேடமலையென்பதாய்
நற்றவக்கோதைமுனி நணியவா சிரமத்தி னணிமேருவணிமுடியதாய்
கொற்றமாருதமெடுத் தெறிதலாலுந்திருக் கோதைமலையென்றறைகுவார்.

(இ-ள்) கொத்தாகிய ஆயிரமுடி சேடனுடைய ஓரங்கம்வந்து சேர்ந்தபடியி னாலே நாககிரியென்றும், நாகராஜன்றானே தினமும் பூசித்து வணங்கினபடியினா லே சேஷகிரியென்றும், நல்ல தவத்தையுடைய கோதைமுனிவர் வசிக்கின்ற ஆசி ரமத்தில் மகாமேருவிளங்கிய கொடிமுடியை வாயுவு யெடுத்தெறிந்து வைத்தபடியி னாலே கோதைமலையென்று பெயராயிருக்கின்றது.—எ-று. (உஉ)

ஆடகக்கிரிமுடி யணைந்தசிவலிங்கத்தோ டங்கதம்வந்துவிழுநாள்
மூடமறுகோதைமுனி முனிவினாற்சிலையென்று முத்தமிழகத்தியன்வர
நாடுமேமேருவின் னாகநாடிப்பெரிய நாகமிருபால்வழியிடை
கூடுமதுகண்டுகல் லாகெனச்சாபங் கொடுத்ததெனமறைகூறுமால்.

(இ-ள்.) சொர்ன்னசயனத்தின் கொடிமுடிச் சிகரத்திற்பொருந்திய சிவலிங்க த்துடனே நாகராஜன் அங்கமுஞ்சேர்ந் தமைந்தகாலத்திலே மூடமில்லாத வறிவி னையுடைய கோதைமுனிவன் கோபத்தினாலுண்டாகிய மலையென்று அகத்தியமு னிவன் வர நாட்டமாயிருப்பான், மேருவினையுடைய நாகநாடிப் பெரியநாக மிரு புறமும் வழியிடையிற்கூடிப் புணர்வதுகண்டு கல்மலையாகச் சபித்தாரென்று சுரு திகள் சொல்லுகின்றது.—எ-று. (உ௩)

சிவனுமையுடன்பெறுந்திருமணங்காணநாஞ்செல்வழியிலிவைகாண்பதென்
னவமெனமுனிந்துசா பத்தானதன்றியுமவ் வரவமலைமட்டுமெகல்வான்
குவடுபெறனின்றவொருகொடிமுடியுமண்புகக் குறுமுனிகுடங்கையதனால்
நவமுறச்செய்தன்ன நாகமலைமேனாட்டு நாவலந்தீவிலெனுமால்.

(இ-ள்.) பரமசிவன் பார்வதியைத் திருக்கலியாணஞ் செய்யுந் திருமணக்கோ லத்தை நாம் காணவேண்டுமென்று குறுமுனிவன் வருகிறவழியில் நாகமிரண்டும் புணர்ச்சிசெய்வதுபோலும் தோன்ற விது பொல்லாதென்று கோதைமுனி சாபத் தினாலே கல்லுமலையானது தெரிந்து அங்ஙனம் வராமல் விலகும்போது அத் திருப் பாண்டிக்கொடிமுடி யோங்கிநின்றது, அதை தமது குடங்கையால் பூமியிற் புகுத வழுத்தினார், மேனாடாகிய நாவலந்தீவில் கொங்குமண்டலத்தில் நாககிரியென்று நீடூழி அழிவில்லாம லிருக்கின்றது.—எ-று. (உச)

கிரிவரலாற்றுச்சருக்க முற்றிற்று.

ஆ திரு விருத்தம். சoச.

# வந்தியாபாடானச் சருக்கம்.

இமையகிரிமீதினி லியற்பெறுமுனிக்கணமோ டிமையவரியக்கர்முதலோர்
அமையரவகிரியென்ன வஞ்சலியோடெஞ்சலில் வன்பினுள தொன்றுளத
ரோ, வுமையவளுமாபதி யுடன்றேவர்கட்குதவு மெர்ருகுன்றுவந்திமடவார்
தமதுவரநிதியனைய சந்ததியளிக்குமது தலைமூன்றிற்குமரிதால்.

(இ-ள்.) இந்தப்பிரகாரம் சூதமுனிவர் நாககிரிவந்த வரலாறுசொல்லவும், தேவர்கள் முனிவர்கள் இயக்கர் கூட்டங்கள் முதலாகிய வெல்லோரும் கிரிவரலாறு கேட்டபோதே அஞ்சலியஸ்தராய் தங்கள்தங்கள் குறைதீர வன்புடனே தொழுது நிற்க, இன்னமொரு புதுமையான சிகரமிருக்கின்றது முன் மகாமேருகிரியிலே யிருந்தது. அது சிவனும் உமையுந் தேவர்களுக்குத் தியாகமாகக்கொடுத்த சிகரம், மலடிகளுக்குப் புத்திரசந்தான மளிக்கப்பட்டது, திரிலோகத்திற்கு மரிதாயிருக்கும்.

மாமுனிவர் கேண்மினது வந்தியாபாடானம் வடமலைக்குவடு கவடு
தாமுனியுமண்டர்சுரரோசர்கந் தருவர் வரசந்ததியளிப்பன்முன்னு
ளேமுரவதர்க்கருகு மோகினிகெசப்பெய ரெடுத்துள மலைச்சிகரமொன்
றுமெனவெவர்க்குமறி ருடருபலன்சில வறிந்தனமுரைத்தருளுவாம்.

(இ-ள்.) கேளுங்கள் நைமிசாரணிய முனிவர்களே, அந்தச் சிகரத்திற்கு வந்தியாபாடானமென்று பெயர், அது மகாமேருவி லொரு கொடிமுடிச்சிகரம், முனிவர்கள் தேவர்கள் அசுரர்கள் கந்திருவர்க ளிவர்களுக்கெல்லா முற்காலமாதியாய்ச் சந்ததி கொடுக்கப்பட்டது. அதற்குப் பக்கத்திலே மோகினிகெசமென்னும் பெயரையுடைய சிகர மொன்றிருக்கின்றது, சிவன் கிருபையினால் அதினுடைய மகிமையும் பலன்களையுஞ் சிலது தெரிந்தமட்டுஞ் சொல்லுகிறோம்.—எ-று. (உ)

அம்மலையிலெவரோனு மணிபணியெனத்தங்க ளங்கத்துவல்லிபுனையி
லம்மலர்க்கொடிகள் மோகினிகெசக்கிரிவைகுமளவுமதுபொன்னுருமா
லிம்மலையிலிட்ட காமியமுதவு மூலிகையிருப்பதவர்கீழிடுவரேற்
பொம்மெனவஃதிலதையின்பழவுருவெடுக்குமப்புதுமைதனையார்புகலுவார்

(இ-ள்.) அந்த கிரியிலிருக்கப்பட்ட ஓர் கொடியைப்பிடுங்கி தேகத்தி லணிந்துகொண்டால் நவரத்தினப் பணிகளைப்போல் பிரகாசிக்கும், மோகினி கெசகிரியிலிருக்கிறவரையில் அக்கொடிகளைவாங்கிக் கீழே போடுவாராகில் உடனே பழைய கொடி உருவமாகும், பின்னும் இஷ்டகாமியந்தரப்பட்ட சித்தமூலிகைகள் அநேகமிருக்கும், அதினுடைய புதுமையை யாவராலுஞ் சொல்லமுடியாது.—எ-று. (ங)

மோகினிகெசத்தின் கிழக்குவந்தியாசிலை முளைத்த்முதம்வந்ததெனவா
யாகமபுராணங்க ளாய்வதற்கரிகு வடதகிலை யுறைப்பணிமையப்
போகவர உமையுடன்கூடிநாளயிரிப் பொன்னடி பணிந்துசிவனை
தியாகமுதலெனவேத மொழிகூறி யன்றுபெறு திண்சிகரமச்சிகரமே.

(இ-ள்.) அந்த மோகினிகெசச் சிகரத்தின் கிழக்கு வந்தியாபாடான அமிர்தம் முளைத்தெழுந்து இருக்கிறதென்று ஆகமபுராணங்களாலுஞ் சொல்லுதற் கரிது, அதின்பெருமையைச் சொல்லுகிறோம். இமவான் மகளாகிய பார்வதியைத் திருக்கலி

யாணஞ்செய்து கூடி விளையாடுகிற காலத்தில் பிரமன் விஷ்ணு இவர்கள் சுவாமியையவணங்கி எங்களுக்கு வந்தியாபாடான சிகரத்தைத் தியாகமாகக் கொடுக்கவேண்டுமென்று ஸ்தௌத்திரஞ் செய்தார்கள், சிவன் அப்படியே கொடுக்கப் பெற்றுக்கொண்ட திண்ணிய சிகரம் அந்தச்சிகரம்.—எ-று. (ச)

அங்கயனவற்றையர்ச் சித்ததனிலருருவந் தீசனையமைத்தோதியே
யெங்குமுளமமைமென் பவர்மகவுபெறுதற் கியன்றருவடதுநாரதன்
றுங்கமிகுசூரனுக் கோதினன்சூரனச் சோதிவரமுதவியவனு
ளிங்கிதமோடதனைக் கவர்ந்துசெங்கோட்டினி லிருத்தினனிருத்தியசுரன்.

(இ-ள்.) அப்படி பெற்றுக்கொண்ட சிகரத்தை பிரமதேவன் அர்ச்சனைசெய்து அதின்பக்கத்தில் ஒரு சிவலிங்கத்தைத் தாபித்து வதற்கு வந்தீசுவரரென்று பெயர் வைத்து வேதமந்திரங்களாற் பூசித்து எங்கெங்குமிருக்கிற மலடிகள் பிள்ளைபெறுவதற்கு அருளுண்டாக்கிவைத்த சிகரம், அதை நாரதமுனி வெற்றியையுடைய சூரனுக்குச் சொன்னார், அந்தசூரன் பரமசிவனிடத்தில் வரம்பெற்று வருங்காலத்திலதனைப் பெயர்த்துக்கொண்டுவந்து திருச்செங்கோட்டுக்கொடிமுடியிற் பதித்துவைத்து பூசைசெய்தான்.—எ-று. (ரு)

பிரமன்மாமுதலமரர் வந்துபணிபுரிய பெரும்பானுகோபன்முதலாந்
திரமகவனேகனைப் பெற்றுவனைசென்றுநற் றேவரைச்சிறைவைத்தனன்
வரமயேந்திரபுரியின் மாளிகையினர்ச்சனை மகிழ்ந்துகேதாரமிகவு
மரகரிதற்கொத்த தவனியந்தரசொர்க்க மதனிலுங்காண்பதரிதால்.

(இ-ள்.) பிரமா விஷ்ணு முதலாகிய தேவர்கள்வந்து பணியவும், பானுகோடன்முதலாகிய பிள்ளைகளைப்பெற்று தேவர்களைச் சிறையிலிட்டான், வீரமயேந்திரபுரியில் சொர்ன்னமயமான மாளிகையிலிருந்து வந்தியாபாடான சிகரத்தைப் பூசித்து வச்சிரதேகமும் வெற்றியும்பெற்றான், சிவசிவா அதற்குச்சமானமான சிகரங்களை பூமி அந்தர சுவர்க்கங்களிலுங் காணுதற்கரிதாம்.—எ-று. (சு)

சூரபத்மன்றுறவர் சூலதரன்மறையவன் சுதரிசனமாயன்முதலாம்
தேரகிப்பனசிறிய ளெனமனத்துணர்திறற் பாவசிந்தையனுமாயக்
கோரவர்க்கந்தருங் கொடுந்தொழில்புரிந்துவலி குறையாதுதிரிபுவனமுஞ்
சேரவுற்றொருகுடை நிழற்றியதுநாகவந் தியாசிலையிகலனுகுமால்.

(இ-ள்.) அப்படிப்பட்ட சூரபன்மனுக்கு முனிவர்கள், உருத்திரர்கள், பிரம்மா, விஷ்ணு, இவர்களெல்லாரும் பயந்துநிற்கவும், இவர்களை அற்பவான்களென்று தெரிந்து கொலையாதி பாவஞ்செய்கின்ற நினைவை யுடையவனுமாய், கொடுங்கோபத்தால் கொடியதொழில்களைச் செய்தும் வலிமைகுறையாமல் சகல அண்டங்களையுங் குடையிலடக்கி யாண்டுக்கொண்டிருந்தான். அது வந்தியாபாடான சிகரத்தைப் பூசித்த வரப்பிரசாத மகிமையாம்.—எ-று. (எ)

அவனலிகத்தும் பரத்துமுபகாரமா யங்கணனையர்ச்சித்ததாற்
குகனுலுமவனவி கோடலுக்கரிதாயோர் கொடியும் வாகனமுமானன்
சிவனுதரங்களிக்கு மலையில்யோகஞ்செபந் தவந் தன்மமுயல்வோர்க்
கிவனுடைபலனென்றெவ்வொருகோடிகோடியினிலெய்துமலைநாகமலையே.

(இ-ள்.) அந்த சூரபத்மனானவன் இகத்துக்கும் பரத்துக்கும் உபகாரமாக வந்தியபாடான சிகரத்தில் சிவலிங்கத்தை அர்ச்சித்த மகிமையினாலே கந்தசுவாமியும் அவனைக் கொல்லுதற்கரிதாய் ஒருகொடியும் வாகனமுமானான். அதுநிற்க, பரமசிவனுக்குப் பிரியமாயுள்ளக்களிப்பைத் தருவதாகிய அந்தகிரியில் எவராகிலும்வந்து சிவயோகஞ் செபதபங் தர்மதானங்கள் இவை முயற்சியாய் செய்தவர்களுக்கு வரும்பலன்கள் நாடிச்சொலவோமெனில் ஒவ்வொன்றுக்கு கோடி கோடிபலமாக விர்த்திக்கும்.—எ-று. (அ)

முதலுகங்காணவுற்ற னவருநரபிலேபுக முனித்தொழுநிறைந்தவரும்
முதவுதொனமூவுகம் வநதாப்புசனைசெயிலுகந்தசந்தானமுளதாந்
திதகலியெனுங்குமர தீர்த்தமுமுழுகிச்சிவ தியானமுடனுமையபாகனைற்
பதயினைவில்வந்திகிரி வலம்வந்துமும்முறை பணிந்துமூந்தினம்வைகுவார்.

(இ-ள்.) கிரேதாயுகத்தில் யாதாமொருவர் எங்கிருந்துகண்டாலுஞ் சந்தானமுண்டாகும், திரேதாயுகத்தில் கண்டு நமஸ்காரஞ்செய்தால் பிள்ளையுண்டாகும், துவாபரயுகத்தில் வந்து பூசைசெய்தால் இஷ்டமான புத்திரருண்டாகும். கலியுகத்தில்வந்து குமாரதீர்த்தத்தில் முழுகி சிவத்தியானத்துடனே உமையொருபாகனை பிரதட்சணஞ்செய்து வந்திகிரியை மூன்றுபிரதட்சணஞ்செய்து மூன்றுநாள் அங்கு வசித்திருப்பாராகில.—எ-று. (கூ)

வைகியர்ச்சனைபுரியும் வாரமதுசுக்கிரன் மருவுநாட்கார்த்திகையெனில்
மெய்கிளர்வன்றுமுதலுபலனளிக்குஞ்செயதவெம்பாவமுந்தொலையுமென்
றுய்தவவியாதமுனி யோதினனந்தபல னுளதென் றபினுமொருபால்
மைதருபவங்கெட மனத்திடைநினைத்தன வரந்தருதினங்கள்பகர்வாம்.

(இ-ள்.) அப்படி வாசஞ்செய்து பூசிக்குந்தினஞ் சுக்கிரவாரமுங் கார்த்திகை நட்சத்திரமுங்கூடின சுபதினமுதலாய மூன்றுநாளும் கிரிப்பிரதட்சணஞ் செய்தால் அன்றுதொடங்கி புத்திரசந்தான முதலாகிய இஷ்டகாமியார்த்தங்களைக் கொடுக்கும், தீராதபாவமுந் தீருமென்று பரிசுத்த தவத்தையுடைய வியாசர் எனக்குச் சொன்னார். இன்னம் அனேக பலனுண்டென்று பின்னுமொருபங்கு மருள்மயக்கமாகிப் பாவங்களும் விமோசனமாகும், அவரவர்கள் நினைத்தகாரியங்களுங் கைகூடும்படிக்கு வரப்பிரசாதந்தரப்பட்ட சுபதினங்களை சொல்லுகிறோம்.—எ-று. (ம)

மார்கழியினிறைமதிய மாதிரைபுணர்ந்ததினம் வந்துநாகேசனைநினைந்
தேர்தருகுமாரபுனலிடைமூழ்கியுபவாச மாயிருந்தொருபொழுதுகொண்
டேர்விரதமறையவர்க் குணவுகிர்ந்தருளவுதத முதவிபிறுகர்ந்துநாளும்
பார்கெழுமுருகுந்தர்க்கு நாகேசருக்குமுமை பாகர்க்குமர்ச்சனைசெய்வார்.

(இ-ள்.) மார்கழிமாதம் பௌர்ணையுந் திருவாதிரையுங் கூடின சுபதினத்தில் யாதாமொருவர் நாகேசனை நினைத்து வனப்புமிருந்த குமாரதீர்த்தத்திலே முழுகி நியமநிஷ்டைகளை முடித்துக்கொண்டு குமாரருக்கும் நாகேசுரருக்கும் உமையொருபாகருக்கும் அபிஷேகமுதலிய சோடசவுபசாரங்களுடனேபூசித்து. அன்றுமுழுது முபவாசமாயிருக்கவும், அல்லது ஒருவேளை அன்னம் புசித்து விரதமாக பிராமணருக்கு

நெய், வெல்லம், பால் முதலாகியதுங் கொடுத்து பின்பு தான் புசிக்கவும், இப்படி மூன்றுநாளும் பூசிப்பார்.—எ-று. (௧௧)

அர்ச்சனைபுரிந்து மறையவர்தானமுற்றி மயேசுரர்க் கன்னமுதவிச்
சற்குருவுடன்குரவர் தங்களுக்கன்பொடு தயாபலன்வழங்கியவரை
முப்பொழுது மடிபணிந் தமலவந்தீசர்நதி வலமுவந்தஞ்சலிபுரிந்
தர்க்கியப்பரிசுபல னிதுவெனச்சேடர்க்கு மெண்ணில்காலஞ்செல்லுமே.

(இ-ள்.) அப்படி அர்ச்சனைசெய்து பிராமணர்களுக்குந் தானங்கொடுத்து அதிதிகளுக்கு அன்னதானஞ்செய்து, குருக்களுக்கும் பெரியோர்களுக்குந் தம்மாலியன்றவுதவிசெய்து, அவர்களை திரிகாலமும் வணங்கி வந்தீசுரனைப்பூசித்து, பிரதட்சண நமஸ்காரஞ்செய்த புண்ணியவான்களுக்கு இவ்வளவுபலனென்று ஆதிசேடன் தன்னிரண்டாயிரம் நாவினாலும் அளவிட்டுச் சொல்லத் தொடங்கினாலும் அனேககாலஞ் செல்லும்.—எ-று. (௧௨)

சண்முகர்பதந்தொழுது சரவணபவாவெனத் தனிமனத்துச்சரித்தால், வெ
ண்முகசரோருகன்வியன்மறைப்பொருளுணர்வு மெய்க்கவிதையும்புராண,
பன்மொழிகொள்பதினெட்டுபாடையிற் கவிதைசொற்பாவலர்க்கின்பமுத
வும், திண்மருவுதாரகையிலர்ச்சித்தபேரொலாஞ்சீர்பெறுவர்பார்பெறுவரே.

(இ-ள்) சண்முகருடைய பாதங்களைத்தொழுது ஓம் சரவணபவாவென்றுயேகாந்தமாகக் கருத்திலுச்சரித்தபேர்களுக்கு வேதாகம சாஸ்திர உபநிஷதகலைக்கியானங்களைக்கொடுக்கும், பாடப் படிக்கப் பிரசங்கிக்கத்தக்க வரப்பிரசாதந்தரப் பெறுவார்கள். துணிவுடனே தாரகபிரமத்தியானஞ் செய்கிறவர்கள் சிதேவிசெல்வமும், பூதேவி செல்வமும் பெற்றுவாழ்வார்கள்.—எ-று. (௧௩)

வேறு.

அதிசூரபன்மனை யடர்ந்துதேவேந்திரர்க் கணிநகராளித்தகிலமேற்
புதுநாகமலையில்வந்தீசரருளின் புறப்பொருவிலொருதீர்த்தமாக்கி
நதிமேவுதமதருளி நாகேசனைத்தொழுது நானிலத்தவர்பணியவே
இதமேவுவெற்றிபெற் றனர்வேலர்கலியினுஞ் செல்வமொடுகல்விதருமே.

(இ-ள்.) மிகுந்த சவுரியவானாகிய சூரனைக்கொன்று, தேவேந்திரனுக்கு இந்திரலோகத்தை அரசாட்சிக்கொடுத்து, நாககிரியில் வந்தீசுரனைப் பூசித்து, அவர் இருபானுக்கிரகத்தினால் மகிழ்ச்சியாக ஒருதிவ்ய தீர்த்தமுண்டாக்கிவைத்து, அதில் சடாட்சரமந்திரத்தை ஸ்தாபித்து, தமது கருணையினாலே நாகேசுரனைத் தொழுது வணங்கி பூலோகத்தில் மனிதர்களனைவரும் வந்து தம்மைப் பூசித்து வரங்கள் பெற்றுக்கொள்ளும்படிக்கு வீற்றிருக்கின்றனர். வேலாயுதக்கடவுள் கலியுகத்திலுஞ் சகல செல்வமுங் கொடுத்தருளுகின்றார்.—எ-று. (௧௪)

வேறு.

மலையெங்குமாமலையே மதுவொழுக்கமாமலையே
நலமலர்த்தவனமெல்லாம் நளினநந்தவனமெல்லாம்
மலர்தருமைந்தருக்கணமே யமுதமுமைந்தருக்கணமே
குலமணியின்கதிரொழுமே கொழியமணிக்கதிரொழுமே.

(இ-ள்.) மலையெங்கும்பார்த்தாலு மகமேருசிகரத்தைப்போற் பிரகாசிக்குந் தேன்கள் மலையருவிபோல் பெருகி அலைகொழித்திறங்கும். அழகிய புட்பங்கள் அலர்ந்து யோசனைதூரம் வாசனை வீசும், நந்தனவனங்களும அனேக நிர்ந்தங்களெல்லாந் தாமரை நெருங்கியிருக்கும், வாடாத புட்பங்கள் புட்பிக்கும், பஞ்சதருக்கள் மிகுந்திருக்கும், மனிதர்களுக்கு அமிர்தமே போசிப்பாயிருக்கும், பலவகை மணிகளுடைய நிறங்கள் சுடர்விரித்து பிரகாசிக்கும், கொழுமிய செந்நெற்கதிர்களுந் தழைத்துப் பிரகாசிக்கும், கதிர்மணிகளும பெருகும்.—எ-று. (கரு)

சந்தனவண்டடங்காவே சந்தனவண்டடங்காவே
கந்தரமாமுழக்கெழுமே கந்தரமாமுழக்கெழுமே
சிந்தூரமாமணந்தருமே சிந்தூரமாமணந்தருமே
ஐந்தருவான்மந்திரமே ஐந்தருவான்மந்திரமே

(இ-ள்.) அந்தமலையெல்லாஞ் சந்தனசோலைகளே, ஸ்ரீகளுக்குந் தூதுபோகின்ற அன்னப்பட்சிகளும் வண்டினங்களு மோயாமல நடமாடிக் கொண்டிருக்கும், குகைதோறும் கொடியமிருகங்கள கொஞ்சிசெயும். மேகம இடி மின்னலோடே மழைக்காலிரங்கிப் பெய்யுமுழக்க மிகுந்திருக்கும யானைகள் பிடியானைகளை மணம் பொருந்தி புணர்ச்சிசெய்யும். அங்கு வசிக்கின்ற ஸ்ரீகளினுடைய நெற்றியிலிட்ட சிந்தூரத் திலகப்பொட்டுகளை பரிமளிக்கும் பஞ்சதருக்களினுடைய நிழல்களிலே யனேக மாடமாளிகை சேர்ந்திருக்கு மனபொலவாரு மிந்தாகிய பஞ்சாட்சரங்களைச் செபிப்பார்கள்.—எ-று (கசு)

கண்டவருக்கருட்கதியே கண்டவருக்கருட்கதியே
புண்டரீகமானுரவே புண்டரீகமானுரவே
கொண்டலைபுந்தண்டலையே கொண்டலைபுந்தண்டலையே
விண்டமாநாரணனே விண்டமாநாரணனே.

(இ-ள்.) திரு நாககிரியைக் கண்டவர்களுக்கு சிவகிருபையு மோட்சமுங் கிடைக்கும், பிரத்தியட்சமாகக் காணப்பட்ட வாதித்தர்களுதித்து சுவாமி திருமுன் நேராய்வந்து பூசிப்பார்கள், புலியும் பசுவு முறவாய் விளையாடு தாமரைமகள் வாசமாயிருப்பாள். மேகமண்டலந்தை யளாவியிருக்கும நாகரிரி கொடுமுடி சிகரங்கள தென்றற்காற்று வீசுகின்ற மலர்ச்சோலைகளும் மிகுந்திருக்கும், மூங்கில் வனங்கள் நெருங்கி ஓங்கி வளர்ந்திருக்கும், தேவேந்திரனும், பிரமனும், விஷ்ணுவும் வேத மந்திரங்களோதி சுவாமியைப் பிரதட்சண நமஸ்காரஞ்செய்து வணங்கி வாழ்த்துவார்கள்.—எ-று. (கஎ)

வந்தியாபாடானச்சருக்க முற்றிற்று.

ஆக திரு விருத்தம்.—கஉக.

# உமைதவச் சருக்கம்.

திருமணஞ்செய்து சிவனுடம்பிகை சேயையீன்றருட்செய்தபின்
வருமணமபுவி மீதுகந்தாவிளை யாடல்செய்துபடிவருதலாற்
கருமணம்பாவி மலர்நறுங்குழலி கந்தனைப்பெறுசிந்தையா
லருமணங்கலம துறமயங்கின ளஃதறிந்தன ராடலார்.

(இ-ள்) கேளுங்கள் முனிவர்களே, இனி இமவான்மகளாகிய பார்வதியைப் பரமேஸ்வரன் திருக்கலியாணஞ் செய்துகொண்டு கந்தசுவாமியை யீன்றருளிய பின்பு குமாரதேவரும் நாரதமுனிவருடனே கூடிக்கொண்டு மலைகள்தோறுந் திருவிளையாடல் செய்து திருச்செங்கோட்டில்வந்து வசித்திருக்கின்ற காலத்திலே மலாமணம்பொருந்தி காரமேகம்போன்ற கரிய கூந்தலையுடைய பார்வதியம்மன் புத்திரவாஞ்சையினாலே மகனை நினைந்து சோர்வுற்று மயக்கமுற்றாள் அதுதெரிந்து பரமேஸ்வரன்.—எ-று (க)

அன்னபோதிலெம தன்னைநவ்வையை யகற்றவேபலவுமருள்புரிந்
தன்னிலும்பெரிய யனந்தலீலைகளு முந்தவிழ்ந்தஃது மொழிவிலா
நன்னெறிச்செயல் கண்டிவன்னிலைக நாதரம்பிகைக்கனபரர்
பின்னுமோர்விளை யாடல்மேயினர் பெரியர்கேண்மினஃதுரைசெய்வாம்.

(இ-ள்.) அப்போது எமது தாயாகிய உமையவள் துயரத்தைத் தீர்க்கவேண்டிமிகுந்தகிருபையோடு நினைந்து நினைந்து அனேகந் திருவிளையாடலைச்செய்தார். அப்படிசெய்தும் உமையவள் கவலை தீராமையைக்கண்டு அக்கினிக்கண்ணெற்றியையுடைய பரமேஸ்வரன் பின்னையும் ஒரு திருவிளையாடல்செய்யத்தொடங்கினர். முனீஸ்வரரே கேளுங்கள் சொல்லுகிறோம் என்றார் சூதமுனிவர்.—எ-று. (உ)

என்றுகூறியசூதனைத்தொழுதினி திறைஞ்சியெமக்குநீர்
நன்றுகூறிலுமைமாதுடன் கயிலைநாகநாதருகித்தவுஞ்
சென்றவர்க்கருளுதிறநதம்பணி செய்துபெறுநற்றீர்த்தமு
மென்றுரைத்திடுதி யென்றமாதவர்க் கினியசூதருமியம்புவார்.

(இ-ள்) அப்படி பாகசசொன்ன முனிவனை மிகவுமன்புடனேவணங்கி யெங்களுக்கு உமையவளும் சுவாமியும் நாககிரியில் எழுந்தருளிய வரலாறும், அந்தஸ்தலத்தில சுவாமியைப் பூசித்த பேர்களும் அவர்கள்பெற்ற வரப்பிரசாதங்களுந் தெய்வதீர்த்தங்களினுடைய மகிமையுஞ் சொல்லியருளவேண்டுமென்று முனிவர்கள்கேட்க சூதமுனிவர் சொல்லத்தொடங்கினர்.—எ-று. (௩)

வெள்ளியங்கிரி மீதுதாரு விளைந்தியங்கிய வனத்திலே
புள்ளடைந்தொருமுல்லைமாவி னுடன்புணர்ந்து விருப்பபாற்
றெள்ளியர்ப்பனையென்றனர்பல செப்பநாணவியப்பினல்
வள்ளலாதியைமலைமடந்தை கைமலர்கொடங்கண்மறைத்தனள்.

(இ-ள்.) அந்த வெள்ளியங்கிரியின்மீது கற்பகத்தரு முதலாகிய சோலைகள்நெருங்கிச்சகல புஷ்பங்களுடனே சிறந்திருக்கின்ற ஒரு உத்தியானவனத்திலே பரமசிவனும் பார்வதியும் வந்து உள்ளே பிரவேசித்து அந்த வனத்திலுள்ள காட்சிகளை

க்கணடு களிகூர்ந்து உலாவி வருகிறபோது ஒரு முல்லைக்கொடியானது மாதவிமரத்தைச்சுற்றிக்கொண்டு பிரியாமல தோன்றுகிறதை உமையவளே காணபாயாக வென்று சுவாமி பிரியமாகச் சொல்ல, அம்மனுக்கு வெட்கமுண டாகி சுவாமி திருநேத்திரங்களை தன்கையாகிய தாமரைமலரினால் மறைத்தாள்.—எ று. (௪)

அந்தவேளையிலந்தகார மடைந்ததண்ட மனந்தநாள்
இந்துநன்னுதலிபுற்றநெற்றியிலங்குகண்குளிரச்செய்த [நலோர்
பெந்தையன்று விழித்தபின்னெளிர்வ தென்கொல்காரணமிதென
சந்திவந்தனைதியானமாதிய தவம்பிழைத்தனமென்றோதலும்

(இ-ள்.) அப்போது அண்டங்களெல்லாம் அந்தகாரமான இருள்வந்து மூடிக்கொண்டு வெகுநாள் வெளிச்சமில்லாமலிருந்து பின்பொருநாள் உமையவள்கையை வாங்கினவுடனே யெங்கும் பிரகாசமாக வெளிச்சமாச்சுது. பரமசிவன் திருநேத்திரங்களை விழித்தருளின பின்பு இதுவென்ன காரணமோ வென்று பெரியோர்க ளெல்லாங்கூடி ஸ்ரீகயிலாயத்திலவந்து கடவுளைக்கண்டு வணங்கி எங்களுடைய சந்தியாவந்தன தியானயோகாதி கிரிகைகள் தவறி வெகுகாலம் இருளமூடி யிருந்ததால் எங்கள் விரதத்துக்குக் குற்றங்கள் சேர்ந்ததென்று முறையிட்டுச் சொன்னார்கள்.

இருநதிந்துமையனேகபாவ மியானடைந்தனென்னிறைவனின்
நருதுணைக்கணதருளளித்தரு ளெனக்கெனப்பனைநவிறலு
மிருபிநிர்ப்புனை வானமெல்லிதழ் மேவுபூவைகேதாரதின்
றுருதிகிர்ப்புனலுதவுகாசியி லுற்றநற்றவமுற்றபின்.

(இ-ள்.) அப்போது உமையவள் கண்டு பயத்துடனே கடவுளைவணங்கி இனியிந்த குற்றத்தைத்தீர்த்தருளி யும்முடைய இடப்பாகத்தில் யான் பிரியாமல் சேர்ந்திருக்கத்தக்கதாக கருணை செயது ரட்சிககவேண்டுமென்று தொழுது கேட்டுக்கொள்ள, பவளம்போன்ற அதரத்தையுடைய பவானியே கேட்பாயாக. அப்படியே நீபுறப்பட்டு கேதாரத்தில சேர்ந்து பூசைபுரிந்து, அங்கிருந்து புறப்பட்டு திவ்யசலம் பிரவாகிக்காநின்ற காசிஸ்தலத்தில சேர்ந்து பூசித்துத் தவஞ்செய்தபின்பென்று பின்னையுஞ் சொல்லுகின்றார்.— எ-று. (௬)

கச்சிகாரிகர்த்ததொன்றது காரணம்பலகாணுமால்
மெச்சுகம்பையும்மாவுமுண்டதன் மிக்கநனபலனளவுரு
தச்சுதன்றெழுதலபமடைந்துநின் னரியதோர்தவமெய்தினல்
மெச்சியாமவண்வருதுமிங்ஙன விளைத்திடுங்குறைவிலகுமால்.

(இ-ள்.) மருத்துவம் பொருந்தி விளங்குகின்ற காஞ்சீபுரமென்றொரு ஸ்தலமுண்டு அங்ஙனம் கம்பையாறும், மாவிருட்சமும் உண்டு; அந்த காஞ்சிஸ்தலத்தில் நீ போய்சேர்ந்து அரியதவங்கள் செய்தால் நாம் அவ்விடம்வந்து உனக்குகாட்சிகொடுத்து நீ நினைத்தபடிக்கி இடது பாகமும் அனுக்கிரகஞ் செய்கிறோ மென்று திருவுளம் பற்றியருளினார் பரமசிவன்.—எ-று. (௭)

எனவுரைத்தபினனனடைக்கன தெனும்லர்க்குழல் மலைதன
மனனுறத்தொழுதாரனடித்துணைமலர்களச்சுதன்மலருளோன்

முனிவர்வித்தியாதரர்கள் மூவிருகோடிசத்திகள் முதலுளோர்
தனதுபின்றொடரசென்றுவண்மைபுகழ்தமூவுகச்சியின்மருவினள்.

(இ-ள்) இப்படியாகச் சுவாமிசொல்லியபின்பு அன்னம்போல நடையும், கார் மேகம் போன்ற பரிமளக் கூந்தலுமுடைய பார்வதியம்மன் சுவாமியை பிரதட்சண நமஸ்காரஞ்செய்து வணங்கித்துதித்து விடைபெற்றுக்கொண்டு அரி பிரமன்முதலாயுள்ள வித்தியாதரர்கள், தேவர்கள், முனிவர்கள், அனேகசத்திகள் முதலான சகல சனங்களுந் தனது பின்னே தொடர்ந்துவரக் கயிலையில் நின்றும் புறப்பட்டு இமைய கேதாரத்தில்வந்து சிவனைப் பூசித்து, அங்கிருந்து புறப்பட்டு காசியில்வந்து விஸ்வநாதனைப் பூசித்து, அங்கிருந்து புறப்பட்டு உலகம் புகழாநின்ற காஞ்சிபுரத்திலவந்து சேர்ந்தாள்.—எ-று. (அ)

வந்துகம்பை யெனப்பொருந்திய வண்பெருங்கரைதங்கிமின்
முந்துமிங்கிவளர்ந்தருந்தவ முன்பினுங்கனமுந்தலுங்
கந்தர்வந்துமை யெந்தைநின் கருதும்பலங்கனிகின்றதென்
றந்தவந்தரரியம்புகின்றன ரன்புடனாபிமிகன்றபின.

(இ-ள்.) உமையவள் அனந்த சத்திகளுடனே காஞ்சிபுரத்தில் கம்பையாற்றில் வந்துயிறங்கி நல்ல முகூர்த்தங்கொண்டு பஞ்சாக்கினிவளர்த்து அதின்மத்தியில் நின்று அரியதவஞ் செய்யத் தொடங்கினாள். அப்போது கந்தசுவாமி வந்து வாராயதாயே எந்தையாகிய பரமசிவன் நீ கருதிகேட்ட வரங்கொடுப்பதற்கு பிரியங்கொண்டிருக்கிறாரென்று தேவகணங்கள் முறைமுறையாகவந்து சொல்லுகிறார்கள். நீ பக்திசிரத்தையுடனே தவத்தைவிடாமல் செய்வாயாகவென்றதின் பின்பு.—எ-று. (௯)

மாயனார்வனமேயினார்வரு மாயனோடிறைகூறுவாள்
மேயதோர்தவநீருநீசனும் வேறெனாதுளம்வீறவே
சேயகாலமிநேயனோதுள சீலமேவினனோதியா
ருயபேதமதாயினுருப சாரமோடெனவோதுவார்.

(இ-ள்.) அம்மன் அப்படி அரியதவஞ்செய்கிறபோது அங்கே விஷ்ணுமூர்த்தி வந்தார். வந்த விஷ்ணுவுக்கு உபசரித்து சிலவசனஞ்சொல்லுகிறாள். நான் சிவனுடைய அர்த்தபாகத்திற் சேர்ந்து பிரியாமலிருக்கவேண்டுமென்று நெடுங்காலமாய்த் தவஞ்செய்துகொண்டி யிருக்கின்றேன். சுவாமிக்கு இன்னந்தயவு வரவில்லை இனி நடக்கவேண்டியவைகளுக்கு மேற்பருவஞ் சொல்லுவீரென்று உமையவள்கேட்க மகாவிஷ்ணு சொல்லத்துடங்கினார்.—எ-று. (௧௦)

வைத்தபத்தி வசிஷ்டன்முற்பகர் வித்தகத்துளசித்தர்நம்
மெய்த்தபத்தரியற்றுநற்சிவ பத்திமெய்த்தவ மிக்கதாம்
உத்தமத்தவமுத்தமச்செப முத்தமத்தின் புகழ்ச்சியாம்
நித்தநித்தமிகத்தொழிற்பெறின் நித்தர்பக்கமு மக்கதாம்.

(இ-ள்.) வாராயம்மா பார்வதி, எந்த தவத்திலும் சிவபூசைசெய்கிறதவமே மகா மேலானதவமாம். நினைத்தகாரியங்கைகூடு மாகையினாலே நமது பக்தர்களாகியவசிட்டர் முதலாகிய முனிவர்கள் உண்மையாகச் செய்வார்கள். அந்தத் தவத்துளெல்

ளா மேலானதவம் சிவனைப் பூசைசெய்கிறது. அதுவே உத்தமமானதவம். இது நிச்சயம், பக்தியுடனே நீயும் சிவனைப் பூசித்தாயாகில் செடிதகுற்றம் நீஙகி சிவனுடைய இடப்பாகமுங கிடைக்குமென்று சொன்னார் விஷ்ணு.—எ-று. (௧௧)

பாரிலச்சுதனுரிசைத்தது பாகமுற்றுள தென்றபோ
தோருமைப்பகர்கின்ற விப்படி யோமவர்ச்சனையின்கணீர்
தாரகப்பிரமந்தனைத் தவறாதவனபொடு மெம்பிரான்
நாரருட்சிவமந்திரத்தையே நாளுமோக்கவிளம்புவாய்.

(இ-ள்.) அங்ஙனம் விஷ்ணு சொலலுவது காரியமேயென்று நினைத்து மகாதேவி மகிழ்ச்சியடைய பின்னும் விஷ்ணுவானவர் ஒரு உண்மைசொல்லுகிறோம். இந்தப்படி ஓமஞ்செய்து சிவார்ச்சனை செய்யமிடத்தில் தாரகபிரம்மதனை வழுவாமல் அதனுடனே சிவப்பிரீதியாய்ப் பூரணானந்த சூட்சும பஞ்சாட்சரமந்திரத்தை அனவரதகாலமுந் தியானஞ்செய்து பூ ப்பாயென்று பின்னையுஞ்சொல்வார் விஷ்ணு.

இந்தமந்திரமெந்தைமந்திர மின்பமந்திரமன்பினால்
வந்தமந்திரமெந்தைபங்கு வழங்குமென்றெழுகம்பைநீ
ருந்தியின்புனலுஞ்செழுந்தருவின கொழுநதொடைபுங்கைமே
லுந்தமெனபரவின்சிவந்தனை யுண்டெனக்கிருபைகொண்டுமான்.

(இ-ள்.) இந்த மந்திரம் எம்முடையகர்த்தாவாகிய பரமேஸ்வரனுடைய மந்திரம். சிவனுக்குப் பிரீதியான மந்திரம் சிவ கிருபையினால் வந்தமந்திரம். இது சுவாமி இடப்பாகங்கொடுக்குமென்று திடசிந்தமாடெண்ணைச் சிவபூசைக்கு ஆரம்பிக்கும்போது செழுமையாகிய கம்பையாற்றுச் சலமும், வெண்மையான மாமரத்தின் கொழுங்கொத்துகளும் உன்னதங்களினால் தீண்டி மெல்லிய மணலைத்திரட்டி சிவலிங்கமாகச்செய்து சிவனை யாவாகித்து பிரகாரம் பூசைசெய்து அன்புடனே அர்ச்சனை செய்வாயென்று சொன்னார் மகாவிஷ்ணு.—எ-று. (௧௩)

அற்சனைத்தொழில்முற்றிநற்செப முற்றிமெய்த்தவமுற்றபோ
திற்புனற்பிரளையத்தையத்திசையெட்டுமுட்டவெழுப்பினர்
கற்புறப்பொடியிட்டவட்ட கனத்தனத்தையழுத்தினள்
வற்றடககரபொற்றொடிக்குறி வைத்துவத்தொடணைத்துளாள்.

(இ-ள்.) அப்படி விஷ்ணு சொலலிய பிரகாரமே சிவனை யாவாகித்து பஞ்சாட்சர மந்திரத்தை உச்சரித்து முடித்து சிவயோக தியானத்திலிருந்தாள். அப்போது உமையவள் மனோபக்தியை சோதிக்கவேண்டிப் பரமசிவன் அந்தக்கம்பையாற்றிற் பெருவெள்ளமாகச் சலம் பெருகிவரும்படிக்கு கட்டளையிட்டார். அதுகண்டு உமையவள் தனது தனபாரங்கள் சிவலிஙகத்தின் திருமேனியிலமுந்த அழுத்தி ஆசையுடனே தனது கைவளையலமுந்திய குறியுண்டாகும்படி கைகளால் சிவலிங்கத்தைத தழுவிக்கட்டி அணைத்துக்கொண்டாள்.—எ-று. (௧௪)

ஆதிபீடமதானதேவியை யசீருமாசமையாதியை
நாதகீதவினோதவாணியை நாகரீகசுபாஷியை
வேதவாகமபுராணமோதிய வீரமாதவ நாரியை
மாதயாவுடனேநமீஇ வரமேதுகேளெனவோதினர்

(இ-ள்.) அப்படி ஒருமனதாய்ச் சிவலிங்கத்தை விடாமல் உமையவள் ஆணைத்துக் கொண்டவுடனே சிவனுக்குக் கருணையுண்டாகித் தமக்கு ஆதிபீடமான தேவியை, ஆறுசமையங்களுக்கு முதல்வியா யிருக்கின்ற நாதகீதப்பிரியவசனியானவாணியை, நாகரீகமான சுபாஷணியை, வேதாகம சம்பூரண முடிவில் வசிக்கின்றவளை, வைராக்கியமாகத் தவஞ்செய்த இமய பர்வத புத்ரியாகிய பார்வதா தேவியம்மனை, பரமசிவன் தழுவி உனக்கென்னவரம் வேண்டுமோ அதைக்கேளென்று சொன்னார்.

கண்டுகண்டிருகண்களிப்பொடு கருணைமிப்பிரணவநிலைப்
புண்டரீகபதத்தஞானியர் போதமாதவர்திரிபுரங்
கொண்டபுன்னகை யாளவாளொடுங் குலவுகேடகசூலமேல்
மண்டுபாசமெடுத்தநாடிடை வாரியாலநுகர்ந்துளாய்.

(இ-ள்.) அப்படி காட்சிகொடுத்தருளிய சுவாமியை திருபார்வதியாகிய உமையவள் தனது கண்கள்களிகூரக்கண்டு சிவஸ்தோத்திரஞ் சொல்லத் துவக்கினாள். பிரணவாகார பீடத்தில் வசிக்கின்ற சரணம்புயங்களையுடையவனே, ஞானிகளுக்குப் போதமாகிய வறிவுருவானவனே, மாதவஞ்செய்யுடைய திரிபுரந்திரனைப் புன்சிரிப்பினாலெரித்த மகாதேவனே, கையில் வாளுங் கேடகமுஞ் சூலமும் பாசமுந் தரித்தருளிய சதுர்ப்புயங்களை யுடையவனே, கடலிலெழுந்தெழுந்த ஆலகாலவிஷத்தை அமுதாக உண்டவனே, தேவர்களைக் காத்த பரமேஸ்வரனே, என்று தோத்திரஞ்செய்தாள் உமையவள்.—எ-று. (௧௬)

தேவர்சூழ்மகதேவர்மூவிழி திகழுநாயககண்டபே
ராவலிற்பணிவரவரவர்க்கினிய தானருபநிருதவிற்
காவலத்தசுடர்கருசடைப் பரமநித்தியபவரிலா
யாவருக்குமெவற்றினுக்குமோரிறைவநற்சிவசாந்தனே.

(இ-ள்.) தேவர் சூழ்ந்து துதிசெய்கின்ற மகாதேவனே. சகளகண்ட திரிநேத்திரதாரியாய் விளங்கிய லோகநாயகனே. அன்புடைய பக்தசெனங்களில் அவரவர்க்கிஷ்டமான வரங்களுங் காட்சியுங் கொடுக்கின்ற கருணாநிதியே, பினாகவிறபிடித்த கைகளையுடையவனே, சிவந்த சடைகளையுடையவனே, நித்தியமான பரப்பிரமவஸ்துவே, பிறப்பிறப்பில்லாத நித்தியனே, எவ்வுயிர்களும் எப்பொருட்கும் இறைவனாகயிருக்கின்ற சிவனே சாந்தகுணத்தை யுடையவனே, என்று பின்னுஞ்சொல்வாள்.

உந்திவேணிய வொப்பிலாதவ லுலகினுக்கிதசச்சிதா
நந்தவந்ததுரந்தராசுக துக்கமற்றமெஞ்ஞானவா
னந்தசெந்தி சொரூபநித்திய மானபூரணபிரமமோர்
கந்தவாகிய யாவிருக்குமோர் காரணுவிளையாடலாய்.

(இ-ள்.) நதிசூடிய சடைடையுடையவனே, தனக்கு வொப்புவமை யில்லாதவனே, உலகத்துக்குப் பாபரகிதமாகிய சச்சிதானந்தப்பொருளே, அழகிய துரந்தரீகமானவனே, சுகமுந்துக்கமு மில்லாதவனே, ஞானநீதமானவனே, அக்கினிமலையாயெழுந்தருளிய சோதிசொருபனே, அநித்தியமில்லாத ஆத்ம பூரண பரப்பிரம்மமே, அந்தகரணங்களையுடைய சர்வ பூதான்மாக்களனைத்திற்கு மொருகாரண மூர்த்தி

யானவனே, அளவில்லாத சோதி சொரூபமெடுத்து விளையாடப்பட்ட சிவனே, என்று துதிசெய்தாள் உமையவள்.—எ-று. (௧௮)

தேவர்தேவதே வாசமுப்புர தேக்ன்தேவர்கள் செல்வவென
ருவலாவென தகநினைத்துன தருளினிற்றவ மெய்திநின்
ரேவராவுன தைந்தெழுத்தினை யுரைகொணூற்றுட னெட்டுரைத்
தேவலாகி யியம்பவேதவ மென்னையாண்டருள் செய்தனை.

(இ-ள்.) தேவாதிதேவனே, அரி பிரம்மாதி தேவர்களுக்கும் அதிதமானவனே, திரிபுராதகனனே, தேவர் பாக்கியமானபொருளே, என்று யென்னுடைய ஆசையினாலே என்மனோயிஷ்டங் கைகூடவேண்டுமென்று உம்முடைய கிருபையினாலே தவஞ்செய்து ஓயாமல் உம்முடைய சூட்சும பஞ்சாட்சரத்தை நூற்றெட்டு செபஞ்செய்து பூசித்து அருச்சனை செய்யவே அடியாள் தவநிலைமுன்பாகவந்து காட்சிகொடுத்தருளினீரென்று சொல்லிப் பின்னையுந்துதிசெய்கின்றாள்.—எ-று. (௧௯)

வேறு.

பரமகல்யாணபோற்றி பணப்பணிப் பணியாய்போற்றி
யரவணுந்தூலமான வகளங்கபோற்றிதேவர்
புரவுலகனைத்து மேவும் புராதனபோற்றியேற்றுப்
புரகொடிப்புனிதபோற்றி பூதநாயகனேபோற்றி.

(இ-ள்.) பிரமசைதன்னிய சவுந்தரிகனே போற்றி, நாகாபரணனே போற்றி, சிவசிவாபோற்றி, நிஷ்களானந்தமயமே போற்றி, அண்டசராசரங்க ளெல்லா நிறைந்த புராதனப்பொருளே போற்றி, இடபக்கொடியைப் படைத்த புனிதனே போற்றி, சர்வ பூதாத்தும நாயகனே போற்றி.—எ-று. (௨௦)

சுத்தனேபோற்றியீறில் சோதியே போற்றியார்க்குங்
கர்த்தனேபோற்றிதென்கீழ்க் கடவுணேத்திரனேபோற்றி
யுத்துளசீற்றபோற்றி யுருத்திரசம்புபோற்றி
வித்தகஞானபோற்றி விதரணவிமலபோற்றி.

(இ-ள்.) பரிசுத்தனே போற்றி. அந்தமில்லாத சோதியேபோற்றி, யாவர்க்குங் கர்த்தாவாகிய சிவனே போற்றி, அக்கினிநேத்திரனே போற்றி, உத்தளமாக வெண்ணீறணிந்த மேனியனே போற்றி, உருத்திரனே சம்புவே போற்றி, ஞானவித்தகனே போற்றி, விதரண விவேகமுள்ள விமலனே போற்றிபோற்றி.—எ-று. (௨௧)

வேதங்களறிதற்கெட்டா வேதியபோற்றிவிந்து
நாதங்களினுக்குமேலாம் நாயகபோற்றிஞான
போதங்களாகிநின்ற புலமையோய்போற்றியெந்தன்
பாதகம்பறிப்பாய்போற்றி பசுபதிபோற்றிபோற்றி.

(இ-ள்.) வேதங்களாலறிவதற்கரிதான வேதியனேபோற்றி, விந்துநாதங்களுக்கெல்லாமேலாகிய நாயகனேபோற்றி, ஞானபோதமாய் நின்ற வறிவுக்கறிவே போற்றி, என்று துதிசெய்பவர்களுடைய பந்தபாசங்களை அறுப்பவனேபோற்றி, ஆத்துமாக்களாகிய பசுக்களுக்கெல்லாம் பதியானவனே போற்றிபோற்றி.—எ-று. (௨௨)

எனத்தவம்புரிந்துபோற்று மிமாசலமடந்தைமுன்னர்
வனத்தரமழுவுமானும் வரவமுமபயக்கையுங்
கனத்துடன்றோன்றிக்கேட்பக் கனிந்துநின்பாகநீங்கா
துணைத்தினந்தழுவும்பாங்கெற் குதவெனச்சோதிகூறும்.

(இ-ள்.) இப்படி தோத்திரங்கள்செய்து அரியதவம்புரிந்து போற்றிசெய்த பார்வதாதேவிக்கு முன்பாக அழகிய மான் மழுதரித்த அபயஸ்தங்களுடனே பெருமை பெறத்தோன்றி நின்று காட்சிகொடுத்து உனக்குவேண்டியவர மென்னவென்று சுவாமிகேட்க, அம்மன் சுவாமீ உம்முடைய இடப்பாகம்பொருந்தி பிரியாமல் தழுவியிருக்கும்படி வரங்கொடுத்தருள வேண்டுமென்று சொல்ல சுவாமி சொல்லுகிறார்.

அனலெனுங்கிரியாய்ப்பின்ன ரவிமணியசலந்தானுய்
கனகநல்வரையாய்க்கல்லின் கல்லதாயுகங்களொன்றும்
வனமுனைபிறழாநிற்கும் வரையிற்கௌதம னுசிரமம்
தனிடத்திருமினென்னைச் சங்கரனுரைத்துப்பின்னும்.

(இ-ள்.) வாராயுமையே, முன்னே அக்கினிமலையாய்ப் பின்பு இரத்தினமலையாய் அப்புறம் சொர்ன்னமலையாய் இப்போது கல்லுமலையாய் நாலுயுகங்களிலும் வர்ன்னபேத மூன்றைமைவழுவாமல் உயர்ந்துநிற்கின்ற திருவண்ணாமலை யிடத்திற் கௌதமன் என்னைத் தன்னுள்ளத்தில்வைத்து துதிசெய்யுஞ்சாரலாகிய ஆசிரமத்திலே நீபோய் சேரவேண்டுமென்று சொல்லி பின்னுஞ்சொல்வார் சுவாமி.—எ-று. (உ௫)

திருவருணையில்நீபேசி சிறந்தகௌதமன்றன்வாக்கால்
மருவருணையினைசெய்த மான்மியமுழுதுங்கேட்டுப்
பெரிதுநம்வடிவதாய பெருங்கிரிவலமாய வந்து
விரவுகார்த்திகையிற்றிங்கள் வியனுறவம்புரிதிமின்னே.

(இ-ள்.) திருவண்ணாமலைச்சாரலில் நீபோய்ச் சேர்ந்து சிறப்பையுடைய கௌதமன் வாக்காலே அந்தத்தலத்தில் நாம் செய்த காரண மான்மியமெல்லாங் கேட்டு மிகவும் நம்முடைய வடிவமாயிருக்கின்ற திருவருணைகிரியைச் சுற்றி பிரதட்சணம் வந்து கார்த்திகை நட்சத்திர விசேடமாகப் பொருந்திய கார்த்திகைமாதம் முழுதுந் தவஞ்செய்வாய் பெண்ணேயென்று பின்னையுஞ்சொல்லுகிறார் சுவாமி—எ-று.

காஞ்சியிற்றவத்தாலின்றெங் கண்புதைத்துறைகமர்ந்தாய்
தோஞ்சிறிதிலாதவண்ணந் தொலைத்ததாங் கருணையெய்தி
தேஞ்சிறந்திலங்குவில்வந் திகழ்வனச்செருவின்வைகி
வாஞ்சியோர்விரதமப்பால் வந்துநான்றருவன்பாகம்.

(இ-ள்) இந்தக் காஞ்சிபுரத்திற் கம்பையாற்றங்கரையிற் செய்த தவத்தினாலே எம்முடைய திருக்கண்களைப் புதைத்தபாவம் உனக்குவிமோசனமாச்சுது, இனி திருவருணாசலத்திலே உமையே நீபோய்ச்சேர்ந்து தேன்கமழாநின்ற வில்வவனச்சாரலில்தங்கி வாசஞ்செய்து கௌதமன் சொன்னபிரகாரம் விரதங்கள்நோற்று தவஞ்செய்வாயானால் அவ்விடம் வந்து காட்சிகொடுத்து நம்முடைய வாமபாகங் கொடுக்கிறோம்.—எ-று. (உ௬)

என்றினிதுரைப்பவீங்கா திடுநிழற்காஞ்சிபாங்
கின்றனகண்டுகாஞ்சி நகரெனநிலைப்பேராக்கி
வன்றிடுகம்பைபாங்கர் மாநிழல்வைகிப்பூசித்
தன்றுளசிவலிங்கம்மே காம்பரமானதம்மா.

(இ-ள்.) என்றிப்படி பரமேஸ்வரன் சொல்லி விடைகொடுத்தருள, உமையவள் மகிழ்ச்சியோங்கி யெப்போதும் விலகாமற் கவிக்கு நிழலையுடைய காஞ்சிமரம் அங்ஙனம் நின்றதைக்கண்டு அந்த தலத்துக்கு காஞ்சீபுரமென்னும் பெயர்விளங்க நிலையானபெயரிட்டமைத்து,கம்பையாற்றங்கரையில் மாமரத்தினிழலில்வைத்துப் பூசித்த சிவலிங்கத்துக்கு ஏகாம்பரயீஸ்வரரென்று பெயர்வழங்குகின்றது.—எ-று. (௨௭)

அம்மையுமாதிபீட மமைத்தறுசமையத்தாரு
மிம்மையினடாத்தவன்றே யாவர்க்கும்பொதுவாய்நின்று
செம்மைகொள்சத்திபேர்பான் சித்தியிற்சேர்வதாகிப்
பொம்மெனத்திருமால்சேர்பும் புண்ணியங்கோடிசெய்தா.

(இ-ள்.) பார்வதியம்மை ஒரு காமகோடி பீடமுண்டாக்கிவைத்து சட்சமையத்தாரு மிகப்பிரசாதம் பெறப் பரிபாலனஞ்செய்து நடாத்தவரத்தக்கதாக யாவருக்கும் பொதுவாய் நிலைக்கச்செய்து அழகிய பரசக்தி பீடின்பம் பெறுவதாகச் செய்து விஷ்ணுவேர்வைதலமுஞ் செய்துமுப்பத்திரண்டறமும் வளர்த்து அளவில்லாத சிவபுண்ணியங்களுஞ் செய்தமைத்தாள் உமையவள்.—எ-று. (௨௮)

அன்றரனருளிச்செய்த தணங்குதாழ்தமைந்துமேலோர்
துன்றியவருணைவெற்பிற் றென்றினையோன்றலோடுங்
கன்றியவினைகளூர்க்குங் கௌதமனிருக்கைசெல்ல
லொன்றினுக்கொன்றுகோடி புயர்சிறப்பெயதிற்றுமால்.

(இ-ள்.) அதன்பின்பு பரமேஸ்வரன் அருளிச்செய்த பிரகாரம் பெரியோர்கள் நிறைந்துவசிக்கப்பட்ட திருவருணைசலத்தைச்சேர்ந்தாள் உமையவள், அப்போது தீராதவினைகளைத் தீர்க்கப்பட்ட கௌதமருசிரமமெல்லாம் ஒன்றுகொன்று கோடிபங்கு அதனமாகச் சிறந்து வளம்பொருந்தி செழித்தது.—எ-று. (௨௯)

வேறு.

ஈங்கிதென்கொல்லோவென்றன் றதிசயங்கள்களிப்பநோக்கி
யோங்குகௌதமறுங்கெய்தி புமையவள்றிப்பாவிசை
பாங்குநான்பெறநீயினறு பகருமோர்விரதமென்னத்
தாங்கருந்தவனுநற்கே தாரமாம்விரதஞ்சொன்னான்.

(இ-ள்.) அப்படி வளமுண்டாகி செழித்ததுகண்டு இதுவென்ன அதிசயமென்று மனங்களிகூறப் பார்க்கின்றபோது அம்மன் அங்கெழுந்தருளினாளென்றுதெரிந்து வந்துஅம்மனை கௌதமரெதிர்கொண்டு உபசரித்தபோது அம்மன் வாராய் கௌதமமுனிவனே, பரமேஸ்வரருடையஇடப்பாகம் யான் பெறும்படி விரதமொன்றுசொல்லென்றுகேட்க தவசிரேஷ்டராகிய கௌதமர் கேதார விரதமெடுத்துச்சொன்னார்.

சொல்லியவிரதமுற்றி சோணையங்கிரியைச்சுற்றி
நல்லருட்டவஞ்செய்தம்மை நயந்தகார்த்திகைமாதந்தாம்

புல்லுரிமருங்கரங்ஙன் புகுந்தனர் புகுந்துவேலை
யல்லியங்குழலைநோக்கி யருட்பெறவுரைப்பதானுர்.

(இ-ள்.) கௌதமராலே சொல்லப்பட்ட [redacted] விரதத்தை அனுஷ்டித்து முடித்து அருணகிரியைப் பிரதட்சணஞ்செய்து அன்புடனே அரிய தவஞ் செய்கிற போது, சிரேஷ்டமான கார்த்திகைமாதக் கடைசியில் புலியுரிதரித்த விடையையுடைய பரமேஸ்வரன் அங்ஙனம் எழுந்தருளிவந்து மலைமகளாகிய மணமலர் சூடிய கூந்தலையுடைய பார்வதியம்மனைப் பார்த்துத் திருவாய் மலர்ந்து சொல்லுவார்.—எ-று.

இவணுனக்கெமதுபாக மீந்ததேகாந்தமான
தவமிகுநாகவெற்போர் தலத்திடையுளதாங்கெய்தி
பவளமெய்த்தகரூர்சேயும் பரிந்தவணுறைந்ததென்மே
னவநிலைவழியினபாங்காய் நாகவெற்படைதியென்றார்.

(இ-ள்.) வாராயுமையே, இந்த அருணகிரி ஸ்தலத்திலே உனக்கு நம்முடைய இடப்பாகம் தரும்படி வரங்கொடுத்தோம், ஆனால் ஏகாந்த தலம் ஒன்று யிருக்கின்றது. அது இந்த அருணாசலத்துக்கு தென்மேறகில் கொங்கு மண்டலத்திலே திருநாககிரியென்று பெயருண்டாகியது. அம்மலையில் தகரவாகனனாகிய நமது குமாரன் சுப்பிரமண்ணிய மூர்த்தி அங்கு சதாகாலமும் வசித்திருக்கின்றான். நீயும் இங்கிருக்கின்ற நிலவழி வழியாகப்போய் அந்த நாககிரியைச் சேராயென்று விடைதந்து பின்னையுஞ் சொலவார் சுவாமி—எ-று. (௯௨)

நாகவெற்படைந்துதீர்த்தம் நண்புடன்மூழ்கியங்க
ஞேகையிற்றேவதீர்த்த மொன்றுளததன்மேற்பொன்னின
மாகனகஞ்சமீது வைகினஞ்சேயினபாங்கர்
தோகைநீதவங்கள்செய்யிற் றோன்றுதுமவணுமென்றார்.

(இ-ள்.) உமையே நீ அந்த நாககிரி தலத்தில் சென்று புண்ணிய தீர்த்தங்களில் மூழ்கி அன்புடனே யங்ஙன மனோரம்மியமான தேவதீர்த்தமொன் றிருக்கின்றது அதிலுற்பவித்த பெருமையையுடைய பொற்றாமரை பொகுட்டின் மீதிருந்து நமது குமாரன்பக்கமாக பெண்ணே நீ தவஞ் செய்வாயானால் அங்கே நாம் வந்து கிருபை செய்கிறோம் என்று சொன்னார் மகா தேவர்.—எ-று. (௯௩)

என்றரன்பகரவெண்ணான கியலறம்வளர்க்குங்கன்னி
நன்றெனமுனிவர்சூழ நயந்துதென்மேற்பான்மூலை
தென்றிசைநோக்கிநாகர் திகழ்நிலவழியின்பாங்கர்
மன்றலின்வந்துமெல்ல வாளராமலையில்வந்தாள்.

(இ-ள்) என்றிப்படி பரமசிவன் திருவுளம்பற்ற முப்பத்திரண்டறங்கள் வளர்த்த பார்வதாதேவியம்மன் நலமென்று முனிவர்கள் சூழ ஆசையுடனே தென்மேற்குத்திசையை நோக்கி அந்தநாகமலை மார்க்கத்திலிருக்கின்ற நிலவழி வழியாகப் புறப்பட்டு மங்கலகரமான மகிழ்ச்சியுடனே மெல்ல மெல்ல பிரகாசமான நாககிரியில் வந்து சேர்ந்தாள்—எ-று. (௯௪)

வந்துதன்முதற்சேயாய மைந்தனை நினைத்தகாலை
யைந்துசெங்கரமுமொற்றை யணிமணிமருப்பும்பாரத்

தொந்தியும்பருத்தகாளுஞ் சுடர்விடுஞ்சிறுத்தநோக்குங்
கந்தரப்புயலின்றாரைக் கடமுமுன்விளங்கவந்தார்.

(இ-ள்.) அப்படிச்சேர்ந்த உமையவள் முதற்பிள்ளையாகிய விநாயகரை நினைந்தவுடனே ஐந்து கைத்தலங்களு மழகிய ஒற்றைக்கொம்பும் பெருத்த தொந்தியும் பணைத்த கால்களுஞ் சிவந்து பிரகாசிக்கின்ற சிறியகண்களும் மேகசலம் பெய்வதுபோலும் வழிந்தொழுகிய மதத்தாரையும் விளங்க வந்தார் ஆனைமுகத்து விநாயகமூர்த்தி.—எ-று. (௧௫)

வருகணபதியைநோக்கி மைந்தயான் றீர்த்தமாடற்
கரியனற்றீர்த்தம்பூமி யந்தரசுவர்க்கத்துண்டாம்
பெரியனயாவுமிந்தப் பெரும்பனிமலையிலெய்தக்
கருணையினழைக்கவேண்டுங் கணபதிகடிகவென்றாள்.

(இ-ள்.) அப்படிவந்து வணங்கிய கணபதியைப் பார்த்து உமையானவள் நான் தீர்த்தமாடுவதற்கு அரிதான தீர்த்தங்கள் பூமியந்தர சுவர்க்கங்களிலுண்டாகிய புண்ணிய தீர்த்தங்களனைத்தையு மிந்த நாககிரியிலே அன்புடனே வரவழைக்கவேண்டும் பிள்ளாய் சீக்கிரத்திலே யென்றாள் உமையவள்.—எ-று. (௧௬)

என்றனளுடனிவ்கையா லேனைபதீர்த்தம்வாங்கி
மூன்றிகழமுதக்கங்கை முதலியவனந்தநீர்த்தம்
தெனறிசைக்கயிலையான தெய்வநாகப்பொன்வெற்பி
லொனறவெவடபாங்கெல்லா முதித்திட விதித்தார்மூத்தார்.

(இ-ள்.) உமையவளிப்படிச் சொன்னவளவில் விநாயகமூர்த்தி நெடிய துதிக்கையினாலே திரிலோகங்களி லுண்டாகிய அமிர்தகங்கை முதலான தீர்த்தங்களனைத்தையுந் தெட்சண கயிலையாகிய திவ்விய நாககிரியின் வடப்புறத்து மலையெங்கும் தீர்த்தமயமாக தோன்றிப் பிரகாசிக்கச் செய்தார், ~~விநாயகமூர்த்தி~~—எ-று. (௧௭)

என்னையீன்றினியகொங்கை யினியமுதீய்ந்ததாயே
யுன்னுமுன் றீர்த்தம்யாவு முதித்தனம்வடபால்வெற்பில்
நின்னடிபதிந்தாலந்த நீர்படிபாவம்போஞ்சென்
றன்னதியாடல்வேண்டு மம்மவென்றடியில்வீழ்ந்தார்.

(இ-ள்.) என்னைப்பெற்று பிரியமாய் முலையமுத மீய்ந்து வளர்த்ததாயே நீ நினைக்குமுன்னே சகல தீர்த்தங்களும் வடபுரத்து மலையெல்லாம் பிரவேசித்து விளங்காநின்றது. உன்னுடைய பாதங்களந்ததீர்த்தங்களில் படுமாயின் தீர்த்தங்களினுடைய பாவங்களெல்லாம் தீரும், நீ சென்று அந்தத் தீர்த்தங்களில் மூழ்கவேண்டும் அம்மா வென்று உமையவள் பாதத்தில் வீழ்ந்து நமஸ்கரித்தார் விநாயகமூர்த்தி.

ஐங்கரன்றன்னையார வணைத்தருள்புரிந்துவாழ்த்தி
கங்கையுண்முதலாந்தெய்வக் கணபதிதீர்த்தமாடி
மங்கலநியதியாவு மறைமுறைமுடித்துவேத
லிங்கிதவர்சீரகூற வெயதினள்மலையினுச்சி.

(இ-ள்.) அப்படி வணங்கிய ஐந்து கரங்களையுடைய விநாயக மூர்த்தியை இறுகவணைத்து கருணைசெய்து வாழ்த்தி கங்கை நதியிலு மூதன்மையான கணபதி தீர்

த்தத்தில் மூழ்கி ஆசாரமாக நித்திய கன்மாதிகளை யாவுஞ் சுருதிமுறையாகச்செய்து முடித்து பிரமதேவ னாசீர்வாதஞ் சொல்ல உச்சிமலையில் வந்து சேர்ந்தாள் உமையவள்.—எ-று. (௩௯)

நாகமாமலையினுச்சி நண்ணிய குகனைக்கண்டு
மாகருணையினாற்கட்டி வனமுலையமுதமூட்டி
யாகமானந்தக்கண்ணீ ராற்கழீஇகருத்தினேசித்
தேகமாயிறைவன்சேர விருந்தவமுயலலுற்றாள்.

(இ-ள்.) அப்படி நாகமலை யுச்சியில வந்து சேர்ந்த உமையவள் அங்கு வசிக்கின்ற குமாரனைக் கண்டு மிகுந்த கருணையாக கட்டியணைத்து அழகிய முலையமுர்தமூட்டி தேகமுழுதும் பிரம்மானந்தக் கண்ணீரால அபிஷேகமாட்டி மிகுந்த அன்படனே வாழ்த்தி சிவனுடைய அர்த்தபாகம் பெறவேண்டி தேவதீர்த்தத்திற்கமலகேசரத்தில அரியதவஞ்செய்ய நினைந்தாள் உமையவள் —எ-று. (௪௰)

உமைதவச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௧௬௧.

# அர்த்தபாகச் சருக்கம்.

கயிலையினின்றுகேதா ரத்தினிற்கலந்துதேவ
ரியமயிற்றிருவினோடு பெண்மணிமொய்த்திருமு
வயனிறைகாஞ்சியண்ணா மலையினில் வைகிநாகப்
புயறவழ்பொருப்பினின்ற பொன்னிருசரணம்போற்றி.

(இ-ள்.) கைலாசகிரியி னின்று இமய கேதாரத்திற் சேர்ந்து முனிவர்சூழ மயில்போலுஞ் சாயலையுடைய லட்சுமிதேவி முதலாகிய அனேகஞ் சதிகள் சூழ்ந்து சேவித்துவர, வயலவளப்பத்தையுடைய காஞ்சீபுரத்திலுந் திருவண்ணாமலை யிடத்திலும்வந்து வசித்துத் தவஞ்செய்து மேகமொய்த்த வழகிய நாககிரியுச்சியிற் றேவதீர்த்தத்தின் பொற்றாமரைப் பூம்பொகுட்டில் நின்று மகாதவஞ் செய்கின்ற பார்வதாதேவி இரண்டு சீர்பாதங்களை நமஸ்கரிப்போம்—எ-று. (௧)

வேறு.

நாகமாமலைநண்ணிய தீர்த்தமே, லானதென்னபிறான்விரித்தோதுவேன்
ஏகமாயதுமம்மையிறைஞ்சலு, மோகயிற்பணிந்தாருமுனோதுவாம.

(இ-ள்.) இப்படிச்சொன்ன சூதமுனிவர் நைமிசாரணிய முனிவர்களைப் பார்த்துச் சொல்லுகிறார் முனிவர்களே கேண்மின்கள். அந்த நாககிரிதலத்தின் தீர்த்தமகிமையெல்லாம் பின்னாலே விளங்கவிரித்துச் சொல்லுகிறோம். இப்போது அங்ஙனம் உமையவள் தவஞ்செய்து சிவனிடப்பாகம் பெற்றதையும் மகிழ்ச்சியுடனே வந்து பூசித்தவர்களுடைய வரலாற்றையுஞ் சொல்லத்தொடங்கினோம்.—எ-று. (௨)

மாவெழுந்துவயங்கியகீட்டிசை, மேவுநன்குமரீசுரன்மேற்புறம்
தேவதீர்த்தச் செழுந்தடமீதுபொற், பூவினற்கமலப் பொகுட்டேறினாள்.

(இ-ள்.) நாககிரியுச்சியி லோங்கிவளர்ந்த மாமரத்தின் கிழக்கு குமரிசருக்கு மேற்கு இதன் மத்தியில தேவதீர்த்தத்தில வளமையுடைய பொற்றுமனைப் பொருட்டின்பேரி லேறிநின்று தவஞ்செய்யத்தொடங்கினாளுமையவள.—எ-று. (ரு)

அன்னபோதரியாரணனெம்முமை, பென்னமுனனின்றிணையடியேத்தினர்
முன்னனற்கனலிற்றவமுற்றினள், பின்னதிகருட்பெருந்தவமபேணினாள்.

(இ-ள.) அக்காலத்திலே அரிபிரமர்களிருவரும் அம்மன் முன்பாக வந்து தோத்திரஞ் செய்து முன் அக்கினிமலையிடத்து நின்று அரியதவஞ் செய்தாள, இப்போது தேவதீர்த்தத்தில் நின்று பெரியதவஞ் செய்கின்றாள் —எ-று. (சா)

மலைமடந்தைவருந்துந்தவத்தொழிற், கலைமடந்தைநிறப்பிறையோடுநல்
லலைமடந்தையடக்கியசென்னியா, னிலமடந்தைவரநினைவுற்றனன.

(இ-ள) இமவான்மகளாகிய பார்வதியம்மன் வருந்திச்செய்யுந் தவமுயற்சி யறிந்து சரஸ்வதியைபபோல வெண்மைநிறமுள்ள மூன்றாம்பிறையையும் கங்கையையுந் தரித்த சிரசையுடைய பரமசிவனிந்தப பூலோகத்திலேவருவதற்கு நினைவுசெய்தார்.

உற்றனன்றெம்முமைநவமுற்றிய,பெற்றியெனறுபெட்பினிலெய்தினர்
வெற்றிவேழமுகத்தனவேலனை, நற்றிணபனிமுனைஙகையைநணணினர்.

(இ ள) இப்படி மாதேவி அரியதவஞ் செய்கின்றபோது பரமசிவம் அந்தத் தவத்துக்கு மெச்சினவராய பூசையோடு இந்நாககிரியில வந்தெழுந்தருளி வெற்றியுடைய ஆனைமுகத்து விநாயகனையும், வேலாயுதக கடவுளையு முன்பு கண்டு பிரியங்கூர்ந்து உமையவளையும் வந்து கண்டருளினர் பரமேசுவரன்.—எ-று. (கூ)

நனறுநன்றுநயநதனமுன்றவ, மன்றுகச்சியிலஙகியுணின்றனை
யின்றுநாகமலைமுடிநீரிடை, நின்றுநின்றுநெடுந்தவமெய்தினை.

(இ-ள்.). வாராயுமையே நீசெய்யும் அரியதவத்துக்கு நாம்மிகவு மெச்சினோ முன் காஞ்சிபுரத்திலும் திருவருணையிலும் தவமியற்றின யிப்போது நாககிரி யுச்சியில் நீரில் நின்று நெடுங்காலமாய்த் தவஞ் செய்கின்றாய் என்று பின்னுஞ் சொல்லுவார்.

உன்கருத்துளுவந்ததுதவுவோம், மின்கருத்துறவேண்டுதியென்றபி
னன்கருத்துளநாதனைக்கைகளால், மன்கருத்துள்வணங்கித்தழுவினள்.

(இ-ள்.) வாராய் பார்வதியே, உன்மனதில் அபேட்சித்த வரத்தைத்தருகிறோம் நீ கேட்பாயென்று சுவாமி சொன்னவுடனே, அம்மன் அழகிய கருத்துத திருத்தமாக்ச சுவாமியைத தனது கைகளால் தழுவி இருதயத்துளளே வணங்கித துதித்துச் சொல்கிறாள்.—எ-று. (அ)

வேறுபட்டவினையின்பயன்விளைந், தூறுபட்டனந்தக்கனெறுப்பினல்
மாறுபட்டகலாவகைநின்னொரு, கூறுபட்டணையும்வரங்கூட்டென்றாள்.

(இ-ள்.) சுவாமீ தேவரீர்வேறே அடியாள்வேறே இப்படி யிருந்தபடியினாலே வினைப்பயனுண்டாய்த் தக்கனுடைய வேள்வியில் அவனிந்தித்த வசனத்தினாலே மிகவுஞ் சிரமப்பட்டே னினி யப்படிவாராமல நாமிருவருங்கூடிப் பிரிவில்லா

ம லிருக்கும்படியாகத் தேவரீருடைய அர்த்தபாகம் அனுக்கிரகஞ்செய்தருள வேண்டுமென்று சொல்லி பின்னுஞ் சொல்லுவாள்.—எ-று. (௯)

உன்னுடம்புடனென்றுவதன்றியா, நின்னையோர்கணநீங்கப்படாதெனக்
கன்னவம்மொழிக்காரணியாரணி, மன்னருந்தவமங்கையிளம்பினள்.

(இ-ள்.) சுவாமி உம்முடைய தேகத்துடனே கூடிக்கலந்திருப்பதே யல்லாமல் தேவரீரை ஒரு நொடிப்பொழுதாகிலு மினிப்பிரிந்திருக்கக் கூடாதென்று கன்னற் கட்டிபோலும் வசனத்தையுடைய காரணம்பிகை வேதாம்பாளானவள நினைப்பதற்கு மரிதாகிய பார்வதாதேவி சொல்லி பின்னையு மொருதவங்கருதினள்—எ-று.

எந்தைநாதனிபம்பியபின்னலால், முந்துநாம்புணர்மோகமதென்கொலென
றந்தமங்கைநினைவிற்பயந்தருட், சிந்தையோடனந்தந்துதிசெய்யுமால்.

(இ-ள்.) நம்முடைய சுவாமியாகிய பரமேஸ்வரன் கிருபைசெய்து சொன்னபின்பல்லாமல் முந்தி நாமா கலந்துக்கொள்ளுகிறது சரியல்லவென்று நினைத்து உமையவள் பயந்து மனபக்தியுடனே அளவில்லாத தோத்திரஞ் செய்யத்தொடங்கினள்.

சங்கராமகதேவசதாசிவ, திங்கள்வேணியதேவதேவாபரா
செங்கண்மூன்றுளவிமலமயேசுரா, புங்கவானம்முருத்திரபோற்றியே.

(இ-ள்.) சிவசங்கரா, மகாதேவ சதாசிவப் பிரமமே, சந்திரசடாதரா, தேவாதி தேவர்கட்கெல்லா முதன்மையானவனே, சிவந்த மூன்றுநேத்திரங்களையுடைய விமலனே, மயேஸ்வரனே, யாவருக்குமேலான புங்கவனே, எனது அன்புக்கு இரங்கி வந்த திரிமூர்த்தியே போற்றிபோற்றி—எ-று. (கஉ)

சூலபாணியதொல்விடைவாகன, காலகாலனைக்காமனைக்காய்ந்தவா
வாலகாலமமுதெனக்கொண்டவா, நீலகண்டநிராமயபோற்றியே.

(இ-ள்.) சூலாயுத அஸ்தனே, ஆதிகாலந் தொடங்கி ரிஷபவாகனருடனே, இயமனுக் கியமனானவனே, மன்மதனை யெரித்தவனே, ஆலகாலவிஷத்தை யமுதாக வுண்டவனே, வேதவேதாந்தப் பொருளே, நீலகண்டனே, நிராமய சொரூபனே போற்றி போற்றி.—எ-று. (கங)

ஈசவெம்மழுவேந்தியசெங்கைய, வாசைபாசமகற்றியவைம்முக
வீசுவேணிவிமலவெண்ணீற்றின, நேசரூபநிரந்தரபோற்றியே.

(இ-ள்.) எமது கர்த்தனே, வெவ்விய மழுவேந்திய செங்கரத்தனே, ஆசாபாசங்களைத் தவிர்த்தருளிய வைந்துமுகத் தையனே, திக்கெல்லாம் பரந்து வீசப்பட்ட சடாதரனே, விமலனே, திருவெண்ணீறு பூத்த திருமேனியனே, அன்பருக்கேற்ற திருவுருவமைந்து நிறைந்திருப்பவனே போற்றி போற்றி.—எ-று. (கச)

அச்சுதற்குமயனுக்குநாயக, முச்சுடர்க்கண்ணமூவாமுதலின
பிச்சையேந்தும்பிரமகபாலனே, நச்சராவணிநாயகபோற்றியே.

(இ-ள்.) விஷ்ணுவுக்கும் பிரம்மாவுக்கு முதன்மையா யிருப்பவனே, சோமசூரியாக்கினி யென்னும் மூன்றுகண்களை யுடையவனே, கெடாத முதல்வனாகிய பொ

ருளே, பிரமகபாலத்தில் பலியேற்பவனே, விஷம்பொருந்திய நெடிய நாகாபரண
ம்பூண்ட சர்வலோக நாயகனே போற்றிபோற்றி.—எ-று. (௧௫)

பாண்டரங்கப்பதபங்கயத்தின, வாண்டவாவணுவுக்கணுவானவா
நீண்டவண்டநிலையபினாகவிற், றூண்டுவிரசுகோதயபோற்றியே.

(இ-ள்.) பாண்டரங்கனே, நிர்த்தனஞ் செய்யப்பட்ட பாதாம் புயத்தனே, அ
ன்பர்களை யாளுமைகொண்டு ஆண்டவனே, அணுவுக்கோரணுவானவனே, நெடி
ய அண்டபுவனங்க ளெல்லாம் நிறைந்து நின்றவனே, பினாக வில்வளைத்து அரியை
அம்பாகத் தொடுத்தெய்யும் வீராதிவீரனே, வெற்றிமாலையணிந்த அழகிய புயத்த
னே போற்றி போற்றி.—எ-று. (௧௬)

ஐந்துபூதமொன்றானவபோற்றியே, யைந்துதேவருமானவபோற்றியே
சிந்துகொன்றைத்திரிபுரபோற்றியென், சிந்தைநாடிக்குச்சிவசிவபோற்றியே.

(இ-ள்.) பஞ்சபூதங்களு மொன்றாய்க் கலந்திருப்பவனே போற்றி, பஞ்சகர்த்
தாக்களுமானவனே போற்றி, தேனொழுகுகின்ற கொன்றைமாலையைத் தரித்த சுந்த
ரனே திரிபுராந்தகனே போற்றி, என்றுள்ளத்தில் பெருகுகின்ற சிவசிவா போற்றி
போற்றியென்று தோத்திரஞ்செய்து வணங்கினள் உமையவள்.—எ-று. (௧௭)

எனவணங்கியிமாசலக்கன்னிகை, தனதுபத்திக்குவந்துநிறுத்தபின்
கனகமேருவளைத்தகைக்காரணர், மனமகிழ்ந்துதம்வாமம்வழங்கினார்.

(இ-ள்.) என்றிப்படி நமஸ்கரித்துத் துதிசெய்த மலையரசனாகிய மகாதேவியான
பார்வதியம்மன் தன்னுடைய மனோபக்தியுடனே தவஞ்செய்து வணங்கினவுடனே
பொன்மலையை வில்லாகவளைத்த காரணகர்த்தாவான பரமசிவன் திருவுளமகிழ்ச்சி
யுடனே உமையவளுக்குத் தம்முடைய இடப்பாகங் கொடுத்தருளினார்.—எ-று.௧௮

தேவர்வாழ்த்தினர் தேசஞ்செழித்தன, மூவரேத்தினர் மோனிகள்போற்றி
யாவருக்குநல்லின்பம்பருத்தன, பாவைபாகம்பரமன்பரிப்பவே. [ஞர்

(இ-ள்.) பரமசிவன் பரமேஸ்வரிக்கு அர்த்தபாகங் கொடுத்தருளின போது
தேவர்களெல்லோரும் வாழ்த்தினார்கள், தேசங்களெல்லாம் செழிப்படைந்தன, மூ
வர்களும் முனிவர்களும் துதித்தனர், யாவருக்கு மின்பமிகுந்தன—எ-று. (௧௯)

நாகமாமலையுங்கொங்குநாடுமே, யேகமாமலைமேமகன்றுடனப்
போகபூமியும்பொன்னுலகம்வர, தாகமோகத்துடனேதவிக்குமால்.

(இ-ள்.) அப்போது அந்நாககிரியும், வளப்பம்பொருந்திய கொங்குநாடு முழு
தும் பொன்மலையும் பொன்னுலகநாடு மானதென்று போகபூமிகளும் பொன்னுல
கமுழுது மங்களம் வருகிறதற்கு மிகுந்த தாகமோக ஆபேட்சையுடனே தயங்கும்.

தேவதீர்த்தந்திகழ்முனிதீர்த்தமென், றேவலாலிருநாமங்களெய்தின
மாவரைப்புனன்மீதுமையாமனார், காவலாகக்கனிந்துறைகின்றனர்.

(இ-ள்.) தேவதீர்த்தமென்றும் முனிதீர்த்தமென்றும் சுவாமியா லிடப்பட்ட
இரண்டுபெயராய் விளங்கிற்று, மகிமைமிகுந்த நாககிரி தீர்த்தத்தின்மீது உமையொ

ருபாகரான அர்த்தநாரீஸ்வரர் அடியார்களைக் காக்கும்பொருட்டு மனமகிழ்ச்சியுட னே அந்த திருநாகமலையில் எழுந்தருளியிருக்கின்றார்.—எ-று. (உக)

தேவதீர்த்தச்சிவன்றிருமேனியின், பாவனைப்படிக்கிச்சிலசொல்லுவாங்
கோவளித்தவெண்பானிறக்கோலமாய், நாவலீரர்த்தநாரியராயினர்.

(இ-ள்.) அப்படி அந்த தேவதீர்த்தத்தின்மேல் எழுந்தருளிநின்ற சிவனது தி ருமேனி யழகியபாவனை சிறிது தெரிந்தமட்டுஞ் சொல்லுகிறோம். எப்படியெனில் பசுவின் பாலைப்போல் வெண்மைநிறம் பொருந்தி யொருபாதி சிவனும் ஒருபாதி அம்மனுமாக வெழுந்தருளி யிருக்கின்றார். கலைவல்லவரான முனிவர்களே—எ-று.

அய்யனின்றவருளின்வடிவுகண், டெய்யுமைங்கரனும்பன்னிரண்டுகைச்
செய்யவேளும்விச்சித்திரமெய்திவந், தையமின்றியருகுறைந்தாரரோ.

(இ-ள்.) பரமேஸ்வரனும் பார்வதாதேவியுங்கூடி அர்த்தநாரீஸ்வர மூர்த்தமாக வெழுந்தருளிநின்ற திருவடிவைக்கண்டு பரிசுத்தமாகிய வைந்துகரப் பிள்ளையாரும், பன்னிரண்டு கைகளையுடைய செவ்வேளும், அந்த அதிசயத்தைப்பார்த்துப் புகழ்ந்து சுவாமி பக்கத்திலேதானே கொலுவாய் வீற்றிருந்தார்கள்.—எ-று. (உ௩)

வேறு.

பணிமலையிலெழுந்தருளிப் பணைக்கொருபாகங்கொடுத்தப்பரிசின்றோற்றம்
வணிமணித்தண்டுச்சியின் மூன்றங்குலியையவளைத்தமைந்த வனப்புக்கொப்
மணிவளையாதுமையிடந்துவைத்தணைந்துமகரகுழைவலத்தேகாலத் [பாம்
தணிவிலொளிதயங்கியதண் டரளமணித்தோடிருபால் வாகிற்றனே.

(இ-ள்.) பரமேஸ்வரன் திருநாககிரியி லெழுந்தருளி உமையவளுக்கு அர்த்த பாகங்கொடுத்து நின்றகோலம் எப்படியெனில், அழகுபொருந்திய தெண்டாயுதத் தினுனி மூன்றுவிரலால் வளைத்துப் பிடித்திருக்குங் காட்சியைப்போலே அமர்ந்து ஒரு திவ்ய அத்தத்திலேபொருந்த வழகியபார்வதியைத் தமதிடப்பாகத்திற் சேர்த்த ணைத்து மகரகுண்டலம் வலதுதோளிடத்தி லசையவும், அழகிய பூரணப்பிரகாச மி குந்திலங்கிய குளிர்ந்த முத்துமணிநிறைந்த சுவர்ன்னத்தோடு இடதுதோளிடத்திற் பிரகாசஞ்செய்யவும்.—எ-று. (உ௪)

வேறு.

ஒருபகற்பொழுதுகஞ்ச முற்பலமலர்ந்ததென்ன
விருவிழியொன்றோடொன்றுற் றின்பநோக்கினிதுகாட்டி
திருவளைக்குனிப்புக்காட்டுந் திருமுகநாடிப்பார்க்கில்
வருகதிர்ச்சிகப்புபச்சை வண்ணமென்றிரண்டுந்தோன்றும்.

(இ-ள்.) ஒரு பகற்காலத்தில் தாமரையும் நீலோற்பலமும் புட்பித்ததுபோல இரண்டுகண்களும் ஒன்றுக்கொன்று உற்றுநோக்கிய இனிய பார்வையும், பொன் மலை வில்லைப்போல வளைந்திருக்கின்ற இரண்டு புருவங்களும், திருமுக மண்டலம் ஒருபாதி பவளநிறமும், ஒருபாதி பச்சைநிறமுமாக சுடர்விரித்துப் பிரகாசிக்கும்.—

இடத்திருக்கவானும்வெண்பட் டேரகவுடையுமற்றைத்
தடத்திருசெகசேந்திரனை தானவனுரியும்நாகப்

படத்தெழில்வலேயம்பூண்ட பாணியும்பணிகளீன்ற
சுடர்த்திருமணியுஞ்சூழ்ந்த சூடகக்கரமுந்தோன்ற.

(இ-ள்.) இடப்பாகத்தில் அழகிய துடையில் வெள்ளைப்பட்டாடைக் கோசிக வுடையு மற்றை வலப்பாகத்துத் துடையில் அசுரகெஜேந்திரன் தோலுடையும், படம்விரித் தழகிய நாககேயூரந்தரித்த கையும், நாகமணி மாலைசெறிந்த சூடகக்கையுந் தோற்றஞ்செய்க—எ-று. (௨௬)

குங்குமங்கனகத்தூரி கற்பூரங்குழைத்தசாந்தந்
தங்கியபொடிவிழ்ந்தண்ணீர் தயங்கிமையெழுதுங்கண்ணுஞ்
செங்கனல்விபூதிசாற்றித் திருநுதற்பொடியினோக்க
வங்கியவிழியுமாறு யழகுறவலங்கலோங்க.

(இ-ள்.) குங்குமங் களபகஸ்தூரி கர்ப்பூர மிவைகலந்த குளிர்ந்த சந்தனத் திலகப்பொட்டும், பொருந்திய பிரலாடுகின்ற மையெழுதிய கண்ணும், சிவந்த நெருப்பில்விளைந்த வெண்மையாகிய விபூதி நெற்றியிற்பிரகாசிக்க, சிவந்தகன்ற கண்ணும் நாகத்தாழ்வடமுஞ் சுடர்விரித்துவிளங்க—எ-று. (௨௭)

பகைமதன்றன்னைக்காய்ந்த பாதிநெற்றியிற்றீக்கண்ணுந்
தொகவிதனுடனொன்றுநித் தொல்லுயிர்க்கருள்கூர்நோக்கு
மிகபரமோகதாக விம்மைதீர்த்தருளோர்பாங்கு
மகவரனளிக்குங்காலை மன்னுயிர்க்கருளோர்பாலும்.

(இ-ள்.) பகைசெய்த மன்மதனையெரித்த நெற்றிக்கண்ணி லொருபாதி அக்கினிக்கண்ணும், அதனுடனே ஒன்றாய்க் கலந்து சர்வ ஆத்துமாக்களுக்குங் கருணை கூர்ந்து இரட்சிக்கின்ற பாதிநெற்றியிற் குளிர்ந்தபார்வையும், இகபரங்களினுடைய மோகதாக சோகங்களைத் தீர்த்தருளிய தொருபாகமுஞ் சகல ஆத்துமாக்களுக்கும் புத்திரசந்தானங்கொடுக்கும்போது சகலபிராணிகளுக்கு மருள்செய்யும் ஒருபாகமும்.

பொன்மதுமத்தம்பூபோற் பொலிதிருக்காதோர்பாங்குந்
தென்மலர்நெய்தற்பூவிற் றிகழ்திருச்செவியோர்பாலும்
கன்மலையுததியாலங் கவர்ந்தவொண்களமோர்பாலும்
நன்மணந்தருகத்தூரி நறுந்திருக்களமோர்பாலும்.

(இ-ள்.) பொன்னூமத்தம் பூப்போலேபொருந்திய திருக்காதொருபுறமுந் தேன்றுளிக்கும் நெய்தற்பூப்போற்பொருந்திய திருச்செவி யொருபுறமு மந்திரகிரியால் கடலைக்கடையும்போ தெழுந்த விஷம்பொருந்திய சிறப்புறு கழுத்தொருபாதியும், பரிமளிக்கின்ற கஸ்தூரியணிந்த மிருதுவான கழுத்தொருபாதியும்—எ-று. (௨௮)

கோலமையெழுதாநோக்கங் கொண்டவக்கண்ணோர்பாலும்
காலவஞ்சனங்கட்டிக் கவின்கொள்மைகண்ணோர்பாலுஞ்
சீலதும்புருவுநார தருமிசைச்செவியோர்பாங்கு
மேலுறவாணிகூறும் வியன்கதைக்காதோர்பாங்கும்.

(இ-ள்.) அழகிய மையெழுதாப் பார்வையுற்ற கண்ணொருபாகமுங் கரியதாகிய வஞ்சனந்தீட்டி யழகுதருங் கண்ணொருபாகமுந் தவமுடைய தும்பரு நாரத

ரிருவருடைய கீதவிசையைக் கேட்குஞ் செவியொருபாகமு மேன்மையாக சரஸ்வ தியாம் உசிதவலங்கார கவிகள்விளங்கும் காதொருபாகமும்—எ-று. (௩௦)

முப்புரிநூல்விபூதி மொய்த்தமார்பிடமோர்பாங்கும்
செபமெனக்களபகத்தூ ரியிற்செறிதனமோர்பாங்கும்
அப்பணியனந்தகேயூ ரந்திகழ்புயமோர்பாங்கும்
பொற்பணிபச்சைமேவியின் பொலிதிருத்தோளோர்பாங்கும்.

(இ-ள்.) முப்புரிநூலாகிய பூணநூலும் விபூதிதூளிதமும் அழகிய மார்பிடமொருபாகமுஞ் சொர்ன்னச் சிமிழுபோன்ற களபகஸ்தூரி பரிமளாதி திமிர்ந்து நெருங்கிய தனபாரமொருபாகமும் அழகிய பொற்பணிபோலும் நாககேயூரந் திகழ்ந்த புயமொரு பாகமும், பச்சை மூங்கிறபோன்ற சொர்ணாபரணங்கள் பொருந்திய திருத்தோ ளொருபாகமும்.—எ-று. (௩௧)

பரசுடன்மழுவோர்பாங்கும் பாசமங்குசமோர்பாங்கு
மரவபந்தனமோர்பாங்கு மாலிலைவயிறோர்பாங்குந்
தரைமுதலுலகுக்கெல்லாந் தந்தைபாங்குறியோர்பாங்கு
முரணறவண்டம்யாவு முறைமுறைபெறுமோர்பாங்கும்.

(இ-ள்.) மான்மழுவேந்திய தொருபாகமும், பாசாங்குச மேந்திய தொருபாக மும், நாகபந்தன மொருபாகமும், ஆலிலைபோன்ற திருவயி றொருபாகமும், மண் முதலாகிய உலகங்களுக்கெல்லாந் தகப்பனுருக் குறியொருபாகமுந் தவறுமலண் டபுவனங்களை யெல்லாம் வரிசையாகப் பெறுக்கொண்டிருக்கும் குறியொரு பாங் காகவும்—எ-று. (௩௨)

காலனையுதைத்தநாகக் கனகழற்பதமோர்பாங்குங்
கோலநூபுரத்தொனிகாந்தி குலவுபொனனடியோர்பாங்கு
மேலவாமுனி யபோற்ற விளங்கியொன்றாகிமுன்னீர்
ஞாலமீடேறநின்றார் நாகயாமலையிறைநர்.

(இ-ள்.) இயமனையுதைத்த நாகவீர வெண்டையமணிந்த திருப்பாதமொரு பாகமும், அழகிய சிலம்பின் பிரபைவிளங்கிய திருப்பாதமொருபாகமும், தேவர் கள் முனிவர்கள் போற்ற விளங்கிச் சிவமும் உமையும் இப்படி ஒரு திருமேனியா கிக் கடல்சூழ்ந்த பூலோகங்களெல்லாம் ஈடேறும்படியாக எழுந்தருளிநின்றார் நாக கிரியில் அர்த்தநாரீசுவரராய்.—எ-று. (௩௩)

மேற்றிசைமுகமதாக வேலவன்கீழ்பால்நோக்கப்
பேற்றிமைமறுமையிம்மை புகலிடமாகிவாழ்க
வேற்றநூ கோதையென்று மேரகமென்றும்பேராந்
தேற்றுசெங்கோட்டினின்ற சிவனெழிற்புகலற்பாற்றே.

(இ-ள்.) அர்த்தநாரீசுவரர் மேற்குமுகமாக நோக்கிநிற்க, வேலாயுதக்கடவுள் கிழக்குமுகமாக நோக்கிநிற்கக் கண்டு வணங்கித்துதித்தவர்கள் இம்மை மறுமை இரண்டிலும் புகலிடமாகி வாழும்படியாக கிரியைசூழ்ந்த ஆர் கோதையூரென்றுந் திருவேரகமென்றும் பெயராய் வழங்கியிருக்குந் திருச்செங்கோட்டி லெழுந்தருளி ய சிவனழகைப் புகலுவதற்கு அருமையாம்.—எ-று. (௩௪)

அன்றுதொட்டெந்தையாருக் கர்த்தநாரீசனென்று
சென்றிறைஞ்சயனுமாலுந் திகழ்திருநாமஞ்சாற்றி
முன்றிகள்முனிவர்தேவர் முருகரிந்திரர்நரேச
ரென்றிவர்முதலோர்பூசித் தெண்ணியபதம்பெற்றுய்ந்தார்.

(இ-ள்.) அன்றுதொடங்கி எந்தையாகிய சிவபெருமானுக்கு பிர்மாவும் விஷ்ணுவும் அர்த்தநாரீஸ்வரரென்று திருநாமஞ்சூட்டி பூசித்தார்கள். பின்பு முனிவர்கள் தேவர்கள் முருகர் நரேந்திரர்கள் இவர்கள்முதலாய அனேகம் பெயர்கள் பூசித்து வேண்டிய வரங்களைப்பெற்றுச் சுகமாய் வாழ்ந்தார்கள்.—எ-று. (ருறு)

இத்திருதியானஞ்செய்த யிறைவனைந்தெழுத்துமோதி
சத்திமந்திரத்தையுன்னுந் தருமசிந்தையரைத்தேவர்க்
குத்தமதேவராக வுரைப்பதேயன்றிமற்றோர்
புத்தியில்நரராவெண்ணிற் புரைநரகிடையில்வீழ்வார்.

(இ-ள்.) இந்தப்பிரகாரஞ் சிவரூப தியானஞ்செய்து சிவனுடைய பஞ்சாட்சரங்களை யுச்சரித்து, சத்திமந்திரத்தையும் நினைத்து செபஞ்செய்யும் புண்ணியசிந்தையுடைய பெரியோர்களை தேவர்களுக்கு மேலான தேவர்களென்று நினையாமல் ஈனபுத்தியினால் மனிதர்களாக நினைப்பார்களாகில் ரௌரவாதிநரகத்தை யடைவார்கள்.

இப்படியரனைப்போற்று மிவரைமுன்கண்டார்பாவ
மெப்படிக்கொடியதேனு மெரியிடும்பஞ்சுபோலா
மெய்ப்புறுபலன்கள்யாவும் விளைவுறுமென்றுசூதர்
செப்பினருண்மையுண்மை சிவன்றிருவாணையென்றார்.

(இ-ள்.) இந்தப்படி அர்த்தநாரீஸ்வரரைத் தரிசனஞ் செய்யு மவர்களைப் பிரத்தியட்சமாகக் கண்டவர்களுடைய பாவங்கள் எப்படிப்பட்ட கொடியதாகிலும் அக்கினியிலிட்ட பஞ்சுபோலே எரிந்துபோகும், மெய்யாகிய பலன்களெல்லாம் விர்த்திக்கும், இது நிச்சயம் நிச்சயஞ் சிவனாணை சத்தியமாணை என்றுசொன்னார் சூதமுனிவர்.—எ-று. (ருஎ)

இந்தமெய்த்தியானநூலை யினிதுகற்றவர் கற்றோருஞ்
சிந்தையாய்செப்பக்கேட்போர் செப்பினர்க்கருளுஞ்செல்வர்
சுந்தரமுறையைவைத்துத் தொடைமலரிடுவோர்க்கெல்லா
மந்தமில்பாவந்தீரு மகத்திலுற்றனவுஞ்சேரும்.

(இ-ள்.) இப்படி உண்மையான சருக்கத்திருமுறையை அன்புடனே கற்றவர்களுங் கற்று ஓதுகின்ற மனதையுடையவர்களுஞ் சொல்லக் கேட்பவர்களுஞ் சொன்னவர்களுக்கு ஏதாகிலுந்தருகின்ற பாக்கியவான்களுஞ் சிறப்புப்பொருந்திய இத்திருமுறையை வைத்துப் புட்பமாலைசாத்தி அர்ச்சித்தபேர்களும் இவர்களுக்கெல்லா மிறுதியில்லாத பாவங்களுந்தீரு மனத்திலெண்ணிய காரியமுங் கைகூடும், இது சத்தியமென்றார் சூதமுனிவர்.—எ-று. (ருஅ)

அர்த்தபாகச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம்.—கககூ.

# அருச்சனைச் சருக்கம்.

பருப்பதத்தினிலைமையையும் பருப்பதத்திலெழுந்தருளிப் பரசுபாணி
திருப்பதத்துச்சிலம்பலம்பு தெய்வமயிலுடனுறைந்தச் சிறந்தபாங்குங்
குருப்பதத்துநெறிச்சூதர் கூறநும்மிலுணர்ந்தனமர்ச் சனையுந்தொன்னூன்
மருப்பதத்து மறைமொழியின் வணங்கினவும்யாமுணர வழங்கவேண்டும்.

(இ-ள்.) திருநாககிரி நிலைமையையும், திருநாககிரியி லெழுந்தருளிய பரசுபாணியாகிய பரமசிவன் அழகியபாதத்திற் சிலம்பு சப்திக்கப்பட்ட தெய்வ மயிலாகிய பார்வதியம்மனுடன் கலந்து அமர்ந்தருளிச் சிறந்துநின்ற முறைமையையும், இவைகளெல்லாஞ் சற்குருமூர்த்தமாய் நெறிமுறைமைதவறாம லெழுந்தருளிய சூதமுனிவரே உம்மாலே தெரிந்துணர்ந்தோம், இனி அருச்சனைசெய்யும் வழிபாடுந் தொன்மையாகிய வேதமந்திர வாக்கியங்களால் வந்துவணங்கி பூசித்தவர்களையும், நாங்களறியத்தக்கதாக சொல்லியருள வேண்டுமென்றார்கள் முனிவர்கள்—எ-று. (க)

என்றென்றுசூதரிணை யடியையிருகரத்தேத்தி யினியகூறி
நின்றுசவுனகர்முதலோர் நின்மலரர்ச்சனைவிதியை நெடிதுகேட்ப
தன்றுணையாகியவேத வியாசர்பதந்தியானித்துத் தருமசெங்கோட்
டொன்றுமுமைபாகனையர்ச் சனைபுரியுமுறைமைசில வுரைப்பார்சூதர்.

(இ-ள்.) அப்படி சிவார்ச்சனை முறைமையைச் சொல்லுஞ்சொல்லு மென்று சூதமுனிவருடைய விரண்டுபாதங்களையும் நமஸ்கரித்து அஞ்சலி யஸ்தர்களாய்த் தோத்திரஞ்செய்து நின்று, சவுனகர்முதலான சகலமுனிவர்களும் வெகு ஆசையுடனேகேட்கத் தனதுளத்திற் கொருதுணையான வேதவியாசர் பாதங்களைத் தியானித்துப் புண்ணியஸ்தலமான திருச்செங்கோட்டில் வசிக்கும் ஸ்ரீஅர்த்தநாரீஸ்வரனை அருச்சனைசெய்யும் விதிமுறையைச் சிலது தெரிந்தமட்டுஞ் சொல்லுகிறோங் கேளுங்களென்று சொல்லலுற்றார் சூதமுனிவர்—எ-று. (உ)

கண்ணுறங்கும்பின்னுதய காலத்திற்கண்ணுதலைக் கருத்துட்கொண்டு
புண்ணியசிந்தையினெழுந்தக் கும்பித்தாலசபைதனிற் புரிவுநோக்கி
யண்ணுமகந்தனில்நிருதி மூலைபடச்சேண்படர்ந்தோ ரைம்பதேனும்
விண்ணுறப்போய் நிலத்திரண மீதுமலசலங்கழித்து விடுமப்போதில்.

(இ-ள்.) இராக்காலம் நித்திரைசெய்தபின்பு விடியற்காலத்திற் சிவனை மனத்திற்கொண்டு பிராணவாயுவைக் கும்பித்துத் தருமசிந்தையுடனே எழுந்திருந்து மேலசபையின்றி நடிக்கும் புரிவுபார்த்து தான்வசிக்கும் வீட்டுக்கு நிருதிதிக்கில் ஐம்பதடிதூரஞ்சென்று நிலத்தில் திரணமீதில் சலமலங்கழித்துவிடு மப்போதில்—எ-று. ௩

வலச்செவிமுன்னூற்றரித்துக் கும்பித்தால்மனத்துறுசூற் சிதங்கண்மாற்றி
மலர்த்தபகற்பொழுதில்வட பாங்கிரவுதென்பாங்கு வதனமாகத்
தலத்தெழுங்காலிடக்கரத்திற் றனதிலிங்கம்பரிசிக்க மலத்தானங்கள்
நிலத்துயர்ச்சிதடநதியாலை யஞ்சிலைதண்ணிழல்வீதி நீக்கலாகா.

(இ-ள்.) வலது காதின்பேரிலே பூணநூலையெடுத்து வைத்துக்கொண்டு வகிரி பூமியில் விடுகவும், அப்படி மலங்கழிக்கு மிடங்களாவது உயர்ந்த நிலம், தடம், நதி,

ஆலயம், கல்லு, குளிர்ந்தநிழல், வீதி, இவ்விடங்களில் நீக்கலாகாது, மனதில் கர்மியத்தைவிட்டுப் பகற்காலத்தில் வடகருநோக்கி இராக்காலத்தில் தெற்குநோக்கியுமிருந்து கும்பித்து மலவிசர்க்கஞ்செய்து பின்பு எழும்போதில தனது இடதுகையினுலிங்கம் பரிசிப்பாயாக—எ-று (௪)

நன்றுமிருத்திகையெடுத்துநதியின்மிருத்திகையொழித்தோர்கட த்துட்டூர்
த்தந், தன்கரத்திற்கொணர்ந்துசவுசாசமனத்தொழில்முடிப்பான் கடமிலா
தானை, யெனபுனற்கோர்முழத்திருத்நல் விதிமணலைமுறைகுதத்தி லிங்கத்
தோர்காற்,பின்பதினைக்காத்தெழுகார்பெரிதுபுனலாற்புனிதம்பிறந்தபின்னர்

(இ-ள்) நதிமிருத்திகை யெடுக்காமல் பூமியிற்கீழாக நலல மிருத்திகையெடுத்து ஒருசொம்பில சலங கையிலகொணடுவந்து சவுசாசமனத்தொழில் முடிப்பானுக. கடமில்லாதவன் சலத்துக கொருமுழத்துக கப்பாலிருந்து சவுசாசமனஞ்செய்வது விதிமுறைமை, மிருத்திகையள்ளியிட்டுக குதத்திலு லஞ்சுதரம் லிங்கத்தில் ஒருதரம் பின்பு இரணடு கைகாலகளில எழுதரம இப்படி பரிசித்து மிகவுஞ் சலம்விட்டலம்பி நலல புனிதமானபின் —எ-று. (௫)

பொற்புறுமந்திரபுவனை மந்திரந்திற்புனைந்து புக்காற் புதுக்கிபின்றொண்
ணற்புனல்வாய்கவர்ந்துமிழ்ந்து நவையகலவாசமன நயந்தபின்னர்
பற்கிடுகொம்பமுதமர முண்மரம்பன்னிருவிரலிற் பகர்ந்தநீளஞ்
சொற்சிறியவிரலளவு தூலமதனரேனுரியா தொடித்துவாங்கி.

(இ-ள்.) அழகிய மகாமந்திரம் புவனைமந்திரத்திற் செபித் துச்சரித்து மூன்றுதரஞ்சொல்லி சுத்தித்தசலத்தை யள்ளி வாயில்விட்டுப் பதினைறுதரங் கொப்பளித்து உமிழ்ந்து லேசாமிசமுங் கர்மிசமுமில்லாமல் சுத்தாசமனஞ்செய்து, பின்பு பல்விளக்குங்கொம்பு பால்மரம் முள்ளுமரம் இவையிரண்டி லொன்றில் பன்னிரண்டுவிரல் நீளஞ் சிறுவிரல் பருமனக வதனிற் ரேனுரியாமல முறித்துக்கொணடு—எ-று. (௬)

வடமுகந்தன் றலையிறங்கி மவுனமுடன்சலத்துமிழா வகைகீட்டிக்கின்
படவுறுசுத்தாசமனம் பண்ணிநன்னீர்மூழ்கவலக் கால்முன்னேகி
யடையுமதிமண்டலத்தி னமுதமகுதங்குசமுத் திரையின்வாங்கி
நடநதியிலமைத்துநவந் திநதிக்காவாகித்துத் தடத்துமூழ்கி.

(இ-ள்) வடக்குமுகமாய் தலைகவிழ்ந்தபடி பேசாமல் சலத்திலுமிழாமல் தந்தசுத்திசெய்து கிழக்குமுகமாக நின்று வாய்கொப்பளித்துச் சுத்தாசமனஞ் செய்து உசிதமானநீரில் முழுக வலதுகால்முன்னுகச் சென்றுநின்று அடைவுடனே சந்திரமண்டலத்திலிருக்கிற அமுதத்தை அங்குசமுத்திரையினுல் வாங்கிப் பெரியநதி சலத்திலமைத்து நவதீர்த்தங்களை யந்தசலநதி லாவாகித்து நதியில் மூழ்கினபின்.எ-று.

மறைமொழியிற்பதினொருமந்திரந்தீர்த்தம்பலதெளித்து வணங்கைக்கொண்டு, முறைமுறைதத்துவத்திரைய முற்றியபின் கரைகண்டூர்த் தத்தாற்சுத்தித், தறையமைத்துவெண்டுகிண்மேற் றரித்துபதேசக்குறையா தமையுட்கொண்டு, பிறழ்வில்பிரணவப்பிராணு யாயமுற்றிப்பிரணவத்தைப்பொங்கத்தேற்றி.

(இ-ள்.) வேதவாக்கியத்தினாற் பதினொருமந்திரத்தால் தீர்த்தம் பலகால் புரோட்சித்துச் சலங் கைக்கொண்டு வரிசைவரிசையா யடிக்கடி தௌத்திரியஞ்செய்து முடித்தபின்பு, சலக்கரையிடத்தில் சுத்தமான பூமியமைத்து வெள்ளைமடி யுடுத்திக் கொண்டு உபதேசஞ்செய்த ஆசாரியனை உள்ளத்திற்கொண்டு வேறுபடாத பிரணவமந்திரத்தால் பிராணாயாமஞ்செய்து முடித்துப் பிரணவாட்சரத்தை தூலதேகத்தி லேற்றியபின்—எ-று. (அ)

தெய்வமிறுவாகவிருடியின் முதலதாகநிலை தெரிந்துகூறி
யிவ்வகைவைதிகசந் தியானஞ்சைவாகமசந் தியானங்கூடிக்
கைவரவெண்ணீறமைத்து வலக்கரத்தாலிடக்கரமேற் கவித்துமார்பின்
மெய்யளவுவரநிறுத்தி வியனுமுதற்கலைபுனைந்து விமலமாக்கி.

(இ-ள்.) இருடிமுதல் தெய்வமிறுதியாக நிலைதெரிந்துச்சரித்து இந்தப்பிரகாரம் மாறாமல் வைதிகசந்தியானமுஞ் சைவாகமசந்தியானமும் ஒக்கமுடிப்ப உள்ளங் கையில் வெண்ணீற்றைத் திருவெண்ணீறெடுத்தமைத்து வலதுகையா லிடது கை மேற் கவித்துமூடி மார்பளவெதிர்நிறுத்தி நிவிர்த்தி கலைமுதலான கலைகளை யுச்சரித்துப் பரிசுத்தஞ்செய்தபின்—எ-று. (௯)

ஐந்துபிரமஞ்சடங்க மைந்தொன்றாவிபூதியினி லாக்கியாக்க
முந்தியகாலாக்கினியுருத்திரமூர்த்தந்தோன்றுந் துணையுளத்தினோக்கி
யெந்தைபிரணவமெழுதி யிருவர்தம்மந்திரத்தின் பீசமையத்தீட்டி
முந்துசிரமுதலீசா னாதிபதினொன்மந்திரத்தால் முறையின்வேய்ந்து.

(இ-ள்.) பஞ்சபிரம்ம மந்திரமுஞ் சடங்கமந்திரமுமிவைகளை விபூதியிற் பொருந் தவமைத்து வளர்ச்சிமுந்திய காலாக்கினிருத்திர மூர்த்தத்தை யுள்ளத்துட்பார்த்து நமதடிகள் பிரணவம் விபூதியிலெழுதி சிவன் சத்தி இருவர்களுடைய மந்திரமும் பீஜாட்சரங்களுமெழுதி முன்னே சிரசுமுதலாக ஈசானமாதிய பதினொரு மந்திரங் களாலே வரிசையாய் விபூதிதரித்துக்கொண்டு பின்—எ-று. (௧௦)

வேய்ந்தவிபூதிச்சேடஞ் சென்னியினுமேனியினும் விளங்கநீவிக்
கூர்ந்தபுனலங்கைபுகக் குலவியமுத்தத்துவத்தாற் கொண்டோங்காரம்
வாய்ந்தமறையாருமங்கை பங்கர்திருமந்திரத்தி னியாசஞ்
சேர்ந்துபின்னந்தரியாகஞ் செய்தபின்புதன்மார்த்த சிவனைப்போற்றி.

(இ-ள்.) அப்படி தரித்துக்கொண்ட விபூதி மிச்சத்தை சிரசிலும் உடம்பிலும் பிரகாசிக்கப் பூசிக்கொண்டு, உள்ளங்கையிற் சலத்தையள்ளி தத்துவத்திரயத்தா லுட்கொண்டு ஓங்கார மந்திரத்தினாலும் உமையொருபாகர் மந்திரத்தினாலும் நியாச ங்கள்செய்து, பின்பு அந்தரியாகஞ்செய்து, அதின்பிறகு தன்னுடைய ஆத்மார்த்த மான சிவலிங்கத்தைப் பூசித்து போற்றிசெய்தபின்—எ-று. (௧௧)

குருவினிருபதங்குறித்துக் கோவில்வலம்புகுந்துரவி குலவும்பூசை
மருவிநாயகன்றன்னை வணங்கிமறைவாயிலினை மலர்த்தாளத்திக்
திருவிரவுமுமைபாகர் காசியாலயத்துளுறைத் திருவைப்பூசி
துரவிபதெல்வாயுமலி லுறைகவினந்தீசர்பத முகந்துபோற்றி.

(இ-ள்.) குருவினுடைய பாதங்களைத் தியானஞ்செய்து, திருக்கோயிலைப் பிரதட்சண நமஸ்காரஞ்செய்து, உட்புகுந்து மூர்த்தி சூரியபூசைசெய்து, பிறகு விநாயகனைப்பூசித்து, சரஸ்வதி இரண்டு பாதமலர்களைப் பூசித்துத் துதித்து, அழகிய உமையொருபாகர் சிவாலயம் நடுவிலிருக்கின்ற கமலலட்சுமியைப் பூசித்துத் திரமாக தெற்குவாசலி லுசிதமுடைய நந்தீசுவரர பாதங்களைப் பூசித்துப் போற்றிசெய்தபின் —

கங்கையைக்காளியையிடப்பாற் கைதொழுதுநல்யமுனை யசியையேத்தி
யங்கணிருதியிலரனு மைங்கரனும்வாயுவிலு மீசானத்துஞ்
சங்கநிதிபத்மநிதிக் கிழக்கிலுமக்கினிதிசையிற் சண்டரோடும்
துங்கபிரசண்டரவ ரவரைமலரருச்சனையின் றொழிலாற்போற்றி.

(இ-ள்.) இடதுபக்கத்திற் கங்கையையுங் காளியையுங்கண்டு நமஸ்கரித்து, வலதுபக்கத்தில் யமுனையையும் அசியையுங்கண்டு நமஸ்கரித்து, அங்ஙனம் நிருதிக்கி லரனும் விநாயகனும், வாயுதிக்கிலும் ஈசானியதிக்கிலுஞ் சங்கநிதி பதுமநிதி கிழக்குத்திசையிலு மக்கினிதிக்கில் சண்டேசுரருடனே யுயர்ந்த பிரசண்டர் அவரவர்களை அர்ச்சனை முறைமை முயற்சியாற் பூசித்துப் போற்றிசெய்தபின்—எ-று.

நாதாந்தச்சத்திநடு நிலைசிறுத்தியனந்தனுநாற் றிசையிலீசனா
ஆதாரதருமஞ்ஞா னம்வைராக்கியங்காளி அடியையேத்தி
மீதாகப்பவனதிசை சத்தகுருவணங்கியீ சானங்கீழ்பாற்
போதாரவெண்கமல தளமெட்டிற்சத்திதனைப் புரிவித்தேத்தி.

(இ-ள்.) ஆதாரசத்தி நடுத்தளத்திருக்க மற்ற நான்குதளத்தில அனந்தனும், நான்குதிக்கில் ஈசானந் தருமம் ஞானம் வைராக்கியம் ஆகிய விந்தத்தளங்களை வணங்கிப் போற்றிசெய்து, மேலாக வாய்வுதிக்கில் சத்தகுருவை வணங்கி, ஈசானத்திலுங் கிழக்கிலும் அலர்ந்த வெள்ளைக்கமலத்தி லெட்டுதளத்திலும் அஷ்ட சத்திகளைக்கண்டு வணங்கித் துதித்தபின்—எ-று. (௧௪)

நவசத்திதனிலனந்த சத்திபரமப்பொருட்டி ல் நயந்துபோற்றி
சிவனையம்பொற்பீடிகையிற்றிருமுகமைந்துநதிசையிற் றிகழ்ந்துதோன்றத்
தவமுறவுண்ணினைந்தாவா கனம்பண்ணிச்சோடசத்தா லாவல்கூர்ந்து
புவனகயிலாசமெனும் நாககிரிச்சம்புவினருள் போற்றும்வேதம்.

(இ-ள்.) நவசத்திகளில் முதன்மையான அனந்தசத்தியைக் கமலகேசரத்திற் கண்டு அன்பாகப் போற்றிசெய்து, பரமசிவனை அழகிய சுவர்ன்னபீடத்தில் ஐந்து திருமுகமு மைந்துதிசையில் விளங்கித்தோன்ற பத்தியுடன் றனது உள்ளத்தில் நினைத்து ஆவாகனஞ் செய்து, சோடசமந்திர வுபசாரத்தாலே பூசிக்க ஆசைமிகுந்து பூலோக கயிலாசமென்கின்ற திருநாககிரியி லெழுந்தருளிநின்ற பரமசிவன் பாதங்களைப் பூசித்தர்ச்சித்துப் போற்றிசெய்வதென்று முறையிடுஞ் சுருதிகள்—எ-று. ௧௫

துவாரநிலையருச்சித்த பின்னரிரண்டாம்வேதச் சுருதிதன்றால்
நவாதாரச்சிருருத்திர மருச்சித்தன்பாற்பாத் தியங்கணல்கித்
துவாவபிடேகங்கள்நறை சந்தனங்கர்ப்பூரமிவைத் தயங்கப்பூரித்
திவாறுதிருவுடைசாத்தி மலர்கள்புனைந்தினியநைவே தனங்களேற்றி.

(இ-ள்.) துவாரநிலைகளை அர்ச்சனைசெய்து, இரண்டாம் வேதசுருதி வாக்கியத்தில் நவாதாரச்சீராக உருத்திரங்களாலே அன்பாக அர்ச்சனைசெய்து, பாத்தியங்கொடுத்து, குறைவில்லாத அபிஷேகஞ்செய்து திருவுடைசாத்திப் பரிமள சந்தன மிருகமத கர்ப்பூரங்களால் சுவாமிதிருமேனி குளிரச்சாத்தித் திருவாபரணங்கள் தரித்து, மணமிகுந்த பலபுட்ப மலர்மாலைகளைசாத்தி அலங்கரித்து நிவேத்தியங்கள் செய்தபின்—எ-று. (கசு)

அற்கியம்பொற்றிருக்கரத்தி லளித்தமுதத் திருவாய்க்காசமனமீய்ந்து
பொற்கமலத்தாளினிற்பாத் தியங்கொடுத்துத்தூபமிடை புரிவித்தீசன்
நற்கருணைபெறச்சிறிது செபமுடித்துமிகவாச நறுங்கர்ப்பூரந்
தற்பரற்குத்தாம்பூலஞ் சமைத்துநவரத்னவணி தயங்கச்சாத்தி.

(இ-ள்.) சுவாமி திருக்கைகளில் அர்க்கியங் கொடுத்து, சிவ அமுதத் திருவாய்க்கு ஆசமனங்கொடுத்து, சுவாமி அழகிய பாதங்களில அர்க்கியபாத்தியங் கொடுத்துத் தூப மிடையிடையே யுதவிச் சிவ னருட்பெறும்படிக்குச் சிறிது செபஞ்செய்து முடித்து, மிகுந்த மணத்தையுடைய கர்ப்பூரமுந் தாம்பூலமுஞ் சமர்ப்பித்து, நவரத்தின பொன்னாபரணங்களைப் பிரகாசிக்கச் சாத்தியபின்பு—எ-று (கஎ)

தூபதீபங்களிடை யிடையுதவிவில்வமலர்த் துணைப்பூங்கஞ்ச
மாபரிமளஞ்சிறந்த சண்பகஞ்செங்கழுநீர்வெண் மந்தஞ்சுத்தக்
கோபநிறப்பாடலம்பொற் குலவலரியிட்டபுட்பங் குளிரச்சாத்தி
ஞாபகத்துமந்திரபுட் பாஞ்சலிநன்னிர்ச்சரண நளினத்தேத்தி.

(இ-ள்.) சுவாமிக்குத் தூபதீபங்க ளிடையிடையே கொடுத்து, வில்வபத்திரம் வெள்ளெருக்கம்பூ தாமரைபுட்பம் பரிமளம்வீசும் சண்பகப்பூ செங்கழுநீர் புட்பம் மந்தாரைபுட்பம் சிவப்புநிறப் பாதிரி புட்பம் பொன்னலரிப்புட்பம் ஆக அஷ்டபுஷ்பங்களுஞ் சுவாமி திருமேனி குளிர்ச்சியாகும்படிச் சாத்தி, நினைவுடனே மந்திரபுட்பாஞ்சலிசெய்து சிவனதுபாதங்களில் துதித்து நமஸ்கரித்து—எ-று. (கஅ)

புனராசமனமுதலாய்ப் புரிந்துசெபமுடித்துதோத் திரத்தாற்போற்றி
தினராசநாடகநீ ராஞ்சனஞ்சத்திரங்கவரி திருக்கண்ணாடி
தனதர்விக்கனகமணித் தாலவட்டந்தயங்குசதுர் வேதங்கீத
மினமானதெனகலையி னிசைப்பஜுவனிறைமுழவி னிவிதுபோற்றி.

(இ-ள்.) பின்னும் புனராசமனமுதலாய்ச் செய்யத்தக்க உபசாரமெல்லாஞ் செய்து செபம் நிறைவேற்றி, சிவனுமகளாற் றுதிசெய்து, தினசாயுத்திய சங்கீத நிர்த்தன நிராஞ்சனங் கொடை கவரி திருக்கண்ணாடி ஆலவட்ட மிவைகளா லுபசரித்து, நான்கு வேதகீதங்களோடு மினிதான தென்கலை திருப்பாட லிசை முழங்க, சகல மேளவாத்தியங்களு முழங்க இவையாவும் அணியணியாய் நடத்திப் போற்றி செய்தபின்—எ-று. (கசு)

இனனபடிபதினாறுப சாரத்தாலிறைஞ்சியபின் லயாங்கங்கூட்
பள்ளியபோகாங்கமிவை புளம்கினேத்துவணங்கிமங்கை பங்கர்போற்றி

யன்னிலையர்ச்சனைபுரித லறிவெனவேதம்பகரு மரனைப்பூசித்
துன்னுமறையவர்மறையு முயர்ந்துபணிவிடையவரு முறைப்பக்கேண்மோ

(இ-ள்.) இந்தப்பிரகாரம் பதினாறு உபசாரங்களாலும் உபசரித்துப் பூசித்து நமஸ்கரித்தபின்பு லயாங்கமுடனே போகாங்க மிவைகளை மனக்கருத்திலெண்ணிப் பிரதட்சணஞ்செய்து வணங்கி அர்த்தநாரீஸ்வரனைப் போற்றிசெய்து அர்ச்சனைசெய்வது அறிவென்று வேதங்கள்சொல்லு மிம்முறைதவறாமல் சுவாமியைப் பூசித்து சிவத்தியானஞ்செய்யும் வேதியர் முறைமையையு மிருந்த பணிவிடை செய்பவர்கள் முறைமையையுஞ் சொல்லுகிறேன் கேளுங்கள்—எ-று. (௨௦)

அன்றும்மறையவன்முருகர் காரணங்களுரைத்திடென வறையுங்காலை
யின்றுபிரணவவுரையேற் றியம்புதியென்றுரைப்பவதற் கியம்பானாகி
அன்றுவரியரன்பாத மலர்த்தொழுதுமறையறிய வரந்தாவென்று
நின்றுதொழ நெடுங்கயிலை நிமலர்மலரவன்றனக்கு நிகழ்த்துவாரால்.

(இ-ள்.) அந்நாளில் பிரமதேவனைக் கந்தசுவாமிக்கு வேதங்கள் சொல்லிவையுமென்று சிவன் சொல்லும்போது இங்ஙனம் பிரணவத்திற்குப் பொருள் எனக்குச்சொல்லென்று ஆறுமுகவன்கேட்க, அதற்குப் பொருள்சொல்லத் தெரியாதவனாகி துன்பமுற்றுப் பரமேஸ்வரன் பாதமலர்களைத்தொழுது வேதப்பொருளறிய வரம் புரியுமென்று தொழ, நீண்ட கயிலையங்கிரி நிமலனான பரமேஸ்வரன் மலரவனான பிரமதேவனுக்குச் சொல்லலுற்றார்—எ-று. (௨௧)

எமதுசிவாலயங்களெங்ங னெங்ஙனுளதங்ஙனங்ங னெமைக்கண்டேத்திக்
குமரனுடனுமுறைந்து குளிரிமையமடந்தையுடன் கூடிநீங்கா
திமையகிரிக்கயிலைமக மேருமற்றுமெழிற்சயிலத் தினியதான
அமரர்சிறைமீட்டவன்யா மருவுதிருச்செங்கோட்டி லணைதியென்றார்.

(இ-ள்.) ஓய் பிரமதேவனே, தட்சணபூமியில் நம்முடைய சிவாலயங்களெங்கெங்கிருக்கின்றதோ அங்கங்கே நீபோய் நம்மைக்கண்டு பூசித்துப் பின்பு குமாரரும் நாமும் பிரியாமலிருக்கின்ற குளிர்ச்சியையுடைய இமவான்மகளாகிய பார்வதியுடனேகூடி அர்த்தநாரீஸ்வரமூர்த்தமாய் என்றும் நீங்காத தலமாய் இமயகிரி கயிலையங்கிரி மகமேருகிரி முதலாகிய பர்வதங்களுக்கெல்லா மேன்மை யுள்ளதாயுந் தேவர்கள் சிறைமீட்ட செவ்வேளும் நாமும் வசித்திருக்கின்ற திருச்செங்கோட்டில்வந்து சேர்வாய் பிரம்மாவே என்றுசொல்லி பின்னுஞ் சொல்வார்—எ-று. (௨௨

அணைந்தெமைமுப்பொழுதுமருச் சனைபுரிந்தெம்முடனிருவராகப்போற்றி
யிணைந்தசிவதவத்தொன்றுமிணையில்சிவப்பிரமமென்று மியர்ப்பேரெய்திக்
கணத்திகழவொன்றுபல கோடிமகாபிரமனெனக் களித்துவாழ்த்தி
மணத்தகலாதுனதுளமு நமதுளமுமொன்றாக மருவுவோமால்.

(இ-ள்) அப்படி வந்துசேர்ந்து நம்மை திரிசந்திகாலமும் நம்முட னிருவராக அர்ச்சனைசெய்து வணங்குவீராக, இணைபிரியாத சிவத்துவசமொன்றும் இணையில்லாத சிவப்பிரமமென்றும் இயற்பெயருமக்குண்டாய் பிரமர்கூட்டங்களாகப் பிரபலித்து ஒன்று அனேகக்கோடி மகாபிரமனென விர்த்தித்து மனங்களித்துவனை

ங்கினால் பிரமதேவனே நீயும் நானுஞ் சம்பந்தமாகப் பிரியாம லுன்மனது மென் மனதும் ஒன்றுபடக் கலந்திருப்போமென்று அருளிச்செய்தார்—எ-று. (உங)

அந்தமணிக்குக்கிரியி லறுமுகனுக்குபதேச யனைத்தும்போதித்
துய்ந்தபரஞான முனைக் கும்பகர்வமெனும்வரத்தா லுலகத்துய்ந்தோ
ரெந்தைசிவன் வடிவாகி யீசனிருவிழியாகி யீசற்காவி
மந்திரமாங்கவரல்லால் மத்தனருச்சனைக்குரிய மறையோரின்றால்.

(இ-ள்.) அந்த இரத்தினமயமான குகநாககிரியிலே ஆறுமுகவருக் குபதேசஞ் செய்து பிரபலித்த பரமஞானம், ஓய் பிரமாவே உனக்கும் போதிக்கிறேமென்று வரப்பிரசாத மனுக்கிரகஞ்செய்து விடைகொடுத்தார், அப்படியே பிரமாவும் பூசித்து ஞானபோதகம்பெற்று வாழ்ந்தார். ஆகையினாலே சிவார்ச்சனைக் குரியவர்கள் எமது சிவரூபமாகி ஈசர் திரிநேத்திரங்களாகி ஈஸ்வரனுக் குயிராகிய மந்திரமு மங் ஙன மவர்களே யல்லாமல் சிவார்ச்சனைக் குரித்தாகிய பிராமணரில்லை—எ-று. உச

செங்கோட்டிலீசனருட் சிவாலயத்திலியலிசைநா டகங்களாதி
தங்கோட்டமுறுத்தொழில்செ யவரவர்தந்தகைமையினைச் சாற்றுங்காலை
யங்கோட்டுத்தாருவனத் தரனுருவைக்கண்டாசை கொள்வார்மின்னார்
வெங்கோட்டமனவிரக மெலிவகன்றுச்சுகந்தழைந்து விளங்கினரால்.

(இ-ள்.) திருச்செங்கோட்டில் சுவாமியினுடைய ஆலயத்தி லன்புடனே இயலிசைநாடகங்கள் முதலான பணிவிடை புரிபவர்கள் தகுதியைச் சொல்லுமளவில் நீண்டுப் பணைத்த மரங்கள் நெருங்கிய தாருகாவனத்திற் சிவன் பிச்சாடனஞ் செய்தபோது சிவனைக்கண் டாசைமோகங்கொண்ட ரிஷிபத்தினிகள் கொரேமான மனவிரகவிடாய் விலங்கிச் சவுக்கியம்பிறந்து பிரபலித்தார்கள்—எ-று. (உரு)

அன்னமலர்க்கோதையர்வந் தவதரித்தபடியாலவ் வசலஞ்சூழ்ந்த
நன்னகர்க்குக்கோதையென நவின்றனராங்கவர்நடனம் பாடல்கீதம்
பின்னுமரன்பணிவிடைக்கு முரியசிவபூசையினும் பெரியராவ
ரின்னிலையங்கவர்நிலைமை யீசர்திருமேனிவடி வின்னுங்கேளீர்.

(இ-ள்.) அந்தப்பூங்கோதை யங்ஙனம்வந்து பிரவேசித்தபடியினாலே அரவ கிரியைச்சூழ்ந்த அழகிய நகருக்குக் கோதைநகரென்று பெயரிட் டுரைத்தார்கள். அங்கே நடனநாடகம் பாடல்சங்கீத வீணாகானங்கள் முதலான உபசாரங்க ளியற்றிப் பின்னையுஞ் சிவனது பணிவிடைகளுக்கெல்லா முரியவ ராவார்கள், அவர்கள் பிள்ளைகள் சிவபூசை முயற்சியிலும் பெரியவர்க ளாவார்கள். இவ்வா றங்ஙன மவர்கள் நிலைமை, இவைநிற்கச் சிவன் திருமேனிவடிவின் ரூபத்தியானங்களை இன்னமுங் கேளுங்கள்—எ-று. (உசா)

முனிவரரேமெஞ்ஞான முத்திரையுஞ்செபவடமு மிடப்பால்நெய்தற்
பனிமலரும்பனையயணைத் திடகமலப்பாணியுங்கார்ச் சிவப்புமாகத்
தினமுறுசாத்திகருணமுஞ் செம்மைவெண்மைராசதசற் குணமும்ரூப
மனைவிதிருக்கரத்தமைநத வனசமுமுள்ளத்துறைய வணங்குவார்க்கே.

(இ-ள்.) முனிவர்களே, சுவாமியினுடைய வலதுகை ஞானமுத்திரையுஞ் செபமாலையும் இடதுபுறத்தில் நெய்தற்புட்பமும் உமையை அணைத்திருக்குங் கலைக் கையுங் கறுப்புஞ் சிவப்புமாக நித்தியமான சாத்வீகருணமுஞ் சிவப்பும் வெள்ளையுமான ராஜசகுணமுமாகிய ரூபமும், தேவி திருக்கையில் தரித்த தாமரைப்புட்பமுமாக உன்னியவாளுளத்துளுறைவதாக வணங்குபவர்க்கெல்லாம்—எ-று. (௨௭)

திண்களிரும்பாய்மாவுஞ் சிவிகையுமின்னவைமுதலாஞ் சீரும்பேருந்
தண்பரிவிலருள்புரியுஞ் சாமளக்கார்ச்சிவப்படைய வரதமாக
வண்புவனத்தவர்க்கினிய் வரமுதவுமாகருணை வசியம்வேண்டித்
தண்பிறைமாமுடியுந்தம ணியக்காந்தியுங்கருணை தரித்தநோக்கும்.

(இ-ள்.) உயர்ந்த யானைகளுங் கவனவேகக் குதிரைகளுஞ் சிவிகைகளு மிவைமுதலாகிய நல்ல பாக்கியங்களும் பேரும் பிரக்கியாதியுந் தன்னிய பரிவினுலே பாலிக்கும் சாமளவர்ன்னங் கறுப்பு சிவப்புநிறமும் அமைந்தபாதமாக வள்ளிய புவனத்தவர்களுக்கு இஷ்டமான வரமுதவும் ஆக்ருஷண மவசியம்வேண்டில் குளிர்ந்த பிறைமருவிய முடியு மழகிய சுவர்ன்னக்காந்தியுங் கருணைநிறைந்தபார்வையும்.

வரதமபையம்பாச மலர்க்காத்தங்குசமாக வணங்கலாகு
முரவியவுச்சாடனத்துக் குதவுசுவேதக்கலைநெய் தற்பூஞானத்
திரமுறுமுத்திரைகரத்திற்செபவடமாய்நினைத்துதரி சித்தல்வேண்டும், மரு
வளருங்கூந்தலுமெண் டோட்கனைவில்கபாலந்தொல் வைவாள்கொள்வா

(இ-ள்.) வரதம் அபையம் பாசம் அங்குசம் பொருந்திய அஸ்தங்களுமாகத் தியானித்து வணங்கவேண்டும், உறுதியாகிய வுச்சாடனத்தொழிலுக்கு வெள்ளைநிறமான திருமேனியுங் கிளியும் நெய்தற்பூவும் பிடித்தவராக ஞானமுத்திரையுஞ் செபமாலையுந்தரித்த அஸ்தங்களுமாகத் தியானித்து அருச்சனை செய்யவேண்டும், பகைவர்புறஞ் சாய்ந்துபோவதற்குக் கூந்தலும் எட்டுப்புயங்களும் அம்பு வில் கபாலங் கேடகங் கூரிய வாளபிடித்த அஸ்தங்களுமாக ரூபத்தியானஞ் செய்து வணங்கி அர்ச்சனைசெய்வாராக, மற்று மிப்படி ரூபத்தியானஞ் செய்தவர்களுக்கு நினைத்த காரியம் கைகூடும்—எ-று. (௨௯)

முன்னுரைத்தமறையவரி லாகமசாத்திரமுதலா முன்னூல்யாவுந்
தன்னறிவினுணர்ந்துபர சற்குருவினுபதேசந் தனைப்பெற்றோர்ந்தே
யுன்னுமலமூன்றகற்றி வுயர்பரஞானத்துணர்ந்த வுரவராகி
மன்னியமாமந்திரத்து மறைமொழியாவர்ச்சிக்க வருதல்நீதி.

(இ-ள்.) முன்னேசொன்ன சிவவேதியரில் ஆகமசாஸ்திர முதலான புராணநூல்களெல்லாந் தன்னறிவினலே கற்றுணர்ந்து சற்குருவினுடைய உபதேசம்பெற்று மிகுந்த யூகவான்களாகி நினைப்பினுலே மும்மலமகற்றினவனுய் உயர்ந்த பரமஞான உணர்ச்சியையுடைய பெரியோராகி சிவாகமமந்திர சுருதி வாக்கியத்தால் சுவாமியைப் பூசித் தருச்சிக்கவருவது நீதிமுறைமை—எ-று. (௩௰)

அருச்சனைச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௨௨௯.

# கந்தர்பூசைச் சருக்கம்.

கணபதிநியாசம்பண்ணிக் கணபதிதியானஞ்செய்து
பணபதிவயின்பொற்றொந்தி படிக்குறும் பருந்தாள்ஞானக்
குணபதியைந்துபாணிக்குளிர்பிறையனைய வோர்கோட்
டிணைமுறச்செவிநாலங்கத் திறைவனை வணங்கிப்பின்னர்.

(இ-ள்.) கணபதி நியாசஞ்செய்து, கணபதி தியானஞ்செய்து, படங்களையுடைய நாகபந்தனம்பொருந்திய தொந்திவயிறும் பருமித்துப் பணைத்துக் குறுகியகால்களும், ஞானமைந்த குணங்களு மமைந்த திருக்கரங்களும், குளிர்ந்த பிறைபோன்ற ஒற்றைக்கொம்பும், இரண்டு முறம்போன்ற செவிகளும், நாலங்கங்கூடிய ஒரு திருமேனியும், நான்றவாயையும் யானைமுகமுமுடைய விநாயகமூர்த்தியை வணங்கி வாழ்த்தியபின்—எ-று. (க)

வரகுருசரணம்போற்றி மலையமாமுனிவன்றனே
திரமுறுமிருடியாகத் திரட்டுநற்சந்துவாக
வுரனுறமுருகன்றன்னை யுற்றதே வதையாய்க்கொண்டு
யிரவிறீங்காரபீச மிருமூன்றுபீசமேத்தி.

(இ-ள்.) குருசுவாமிகள் இரண்டுபாதங்களைப் போற்றிசெய்து, பொதிகைமலை அகத்தியமுனிவன் றனே திரமாகிய விருடியாகப் பரிமளதிரவியங் கலந்த கலம்பகங்குளிர்ந்த சந்தனமாக அறிவுமிகுதியினாலே குமாரசுவாமியை இஷ்டதெய்வமாக நினைத்து, சூரிய பீஜாக்ஷரம் றீங்கார பீஜாக்ஷரம் சடாக்ஷர பீஜாக்ஷரம் இவைகளையுச்சரித்துக்கொண்டு—எ-று. ) (உ)

சகலபாக்கியங்கணன்கு தரும்வினியோகமாக
நகைமுகமலரோராறும் நளினபொற் கரமீராறு
மகிழ்வுறுதெய்வசேனை வள்ளியர்பாங்குஞ்சத்தி
மிகுபடைவிளங்கநின்ற விளக்கமு முளத்திற்காண்ப.

(இ-ள்.) எல்லாச் செல்வங்களும் விநியோகமாகத் தரும் ஒளிபொருந்திய சண்முகங்களுங் கமலம்போலப் பிரகாசிக்கின்ற பன்னிரண்டு கரங்களுஞ் சந்தோஷ மிகுந்த தெய்வயானை வள்ளியம்மை இவர்க ளுபய பாரிசங்களிற் பொலிய வெற்றியையுடைய சத்திவேல் பிரகாசிக்காநின்ற வலங்காரந் தன்கருத்திற் றோற்றமாக—எ-று. (ங)

கந்தராறெழுத்தொடர்வ் கனமுமாசமனம்பாத்திய
மந்தவர்க்கியந்தியான மாசனமணிவர்கந்தா
சுந்துபவீதங்கெந்த முறுமலரட்டபுட்பம்
நந்தலிற்றூபதீப நயந்துநைவேத்யநல்கி.

(இ-ள்.) கந்தசுவாமி சடாக்ஷரமந்திரத்துடனே ஆவாகனம் ஆசமனம் பாத்தியம் அர்க்கியம் தியானஞ்செய்து ’ஆசனங் கற்பித்து அபிடேகஞ்செய்து திருவு

டைசாத்தி, உபைவீதந்தரித்துப் பரிமளசுகந்த புட்பமாலைகள் அஷ்ட புட்பங்கள் ஆபரணங்கள்சாத்தி யலங்கரித்துக் குறைவில்லாத தூபதீபங்களுடனே அன்பாக அமுத நிவேத்தியஞ்செய்து—எ-று. (ச)

பூரதாம்பூலமேத்திப் புனராசமனங்கள் செய்தே
யாரதோத்திரநிருத்த நிராஞ்சனஞ் சவரஞ்சத்திரம்
சீருறுவிசனந்தால விறுந்தவாத்தியத்தின் போற்றி
யேருறுதியானமுன்னு மிடையினும் பின்னுஞ் செய்வான்.

(இ-ள்.) கர்ப்பூர தாம்பூலம் சமர்ப்பித்து, புனராசமன முதலானவை யாவுஞ் செய்து, பூரணதோத்திரம் நிர்த்தனம் நிராஞ்சனம் கவரி கொடை விசிறி ஆலவட்டம் இவைகளா லுபசரித்து, தாள மிருதங்க முதலான சகலவாத்திய முழக்கத்துடனே யர்ச்சித்துப் போற்றிசெய்து, தியான முன்னு மிடையினும் பின்னுஞ்செய்து நமஸ்கரித்தபின்—எ-று. (ரு)

ஆடகமணியாற்செம்பொன் னலங்கலர் லலங்கல்சூழ்ந்த
கோடகம்புரிவிற்கொட்டுங் கொழுந்தகாப்பிடர் மீக்கொண்டு
சேடகபாரிசாதச் செழுமலர்ப் பூச்செண்டேந்தி
நீடகமேருச்சுற்றி நெறிவிளையாட்டோர் பாங்கால்.

(இ-ள்.) ஒளிவீசாநின்ற சொர்ன்ன விரத்தினாபரணங்களா லலங்கரித்த கொம்புசேர்ந்த முஷ்டிகளாலும் பாய்ந்து போர்செய்யுஞ் செருக்கையுடைய செம்மறியாட்டுக்கடாமீதிலேறி செழுமையையுடைய தேவலோகத்துப் பாரிசாத பூச்செண்டு கையிலேந்தி மகாமேருவை வலமாகச்சுற்றி விளையாடுஞ் சுவாமியை யிப்படி ஒருமனதாக தியானஞ்செயவார்கள்—எ-று. (சு)

வலக்கரஞ்செபத்திலக்க வடமிடக்கரத்தில்ஞான
இலக்கமோடமைத்தபுத்த கம்பெறநினைப்பாரெல்லாஞ்
சொலத்தருகல்விஞானச் சுருதியின் கருத்தும்போத
நிலத்துறப்பெறுவர்வாணி நீங்குறு தோங்குமாலோ.

(இ-ள்.) சுவாமி வலதுகையில் செபஞ்செய்கின்ற ருத்திராட்சமாலையு மிடதுகையில் சிவஞானபோத நிறைந்தமைந்த புத்தகமும் பற்றினவராக நினைத்து தியானஞ்செய்கின்றவர்களுக்கெல்லாந் தகுதியாகிய கல்வியும் ஞானமுஞ் சுருதிபோதங்களு மவரவர் கருதிய இஷ்டகாமியார்த்தங்களு மிந்த பூமியில் பெற்று வாழ்வார்கள். சரஸ்வதியும் அவர்களிடத்தில் பிரியாமல் வசித்திருப்பாள்.—எ-று. (எ)

அறுமுனிமடவார்கொங்கை யமுதறுமுகத்துமுண்டு
செறிமலர்த்தாருநீழற் சிறுவிரற் பிடித்துலாவி
யுறுமவர்மருங்கிலேறி யுயர்விளையாட்டுற்றூர்க்குப்
பெறுமறுவிலாதபாலர் பெருகுறப்பெறுவர் மண்மேல்.

(இ-ள்.) ஆறுமுனிவர்கள் பத்தினிமார்களாகிய கார்த்திகைப் பெண்களுடைய முலையமுதங்கள் ஆறுமுகத்திலும் நிறைய உண்டு நெருக்கமாகிய பூமணக்குஞ் சோலைகளிலே யவர்கள் சிறு விரற்பத்தி உலாவி அவர்களிடுப்பின்மேல் மிருந்த வி

ளையாடல் செய்கின்ற குமாரதேவனை மனதிற் பாவனைசெய்து தியானித்தவர்கள் குற்றமில்லாத புத்திரர்களைப்பெற்று வாழ்வார்கள் இந்த மண்டலத்தில்.—எ-று.(அ)

பன்னிருகரத்தும்வீரப் படைத்தொழில் பயின்றுவென்றிப்
பன்னிருமார்புந்துய பரசுராமனுமோர் பாங்காய்
முன்னியவீரவாகு முதலவொன பதுமர்சூழத்
துன்னியமுகன்பாற்கற்குந் தோற்றமு மேற்றச்சீரும்.

(இ-ள்.) குமாரசுவாமி பன்னிரண்டு கைகளிலும் வெற்றியையுடைய ஆயுதங்கள் பயின்று விசையமான பன்னிரண்டு புயங்களுந் துலங்க பரசுராமனுமொருபக்கத்தில் மருவிவிளங்க முதன்மையாகிய வீரவாகு முதலான பரமேசுரர்கூட்டத்தில் கல்வியனைத்துங் கற்பவரான தோற்றமும் மேற்றமுமாகிய சீருஞ் சிறப்புமுடையவராகவும்.—எ-று. (௯)

இராசதகுணமுமாக்கட் கிகபரமருள்கூர்பார்க்கும்
வராதிகவாலபானு வயங்கியநிறமும் வாமக்
கரகமண்டலமுமற்றைக் கரத்துயர் தெண்டுமாகப்
பராவியபேர்க்குப்போதம் படைத்தசீர் தவப்பாலிக்கும்.

(இ-ள்.) இராசதகுணமு மனிதர்களுக்கெல்லா மிகபரசாதகங்கள் உண்டாகும்படிக்குக் கருணைகூர்ந்து இரட்சிக்கும் பான்மையும் வர மிகுதியுமுடைய வாலசூரியனைப்போல ஒளிதங்கிய திருமேனியும் இடதுகையில் கமண்டலமும் வலதுகையிற் றெண்டாயுதமும் பிடித்திருக்கின்ற குமாரதேவனை மனதிற் பாவனைசெய்து தியானித்து வணங்கினவர்களுக்கு மெய்ஞ்ஞான போதகமும் அரிய தவப்பலனுஞ் செல்வமும்பெற்று வாழ்வார்கள்.—எ-று. (௧௦)

நிறைசரற்காலத்திந்து நிகற்குமாமுகங்களாறும்
மறைமுறைமலர்ந்தவாயும் வயங்குகுண்டலமுங்காதுங்
குறைவிலின்றுணைப்போற்றிக் குவித்தபொற்கரமீராறும்
செறிவுறமனத்துள்வைப்பார் சிந்தையில்நினைத்தல் சேர்வார்

(இ-ள்.) சரற்காலத்துப் பூரணச் சந்திரனைப்போலு மழகுபொருந்திய ஆறுமுகங்களும் வழுவாமல் வேதங்களோதியலர்ந்த திருவாய்களும் பிரபை விரிக்கின்ற குண்டலங்களணிந்த திருச்செவிகளுந் தாழ்வில்லாமல் குமாரசுவாமி தன்னைப்பெற்ற சிவனையு முமையையுந் தெரிசித்துப்போற்றி நமஸ்கரித்துப் பன்னிரண்டு கைகளுமுடையவராக மனதில் பாவனைசெய்து தியானிப்பவர்கள் இருதயத்தில் நினைத்த காரியங்கள் கைக்கூடி உலகத்தில் வாழ்வார்கள்.—எ-று. (௧௧)

பாசமோடபையம்வில்லும் பரிசைவேற்படையிவ்வாறும்
மாசறத்திகழ்வாமக்கை வாதமங்குசம் வலக்கை
பூசலம்பிகல்வாள்போர்வேல் புரந்தரன் புதல்விசேரும்
தேசுசிந்தூரந்தாம நித்தியதியானஞ் செய்வார்.

(இ-ள்.) பாசம் அபையம் வில் பரிசை சக்கரம் வெற்றிவேல் இவ்வாயுதங்களாறும் வலது கைகளிற் பிடித்தவராகவும், வரதம் அங்குசம் உலக்கை அம்பு வாள்

வேல் இவ்வாயுதங்களாறும் இட்டது கைகளிற் பிடித்தவராகவும், பக்கத்தில் தெய்வயானையம்மன் அருகிலிருந்துப் பிரகாசிக்கவும், சிந்தூரத்தில் கமழுங் கற்பக மலர்மாலையணிந்த வடிவுடையவராய் நித்தியராப் மனதில் பாவனை செய்து தியானிப்பார்கள்.—எ-று. (கஉ)

குக்குடத்துவசமோர்கை கோலவேலொருபொற்செங்கை
மிக்குரவதனமுஞ்சீர் வெட்சிபந் தொடைசேர்வாரு
மொக்கவேபுரிமுன் றாலு முறம்பெருங்கடம்பின்றாரும்
செக்கரின்பொலியத்தோகை நிபாலமே லிருந்தல்காண்பார்

(இ-ள்.) குமாரக்கடவுள் இடதுகையில் கோழிக்கொடியும் வலதுகையில் வெற்றிவேலும் பிடித்தவராய், மேன்மையுடைய திருமுகமும் வெட்சிமாலையும் முன்னூல் மார்புஞ் செவ்வானம் போலுந் திருமேனி பிரகாசிக்க, மயில் மேலிருப்பவராய் மனதில் பாவனைசெய்து தியானிப்பவர்கள் இஷ்டமான சகல பாக்கியமும் பெற்று வாழ்வார்கள் — எ-று (கங)

இன்னனத்தியானமீசர்க் கிறைவிக்குமுருகர்க்குமேதயன்
றன்னியவகையாற்சிஞ்சித் தமைத்தனம்பெருமை தனைனை
அன்னவாகனனுமாலு மருந்தவர் யாருமாய்ந்தும்
பன்னுதற்கரிதாகப் பருப்பதமகிமையம்மா.

(இ-ள்.) இந்தப்பிரகாரம் பசுபதியானவருக்கு உமைக்குங் குகனுக்கும் இவ்வகையென்று சிறிது தெரிந்தமட்டுஞ் சொன்னோம், பெருமை சொல்லுமிடத்தில் பிரம்மாவும் விஷ்ணுவும் அரிய தவமுனிவர் யாவருமெதிர்த்துச் சொல்லுவதற்கும் அருமையாயிருக்கும் திருநாககிரிதலத்தின் மகிமை—எ-று. (கச)

அரன்முகம்தனில்வந்த வாகமபுராணந்தன்னி
லிரணியசெங்கோட்டார்நா கேசுரர்புராணந்தன்னைப்
பரபுராணத்துக்கொப்பாய்ப் பகருதல்கினைத்தல்பாவ
மிருவருங்குகனோடோங்கி யெழுமலையதற்கொப்புண்டோ.

(இ-ள்.) சிவன் திருமுகங்களி லுதித்து விளங்கிய திவ்யாகம புராணங்களிற் சொர்ன்னமயமான திருச்செங்கோட்டி லமர்ந்தருளிய நாகேசுரர் புராணத்தை வேறொரு தலப்புராணத்திற்கு ஒப்பாகச் சொன்னாலும் நினைத்தாலும் பாவஞ்சம்பவிக்கும், சுவாமி அம்ம னிருவருங் குமாரருடனே ஓங்கி எழுந்தருளி யமர்ந்திருக்கின்ற விந்தத்தலத்துக் கொப்புண்டோ வில்லை—எ-று (கரு)

அரனகத்தியர்க்குக்கூற வறுமுகனசலமங்கை
திரமுறக்கேள்விகூர்ந்து சேயுநந்தீசர்க்கோதி
வருபுராணத்தைவேத வியாசபால்வணங்கிக்கேட்டே
சுருதிமாமுனிவர்க்கோத தொன்மறைமொழியிற்கொண்டார்.

(இ-ள்.) பரமேசுவரன் அகத்தியனுக்குச் சொல்ல, ஆறுமுகக்கடவுள் உமையவளிடத்தில் கேள்வியுற்று, நந்தீசுவரருக்குச் சொல்லி விளங்கிய புராணத்தை வே

தவியாசாரிடத்தில் மிகுந்த வன்புடனே வணங்கிக் கேள்வியுற்ற சூதமுனிவர் வைதீகர்களாகிய சவுனகாதி முனிவர்களுக்குச் சொல்ல, பழமறை வாக்கியமாகக் கேட்டுக்கொண்டார்கள்—எ-று. (௧௬)

நாகமாமலையிலீசன் நாரியோர்பங்கன்வேலன்
யேகமாயுதித்தாங்கா தெண்ணருந்தீர்த்தநல்கிப்
போகமாமுத்தியாவும் புரத்தலாலிகத்தும்விண்ணு
மீகமாமலைக்குமின்று லிலெதுசத்தியங்களென்றார்.

(இ-ள்.) அந்த திருநாககிரியில் நாகேசுரராகிய அர்த்தநாரீஸ்வரர், வேலாயுதக்கடவுள் விளங்கிப் பிரியாமல் வசித்து, அளவிலலாத தீர்த்தங்களு முண்டாக்கிச் சகல போகங்களு முத்திமோட்சங்களு மனைவருக்குங்கொடுத்து இரட்சிக்குங் கிருபையினாலே திரிலோகங்களுக்கும் மகாமேருகிரிக்கும் இந்த மகிமை யில்லை, அது உண்மைவசனமென்று சொன்னார் சூதமுனிவர்—எ-று. (௧௭)

இம்மலையின்னதீர்த்த மிக்கொடியிந்ததாரும்
விம்மிதப்புல்முத்தேவர் வியன்றெறிலதனைநல்கு
மம்மலையரனைப்பாங்கி லன்னையைமுருகைப்போற்றிச்
செம்மலைப்புராணங்கேட்போர் சிறினுக்களவுமுண்டோ.

(இ-ள்.) இந்தமலை, இந்ததீர்த்தம், இந்தக்கொடிகள், இந்தவிருட்சங்கள், அற்புத புற்பூடுகள், மூன்றுதேவர்கள், மேன்மையான நெறிலைக்கொடுக்கும் அந்தமலையில் சிவனை, சிவனிடப்பாகத்திலிருக்கும் தேவியை, முருகனை நமஸ்கரித்து அழகிய தலப்புராணத்தைக் கேட்பவர்களுடைய பெருமைக்கு அளவில்லை—எ-று. (௧௮)

அருச்சனைதியானம்ஞான மருட்செபமலைமீதொன்றிங்
கருத்துறுமவர்கட்கெல்லாங் கண்ணுதலருளும்பேறும்
திருத்துறுகுமரன்வாழ்வுந் திரிபுரையருளுஞ்சிரு
நிருத்தனற்பதமும்பெற்று நிலத்தினில்வாழ்வரன்றே

(இ-ள்.) அருச்சனைகள், தியானங்கள், ஞானபோதக நிஷ்டைகள், செபங்கள் இவையெல்லாம் அந்தமலையின்மீது செய்யுங் கருத்தையுடையவர்களுக் கெல்லாம் பரமேஸ்வரனுடைய திருவருளும் பேறுங் குமாரருடைய வாழ்வும், திரிபுரசுந்தரியினுடைய கருணையும், லட்சுமீகரமுஞ் சிவனுடைய நான்குபதங்களும் பெற்று வாழ்வார்கள்—எ-று. (௧௯)

கந்தர்பூசைச்சருக்க முற்றிற்று

ஆ திருவிருத்தம்—உ௬அ.

# விஷ்ணுபூசைச்சருக்கம்.

ஆதிநீதியுகத்தினி லண்டர்கோன், மாதவத்தவர் வானவர்சூழ்தரத்
தாதலர்ப்பொழிற் றருவின்கீழரி, யாதனத்தி லிருந்தொன் றறைகுவான்.

(இ-ள்.) முதலாவது நீதியையுடைய கிரேதாயுகத்தில் தேவர்கள் முனிவர்களனைவருஞ்சூழ்ந்து சேவிக்கத் தாதுமிகுந்தலர்ந்த கற்பகச்சோலையின் நிழலி னிடத்திற் சிங்காதனத்திற் கொலுவாகவிருந்து தேவேந்திரனனவன் யோசித்து ஒருவார்த்தை சொல்லுகிறான்—எ-று. (க).

மூவரிற்றலை யாவர்மொழிகவென், றுவலிற்றுரு வாசகனைச்சொல
மேவியங்கவர் மீதினில்யாரெனப், போய்விளங்குவ மென்றவர்போயினர்.

(இ-ள்.) திரிமூர்த்திகளில பெருமையுள்ள மூர்த்தி ஆர் சொல்லுமென்று துருவாசனைக் கேட்க, அவர் மேலுலகங்களிற்போய பெருமையுடையவ ரின்னாரென்றறிந்து வந்து சொல்லுகிறேனென்று மேலேபோனார் துருவாசர்—எ-று. (உ)

எய்திவேத னியர்க்கையறிந்தரன், செய்திறத்த செயற்கையுணர்ந்தபின்
மைதரும்புய மாயவன்சேர்வுறுக், குய்த்துவார வுரவனைக்கிட்டினர்.

(இ-ள்.) பிரமலோகத்திற்சென்று நான்முகனைக்கண்டு பெருமையில்லாத வியல்பையறிந்து, சிவலோகத்திற்சென்று பரமசிவனைக்கண்டு பெருமையிலலாத செய்கையைத் தெரிந்து, பின்பு நீலமேனியையுடைய விஷ்ணுலோகத்திற் புகுந்து அங்ஙனம் வாயிற்காவலரான துவாரபாலகரை யணுகினார் துருவாசர்—எ-று. (௩)

கிட்டுகாலைத் துவாரக்கிரிப்புயக், கட்டடங்கம லக்கணற்காவலர் [னன்.
விட்டுநின்றனர் விண்டுவின்சொல்லுமுனி, துட்டமாமுனி மாலகத்தோன்றி

(இ-ள்.) அக்காலத்தில் மலைபோற் புயங்களுந் தாமரைக் கண்களையுமுடைய விஷ்ணுவினுடைய துவாரபாலகர்கள் சுவாமி உத்தரவில்லாமல் முனியை விட்டுவிட்டார்கள், துஷ்டனாகிய துருவாசமுனி விஷ்ணுவினிடத்தில் வந்துசேர்ந்தான்-எ-று.

தோன்றுகாலைச்சுதன்பைந்திருவுடன், மான்றவின்பமயக்கிலறிந்திலன், ஆன்றவாரினருந்தவர்கண்டபின,ஊன்றுதாள்கொடுதைத்துவெகுண்டனன்.

(இ-ள்.) வந்த துருவாசனை விஷ்ணுவும் அழகிய லட்சுமிதேவியுடன் மருவிய வின்ப மயக்கத்தினாலே அறிந்தவரல்ல. அதுகண்டு அரிய தவமகிமையுடைய துருவாசன் கால்கொண்டு விஷ்ணுவை யுதைத்துக் கோபித்தான்—எ-று. (ரு)

மாறுகூர்துரு வாசகன்றன்னையே, ஏறிமாலென் னகலங்கடினமென்
நீறில்பாத மெடுத்துப்பிடித்தடி, சிறிநொந்தனை யென்றுரை செப்பினன்.

(இ-ள்.) அப்படிச் சீறிச்சினந்து உதைத்த துருவாசனைப்பார்த்து விஷ்ணுமூர்த்தி பொறுத்துக்கொண்டு, முனியீசுவரரே என்னுடைய மார்பு கடினமாயிருக்கும் உம்முடைய பாதம் நோகுமேயென்று துருவாசன் பாதத்தை யேந்திப் பிடித்துத்

தேவரீர் கோபித்தீர் அடியேன் பயப்பட்டேனென்று குளிர்ந்த வார்த்தைகளைச்சொன்னார்.—எ-று. (சு)

மாயனிப்பொறை வாய்மைபுணர்த்தபின், சேயசிந்தைகளித்தருள்செய்தயன், மேயபூசைவிடச்சிவன்மிச்சில்சீ, ரேயெவர்க்கும்வெறுப்பென்றியம்பினான்

(இ-ள்) அப்படிப் பொறுமையுடனே விஷ்ணுவானவர் பிரியவசனஞ்சொன்னபின்பு, சினந்தீர்ந்து சிந்தைகுளிர்ந்து கிருபைசெய்து பிரம்மாவுக்குப் பூசையில்லாமற் போகவும், சிவனிருமாலியம் யாவருக்கும் வெறுப்பென்று சபித்துவிட்டான் துருவாசன்—எ-று. (எ)

ஆயகோப விரதன்சொலம்மொழி, யேயமாய விறைஞ்சிவிடுத்தபின், றூயவாயிற்றுவார நிருவர்மீர், வாயில்விட்டதென்வம்மினெனச்சொன்னார்

(இ-ள்) அந்தக் கோபவிரதன் சொன்ன நன்மை வசனத்தினாலே மனங்குளிர்ந்த விஷ்ணு முனிவனையனுப்பிய பின்பு, அழகிய வாசற்காவலாளரிருவரையுமழைத்து நீங்களிந்தத் துருவாசமுனியைத் தடுக்காமற் கோயில் வாசலினுள்ளே விட்டுவிட்டீர்களே அது வென்னவென வருவீராகவென்று சொன்னார்-எ-று

இன்றுநீங்களிபற்றியவன்றெழில், கொன்றுசாபம் வழங்குதும்யாதெனில் பன்றிவின்சதநீள்பவந்தான்றிட, வன்றிமுச்செனமமாமின்றிரோசொல்வீர்.

(இ-ள்) இப்போது நீங்களிருவருமெனக்கு அபசாரஞ்செய்த கொடிய செய்கைக் கொரு சாபங்கொடுக்கிறோம், யாதெனில் நமக்குப் பரிவுடையவர்களாய் நூறுசென்மம் பிறந்து வருகிறீர்களா, அல்லது மூன்றுசென்மம் எனக்குப் பகைஞராய் பிறந்திறந்து வருகிறீர்களா, இவ்விரண்டி லொன்று சொல்லுவீரென்று சொன்னார் விஷ்ணு—எ-று. (அ)

ஆகவிங்கிதில் யாதுவிருப்பமா, மேகுமெனன விகலின்முச்சென்மமும் யாகநாக சயனநின்கைப்படைப், பாகமாகும் பதத்துளமென்றனர்.

(இ-ள்) ஆகையால் இந்த இரண்டிலொன்றைச் சாபத்திலே எது விருப்பமாகச் சொல்லுகிறீர்கள் சொல்லுமென்று விஷ்ணு கேட்கவே, சுவாமீ நாங்கள் மூன்றுசென்மமெடுத்து நாகசயன மூர்த்தியாகிய உமக்குப் பகைவராய்ப் போர்செய்து தேவரீர் கையாயுதமெங்களைக்கொல்ல எப்போதும்போலே சுவாமிபாதத்திற் சேர்வோமென்று சொன்னார்கள் துவாரபாலகர்—எ-று (க0)

என்றுமுற்பிறப்பின்முன்னிரணிய, னின்றிவெற்றிபிரணியவக்கனும், மென்றவத்திற்பிறந்தபின்மேலுமையைக், குன்றவெவ்வரங்கைக்கொண்டிருந்தனர்.

(இ-ள்) அப்படிசொன்ன துவாரபாலகர் மூவருமேப்படிப்படி விஷ்ணு சபித்தார், அவர்களும் மந்தச்சாபமோவாக்கொண்டு மூன்றுபிறப்பில முதற்பிறப்பு வெற்றியையுடைய இரணியன், இரணியாட்சதனுமாகப் பிறந்து வளர்ந்து தவஞ்செய்து பகவான்றரும் வரம்பெற்றுத் தேவர்களை இம்சைகளைசெய்து சகல உலகங்களையும் ஆண்டுகொண்டிருந்தார்கள்—எ-று. (கக)

இரணியன்செய்த வீறில்தவத்தின, லரணில்மூவுல குந்தெய்வமாயின
னிரணியநம ஹாவென்றியம்பியே, கரணவேதமுங் கைதொழவாண்டனன்.

(இ-ள்.) இரணியாசுரன் செய்த தவமகிமையினாலே காவலாகத் திரிலோகத்துக்கு மூர்த்திகரமாகத் தெய்வமானான், இரணியநமாவென்று சருவத்திராளுஞ்சொல்ல ஆகமவேதங்களும் வேதனுங் கைதொழுது வணங்கத் தன்னுடைய ஆணையாக்கினைசெலுத்தி அண்டபுவனங்களை யாண்டுகொண் டிருந்தான்—எ-று. (கஉ)

அந்தவேலை யருந்தவர் வானவர், நொந்துசிந்தை நுடங்கியரியிடத்
தெந்தைகேள்வனிரணியன்வாழ்வற,வுந்தியெங்கட்குனதருள்வேண்டுமால்

(இ-ள்.) அந்தக்காலத்தில் இரணியாசுரன் செய்கிற ஆக்கினைக் கொடுமைக்குப்பயந்து அரிய தவமுடைய முனிவர்களுந் தேவர்களு மிகவு மனதுநொந்து சிந்தாகுலத்துடனே ஆதி விஷ்ணுவினிடத்திற்சென்று சுவாமீ கேளும், எங்களை நெருக்கஞ்செய்கிற இரணியாசுரன் வரமும் வாழ்வுஞ் சிதையச் சங்கரித்து எங்களுக்குச் சுகமுண்டாகும்படிக்குத் தேவரீர் கிருபைசெய்து இரட்சியுமென்று முறையிட்டார்கள்—எ-று. (கஙு)

எனவியம்ப விரணியன் மைந்தனா, யினியசொற்பிரக லாதனையேவினா
லனகனுயப்பிறந் தைந்துவயதினி, லுணறில்வாலவ னோதத்துடங்கினன்.

(இ-ள்.) என்றிப்படி முறையிட்ட தேவர்களுக்கு விடைகொடுத்து, இரணியன் மைந்தனாகப் பிரகலாதனைப் பிறக்கும்படியாகச் செய்தார். அவனும் மன்மதனைப் போலே சவுந்தரியமுடையவனாய்ப் பிறந்து வளர்ந்துவந்தான், ஐந்துவயதிலே உசிதவறிவினாலே வாசிக்கத் தொடங்கினான்—எ-று. (கச)

குரவனந்தக் குமாரனைமுன்னிறீஇ, யிரணியநம ஹாவென்கவென்றபின்
கரணபாலன்றன் காதிற்கரம்பெற, விரணியநம ஹாவென்பதேதென்றான்.

(இ-ள்) அப்போது உபாத்தியாயர் அந்தப் பிரகலாதனை முன்னாகநிறுத்தி இரணியநமாவென்று சொல்லப்பாவென்று சொல்ல, அதுகேட்ட பிரகலாதன் இரண்டு கைகளாலுங் காதுகளை மூடிக்கொண்டு சுவாமி நீரிப்படி சொல்லப்படாத இந்தச்சொல்லை சொன்னதேதென்று கேட்டான்—எ-று. (கரு)

பின்னர்யாதெனப் பேசுக்குரவனா, ரன்னபால னுரைப்பதருளினற் [ர.
கன்னலுங்கனித்தேனுமமுதமு,முனவர்ச்செவிமொந்தெனச்சொல்லுவா

(இ-ள்.) அப்பொழுதுசொன்ன பிள்ளையைப் பார்த்து உபாத்தியாயர் பின்னென்ன சொல்லுகிறதென்று கேட்க, பிரகலாதன் அன்பினாலே கற்கண்டுங் கனிகளுந் தேனு மமுதமுங்கலந்து உண்பவர்க் கெப்படி ருசிக்குமோ அப்படி செவிகளுக்கு இனிமையாகும்படி அரிநாம மந்திரத்தைச் சொல்லலுற்றான்—எ-று. (கசு)

வேறு.

நாராயணயநம வென்பதல்லாதஃது நவிலத்தக்காநவிலுமேற்
காராழிநரகமுங் காகப்பதாகையின் கண்ணுங்கொடுக்குமரியின்

பேரா துறக்குறை பிறக்கிலிருமையும்வாழ்வு பெருகும்சுதனடிதரும்
நோய்கினைத்தன நினைத்தனநிலைக்கும்வா னிலையுந்தருங்குரவனே.

.(இ-ள்.) ஓம் நமோநாராயணாய நமஹாவென்று சொல்வதே யல்லாமல், நீர் சொல்லத்தகாத வார்த்தையைச் சொன்னால் ரவுரவாதிநரக வேதனையும், மூதேவி பதவியுங் கொடுக்குமாகையால் அந்தச்சொல்லை மறந்துவிடும், அரிநாமமந்திரமாகிய அஷ்டாக்ஷரம் இதனை எவர்சொல்லினும் இம்மை மறுமைக்கும் வாழ்வைத் தருவதன்றியும் விஷ்ணுபதமுங் கொடுக்கும், நன்மையாக நினைத்த காரியமெல்லாங் கைகூடிவரும், சொர்க்க புவனபோகமுங் கிடைக்கும் குருவே என்று சொன்னார் பிரகலாதன்—எ-று. (கஎ)

எனப்பிரகலாதனுரை யெய்தியபினக்குருவி னிதையங்கலங்கியதனால்,
மனத்துயர்விளைந்தெனையு முனையுமிப்பொழுதே வதைப்பனிதுகேட்பின்
மதலாய், நினைத்தெனதுசொற்படி நிகழ்த்தெனப்பலவாய நிலையினுஞ்சொ
ல்வதுகொளான், தனத்தவரியந்திரங் கைவிடுவதின்றெனக் கனகன்முன்
னேகினனரோ.

(இ-ள்.) என் றிப்படியாகப் பிரகலாதன் சொல்லக்கேட்ட உபாத்தியாயர் மனதுகலங்கி வாரும் பிள்ளாய் நீ இப்போதுசொன்ன வசனத்தை உன் பிதாவான இரணியன் கேட்டால் க்ஷணமே என்னையும் உன்னையுங் கொன்றுவிடுவான், ஆதலா லென்சொல்லை மறுக்காமல் நினைவுடனே யான் சொன்னபடிக்கிச் சொல்லென்று பலவிதங்களாகச் சொல்லியுங் கேளாமல் ஸ்ரீஅரிநாமமந்திரத்தை மறவாமற் சொல்வதைக்கண்டு குருவானவர் பிரகலாதனை அழைத்துக்கொண்டு இரணியாசுரனிடம் போனார்—எ-று. (கஅ)

அவ்விரணியன்சொல்வ துங்கருத்துட்கொளா னப்பாலகன்றந்தையை,
யிவ்வகையுன்னிலையுனக் கெய்துவன் னிலையென்னில் யான்சொலும் படி
மொழிதியென், றெவ்வொருசொல்வேதவுரை யெனவுரைத்தருளினு னு
ணர்வற்றமுரனிரணியன், றெவ்வென வெகுண்டனன் றெள்ளமுதினைக்க
விழ்த் தாலநுகர் சிலமெனவே.

(இ-ள்.) அந்த உபாத்தியாயர் இரணியாசுரனைக் கண்டு உன் பிள்ளை நான் சொன்னபடி சொல்லாமல் வேறொன்று சொல்லுகிறான் அது நீ யறிவாயென்ன இரணியன் பிள்ளையை மடியில் வைத்துக்கொண்டு உபாத்தியாயர் சொன்னபடி சொல்வாய் குழந்தாயென்று பிரியமாகச்சொல்ல, பிரகலாதன் தந்தையைப்பார்த்து இவ்வகை உறுதிநிலை உனக்கு வந்ததென்ன யான் சொல்லுவதைக் கேளென்று உண்மையான வேதங்களிற் சொல்லுகிற ஸ்ரீஅரிநாம மந்திரமாகிய அஷ்டாக்ஷரம் இதுவென்று தெரியப்படச் சொன்னான். அதுகேட்ட அறிவில்லாத இரணியன் உடனே அமுர்தத்தைக் கவிழ்த்து விஷத்தைக் கொள்ளுவதுபோல அதிக கோபங் கொண்டான்—எ-று. (கக)

பாலனிவனமதுவெங் காலனெனவுற்றுப் பகைத்தெழுறுடங்கியனலின்
பாலநிலமெழுந்துவழித் தாழ்த்தினன்கரிமுன் படுத்தினன்காளகூடக்

காலகண்டணவரவு கவ்வக்கடிந்தனன் கடலுளேவிடுத்தடுசினங்
காலவெறிகடகத்தின் மெய்கண்டதுண்டங்கள் காண்பமெனவீசினனரோ.

(இ-ள்.) இந்தப்பிள்ளை எனக்குக் கூற்றுவனென்று குறித்து இவனை யெவ்வி தத்திலுங் கொல்லுகிறதே நல்லதென்று பகைத்தொழி லாரம்பித்து அக்கினிசொலிக்கமூட்டி யதனில் போடுவித்தான், ஆனைக்காலிலிட்டு மிதிப்பித்தான், காலகோடிவிஷங்களைக் கக்காநின்ற கொடிய பாம்புகளைவிட்டுக் கடிப்பித்தான், கலதூணுடனே கட்டி சமுத்திரத்திற் போடுவித்தான், இதற்கெல்லாம் பிரகலாதன் சாகாததைக்கண்டு மிகுந்த சினத்துடனே இவனைக் கண்டதுண்டப்பட வெட்டுவேனென்று தன் கையிலிருந்த வாளாயுதத்தினால் வீசினான்—எ-று. (உ0)

இவ்வகையடுந்தொழில்க ளியாவுமவன்மீதினி லுறுவகை யிராவகையினால்
மெவ்வலியிவற்குளதுமெய்ம்மைசென்றவனுடன் வினவுதலெடுத்திரணியன்
இவ்வுலகுமெவ்வுலகு மெனதரசியற்றிறமுன் னாரணன் யாவனெனவே
கவ்வையறவுரைமினவ னெங்குளானபிரகலாத கள்வகட்டுரைமினென்றான்.

(இ-ள்.) இப்படிப் பிரகலாதனைக் கொல்லத்தக்க முயற்சியெல்லாஞ் செய்தும் அவன் சாகாதபடியினாலும, இவனுக் கித்தனை வலுமையும் பலனும் சார்புமிருக்கிறது உண்மையென்று அவனை வினவும்படி யெதிரிட்டு இரணியன் இந்தலோக மெல்லா மென்னுடைய அரசாட்சி யாக்கினையி லடங்கியிருக்க, கிருபைசெய்வாயென்று கேட்ட உன்னுடைய சுவாமியானவன் எவன், அவன் எங்கே யிருக்கிறான், அவனை எனக்குக் கபடமில்லாமல் காண்பிப்பாய் பிரகலாதனென்னுங் கள்வனே யென்றான் இரணியன்.—எ-று. (உக)

ஐம்புலனுமைம்பெரும் பூதமும்மைஞ் ஞூறு டைஞ் ஞூறுபணவரவினு
மும்பருலகுஞ்சீவ னுறைதரு விடத்தினு முலகங்கள்பலவைப்பினு
மிம்பருஞ்சுருபவரு பத்தினுங்கரிமுத லெறும்பினுமிவ்விடமீதினு [னும்.
மெம்புனிதனேயுறைவ னெங்குமவனேதெய்வ மெனவறிகொடுந்தொழிலி

(இ-ள்.) என்றிப்படி இரணியன் வினவ, பிரகலாதன் என்னுவிலிருக்குமவன் ஐம்புலாதிகளிலும் பஞ்சபூதங்களிலும் ஆயிரம்பணமுடிச் சேஷசயனத்திலு மேலுலகத்திலுஞ் சராசரங்க ளனைத்திலும் வைப்பாகிய பலவுலகங்களிலுஞ் சொரூபங்களிலும் அருபங்களிலும் யானைமுத லெறும் பீறாகிய சகல சீவாத்துமாக்களிலும் இவ்விடத்தின்மேலும் என்னுடைய கர்த்தாவான ஸ்ரீமந் நாராயணமூர்த்தி யிருப்பான், அவனே தெய்வமென் றறிவாயாகக் கொடிய குணத்தின்தொழிலையுடையவனே என்றுசொல்லிப் பின்னையுஞ் சொல்லுவான்—எ-று. (உஉ)

சீவனுஞ்சிவனல் லாதவெப்பொருளினுஞ் சொருபனென்னாராயணன்
காவலுறுமிரணிய னெனச்சொலுங்காலையிற் கணகரத்தினத்தூணிலும்
நாவகமிருந்தவ னிருப்பனேவெனவோதி நடுநடுங்கக்கையறைந்
தோவறவுரைப்பவதி லண்டரண்டத்திருளி னொருசிங்காதமுளதால்.

(இ-ள்.) பல உயிர்களிலும் உயிரில்லாத பொருள்களிலுக் தூணிலுந் துரும்பிலு மெங்கெங்கும் நிறைந்திருப்பான் என் சுவாமி நாராயணன் இரணியனே

யறிந்துக்கொள்ளென்று சொன்னான், அப்போது இந்தத்தூணிலுமிருப்பானோ உன் கர்த்தாவென்ன, அப்படி யதிலுமிருப்பானென்று சொல்ல, அப்போது ஓங்காரஞ் செய்து உறுக்கி, யண்டபுவனங்கள் நடுநடுங்க அந்த சொர்ன்னமணித தூணை இரணியன் கையினாலே ஓங்கிக்குத்தி யறைந்து இகழ்ச்சியான சிலவசனங்களைச் சொன்னான், சொன்னவுடனே அந்தத்தூணிலிருந்து உகாந்தகாலத இடிமுழக்கம்போலும் முழங்கி ஒரு சிங்கநாதம் உண்டாச்சுது—எ-று. (உ௩)

அங்கவனையெனதுடன் போர்விளையெனப்பகரு முளவிலப்பிரகலாத
னங்கமலைநாராய ணையநமவருகெனனு மளவிலகிலாண்டமுழுதுந்
துங்கமிகநிமிர்வுறத் தோள்களொருநாலுந் தொடரநாற்றிக்கும்நிறையச்
செங்கமலவிணையடிகள் சேடன்பணமுடிச் சிகரநெறுநெறெனவுலவா.

(இ-ள்.) அப்படி முழங்கின சிங்கநாத ஓசையைக்கண்டு இரணியசூரன் தூணைவிட்டு வெளியேவாடா என்னுடனே உயிததியமபணணடா வென்று சொன்னான், அப்போது பிரகலாதன் சுவாமீ லட்சுமிமணாளா ஸ்ரீமந நாராயணமூர்த்தியே நமஹா வெளியே வரவேணடுமென்று ஸ்தவுத்திரஞ்செயய, அநதத தூணைப்பிளந்துக்கொணடு வெளிப்பட்டு நரசிஙகாவதாரமாக அகிலாணடமெலலாந் தமது கிரீடந் தோய்ந்து நிமிர்ந்துவர எட்டுத்திக்கும நான்கு புயங்களும் நெருஙகிநிறைய, இரணடு சிங்கபாதகமலங்களும் பூமியிடம் போராமல் மிதித்துவர, ஆதிசேடன் பணமகுடங்கள நெரிந்து தலைசாயநது நெளிக்கவும் வநதார்—எ-று. (உ௪)

முடியண்டவைப்பினுக் கப்புறத்தப்புறத் தப்புறமுமுடிவரிதென
வடிகொண்டவெண்பல் லினுக்கொருபல்லாயிரம் யோசனைகளாகவுலகம்
வெடிகொண்டதிர்ந்ததென வள்ளுகிரவிதிரப்பன விசாலவிழிவடவானலப்
படிகொண்டுநின்றுசுழ லப்பாரநரசிங்க படிவம்பிறந்துளதரோ.

(இ-ள்.) அப்படிவந்த நரசிஙகமூர்த்தியினது முடிகள் அணடங்களுக் கப்புறத்தும் ஊடுருகவும், கூரிய சிங்கப்பலலுக ளொன்றுகசொன்று பல்லாயிரம் யோசனை விஸதாரமாக நகைகொட்டி வரவும், உலகமெலலாம் இடியிடித் ததிர்ந்ததுபோலும் அவாவருகிற அதிசசியினாலே கிடுகிடென்று அதிர்ந்து சிலையோடவும், நகஙகள் விதிர்விதிர்த்திட விலாசமான வட்டக்கண்கள் வடவாக்கினிபோ லெரிந்து பொறிபரக்க, அண்டங்கள் சுழலப் பெரிய நரசிங்கமூர்ததி தோன்றிக கைகொட்டி ஆர்ப்பரித்து நின்றார்—எ-று. (உரு)

பிறந்தவுடனப்பிரக லாதன்மறைவுற்றனன் பெரிதுநரசிங்கமெதிர்போய்
மறந்தருமனத்திரணி யன்கனவினைத்தொழில் மலைந்தனனிவ்விருவருமலைந்
திறந்திடநகத்தினு லிரணியன்கனவயி றிடந்துகுருதிகளுகர்தலா
னிறைந்துநரசிங்கவெறிநெடிதுநாரணனுலகில் நிகழ்வித்துநின்றபொழுதே

(இ-ள்.) இப்படி வெளியே புறப்பட்டவுடனே பிரகலாதன் மறைந்துநின்றான், பெரிய நரசிங்கமூர்த்தி வஞ்சமனத்தனான இரணியாசுரனுடனே எதிர்த்து யுத்தம்பண்ணி அவன் சவுரியபெருமை வலுமையெல்லா மடக்கி, அவனைக் கொல்லவேணுமென்று நரசிங்கத்தினுடைய கை நகங்களினாலே இரணியன் வயிற்றைக்

கிழித்துக் குடல்களை மாலையிட்டு இரத்தங்களைப் பானம்பண்ணினார். அதிலொரு வெறியுண்டாகி மிகவும் பித்தனாக ஆடிச்சுழன்று அண்டமதிரக் குதித்து நிற்கின்ற காலத்தில்—எ-று. (உசு)

பித்தனொருசரபப் பெரும்புள்ளின்வடிவினாற் பெரியநரசிங்கமதனைக்
கொத்தியண்டத்திற் கொணர்ந்திட்டபின்னறிவு கொண்டுவிண்டபராதமெ
றித்தகைவிடப்பின்னு மிரணியாக்கன்புவி யெடுத்தகிலபாதாளவாய் [ன்
வைத்தபடியாலவனை மடிய வமர்செய்யயிருவர்கள்பிரமஹத்திதொடலால்.

(இ-ள்.) அப்படி நரசிங்கம் பித்தவெறியா லாடித்திரிய, பரம மெஞ்ஞான மூர்த்தி சரபப்பட்சியாகி வந்து நரசிங்கத்தைக் கொத்தி அண்டகடாகத்துக்குக் கொண்டுபோய் குலுக்கிவிட இரத்தங்களெல்லாங் கக்கினபின்பு அறிவுவந்து அபராதஞ் செய்தேனென்று சிவனைவணங்கி விடைகொண்டு தம்முடைய லோகத்துக்குப் போய்ச் சேர்ந்தார். பின்பு இரணியாட்சதன் புவியைப் பாயாகச் சுருட்டிக்கொண்டுபோய்ப் பாதாளத்திலே வைததான். அதுவறிந்து விஷ்ணு வராக அவதாரமாய்ப் பூமியையிடந்து பாதாளம்புகுந்து இரணியாட்சதனை யடர்ந்து கொன்று, புவியை முன்போல நிலைக்கச்செய்தார், அந்தப் பிரமஹத்தி விஷ்ணுவைத்தொடர்ந்து பற்றிக்கொண்டபடியினால்—எ-று. (உஎ)

வேறு.

மதுகயிடவனொனு மகிழ்பெறவிருவர் வனசெவியிடைமாசா
லதிகமெய்வலியும் வுறமொலிவிதமோ டவரவருடனார்த்துப்
புதிதொருமாசின் புக்கவரதனாற் போகஞ்சிறிதுமிலாரு
ததிநடுவினிலிவ னெவனெனநின்றுா முறமுறமலைகுவரால்.

(இ-ள்.) பின்பு மதுகயிடவனொன்னும் இரண்டுபேர் மகாவிஷ்ணுவினுடைய காதுக் குறும்பையினாலே பிறந்து வளர்ந்து அதிக புஜபலபராக்கிரம சாலிகளாக இடிபோற் சத்தமிட்டு அட்டகாசஞ் செய்து ஒருவரோ டொருவர் ஆர்ப்பரித்துப் போர்தொடுத்து நின்று செவிமாசிற் றோன்றினவராதலால் மவுடிகத் தன்மையால கடல்நடுவிலே சயனித்திருக்கின்ற விஷ்ணுவை இவனார் இங்கிருக்கிறவனென்று தங்கள் தங்கள் மார்பினாலே நெருங்கிப் போர்செய்தார்கள்—எ-று. (உஅ)

ஆழியினொடுமது கயிடவர்பூச லனந்தயுகங்கால
மூழியினிகல்செய் தொருவர்க்கொருவ ரிளைத்திலரிருபிருதர்
பாழியில்வலியின பச்சைப்படிவப் பண்ணவனைப்பார்த்து
வாழியுன்வலிமை மகிழ்ந்தனன்யாது வரம்வேண்டுவதென்றார்.

(இ-ள்.) கடல்நடுவிலே சக்கராயுதனுடனே மதுகயிடவ ரிருவரும் அனேக காலம் போர்செய்து ஒருவருக்கொருவ ரிளையாமல் இரண்டுசூரரும் தாழ்வில்லாத வலிநிலமையிற் கார்மேகவண்ணராகிய விஷ்ணுவைப்பார்த்து நீ வெகுசமர்த்தன் உன் சவுரியத்தை மெச்சி மகிழ்ந்தோம் உனக் கென்னவரம் வேண்டுங்கேள் தருகிறோமென்று சொன்னார்கள்—எ-று. (உகூ)

எமதுகைசக்கரம் விட்டால்நின்சிர மிறவரமருள்கெனவே
கமலனுதித்தரு ளுந்திக்கதுமது கயிடவரருள்கிற்றார்

தம்முகரச்சக் கரம்விட்டவர்தந் தலைகளறுப்பவன்னோர்
வெமுதகமேதை யில்விதிசெய்திட மேதினியெனவுளதால்.

(இ-ள்.) இப்படிச்சொன்ன மதுகயிடவரைப் பார்த்து விஷ்ணுவானவர் என் கைச்சக்கரத்தால் உங்கள்தலை யறுபட்டு இறக்கும்படிக்கு வரங்கொடுக்க வேண்டுமென்றுகேட்க, கமலனுதித்த பதுமநாபனுக்கு மதுகயிடவ ரிருவரும் அப்படியே வரங்கொடுத்தார்கள். உடனே விஷ்ணு தன்கைச் சக்கராயுதத்தை விட்டுத் தலைகளை யறுத்துவிட்டு அவர்களுடம்பின் றோலையுரித்து இரத்தமேதைகளுடனே நிலத்தின்மேல் விரித்து அமைத்தபடியினாலே பூமிக்கு மேதினியென்று பெயர் விளங்குகின்றது—எ-று. (சo)

மாயன்றனதிடை வருமகவாகிய மதுகயிடவர்படலா
லேயும்பழியிஃ தகலவுமிப்புற விரணியனைப்பொருத
காயந்துண்டித் திடுபழியகலுங் காரணமாகவும்வந்
தேயும்பணிமலை நாகேசுரனை யிறைஞ்சுதுமெனவந்தான்.

(இ-ள்.) விஷ்ணுவானவர் தன்னிடத்தில வந்த மதுகயிடவரைகொன்ற பழி தீரவும், வலிமைபொருந்திய இரணியாட்சனைக் கொன்ற பிரமஹத்தி தீரும்படியாகவுந் திருநாககிரி நாகேசுரனைப் பூசித் தர்ச்சிக்கவேணடிவந்தார் விஷ்ணு—எ-று.

வந்துவணங்கிப் பணிமலைமீதொரு மரகதவடிவான
வெந்தையைமேருக கொடிமுடிமீதி லெழுநதகொழுந்தைநறுஞ்
சந்தனபரிமள கத்தூரியிலபி டேகந்தனியாட்டி
வந்தனைசெய்தொரு வாவியுமேற்பால் வரவருளுற்றனனால்.

(இ-ள்.) விஷ்ணுதேவர் திருநாகிரிமே லெழுந்தருளிய மரகத வெந்தையையும், மேருசிகரத்தில வீற்றிராநின்ற கற்பகக் கொழுந்தையும், சந்தனபரிமள கஸ்தூரி இமிர்ந்த களபங்களால அபிஷேகமுதலாகிய அலஙகிர்த உபசாரங்களுஞ் செய்து பூசித்துத் தன்பெயரால் ஒரு தீர்த்தமு மேற்குப்பக்கத்தி லுண்டாக்கி யருள்பெற்றார்—எ-று. (சஉ)

அங்கதுவிண்டுவின் தீர்த்தமெனப்பெய ராயினவத்தீர்த்தந்
தஙகியபலனத் தீர்த்தமாகாண்டந் தனனிலுரைப்பமரிக்
கிங்கிதமுதவின் நாகமலைப்பர னென்றும்பிரியாதே
தங்கினனுதி கேசவனெனவந் தவனிருதித்திசையே.

(இ-ள்.) அந்த தீர்த்தம் அன்றுமுதல் விஷ்ணுதீர்த்தமென்று பெயராய் விளங்குகின்றது. அந்தத் தீர்த்தத்தின் மகிமைபலன்களை மேலே தீர்த்தகாண்டத்தில் சொல்லுகின்றது. விஷ்ணுவுக்குப் பிரமஹத்தி தோஷமுந்தீர்ந்து சுகம்பெறச்செய்த நாகேஸவரனை விட்டுப்பிரியாமல் அந்த ஸ்தலத்துக்கு நிருதித்திசையில் ஆதிகேசவனென்னும் பெயராய் வசிக்கின்றார் விஷ்ணு—எ-று. (சந)

விஷ்ணுபூசைச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—உஅக.

# பிரமன்பூசைச்சருக்கம்.

விண்டுவின் பூசைநாக வெற்பினி லியற்றிவெள்ளைத்
துண்டவெண் பிறையுலாவு சுடர்முடிச் சடிலச்சோதி
வண்டிசை மலர்ப்பூங்கோதை வாமனைப் போற்றும்பின்னாட்
புண்டரீ கத்தன்பூசைப் புகலுவன் றவத்தர்கேண்மோ.

(இ-ள்.) திரேதாயுகத்திலே திருநாககிரியீச்வரனை விஷ்ணு பூசித்தபின்பு, துண்டமான வெள்ளிய இளம்பிறைதவிழ்ந்து பிரகாசிக்கின்ற சடாமகுடங்களையுடைய சோதியை, வண்டுக ளிசைபாடி மொய்க்கு மலர்மாலைசூடிய கூந்தலை யுடைய உமையொருபாகனைத் திரேதாயுகத்தில் பிரம்மதேவன்வந்து பூசித்த முறைமையைச் சொல்லுகிறேன் தவமிகுதியுடைய முனிவர்களே கேண்மின்களென்று சொல்லுகிறார் சூதமுனிவர்—எ-று. (க)

முதலுக மகன்றபின்னர் முராரியு மயனுந்தம்முட்
சிதைவிலா வெருளிதோன்றிச் செருத்தொழிற் புரியுங்காலை
யதநடு வகிலமண்ட வண்டரண் டத்துமப்பாற்
கதிரொளி யனலத்தூணங் கண்டிருவரு முட்கொண்டார்.

(இ-ள்.) முதல்யுகம் போனபின்பு இரண்டாம் யுகத்தில் அரிபிரம ரிருவரும் நான்பெரியவன் நான்பெரியவனென்று ஒருவருக்கொருவர் பகைத்து அதிககோபங்கொண்டு அனேககாலமாக யுத்தஞ்செய்தார்கள். அப்போது இவர்கள் பகையைத் தீர்க்கும்பொருட்டு அவ்விருவருக்கு மத்தியில் சிவபெருமான் அகில அண்டபிரம்மாண்டங்க ளெல்லாம் ஊடுருவும்படி பிரகாசம் பொருந்திய ஒரு அகனிக்தூணாகவந்து நின்றதுகண்டு இருவரு மவரவருள்ளத்தில மலைத்துத் திகைத்து நின்றார்கள்—எ-று. (உ)

ஈதடி முடியைத்தேடி யின்னதென் றறிந்தோர்மேலோர்
போதுவ மெனவேதங்கள் புன்மதி நினைவின்கூறி
மாதவன் யேனமாகி மலரடி தேடிச்சென்றான்
வேதனே திமமாயண்ட விரிவெலாம் பரந்தான்மன்னே.

(இ-ள்.) அப்போது பிரம்மாவும் விஷ்ணுவும் போர்த்தொழிலைவிட்டுத் தங்கள் புன்மதி நினைவினாலே இந்த அக்கினித்தூணினது அடியு முடியுங் கண்டவர்களே பெரியவர்களென்று நிச்சயித்துக்கொண்டு, விஷ்ணு வராகவுருவமாகி மலரடியைக் காணுவேனென்று பாதாளமார்க்கமாகத் தேடிப்போனார். பிரம்மதேவன் அன்னப்பட்சி உருவமாகி முடியைக் காணுவேனென்று ஆகாசவழியே பறந்து தேடிப்போனார்—எ-று. (ங)

அனந்தகற் பங்கள்மாய னடிமலர் சிறிதுங்காணான்
கனந்தரு புடவிநீண்டு கழிவுறு மம்மர்கூர்ந்தான்

வளைநதரு கமலத்தோனும் வானுளை யனேகங்காலந்
தினந்தினந் தேடநின்றான் செயலிதற் கொன்றுங்காணான்.

(இ-ள்.) அளவில்லாத கற்பகாலம் வராகரூபமான விஷ்ணுவானவர் பூமியை க்கீண்டிக்கொண்டுபோய்த் தேடியும் அனற்றூணினடியைச் சிறிதேனுங் காணமற் றிகைத்து நின்றார். அன்னப்பட்சியான பிரம்மதேவன் அனேககாலம் அண்டங் களெல்லாம்பார்த்து மேலேபோய அக்கினித்தூணினது முடியைக்காணமல் தேடித்திகைத் திளைத்துச் சொல்லுதற்கொரு செயலுமில்லாமல கவலையுற்றன்—எ-று.

அவ்விடை விடையன்பாக னவிர்சடை மகுடமீதாஞ்
செவ்விடை மடற்றண்கைதை சென்றவால் காண்பவேத
னெவ்விடை நின்றுநீயீண் டெய்துவ தியம்புகென்னத்
துவ்விடக் களத்தான்சென்னிச் சூட்டினிற் கழித்ததெனறே.

(இ-ள்.) இப்படிப் பிரம்மதேவன் கவலையுற்று நிற்கும்போது, சிவனுடைய சடாமகுடத்திலிருந்து கீழே யிறங்கிவருகிற அழகிய மடலையுடைய தாழம்பூவைக் கண்டு நீயெங்கிருந் தெவ்விடஞ்செல்லுகிறு யென்றுகேட்க, விஷமுண்ட கண்டனுன பரமேசுவரன் சடைமுடியிலிருநது கழித்துவிட்டபடியினு லங்கிருந்து வருகிறேனென்று சொல்லியது—எ-று. (ரு)

கேதகை யோதக்கேட்ட கிளர்சிறை யோசித்திந்தப்
போதினில் மாயன்றன்னைப் புகுந்துநாம் வெல்வோமென்றே
யீதென வறியேனெந்தை யெழில்முடி யெனக்கோர்நண்பு
சூதினி யுரைப்பவேண்டுந் துணர்ப்பெருங் கைதாயெனமுன்.

(இ-ள்.) அப்படி தாழமடற்பூ சொன்னதைக் கேட்டு அன்னவடிவான பிரம்மதேவன் யோசனைசெய்து இப்போ திதனைககொண்டு சென்று விஷ்ணுவை நாம் வெல்லுவோமென் றெண்ணி ஓ கேதகைப்பூவே, சிவனுடைய முடியை யணுவளவுங்காணேன் நீயெனக்கொரு சகாயமாகவந்து பொய்ச்சாட்சி சொல்லவேண்டுமென்று கேட்டுக்கொண்டான்—எ-று (சு)

என்றபோ தவன்றன்கூட வெழுந்துசெம் மடற்பூங்கைதை
மன்றலந் துளபங்காணு மயக்குறுங் காலேயோதுங்
கொன்றையஞ் சடிலங்கண்டேன கோதில்கே தகையீதென்பால்
வென்றியீ தவனறனசென்னி வேணியி லிருந்ததென்றுன.

(இ-ள்.) கேதகைப்பூவும் அதற்குச் சம்மதித்துப் பிரம்மதேவனுடனே புறப்பட்டுக் கீழே யிறங்கிவந்து அடியைககாணமல் மயங்கிநிற்கின்ற விஷ்ணுதேவனைக கண்டு நான் சிவனுடைய கொன்றைமாலைசூடிய வழகிய சடைமுடியைக் கண்டேன், சிவன் சடையிற்றரிததிருந்து கழிததுவிட்ட கேதகைப்பூ விதோபாரு மிதுவே சாட்சி, நீ தோரவையடைநதாய நான் வெறறியடைந்தே னென்று பொய்சொன் ஞன் பிரம்மதேவன்—எ-று. (எ)

கரியிது கரியோய்வெங்கைக் களிற்றினை யுரித்தார்சென்னி
விரிசடை முடியைக்கண்டேன் விண்டுநீ காணுய்கொல்லோ

அரிதிருக் கமலபாதம் யானனுவேனுங் காணேன
றெரிவரு கமலத்தோயென் செய்வதென் றுண்மையென்றான்.

(இ-ள்.) வாரீர் விஷ்ணுவே. இந்த வோலைட்டு சாட்சியாக வெவ்விய துதிக் கையுடைய யானையை யுரித்தப்போர்த்த சிவனுடைய விரிந்த சடைமுடியை நான் கண்டேன், நீர் சுவாமி அடியைக் காணீரோவென்று சொன்னான். அதற்கு விஷ்ணு சொல்லுகிறார் வாரீர் பிரம்மாவே, சிவனுடைய இரண்டு சீர்பாதகமலங்களை நா னணுவளவுங்காணே னினி யென்னசெய்வே னுள்ளபடியென்றான் விஷ்ணு—எ-று.

அயன்புக றீயபொய்யு மரிபுகல் வாய்மைமெய்யும்
புயங்கபூ டணத்தாருள்ளப் புந்தியி லுணர்ந்துதோன்றி
நயந்துமா யனைவேதாவை நடுங்கவோர் சிரத்தைமாற்றி
வயங்கெழு மாயன்கோவில் வாழ்வுல கனைத்தமைத்தார்.

(இ-ள்.) இப்படிப் பிரம்மதேவன் சொல்லிய பொய்யும், விஷ்ணுமூர்த்தி சொன்ன மெய்யு மிவ்விரண்டையும் நாகாபரணனான பரமேஸ்வரர் தமது திருவுள்ளத்திலுணர்ந்து அவர்களுக் கெதிர்வந்துநின்று நீ இந்தப்பொய் சொல்லலாமாவென்று பிரம்மதேவன் சிரசுகளி லொருசிரசைக கிள்ளியெறிந்தார். விஷ்ணுவைப்பார்த்து பிரியவசனங்கூறி விஷ்ணுஸ்தலம் உலகமெங்கும் விளங்கித் துதிக்கும்படி அருள்செய்தார் சிவன்—எ-று. (கூ)

பிரமனுக் குலகமெங்கும் பெருகுமா லயங்கள்மாற்றிப்
பரமனங் கனமகனற பான்மையா லவற்றைத்தீர்ப்ப
வருணையிற் பூசைகூர்ந்து மனந்தமா தலத்தர்ச்சித்துந்
தெருளுமற் றவிராகைச் சிலம்பினைத் தேடிச்சென்றான்.

(இ-ள்.) அந்தப் பிரம்மதேவனுக்கு உலகங்களிலெங்கும் கோவில் பூசையில்லாமல் தவிர்த்தும் சிவன் றன்னைக் கோபித் தகன்றபடியினாலே அக்குற்றந் தீரும்பொருட்டுத் திருவண்ணுமலைக்கு வந்து அருணசலேசுவரனைப் பூசித்து, அனந்தசிவ ஸ்தலங்களில் சிவனையர்ச்சித்து மக்குற்றங்கள் தீராதபடியினாலே திருநாககிரி ஸ்தலத்தைத் தேடிப்போனான்—எ-று. (௪0)

திருக்கயி லாயமென்னுந் தென்றிசைச் செங்கோட்டெய்தி
நெருக்கயி லாயபொற்கண் ணேரிழை பங்கர்போற்றி
யிருக்கையி லாயன்றீர்த்தந் தீசானி சானந் தன்னிற்
றருக்கையி லாயபிரம்ம தண்டனோர் தீர்த்தங்கண்டான்.

(இ-ள்.) தென்றிசையிலிருக்கும் கயிலாயமென்னுந் திருச்செங்கோட்டிற் சென்று குழையை நெருக்குகின்ற வேல்போன்ற அழகிய கண்களையுடைய உமையொருபாகனை முப்பொழுதும் ஆகமப்படியே பூசைசெய்து வணங்கித்துதித்து அங்ஙனம் வசித்திருக்கும்போது, விஷ்ணுதீர்த்தத்திற்கு மீசானியபக்கத்தி லொருதீர்த்தத்தைக்கண் டதில் வேதமந்திரங்களை யாவாகித்துத் தன்பெயரால் பிரமதீர்த்தமென்று விளங்கச்செய்தான்—எ-று. (௪௧)

கண்டதண் டீர்த்தமூழ்கிக் கமலமீ தமலவேதன்
கொண்டலி னிமிர்பூங்கோதை குலவொரு பாகனைக

விண்டுவின் முளைத்தபச்சை விமலனை நாளும்போற்றி
யண்டிய நவைகடீர்ந்த தறிந்தனஞ் சிறிதுசொல்வாம்.

(இ-ள்.) அந்தப் பிரமதீர்த்தத்தில் நாளுக்குநாள் பிரமதேவன் மூழ்கி புனிதனு க கார்மேகம்போன்று வண்டுகள் மொய்க்கின்ற புஷ்பமாலைசூடி யழகிய கூந்தலையு டைய உமையொருபாகம் பிரியாத அர்த்தநாரீசுரனை நாககிரியில் வசித்திருந்த பச் சைநிறத் திருமேனியையுடைய வழகிய விமலனை நாள்தோறும் பூசித்து தன்னைப்ப ற்றிய சர்வபாவ குற்றங்கள் தீர்ந்ததை அவையறிந்தமட்டினு சொல்லுகிறேனென்று சொன்னார் சூதமுனிவர்—எ-று. (கஉ)

வரதிலோர்த் தமைமேன்மோக மனத்திரு ளனைத்துநீங்கி
பரதல மனைத்துமாகப் படைத்தன னஃதுமன்றே
சிரதலத் தறுமுகேச்சன் செயிர்த்தயே தங்கணீங்கி
புரதல நாகவெற்பிற் புகுந்துமெய்ப் போதம்பெற்றான்

(இ-ள்.) முற்காலத்திலே அந்த திலோர்த்தமையைக்கண்டு மோகங்கொண்ட அஞ்ஞான மனவிருள்நீங்கி உலகங்களனைத்தையு ் சிஷ்டித்தான் அதுவல்லாமல் ஆ றுமுகப் பெருமாள் குட்டிச் சிறையிலிட்ட மனதகிலேசமுந் தீர்ந்து சகல ஸ்தலமு ம் புகழப்பட்ட திருநாககிரியில் வந்து மெஞ்ஞானபோதமும் பெற்றுக்கொண் டான்—எ-று. (கங)

முன்னறு முகனார்கேட்ப மொழிந்தறி யாதபோத
மன்னெடு நாகவெற்ப னருச்சனை யதனாற்பெற்றான்
மனனிய நவைகள்யாவு மாற்றின னுமையோர்பாகனை
பின்னொருக் காலும்நீங்காப் பெருந்தவம் புரியலுற்றான்.

(இ-ள்.) முன்னொருநாளிலே ஆறுமுகப்பெருமாள் வேத முதற்பொருள் கேட்க அது சொல்லத்தெரியாமல் மயங்கின பொருட்போதமு மஹாநாககிரியீஸ்வரனை யர் ச்சனைசெய்த முயற்சியாற் பெற்றான், தன்னைப்பற்றிய சகல பாவகர்மமெல்லாந் தீர் ந்து நிஷ்க்களங்க சுத்த பவுத்திரனாகக் கிருபைகூர்ந்து இரட்சித்தார் அர்த்தநாரீஸ்வ ர சுவாமி, அவரைச் சேவித்துக்கொண்டு பிரியாம லிருக்கவெண்ணிப் பெருமையா ன தவஞ்செய்யலுற்றான் பிரமதேவன்—எ-று. (கச)

பிரமகற் பங்களந்தம் பிறந்தபே ரூழிகாலம்
அரனுறைச் செங்கோட்டெனறு மழிவறு முறையுளீதென்
றரிமைபி னகவான்றேவ ருயர்முனி வரர்நால்வேதர்
பனையொரு பாகன்பாதம் பணித்தொழில் பயிற்றிநின்றான்.

(இ-ள்.) பிரமகற்பாந்திரங்கள் பிறந்து நிறைந்துவந்த மகா பேரூழிகாலத்திலு ம் சிவன் பிரியாமலிருக்கின்ற திருச்செங்கோட்டி லென்றைக்கும் அழிவில்லாம லி ருப்பதை தங்களறிவினலறிந்து தேவர் முனிவர் நான்மறைவேதியர் சுதந்தரமாக யிங்கிருக்கின்றானென்றறிந்து பிரமதேவ னுமையொருபாகன் பாதங்களிற் பணிந்து பூசித்துக்கொண்டிருந்தான்—எ-று. (கரு)

ஆதிகே சவனுர்பெற்ற வையனென் றறிந்துவேத
நீதியின் குழாங்களானூர் நிறைந்தன வெனவுட்கொண்டு
யாதொரு பங்கன்கந்தன் மாமுகன் மகிழ்ந்துதெய்வச்
சீதமென் றீர்த்தங்கண்டா செங்குவ டென்றுநீங்கான்.

(இ-ள்.) தன்னைப்பெற்ற ஆதிகேசவ மூர்த்தியையும் வேதநெறியையுடைய முனிவர் கூட்டத்தையும் அர்த்தநாரீஸ்வரனையுங் கந்தசுவாமியையும் ஆனைமுகத்தையுடைய விநாயக மூர்த்தியையுங் குளிர்ந்த மேன்மையுடைய தேவதீர்த்தங்களையுங் கண்டு மகா சிவஸ்தல மிதுவென்று மனமகிழ்ச்சியுடனே திருச்செங்கோட்டில் நீங்காமல் வசித்திருந்தான் பிரம்மதேவன்—எ-று. (கசு)

புண்டரீ கப்பொன்னுந்தி பொன்றிய நாளுஞ்செய்த
வண்டரண் டங்களெல்லா மடங்குமிவ் வரைமீதென்றும்
விண்டுமூ வுலகிற்செல்ல வெற்பினிற் பிலத்துவார
முண்டென வுணர்ந்துமாய்ந்தா ருயிர்தரு மருந்துண்டென்றும்.

(இ-ள்.) அழகிய பத்மநாபனுகிய விஷ்ணு கர்ப்பாந்த முடிவிலுஞ் சிவன் கிருபையாலுண்டான அண்டரண்ட பகிரண்டங்களெல்லா மடங்கு மிந்தக்கிரியில் திரிலோகங்களுக்குஞ் சென்று மீள இம்மலையிற பிலத்துவாரமுணடென்றும் இறந்தாலும் பிராணனைத் தருகிற மருநதுண்டென்றுந் தெரிந்து பின்னையும் நினைத்துச் சொல்லுவான் பிரமமதேவன்—எ-று. (கஎ)

வெள்ளியங் கிரியிலுள்ள வியப்பினு மிருந்தமற்ற
வுள்ளன வனந்தமிந்த வுரகசெங் கோட்டிலென்றுந்
தெள்ளிய தீர்த்தந்தானந் தெய்வமாம் பலனிம்மூன்றும்
புள்ளணிக் கடிக்கைவேய்ந்தோன் புணர்ந்திவ ணிருந்ததென்றும்.

(இ-ள்.) ஸ்ரீகயிலாசகிரியி லுண்டான மகிமையைப் பார்க்கிலும் அனந்தங்கோடி மகிமைகளிந்த திருநாக கிரியிலுண்டென்று தெள்ளுமையான தீர்த்த மகத்துவமும் ஸ்தலமகத்துவமும் மூர்த்தி மகத்துவமும் இம்மூன்று மகத்துவங்களுந்தேன் கமழுகின்ற கொன்றைமாலைசூடிய பரமேஸ்வரன் உண்டாக்கிவைத்துத் தாமும் அர்த்தநாரீஸ்வரராக இங்ஙனமெழுந்தருளி யிருக்கின்றாரென்று தெரிந்துணர்ந்தான் பிரம்மதேவன்—எ-று. (கஅ)

தனக்குறு வரங்களெல்லாந் தவத்தினிற் றந்ததென்று
மனத்துறு வனசநீங்கா தமைந்ததென் றுணர்ந்துந்தன்பொற்
கனத்துறு பிரமலோகங் கையகன் றாலும்பெம்மான்
றினத்துறு செங்கோடெங்கள் திசைமுகன் றினமுநீங்கான்.

(இ-ள்.) தனக்குண்டாகிய வரங்களெல்லாம் தவமுயற்சியிற் கொடுத்ததென்றுந் தன்னுடைய மனத்தாமரையிற் பிரியாமலிருக்கின்றார் சிவனென் றுணர்ந்துந் தனது பொன்மயமான பெருமையையுடைய பிரம்மலோகத்தைக் கைவிட்டாலும் நம்முடைய கர்த்தா நித்தியரா யமர்ந்திருக்கின்ற திருச்செங்கோடுத் தலத்தை ஒரு நொடிப்பொழுதும் விட்டுப் பிரியாமலிருக்கின்றார் சதுர்முகப்பிரமன்—எ-று. (கசு)

அயன்றருந் தெய்வதீர்த்தத் தரும்பலங் காண்டத்தீர்த்தம்
பயன்பெற வுரைப்பாம்வேதன் பணிமுதல் யுகத்தின்போற்றி
நயன்றரப் புகன்றபாங்கர் நயந்துறச் செவியுட்கொண்டோர்
முயன்றமா தவமுஞ்சீரு முத்தியுஞ் சேர்வரொன்றுர்.

(இ-ள்.) பிரம்மதேவனருளிய தெய்வதீர்த்தத்தின் பலனை மேலே தீர்த்தகாண்டத்தில் தெரியப்படச் சொல்லுகிறோம், கிரேதாயுகத்தில் பிரம்மன்பூசித்த திருப்பாடச்சருக்கத்தை யன்புடனே செவிகுளிரக் கேட்டவர்கள் தவங்கள் நிறைவேறி முடிவில் முத்தியும் சேர்வார்கள்—எ-று. (உ०)

மாமறை யவர்தொல்வேந்தர் வணிகர்பின் னவர்யாரேனுந்
தேமலர்க் கரங்கள்கூப்பிச் செங்குவ டதனைச்சூழ்ந்து
பூமகி தலத்திற்போற்றிப் புண்டரீ கத்தான்பூசை
தாமுற வுரைத்தார்க்குற்ற தலைவிதி யழிப்பன்வேதன்.

(இ-ள்) மேன்மையாகிய மறையவர்கள், அரசர்கள், வைசியர்கள், சூத்திரர்கள், இவர்கள் யாவரானலுந் தங்கள்தங்கள் கைகளைக்கூப்பி நமஸ்கரித்துத் திருநாககிரியைச் சுற்றித் துதித்துப் பிரமன்பூசைச் சருக்கத்தைப் பாராயணஞ் செய்தவர்களுக்கெல்லாம் மேலெழுதிய விதியை அழித்துவிடுவான் பிரம்மதேவன்—எ-று.

முதலுக மாயோன்பூசை முயன்றதுந் திரேதந்தன்னிற்
புதுமல ருந்திவந்த புங்கவன் பூசையாவும்
விதமுறக் கற்ரோர்கேட்ப விரும்பினர் விளைந்துகேட்போர்
கதிபலன் பெறுவரீண்டுக் கமலையோ ரிரண்டுஞ்சேரும்.

(இ-ள்.) கிரேதாயுகத்தில் விஷ்ணுபூசைச் சருக்கத்தையுந் திரேதாயுகத்தில பிரமன் பூசைச் சருக்கத்தையும் கற்றவர்களும் கேட்கவிருப்பமுற்றவர்களும் அன்புடனே கேட்டபேர்களும் அவரவரிஷ்டப்படிக்குப் பலபல கதிகளும் பெறுவார்கள் இலட்சுமி கடாக்ஷமுஞ் சரஸ்வதி விலாசமும் பெற்று வாழ்வார்கள்—எ-று. (உஉ)

பிரமபூ சனையைப்போற்றிற் பிராமண பூசைக்கொப்பா
யுரைதரும் வேதனபூசை யோதிலவ் வுயர்வுதாறு
மரஹர செங்கோட்டெய்தி யாரவர் புராணங்கூறிற்
பரகதி வருமாறெம்மாற் பகர்வரி தெனருர்சூதர்.

(இ-ள்.) பிரமன் பூசித்ததைப் புகழ்ந்து போற்றி செய்தவர்களுக்கு பிராமண பூசைபலனுண்டாகுஞ் சொல்லுதற்கரிய பிரமன் பூசைப்பாடல்களைப் படித்தாலு மந்தப் பலனுண்டாகும், அரஹரசத்தஞ் செய்து யாதாமொருவர் திருச்செங்கோட்டுஸ்தலத்தில் வந்து சேர்ந்து சுவாமியைச் சேவித்து ஸ்தலவாசஞ் செய்தவர்களுக்குவரும்பலன்களை இவ்வளவென்று நம்மாலே சொல்லிமுடியாதென்று சூதமுனிவர் திருவாய் மலர்ந்தருளினர்—எ-று. (உ௩)

பிரமன் பூசைச்சருக்க முற்றிற்று.

ஆ திரு விருத்தம்—௩०௬.

# துற்கைபூசைச்சருக்கம்.

தவாமறைப்பிர மன்பணிவெற்பினிற் றங்கியேகம லத்தடங்கண்டுபின்
சிவாதரம்பெறு யர்ச்சனையின்படி செப்பினேமெண் டிருப்புயச்சேயிழை
கவானுடுத்த கனகச்செம்பட்டினள் கன்னியுன்னிய காரியநல்குவாள் [வாம்.
துவாபரத்தினிற் சோதியைப்போற்றிய துற்கைபூசனை சொல்லத்துடங்கு

(இ-ள்.) நிறைந்த வேதங்களை யோதுகின்ற பிரம்மதேவன் திருநாககிரியிலவந்து ஒரு தீர்த்தமுண்டுசெய்து சிவனைப் பூசித்த முறைமையைச் சொன்னேமே. இனி எட்டுப்புயத்தவளாய் சொர்ன்ன நிறம்பொருந்திய சிவந்த பட்டுடை யுடுத்த இடையை யுடையவளாய் நினைத்தவரங்களைத் தருகின்றவளா யென்றைக்கு மழிவில்லாத துற்காதேவி துவாபரயுகத்தி லுமையொருபாகனைப் பூசித்த முறைமையைச் சொல்லுகிறேன் கேளுங்கள் முனிவர்களே என்று சொல்லுகிறார் சூதமுனிவர்—எ-று.(க)

போர்படைத்து வருமகிடாசுரன் பூசன்பாற்றிப் புருநருணைசலத்,
தேர்படைத்த கடாம்குடத்தலை யிர்வனைத்நடி னிர்வடிவாட்கழீஇச், சூர
படைத்த சுனைக்கரை வைகலாற் சோனைவெற்பிற் சுனைக்கரைத் துற்கை
யென், றோர்படைத்திறற் பேர்படைத்தாளவ னுள்ளிருந்த சிவலிங்கமென்
றரோ.

(இ-ள்.) முன்னொருநாள் போராடத் துடங்கிவந்த மகிடாசூரனைச் சங்கரித்துத் திருவண்ணாமலையி லெழுந்தருளி அழகிய மகிட னெருமைக்கடாத்தலையில நிர்த்தனஞ்செய்த துற்காதேவி கையிலிருந்த கூரியவாளைக்கழுவி சூரவீரத்தை யுடையவளாய், அங்கொரு சுனைக்கரையிலிருந்து தவஞ்செய்து வசித்திருந்தபடியினால் திருவருணைச் சுனைக்கரைத் துற்கையென்று வெற்றிபொருந்திய ஒருபெயரைப் பெற்றாள், சங்கரித்த மகிடாசூர னுடற்குள்ளிருந்தது ஒரு சிவலிங்கம்—எ-று. அ' வென்ப தசைச்சொல். (௨)

அந்தலிங்க மருந்தவன்றன்னைமுன் னர்ச்சித்ததாமகு
துந்துதானவன் கண்டத்துளிற்றலா லோங்குபூச லுடற்றித் தடிந்தநாள்
விந்தைகையினும் வாளினும்பற்றி விடாதுபோமகி டாசுரன்சாய்கையும்
வந்துபற்றி மலைதலைக்கண்டனு மலைச்சுனைக்குளம் மத்தனைவைத்தனள்.

(இ-ள்.) அந்தச் சிவலிங்கமானது ஒரு முனீசுவரன் பூசைபண்ணினது, மகிடாசூரன்வந்து அந்தமுனிவனை விழுங்கின னன்றுதொட்டு மயிடன் கண்டத்துள் இருந்தது, அந்தலிங்க மப்போது மயிடன் றலையைவெட்டி மிதித்த துர்க்கையம்மன் கையிலும் வாளிலும் பற்றிவிடாமல் மகிடாசூரன் சாய்கையும்வந்து பின்றுடர்ந்து போர்செய்வதுங்கண்டு அந்தலிங்கத்தை அண்ணாமலைச் சுனையினிடத்திலே வைத்தாள் துற்கையம்மன்—எ-று. (௩)

வைத்துநித்த மருணைப்பிரான்கழல் வாழ்த்தியேத்தி வணங்கின டாருகை
யத்திலங்க சுரன்வலிநீக்கினு லாளருணையீச னருள்புரிநேரிநால்

முத்திமேவிய தில்லையினிற்சிவ லிங்கநாதனை முன்வைத்திறைஞ்சியே
சித்திதந்தரு ளிவ்வசுரன்செயல் தீர்த்தல்வேண்டு மெனத்துதிசெப்பினள்.

(இ-ள்.) அப்படி யந்தலிங்கத்தைச் சுனையில்வைத்து நித்தியம் அருணாசலீஸ்வரன் பாதத்தைப் பூசித்துத் தவஞ்செய்திருந்தாள் துற்காதேவி, அங்ஙனம் மகிடாசூரன் பிரமஹத்தி போகாததனால் அருணாசலீஸ்வர னருளினாலே காணமுத்தி தருவதாகிய தில்லைத்தலத்தில்வந்து அந்தச் சிவலிங்கமூர்த்தியை முன்வைத்துப் பூசித்து வணங்கினள், சுவாமி யெனக்குச் சித்தியாக இந்த மகிடாசூரன் பிரமஹத்தி தீர்த்தருளவேண்டுமென்று மிகவுந் தோத்திரஞ்செய்து நமஸ்கரித்தாள்—எ-று. (ச)

தில்லைநாயக மூவர்க்குநாயக தெய்வநாயக தெய்வச்சிதம்பர
வல்லன்யானென நாடகனின்னுடன் வாதுசெய்தவென் மாசுமகற்றவு
மல்லல்வெவ்வினையாற்றவுநீயெனக்கருளுமென்றுவணங்கிடுதுற்கையறைந்தபின்
குல்லைமார்பன்பதஞ்சலியஞ்சலிகொண்டபொன்னம்பலத்தினர்கூறுவான்

(இ-ள்.) சுவாமீ தில்லைச் சிதம்பரேஸ்வரரே, திரிமூர்த்திகளுக்கு மேலான தெய்வநாயகரே, திவ்விய சிதம்பர நடராசரே, அன்றொருநாள் நான் வெகுவல்லவளென்று காளியாகிவந்து எதிர்த்து உம்முடன் வாதுபேசி நிர்த்தனஞ்செய்த குற்றத்தை, பின்னும் நான்செய்த வினைகளெல்லாந்தீர்த்து தேவரீர் கிருபைசெய்தருளவேண்டுமென்று துற்கைசொல்ல, குல்லைமார்பன் பதஞ்சலி யஞ்சலிசெய்து வணங்காநின்ற கனகசபாபதிமூர்த்தி சொல்லுகிறார்—எ-று. (ரு)

யாருமம்மலை மீதிற்பிராட்டியு மினிதுறைந்தக லாவெழிலாயினம்
பூமலர்த்தடஞ்சோலையுங்கங்கையும் பொய்கையெங்கும்பொலிவிற்சிறந்தன
சேமநாக மலையெனும்பேரின செய்யகோட்டின் சிரோகத்திலின்புறக்
காமரங்கம லத்தனுமாயனுங் காதலுற்றன கந்தர்விடாதன.

(இ-ள்.) வாராய் துற்கையே, அழகிய புட்பக வனங்களுங் கற்பகச்சோலைகளுங் கங்கைமுதலான சகலதீர்த்தங்களும் நிறைந்திருக்கின்ற சொர்ன்னமயமான திருநாககிரியென்னும் ஒருமலை யிருக்கின்றது, அம்மலைச் சிகரத்தில் நாமும் பார்வதாதேவியும் ஏகசரீரமாகி அர்த்தநாரீஸ்வர முகூர்த்தமாக எழுந்தருளியிருக்கின்றோம், அழகிய பிரமனும் விஷ்ணுவும் ஆசையுற்று, கந்தசுவாமியும் பிரியாமலிருக்கின்ற மகாஸ்தலமென்று சொல்லிப் பின்னையுஞ்சொல்லுவார் சுவாமி—எ-று. (சு)

மாயன்வெவ்வினை பங்கயன்வெவ்வினை மாற்றியாற்ற லளித்தனதென்கயி
லாயமாயின மேருவின்பொன்முடி யாயநம்மிலிங் கத்தணியுள்ளன
சேயதேவர் முனிவரர்சூழ்திருச் செங்கனக்கிரி யொன்றுளதங்ஙனம் [னர்.
போயிறைஞ்சுதி நின்னவையாவையும் போதும்போதம் பிறக்குமென்றோதி

(இ-ள்.) வாராய் துற்கையே, பின்னையமர்ந்த நாககிரிஸ்தலத்தில் என்னைப்பூசித்த விஷ்ணு பிரம்மா விவ்விருவருடைய வினைகளெல்லாந் தீர்ந்து மகாவலுமைபெறுமுர்கள். தெட்சணகயிலாசம், அது மகாமேருபோற் சிகரம், அது நமது லிங்கத்தழகுபெற்று யிருக்கின்றது, தேவர்கள் முனிவர்க ளனைவரும் சூழ்ந்து சேவிக்கும் திருச்செங்கோடென்றொரு ஸ்தல மேருக்குத்திசையில் சிறந்திருக்கின்றது,

அர்த்தஸ்தலத்தில் சென்று சேர்ந்து நம்மைப்பூசித்தா லுன்னைப்பற்றிய பிரமஹத்தி முதலான பாவ கர்மங்களெல்லாந் தீரும், அங்ஙனம் போவாயென்று விடைகொடுத்தருளினார்—எ-று. (எ)

நம்பராடக மன்றுட்சிதம்பர நாதரோதவன் னுகசயிலமே
லும்பர்போற்றவுமாபதியைத்தொழு துவகையாற்புகுந்தாள்கலைபூர்தியாள்
தம்பமாயசெங் கோட்டினிற்சார்ந்தபின் சமரவேல்மகி டாசுரன்சாபம்போ
யம்புவித்தலத் தனைவன்றானுமவ் வசலசேர்வையி னால்முத்தியாயினான்

(இ-ள்.) கனகசபை நடராசரான சிதம்பரேஸ்வரர் விடைகொடுத்தருள துர்க்காதேவி அங்கிருந்து புறப்பட்டு நாககிரியை நோக்கித் தேவர்கள்போற்றச் சிவனைப் பூசைசெய்வதற்குச் சீக்கிரமாய் வந்து சேர்ந்தாள் கலைவாகன முடையவள், சலனமில்லாத திருச்செங்கோட்டுக்குவந்து சேர்ந்த பின்பு கிரிதெரிசன மகிமையினாலே வெற்றிவேலையுடைய மகிடாசுரன் சாபமும் விமோசனமாய் திருநாககிரி தரிசனத்தினாலே முத்திபெற்றான்—எ-று. (அ)

அம்மைகாளி யழகின்றலைவியென் றுங்கடைந்த ரனர்ச்சனைசெய்துதன்
விம்மிதத்தோர்வியன்சுனைத்தீர்த்த முழும்வெற்பிலாக்கியமென்சுனைமூழ்கியச்
செம்மலர்த்தடஞ்சோலைப்பணிமலைச்சேர்வைசெய்தெழுகன்னியர்சூழதரத்
தம்மனத்திற்றுயரொழித்தவ்வரைச்சாரல்வைகியச்சம்புவைப்போற்றினாள்

(இ-ள்.) அம்மையென்றும் காளியென்றும் அழகிய நாயகியென்றும் பெயர்கள் பெற்றுத் திருநாககிரியில் வந்துசேர்ந்து சிவனைப்பூசித்து வணங்கினபின்பு, மேன்மையுடைய தன்பெயரா லொரு தீர்த்தமுண்டாக்கி அந்தத் தீர்த்தத்தில் தினந்தின முழுகி நேமத்துடனே அழகிய புட்பவனஞ்சூழ்ந்த இந்த நாககிரியைப் பிரதட்சணஞ் செய்து நமஸ்கரித்துப் போற்றிசெய்து சத்தகன்னியர்கள் சூழ்ந்துவர தன்னுடைய மனத்துயரமெல்லா மொழித்துப் புனிதியாக வம்மலைச்சாரலி லமர்ந்து அர்த்தநாரீஸ்வரனைப் போற்றிசெய்திருக்கிறாள் துற்கையம்மன்—எ-று. (௯)

துற்கைதீர்த்த மெனும்புனல் வண்மையைத் தொகையிலோதுவந் துற்கையின்பூசனை, சொற்கனிந்து சுராதியர்மோனியர் தூயபாத நினைந்துசெவ்வேளடி, யற்பகற்றொழு தம்மைபங்காளனை யர்ச்சனைத்தொழில் முற்றினர் தம்பல, னெற்கும்வேத வியாசருக்கும்பகர்ந் தின்னதெனைப் படாதென் றியம்பினார்.

(இ-ள்.) அந்த துர்க்கைதீர்த்தத்தின் மகிமைப்பலன்களை மேலே தீர்த்தகாண்டத்தில் சொல்லுகிறோம், துற்கை பூசித்த முறைமையைப் புகழ்ந்து கனிவுடனே தேவர்கள் முனிவர்கள் திவ்வியபாதங்களை நினைத்துக் குமாரர்பாதங்களையு மிராப்பக லிருபொழுதுந்தொழுது, அர்த்தநாரீஸ்வரனை அருச்சித்தவர்கள் பெறும்பலனை என்னாலும் வேதவியாசராலு மின்னபடியென்று சொல்லக்கூடாதென்று சொன்னார் சூதமுனிவர்—எ-று. (௧௦)

ஆளியூர்தி யரவாபரணிமா தமலைக்குளி யரும்பட்டுடையினாள்
காளிகூளிப் படையினளெண்புயக் கன்னியங்கைக் கபாலதராடலி

தாளிநேய முறப்பணிந்தங்கவ டருகணைப்புனல் சாரநதவனுமமென
ஞளுமோதித துவாபரவாச்சனை நணபுகூரநதவர் நற்கதிசேர்வரால்.

(இ-ள) அளிவாகனி, அரவபூஷணி, நிரமமலி, அமலி, திரிசூலி, செம்பட்டுடை யாள, காளி, பேயபபடையுடையவள, எட்டுபபுயஙகளையுடைய கன்னிகை, அகங கையிற் கபாலநதரிதத ஆடலவிஞேதி, துறகாதேவி பாதஙகளை யன்புடனே தொ ழுது துதிதது துறகைதிரததததில முழுகித துறகை பெயாகளை யென்னுளும வழுத தித துவாபரயுகததில துறகைபூசனை முறையை அன்புடனே புகழநத புணணிய வானகள சிவகதிசோவாாகள—எ-று (கக)

துற்கைபூசைசசருக்க முற்றிற்று

ஆ திரு விருததம—நகரு

# ஆதிசேடன்பூசைச் சருக்கம்.

மூவாபூசைபு மூவுகததடைவினில் மொழிகுற்ருே
மாவராவினுக கரசனுஞ் சேடனல்லறத்தாற்
கோவளித்தருள் கோதைசெங்கோட்டினிற் கோமூன்ருன்
பாவலாபபுகழ பஙகயபதத்தொழில் பகாகினமேரும்

(இ-ள) மூன்றுயுகததிலும மூன்றுபோபூசிதத முறைமையைச சொன்ஞேமே இனி கலியுகததாதியில நாகராஜனை ஆதிசேடன நலல வாஙகளைககுறிதது சுவ ககபதவியைததருகினற கோதைநகரிலிருககும திருசசெஙகோட்டில திரிநேத்திர தாரியாகிய பரமசிவனது பஙகய பாதஙகளைப பூசிததமுறையைச சொலலுகிறேரும் கேளுஙகள முனிவாகளேயெனறு சொலலலுறருா சூதமுனிவா—எ-று. (க)

திரிபுரஙகளைச செயிததவாநாளினிற் புயபலசேடன
பரிபுரநதரு பதத்தியோாபஙகளைப பணிநதேற்றிக
கரிபுரமபட வுரிததகஙகாளவிக கயிலாயக
கிரிபுரஙகளி லெயதுமோவெனகடுது கிளாததெனருன.

(இ ள) பரமேஸவரன் திரிபுரதகனம பணணின நாளிலே புயபலமுடைய சேடன சிலமபணிநத பாதஙகளையுடைய பாரவதிசமேதரான பரமசிவனை வணங கித துதிதது, யானையை யுரிததுபபோாதத கஙகாளமூாததியே இநதக கயிலாசப் பதியைபபோலும பூமணடலததில மகாமகிமையுடைய சிவஸதலமுணடோ எனக குத தெரியப்படச சொலலவேணடுமெனறு கேட்டான நாகராஜன்—எ-று. (உ)

எனறுபோதினி லீசனஙகியம்புவ திமையோருந்
துன்றுமாலயன் முதலியவனைவருந தொல்லோரு
மொன்றுபோலகின் றுதவுதெனபூமியி லுயர்மேற்பால்
மன்றலந்திரு வதுலைகணட ஞ்சலி வகைசெய்தார்

(இ-ள்) இப்படி நாகராஜன் கேட்டபோது பரமேசுவரன் சொல்வது வா ராய நாகராஜனே, தெட்சணபூமியில தேவாகள, முனிவாகள, பிரமன், விஷ்ணு, தேவேந்திரன் முதலான மேலோாக ளனைவரும ஒனறுபடககூடி திருநாககிரியில் உமையும நாமும ஏகரூபமாயநின்ற திருமணககோலமான அாததநாரீஸவர முகூ ாததததைக கண்குளிரககணடு தெரிசித்து அஞசலியஸதராயப் பிரியாமல இருந்தி ருக்கின்றனென்று பின்னையுஞ் சொல்லுவார் —எ-று (௩)

அந்தமாகிரி மேருவின்முடியடி போந்திங்கு
வந்தநாளினி லஃதாகினவடிவினில் வளர்ந்தோங்கும
பந்தபாதகம பறித்திடுமுமைதவம் பலிப்பாரு
மிந்தமாமலை கயிலையினுமநமக் கினிதாமால்

(இ-ள்) அந்தத்திருநாககிரி மகாமேருகிரியின் கொடுமுடி யதனைப்பெயாத்து வாயுவு கொண்டுவந்து தென்பூமியில வைத்தது, அன்று முதல் இவ்வடிவாகவே வளாந்தோங்கி விளங்கியிருக்கின்றது பந்தமாகிய பாவம யாவையும் நிவாத்திசெய்யு முமையவள தவமபலிதமான மலையது, கயிலாசகிரியைப்பாாக்கிலும நமக்கு மிகவும் பிரியமான தலம அதுவென்று பின்னையுஞ் சொல்லுவார் —எ-று. (௪)

மாலுமவனிடை வணங்கிநம்மொடும்பணி வரைமீது
சாலநின்றன னஃதுவைகுந்தமு மெனலாமால்
கோலநான்முகன் றெழுந்தகோகன கமாஞ் செங்கோடு
சூலிபோற்றியத தொல்புரங்காவலின சுகமுற்றுள்

(இ-ள்.) அந்த திருநாககிரிதலத்தில முனபு விஷ்ணுவந்து நம்மைப்பூசித்து வணங்கி நம்மைவிட்டுப் பிரியாமலிருக்கின்றா, அதனாலே அதனை வைகுந்தமென்ன லாகும், அழகிய சதுாமுகப்பிரமமாவந்து பூசித்து வணங்கி நம்முடனேகூட விருக்கின்றார், அதினாலது கோகனகபாவத மென்னலாகும், துர்க்கைவந்து பூசித்து வணங்கி யங்ஙனம்பிரியாமல அந்தத்தலத்திற்கு காவலாக சுகமுற்றிருக்கின்றாளென்று சொன்னா பரமேஸவரன்—எ-று (௫)

என்னவைம்முக னிரண்டைஞ்ஞூறுமுக னினிதேத்தி
என்னையிங்கிவ ணெய்தியவென்னுடற் கிடராக
வென்னை யுங்கனை யிருணிறைவென வுமவந் தெழுங்கோல
மென்னவுளனடி கண்டுபாதகமற வென்றானால

(இ-ள்) ஐந்துமுகச்சிவன சொல்லக்கேட்டு ஆயிரமுகச்சேடன் அன்புடனே வணங்கித் துதித்து சொல்லுகிறான், சுவாமீ அடியேனை இங்ஙனம் இப்போது உடலிற்கு விகாதமாக விருட்கூட்டமபோலவந்து தொடாந்தெழுகின்ற பிரமஹத்திதோஷமெல்லாம் அந்தத்தலத்தில உமது பாதங்களைப் பூசித்தவுடனே நிவாரணமாகும்படி கிருபைசெய்யவேண்டுமென்று மிகவும வேண்டிக்கொண்டான் ஆதிசேடன்-எ-று.

இப்படித்தொழு திறைஞ்சியசேடனுக்கிறையோனு
மப்படிசசெய்து மாடகவரையுமவ் வரைதானு
மொய்ப்பிலனறகு துன்வலியால்வலி யுளதாமால்
பைப்பணைடவிச சேடன்போயப்பணியெனப் பணிகூர்ந்தான்.

(இ-ள்.) இந்தப்பிரகாரந் தொழுது வணங்கி வேண்டிக்கொண்ட ஆதிசேட னுக்குப் பரமேசுவரன வாராய நாகராஜனே, அப்படியே யுனக்கு அனுக்கிரகஞ்செ ய்கிறோம், பொன்மலைச் சிகரமான திருச்செங்கோடு உன் வடிவாக வலிமையினலே விளங்கியிருக்கின்றது, ஆகையா லிப்பொழுதே நீ யந்த ஸ்தலத்திற்குப்போய்ச் சோ ந்து நம்மை யநந்தனங்கண்டு பணிந்து அர்ச்சித்துப் பூசைசெய்யென்று விடைகொ டுத்தருளினர், அப்படியே ஆதிசேடனும் புறப்பட்டுவந்தான்—எ-று. (எ)

வந்துதன்வடி வானசெங்கோட்டினை வலஞ்செய்து
முந்துகந்தர்முன் னோரையன்னவரையும் முறையேநதி
எந்தைநீயெனக் கீசனீதந்தைதா யெனபபோற்றிப
பந்தமற்றனன பரமனைப்பரவியர்ச் சனைசெயவான்.

(இ-ள்.) அப்படி நாகராஜன் வந்து தன்வடிவான திருச்செங்கோட்டு நாககிரி யை வலம்வந்து முந்திய கந்தசுவாமி முதலாகிய தேவர்களை முறையாகக் கண்டு வணங்கி என்னுடைய எந்தையுநீ, ஈசனும்நீ, என் தகப்பனும்நீ, தாயும்நீ, சகல மும் நீயேயென்று சிவனைதோத்திரஞ்செய்து தன்னைப்பற்றிய பாவ கன்மங்களெ ல்லாந் தொலைந்து புனிதனானன், நித்தமும் சர்வ உபசாரங்களுடனே பூசித்தர்ச்ச னை செய்யாநின்றான் ஆதிசேடன்.—எ-று. (அ)

நாகமாமலை நாகமாமலையென நாகபூஷணன்காண்க
நாகமாமணி யால்விளக்கேற்றியன் னகரத்தினமுதேத்தி
யோகபோதமு ஞானபோதமுமுற வுமாபதிபதம்போற்றி
நாகநாடன்மந் தாரபுட்பாஞ்சலி நளினபொற்பதஞ்சேர்த்தான்.

(இ-ள்.) நாகாசலம் நாகாசலமென்று ஓயாமல் தியானஞ்செய்து நாகாபரண ரான உமையொருபாகர் காணும்படி நாகமாணிக்கங்களால் விளக்கேற்றிவைத்து நாகலோகத்தில் விளங்கிய அமுதத்தை நிவேத்தியஞ்செய்து, யோகபோதமும் ஞா னபோதமும் பொருந்தும்படி அர்த்தநாரீஸ்வரர் பாதங்களை நமஸ்கரித்துத் துதித்து நாகலோகராஜன் மந்தார புஷ்பாஞ்சலியைச் சுவாமி பாதங்களில் சேர்த்து போ ற்றிசெய்தான்—எ-று. (௯)

தேவதேவநின் றிருமணங்கண்டனன் றிருவடிதொழுதேனின்
றுவலின்கட லாழ்ந்தனனினியுன தாடல்காண்பனவேண்டுங்
காவியந்தடங் கண்ணிபங்காளவோர் கருணையினல்கென்று
ஓவிலங்கத ராஜனின்றுரைசெய வுமாபதியுரைகூறும்.

(இ-ள்.) தேவதேவனே உன்னுடைய திருமணக்கோலத் தழகுகண்டு தெரிசி த்தேன், தேவரீருடைய பாதங்களில் நமஸ்கரித்தேன், உன் ஆசைக்கடலில் மூழ்கி னேனது யென்னவென்றால் இனியும்முடைய திருத்தாண்டவ நடனங்காணவே ண்டும், நீலோற்பலம்போன்ற பெரிய கண்களையுடைய வுமையொருபாகரே கரு ணைசெய்யவேணடுமென்று நாகராஜன் கேட்டுக்கொள்ள சுவாமீ சொல்லுவார்.

உலகெலாம்புகழ் விளங்கவித்தலத்தினி லூர்த்ததாண்டவங்காட்டி
யிலகுதில்லைபிற் கனகமாசபையினி லியலராப்புலிகாணக்

குலவுதாண்டவங் கொள்வமப்போதுநீ குறுகுநிடங்கண்டிங்
கலகினின்பெயர் கிரியிலெக்காலமு மருச்சனைபுரிவாயால்.

(இ-ள்.) உலகமெல்லாம் புகழும்படியாக விளங்கு மிந்தத்தலத்தி லுனக்கு யூர்த்த தாண்டவங்காட்டித் தில்லையிற பிரகாசிக்கின்ற கனகசபையிற் பதஞ்சலி வியாக்கிரபாதர் காணும்படிக்கு நடனஞ் செய்கிறோம், அப்போதங்கே நீயும்வந்து நம்முடைய திருநடனக்காட்சிகண்டு சேவித்துப் பின்பு அளவில்லாத மகிமையையுடைய உன்பெயராய் விளங்கு மிந்தத் திருநாககிரியில்வந்து எந்தக்காலமும் நம்மைப் பூசித்திருப்பாயாகவென்று திருவுளம் பற்றியருளினார் சுவாமி—எ-று. (கக)

எனப்பரிந்தரு ளர்த்தநாரீசனை யேத்தியச்சேடேசன்
கனச்சிதம்பர நாயகன்றாண்டவங் கண்டனகனுமாகி
நினைப்பினல்வரம் பெற்றரியயனென நீள்வலியுடைத்தாகித்
தினப்பலன்றரு நாகவெற்பெய்தியச் சிவன்பதந்தெரிசித்தான்.

(இ-ள.) என்றிப்படி கிருபைசெய்தருளிய அர்த்தநாரீஸ்வரரை வணங்கித் துதித்து விடைகொண்டு நாகராஜன் சென்று தில்லையில மகாகனகசபையிற் சிதம்பரேஸ்வரர் நடிக்கின்ற திருத்தாண்டவக் காட்சியுங் கண்டு சேவித்து மனதின்படிக்கு நல்லவரங்களும் பெறறு, பிரம விஷ்ணுவைப்போலே அதிக வலுமையையுடைத்தாகி நித்தியபலன் றரப்பட்ட திருநாககிரியில வந்துசேர்ந்து சிவன் பாதங்களைத் தெரிசித் தர்ச்சித்து நின்றான் நாகராசன் —எ-று. (கஉ)

மேருவைச்சுமந் தலகிலாவலியு மேதகவுளகலையாவுங்
காரணப்பரம் பொருளறிநிலைமையுங் கன்னிபங்காளனிற்பெற்றான்
றாருகர்ப்பகை தடிந்தவேற்சண்முகன் றாமரைப்பதம்போற்றிச்
சீருகத்தநா லாமுகத்தோர்சுனை தீர்த்தமதனிலுய்த்தான்.

(இ-ள்.) மகாமேருகிரியைச் சுமந்து இளைப்பில்லாம லிருக்கும்படி யளவில்லாத புஜபல பராக்கிரமமு மேன்மையுமுடைய சகல கலைகளிடானமும் காரணார்த்தமான பரப்பிரமப்பொருளை யறியும் நிலைமையு மிவையெல்லாம் அர்த்தநாரீஸ்வரசுவாமி அநுக்கிரகத்தினால் பெறறான், பகைசெய்த தாருகாசுரனைச் செயித்த வேலாயுதபாணியான சண்முகப்பெருமாள் பாதாரவிந்தங்களையும் பணிந்துபோற்றிச் சிறப்புடைய நாலாவது கலியுகத்தில் தன்பெயரா லொரு தீர்த்தச் சுனையு மமைத்து வைத்தான் நாகராசன்—எ-று (கங)

தனதுபேர்பெறு நாகதீர்த்தந்தனிற் றண்புனலின்மூழ்கி
மனதுகூர்பர மானஞானந்திகழ் வரம்பலதிறம்பாதாற்
கனதுணர்ப்பசுங் கொன்றையனபதத்தினைக் கண்டுவல்வினைமாற்றி
நினவுபெற்றொரு சேடதீர்த்தப்பெயர் நிறுவினன்பணிவேந்தன.

(இ-ள்) தன் பெயரால் விளங்கிய குளிர்ந்த நாகதீர்த்தத்தில் நித்தியம் ஸ்நானஞ்செய்து மனங்களிகூரப் பரமஞான சிந்தையுடனே சகல வரங்களும் பெற்று மிகுந்த பரிமளத்தையுடைய புஷ்பங்கள் செறிந்த கொன்றைமாலையைச் சூடிய சிவன் பாதத்தைக்கண்டு பூசித்தர்ச்சனைசெய்து வலிய வினைகளெல்லாம் விமோசனமாகிச்

சற்குண நினைவுண்டாகி சேஷதீர்த்தமென்றும் பெயர்விளங்க நிலைசெயதுவைத்தான் நாகராஜன்—எ-று. (கஎ)

அன்னமாமலை நாகமாமலையெனு மதன்வயின்வழியாகப்
பன்னகப்பதி தினந்தினந்தில்லையிற் பரனையர்ச்சனைகூர்ந்து
பின்னுநாகமா மலையினிற்சுயம்புவைப் பெட்பினுட்பெறப்போற்றித்
தன்னலந்தரு தீர்த்தவண்கரையினிற் றவம்புரிந்திருந்தானால்.

(இ-ள்.) அந்தத் திருநாககிரிக்குச் சேஷகிரியென்றும் பெயராகிவிளங்க வதன் பிலந்துவாரத்தின் வழியாகப் புறப்பட்டுத் தினந்தினந் தில்லையுட்சென்று சிவன் திருநடனக் காட்சியுங்கண்டு அர்ச்சித்துக் களிகூர்ந்து, பின்னையு மிந்த நாககிரி ஸ்தலத்துக்குவந்து சிவசம்புவை அன்புடனேகண்டு தியானஞ்செய்து வணங்கிப் போற்றிசெய்து தன்பெயரால்விளங்கிய நாகதீர்த்தநச் சுனைக்கரையருகிற் றவஞ்செய் திருக்கின்றான் நாகராசன்—எ-று (கரு)

ஆதிசேடன் பூசைச்சருக்க முற்றிற்று
ஆ திருவிருத்தம—(?).

# பதினெண்புராணச் சருக்கம்.

எந்தைவியா தனன்சொல்பதி னெட்டுவகைப புராணத்திந்
அந்தமலை மத்துமலை யாதிமலை யதுவாக
முந்துமலை செங்கோட்டு முதுமலைநம் பவமலையந்
கந்தபுரா ணத்துரைக்குங் காதையிது வெனமொழிவாம்.

(இ-ள்.) என்குருசுவாமியான வேதவியாசர்சொன்ன பதினெணவகைப் புராணத்திலும் அந்தம் நடு வாதியுமாகவிளங்கி முந்திய மலைத்தலமான மகா திருச்செங்கோடு நமது பாவங்களெல்லாம் வியோசனஞ் செயயுமென்று கந்தபுராணத்திற் சொல்லுங் கதை இதுவென்று சொல்லுகிறேமென்று சூதமுனிவர்—எ-று. (க)

மந்திரவே தாகமத்தை மறையவரை முனிகுருவைத்
தந்தைதாயன் னையைப்பெரியோர் தமைச்சிறிது மதியாது
நிந்தையுரைப் பன்கருப்ப நேரிழையை வதைப்பனவோ
டெந்துகுரு மனைதீண்டு முயர்பெரும்பா தகமாவும்.

(இ-ள்.) மகாமந்திரங்களை, வேதாகமங்களை, வேதியர்களை, முனிவர்களைக் குருக்கண்மார்களைத் தாய்தந்தையரையும், பெரியோர்களையுஞ் சற்றுமெண்ணாமல் நிந்தனைசெய்வதுங் கெர்ப்பஸ்திரீகளைக் கொல்வதும், குருபத்தினிகளைப் பரிசிப்பது மிப்பேர்ப்பட்ட மகாபாதகங்கள் என்று பின்னுஞ்சொல்லுவார் சூதமுனிவர்-எ-று.

வயங்குதிருச் செங்கோட்டு மலைமுடியின் மீதோன்ற
வியங்கினர் தெரிசிப்பா ரிரவிமுன்னர்ப் பனிபோன்றும்
புயங்கவக வுரிப்போன்றும் புயற்கெதிர்பூ ளையைப்போன்றுந்
தயங்கெரிப்பஞ் செனவுமிறுந் தவறெண்ணத் தவஞ்சேர்க்கும்

(இ-ள்.) விளங்கிய திருச்செங்கோட்டு மலையுச்சியில் வந்து சேர்ந்து வாசஞ் செய்து தெரிசிப்பார்களானால் சூரியனுக்கு முன் பனி நீங்குவதுபோலும், பாம்பினுடம்பிற் சட்டை யுரிவதுபோலும், பெருமழையில பூளைப் பூக்கள் சிதறுவதுபோலும், சுடர்விட்டெரிகிற அக்கினியிலிட்ட பஞ்சுபோலும், முன் சொன்ன பாதகங்களெல்லாந் தீரும், வழுவில்லாத நல்ல தபோமகிமைப்பலனு முண்டாகும் இது சத்தியமென்றார் சூதமுனிவர்.—எ-று. (௩)

அரியபிரமாண்டபுரா ணத்திலத் திரிபுரைத்தல்
தருபலனீ தென்மொழிவன் றபதனை மறையவரைப்
பெரிதுவதை புரிந்தானும் பிசிதமது நுகர்ந்தானுந்
திருவுறுதே வாபரணந் திருட்டிமருட் டுளத்தானும்.

(இ-ள்.) அரிதாகிய பிரமாண்ட புராணத்தில் அத்திரிமுனி வாக்கியப்படி வரும் பலன்களிவை யிவை என்று சொல்லுகிறேம்; மகா தபோதனர்களை பிராமணர்களை மிகவுங் கொலைசெய்தவனும், பல மாமிசங்கள் தின்றவனும், அழகிய சிவஸ்தலங்களில் புகுந்து சுவாமி திருவாபரணங்களைத் திருடிக்கொண்டு திரிகிற மயக்கமுடைய நெஞ்சக் கள்வனுமென்று பின்னையுஞ் சொல்லுகிறார் சூதமுனிவர்.—எ-று.

கொண்டவிர தங்கடந்து குருவினுரை பொழிந்தானுந்
தெண்டிரைசூழ் நாகமலைச் செங்கோட்டைத் தெரிசித்தா
லுண்டெனச்சொற் பாவமெலா முமாபதிகட் கனற்பட்ட
வண்டர்கண் மெய் யெனவழியு மருட்போல வறமோங்கும்.

(இ-ள்) தடங்கின விரதங்களை மத்தியிலேவிட்டவனும், குருவாக்கியத்தைக் கடந்தவனுங் கடல்சூழ்ந்த உலகத்தில் விளங்கிய திருச்செங்கோட்டு நாகமலையைச் சேவைசெய்தவுடனே அப்படிக்கொத்த பாவங்களெல்லா முமாபதியாகிய பரமசிவன் நெற்றிக்கண் ணெருப்புப்பட்ட பகைவர் தேகமழிவதுபோலே அழிந்துபோகும், அவனது கிருபையைப்போலே தர்மம் மென்மேலும் விர்த்திக்குமென்றார் சூதமுனிவர்.—எ-று. (௪)

பொருவிலரி புராணத்திற் புகல்வரி தெனப்புகல்வா
மிரவிமதி யிணையரவ மிடர்ப்பநித்தி பெரும்பகாலை
முரனுறுமா யவன்றீர்த்த முதற்பலதன் முறையாடி
யிரவலர்த்தா னம்புரிவோர்க் கெழுபிறப்பின் றுயர்போமால்.

(இ-ள்.) நிகரில்லாத விஷ்ணு புராணத்திற் சொல்லுவதிவை என்றரிதாகச் சொல்லுகிறேஞ் சூரியனை சந்திரனைக் கிரகணந் தீண்டிய வேளையில் மாறுபாடில்லாத விஷ்ணு தீர்த்தமுதலாய்ப் பல தீர்த்தங்களிலு முறையாக மூழ்கி அவரவர்க்கியன்றமாத்திரந் தானதருமஞ் செய்தபேர்களுக்கு எழுபிறப்பிலுந் துயரங்கள் நீங்குதுபோமென்று சொல்லி பின்னையுஞ் சொல்லுகிறார் சூதமுனிவர்.—எ-று. (௫)

எழுசெனனத் துளபாவ மெழுந்தோடும் படியரியின்
கெழுதிகிரிப் படையினெதி ரெதிர்ந்தபகை யழிந்தனபோல்
வழுவறுநற் பலனனைத்து மாயனுட லெனவளரும்
பழுதிலவென் றனர்முனிவர் பகர்ந்தனர்பா மவன்வாய்மை

(இ-ள்.) எழுசென்மத்தி லுண்டாகிய பாவங்களெல்லாம் நிவாரணமாகும் அது எப்படியெனில், விஷ்ணுவின் கைச்சக்கரத்திற்குமுன்னே நின்றெதிர்த்த பகைவர் அழிந்துபோவதுபோலும் போகுமழிவில்லாமற்செய்த நன்மையுடைய தருமதான பலன்களெல்லாம் விஷ்ணு சரீரம்போலே வளர்ந்து விர்த்திக்கும் பழுதில்லை மகாவிஷ்ணு வாக்கியப்படி யிது நிச்சயமென்றார் சூதமுனிவர்.—எ-று. (எ)

உயர்கூர்ம புராணத்தி லுரைத்தனவி தெனவுரைப்பாம்
புயனீடுஞ் செங்கோட்டிற் புவையொரு புறத்தனையுங்
கயனீடு விழிக்குறமான் காந்தனையு முன்னவனும்
வியனீடைங் கரத்தனையும் நந்தியையு மியம்பேத்தி.

(இ-ள்.) உசிதமான கூர்மபுராணத்திற் சொன்ன முறைமை யிதுவென்று சொல்லுகிறோம்; மேகமொய்த்த திருச்செங்கோட்டில் உமையொரு பாகனையும், மீன்போன்ற அழகிய கண்களையுடைய வள்ளியம்மன் காந்தனை குமாரதேவனையும், முன்னவனான யானைமுகத்து விநாயகமூர்த்தியையும், நந்திகேசுரனையும் வணங்கி வாழ்த்திப் பின்னையுஞ் சொல்லுகிறார் சூதமுனிவர்.—எ-று. (அ)

அந்தணர்மா யேசுரர்த மகங்குளிர வருள்செய்தா
ரிந்திரரு மிமையவரு மினிதேத்த விருந்தபின்னர்
முந்திடுபா தகவினையின் முரணகன்று பரன்பதத்தி
லந்தமுறப் புகுவரென வருமிருடி யறைந்தனனால்.

(இ-ள்.) பிராமணர்கள் மயேசுரர்கள் மனங்குளிர்ந்து சந்தோஷிக்கும்படி பரிவுடனே தானதர்மஞ் செய்தபேர்கள் முன்செய்த கர்மம் வினை மாறுபாடெல்லாந் தீர்ந்து சொர்க்கலோகத்திற் சென்று இந்திராதிதேவர்கள் வணங்கி வாழ்த்த வாசஞ்செய்திருந்து பின்பு பரமசிவன் பாதத்தி லழகுபெறச் சேர்ந்தார்களென்று அரியவிருடி சொன்னானென்றும் சூதமுனிவர் சொன்னார்.—எ-று. (கூ)

வராகபுரா ணத்துரைக்கும் வாக்கியமென வுரைநயப்ப
தராதலத்தில் விளம்புவன்பொய்த் தவறுதரும் பாதகந்தட்
பராவினர்பா தகத்தாரும் பகருமறம் புரியாரும்
பிராமணர்மா யேசுரர்தம் பெரிதுணராப் பேதகத்தார்.

(இ-ள்.) வராகபுராணத்திற் சொல்லியிருக்கும் வாக்கிய வளமிதுவென்று சொல்லுகிறோம், பொய்யாய குற்றமிகுந்த பாதகரெல்லா முபகாரம் பரிந்து செய்தவர்கள் நல்ல மயேசுரர் பெருமை தெரியாத பேதகத்தார்களென்று பின்னையுஞ் சொல்லுகிறார் சூதமுனிவர்—எ-று. (க0)

தருமநெறி சிறிதறியாத் தன்மையினர் வண்மையிலா
நிரையமரர் செங்கோட்டிற் பெருங்கோட்டில் நிறைந்துநின்று
தெரிசனையிற் றியானிப்பத் தீராத பவம்போமென்
றரிதின்மறை யுரைப்பதென வஞ்ஞானவற் கருமுரைத்தார்.

(இ-ள்.) தருமநெறிமுறைமை யிவையென்று சற்றுகிலுந் தெரியாத மூடர்கள் மகா வுலுத்தர்கள் தேவர்கள் நிறைந்தழகிய சிகரத்தையுடைய திருச்செங்கோட்டில்வந்து சஞ்சரித்துநின்று சேவைசெய்து தியானஞ்செய்தால் தீராதபாவந் தீருமென்று அரிதாகிய வேதங்கள் சொல்லுகிறதென்று அஞ்ஞானவற்கர் சொன்னதொன்று சொல்லிப் பின்னையுஞ் சொல்லுகிறார் சூதமுனிவர்.—எ-று. (கக)

பெருமா கமீதிப் பெருங்கோட்டுத் தருநிறைந்து
போர்குருசெங் கோட்டுரிய புராணபலன் பெரிதென்றார்.

(இ-ள்.) காருடமகா புராணத்திற் சொன்னபடி சொல்லுகிறோம்; விலாசமான பூமண்டலத்தில் விளங்கி யிருக்கிற பதினெண் புராணத்திலும் விதவிதமாகச் சொல்லி யிருக்கிறதென்றும், பேர்பெற்ற ஆகமகதில வழுவாமற் றேவர்கள் போற்றிசெய்யாநின்ற பெரிய சொழுந்கொம்புகள் செறிந்தழகிய கற்பகத்தருக்கள் நிறைந்த முரணற்ற திருச்செங்கோடு ஸ்தலத்திற்கு உரித்தாகிய புராணபலன் பெரிதென்று சொல்லியிருக்கிறதென்று சொன்னார் சூதமுனிவர்.—எ-று. (கசு)

இப்பெரிய புராணத்தை யாவரேனுந் திடக்கேட்போர்க்
கொப்பிடுதென் றுமைபுரிபா லுமாபதிபு மரிதென்று
மப்பரிசு மப்பலனு மப்பயனு மென்னனையார்
செப்புவது தெனவிசைந்தாரா றென்றிசையிற் றருமனென்பான்.

(இ-ள்.) அந்தத் திருச்செங்கோட்டு ஸ்தலபுராணத்தை யாவரொருவர் சொல்லக் கேட்டபோகளுக்கு ஒப்புவமை யின்னதென்று சொல்லுதற்கு உமையொருபாகருக்கு மரிதென்றார், அப்படியாகிய பரிசும் உண்டாகிய பயனும் விர்த்திக்கும் பலனு மென்போலொத்தவர் சொல்லப்பட்டாதென்று சொன்னான் றென்றிசைக் கதிபனான எமதர்ம்மராஜனென்று சொன்னார் சூதமுனிவர்.—எ-று. (கஎ)

மார்க்கண்ட புராணத்தில் வழங்குவன வழங்குவன்பார்
ரோர்க்கண்டு பாதகங்க ளொருதலத்திற் செய்ததெல்லா
மாற்றுமந்த தேவதலத் தகலுமந்தத் தலப்பாவம்
பேற்றவன செங்கோட்டுப் பிறங்கலரன் றிருவடிமால்.

(இ-ள்.) மார்க்கண்ட புராணத்திற் சொன்னபடி சொல்லுகிறோ மிந்த பூலோகத்தாருக்கு உண்டாகிய பாதகங்களு மற்றொரு ஸ்தலத்தில் செய்ததெல்லாமகிமை நிறைந்த தெய்வஸ்தலங்களிலே நிருமஸ்தலத்திலுடைய பாவங்களைத்தீர்ப்பது திருச்செங்கோட்டுமலையில் எழுந்தருளிய அர்த்தநாரீஸ்வரன் திருவடித்தாமரைகள்.-எ-று.

சிவந்தபணி மலைதீர்ந்தந் திவலையதன் வருகாற்று
நவம்பெருமா னிடரிடத்தில் நண்ணியவ ரவர்செய்த
பவம்பயின்ற பாதகம்போய்ப் பரமபதஞ் சேர்க்குமென
விவன்பிறேறுடுஞ் சங்கரசித் திருப்பியினி தியம்பினரால்.

(இ-ள்.) திருச்செங்கோட்டிற் பாசகிரியி லிருக்கின்ற தீர்த்தங்களில் ஒரு திவலையாவது தொத்தாலுய கிரியிலுடைய காற்றாவது மானிடர்கள் பேரில் அணுவத்தனை பரிசித்தாலு மவரவர் மற்றுமவர்களுக்கு காயங்களாற் செய்த பாதகங்களெல்லாந் தீர்ந்துபோகும். அதிதகியததில அவர்களைப் பரமபதத்திற் சேர்க்குமென்று மனோகபக்திபுடனே நிச்சயமாக சங்கரசித்து முனிவர் இனிதாகச் சொன்னாரென்று சொன்னார் சூதமுனிவர்.—எ-று. (கஅ)

பதினெண்புராணச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம்- கூசக.

பருவதகாண்ட முற்றிற்று

(இ-ள்.) அதிதியென்பவள் பெற்ற புத்திரராகிய அசுரர், சிறந்த சற்குணமுடைய தேவர்களை நெருக்கஞ்செய்து வெற்றிகொண்டு உலகங்களை யாளவேணுமென்று நினைத்துப் பிரமதேவனைக்குறித்து அரிய தவஞ்செய்வதாகக் கயிலாசகிரிச்சாரலிலே பஞ்சாக்கினிமத்தியில்நின்று ஆகுதிகளைச்செய்து கடல்களுஞ் சுவறும்படியாக அக்கினிச்சுவாலைகளை யெழுப்பி யாரும் அதிசயிக்கும்படியாக அரியதவஞ்செய்தான் தாருகாசூரன்—எ-று. (௫)

தீயினின்றவ னேகர்தம்முளுஞ் சிலனொளிர்புனல் நீரினில்
ஏயநின்றவர் தம்முளுந்தலை யென்னவுங்கனல் வானிடை
போயிருந்தன சேயவன்றவ போதகந்தலை கீழ்படை
வாய்வயங்கியி னீரினின்றன னுவிகொண்டொரு தாருகன்

(இ-ள்.) தீயிலேநின்று கின்னிய தவஞ்செய்வோர்க ளநேகம்பேர்களிலும், நீரில் தவஞ்செய்வோர்க ளநேகம்பேர்களிலுஞ் சிறந்தத் தாருகாசுரன்செய்யுங் கொடியதவத்திற்கு நிகர் சொல்லப்படாதென்று யாவரும் பயப்பட பஞ்சாக்கினிமத்தியிலே யானைமுகமேல்நின்று அக்கினிச்சுவாலைகள் ஆகாசத்தை யளாவும்படிக்குத் தலைகீழுங் கால் மேலுமாகநின்று யாவராலுஞ் செய்யப்படாத அரியதவத்தைத் தீருந்த ஆசையினாலே செய்தான் யானைமுகத்தையுடைய தாருகாசூரன்—எ-று. (௬)

வேறு.

மகவானறிந்துதவ வரதாருகன்பெரிது மதிகூர்கொடுந்தவசு புரிநலர
லிகவானகந்தனது குடைவாயடங்குமென வெருவிநின்று நனிதனிபமேவ
சுகவாசகம்பகரு மடமாதர்சென்றுதவ தொழில்மாறநின்றுபல சரதமாய்
நகைமோகனங்கள்செயு மெனவேகரந்துவிட நனியருந்தர்வந்துபல புரிகுவார்.

(இ-ள்.) அப்படி தாருகாசூரனென்பவன் கொடிய தவஞ்செய்கின்றதை தேவேந்திரன்கண்டு இனி நம்முடைய உலகங்களையெல்லாம் இவனுடைய குடைக்குள்ளே அடக்கியாளும்படி அகோரமான தவஞ்செய்கின்றான். அவனது தவத்தை யழிக்கவேணுமென்றெண்ணி இனிபோதுமொழிகளையுடைய அழகிய தெய்வப்பெண்களை யழைத்து நீங்கள்போய் தாருகன்செய்யுந் தவத்தைப் பலவித சரசங்களினாலு மோகன மாய்கைகளினாலு மயக்கி வாருங்களென்று அனுப்ப, அந்தத் தெய்வப்பெண்களநேகம்பெயர்வந்து அநேகவிதமான சேஷ்டைகளைச் செய்யத்தொடங்கினார்கள்—எ-று. (௭)

வேறு.

கலைநெகிழ்ப்பவர் கலையவிழ்ப்பவர் கலையுடுப்பவர் சிலர்சிலர்
முலைதிறப்பவர் முலையசைப்பவர் முலைமறைப்பவர் சிலர்சிலர்
தலைகலைப்பவர் தலைவகிர்ப்பவர் தலைமுடிப்பவர் சிலர்சிலர்
சிலர்நகைப்பவர் சிலர்நடிப்பவர் சிலரிசைத்தொழில் புரிவரே.

(இ-ள்.) உடுத்திய துயில்களை நெகிழ்ப்பார்கள் சிலபெண்கள், அளகபாரத்தைக் குலைத்தவிழ்த்து முடிப்பார்கள் சிலபெண்கள், முலைகள்தெரிய உத்தரீயங்களைத் திறப்பார்கள் சிலபெண்கள், முலைகள்குலுங்க நடப்பார்கள் சிலபெண்கள், முலைகளைக்காட்டி மறைப்பார்கள் சிலபெண்கள், தலைமயிர்களைக் கலைப்பார்கள் சிலபெண்கள், கூந்தலைச் சீவுவார்கள் சிலபெண்கள், மலர்களை முடிப்பார்கள் சிலபெண்கள், மிகவும் சிரித்து நகைத்துக் கொஞ்சிவிளையாடி சங்கீதங்களைப் பாடி நடனநாட்டியங்களைச் செய்வார்கள் சிலபெண்கள்—எ-று.

அளவில்குங்கும மிர்கமதங்களோ டணிவர்கொங்கையிற் சிலர்சிலர்
களவுகொண்டிடு விழிமதன்கலை கருதிநின்றவர் சிலர்சிலர்
புளகிதம்பெறு புழுகுசந்தனம் புரிவரங்கவர் சிலர்சிலர் .
அளவிலிங்கித சயனவின்பமோ டமளிகொண்டவர் சிலர்சிலர்.

(இ-ள்.) கணக்கில்லாத களபகுங்கும கஸ்தூரி சவ்வாதுகளைப் பனிநீராலே குழைத்து முலை மார்புகளிலெடுத்து அப்புவார்கள் சிலபெண்கள். கண்களாலே மொட்டிவிழித்து மதனுகமங்களைப்படித்துப் பிரசங்கஞ்செய்வார்கள் சிலபெண்கள், மயிர்க்குச்சிடுமெபடிக்குப் பல கதம்பங்கூடிய சந்தனக்குழம்புகளை வாரி யிறைப்பார்கள் சிலபெண்கள். மிகவுஞ் சுகமுண்டாகும்படி பஞ்சசயனமெத்தைகளிலே படுப்பார்கள் சிலபெண்கள்—எ-று. (எ)

வேறு.

தவத்தொழி லதனுலென்ன சற்பல னெங்கள்மோக
வலைத்தையை நீக்கிச்சேர்த லருந்தவ மென்றுகூறி
யுவர்த்தனை விடைநின்றங்க முருகிவீ ரதற்கேயெங்கள்
சிவத்திடு மதரபானஞ் செய்துமெய்ந் தாகந்தீர்வீர்.

(இ-ள்.) அந்தத் தெய்வரம்பைப்பெண்கள் பலபலவிதமாக மாயமோகன சரசசல்லாபங்களைச் செய்து வாரீர் அரியதவஞ்செய்கின்ற அசுரேந்திரனே, இந்த தவத்தினுலே உமக்குச் சுகமாகிய பலன்கள் ளொன்றுமில்லை, அதைவிடுத்து எங்களுடைய மோகத்திரும்படி சேர்வதே நல்ல தவமென்றும். பஞ்சாக்கினி மத்தியிலேநின்று தேகமெல்லா முருகினீரதலால் எங்களுடைய சிவந்த அதரபானங்கள்செய்து உம்முடைய தாகவிடாய் தீர்த்துக்கொள்ளுவீரென்று பின்னையுஞ்சொல்வார்கள். எ-று.

அனல்விட விங்ஙன்வந்தா லகிலுடன் களபச்சாந்தந்
தனமிசை திமிரியும்மைத் தழுவியே தாகந்தீர்ப்போ
மினமுறுந் தவத்தினின்ற யிளைப்புமின் றுமக்குப்போக்கு
மனமுறு மெங்கள்மோக மயலும்போம் வருகவென்றார்.

(இ-ள்.) வாரீர் அசுரேந்திரனே, நீர் தவத்தைவிட் டிங்ஙனம்வந்தால் பரிமள சந்தனக்குழம்புகள் அகிலின்குழம்புகள் எங்கள் ஸ்தனங்களிலே பூசிக்கொண்டு உம்மைக் கட்டித்தழுவி யணைத்துந் தேகவுஷ்ண தாகத்தையுந் தீர்ப்போம் மதனுற் றங்களிப்புந்தீரும், எங்கள் மனத்திலுண்டாகிய மையலுந்தீரும் வாருமையாவென்று சொன்னுர்கள் தெய்வரம்பையர்கள்—எ-று. (அ)

என்றவ ரனந்தபோத வின்பமெய்ச் சரதங்காட்ட
வொன்றுமம் துணையானுற்ற வுயர்தவ முயலாநின்றான்
இன்னுமக் கிதனுலொன்றும் பயனில மிவன்மாட்டென்றே
சென்றனர் மகவானேவுந் தெய்வநற் கணிகைமாதர்.

(இ-ள்.) அநேகவித சரசலீலாவினேதங்களைச் செய்தார்கள். அவையொன்றுந்தெரியாதவனைப் பிடித்தபிடிவிடாமல் மனதுஉறுதிகொண்டு தவஞ்செய்துகொண்டிருந்தான் தாருகாசுரன், அதுகண்டு இவனுலே நமக் கொருபலனுமில்லையென்று தெரிந்துகொண்டு தேவலோகத்துக்குப் போனுர்கள் தேவேந்திரனனுப்பினவந்த தெய்வரம்பாஸ்திரீகள்—எ-று. (கூ0)

இந்திர னதனைக்கேட்டங் கிருந்தவா னவனைநோக்கி
வந்தன ரரம்பையாதர் மாதவ மழிக்காதிமென
சந்தனத் தருமந்தாரந் தருநிழ லாசுபீடம்
அந்தவல் லசுரன்கைக்கு ளானதென் றறைந்துநொந்தான்.

(இ-ள்.) சென்ற செய்வப்பெண்கள் இந்திரனைக்கண்டு நடந்த வரலாற்றை சொன்னார்கள் அதுகேட்டு இந்திரனானவன் அங்கிருந்த தேவர்களைப்பார்த்து ஓ தேவர்களே அந்தத் தாருகாசுரன் செய்யுந் தவங் கலையும்படி நா மனுப்பிவைத்த அரம்பாஸ்திரீகள் அவன் தவமழிக்கமாட்டாமல் வந்துவிட்டார்கள், இனி பஞ்சகற்பகத்தருவி னிழலிலே அறிவில்லாமலிருக்கின்ற சிங்காசன பீடம் அந்த அசுரன்கைக்குள்ளே அகப்பட்டுப்போகுமென்று சொல்லி மனதுநொந்து எண்ணியெண்ணி விசாரப்பட்டா னிந்திரன்—எ-று. (கக

தாருகன் றவந்தாற்றேவ சதுர்முகன் பிரமலோகந்
தீரகல் றிடுவதென்று சிந்தைபுள் வெருவிமுன்னீர்ப்
பாருள முனிவர்தேவர் பயந்ததாற் பரிந்துநோக்கிப்
பேருள தவத்தின்கோரப் பிறழ்வுகண் டடைந்தான்மன்றே.

(இ-ள்.) ஒருமனதாகத் தாருகாசுரன் செய்கிற தவத்தினாலே தெய்வச்சதுர்முகப்பிரமதேவன் தன்னுடைய பிரமலோகம் அழிந்துபோகுமென்று மிகவும் மனதில் பயமுண்டாகிக் கடல்சூழ்ந்த பூமியில் முனிவர்கள் மயங்குவதுகண்டு அன்புடனே மனதிரங்கிப் பார்த்து அசுரன் றவத்தின் பெருமையைக்கண்டு மெச்சிக்கொண்டு தவப்பூமியில் வந்தான் பிரமதேவன்.—எ-று. (கஉ

நன்றுநன் றனைககால நற்றவ மென்னும்பிந்த
வன்றிறற் றவங்கள்செய்தல் மனத்தினு நினைந்திலன்யா
னின்றுனக் கென்கொல்வேண்டு மெய்வர மொன்றுமேயட்டி
வென்றகை யசுரர்வேந்த தாருக வென்றான்வேதன்.

(இ-ள்.) வெருநேத்தி வெருநேத்தி நீ யிப்படி யகோரமான தவம் நெடுங்காலமாய்ச் செய்கிறாய், நல்ல தவத்தை யுடையவர்களும் இப்படி யரியதவஞ் செய்யமாட்டார்கள் ஆகையினாலே உனக்கென்னவரம் வேணுமோ அந்த வரங்களெல்லாங் கேட்டுக்கொள் அசுரேந்திரனே யென்று சொன்னார் பிரமதேவன்.—எ-று.

நான்மறை யுரைக்கும்பத்ம நான்முகத் தழகும்வெள்ளைத்
தேன்மொழி யிருக்குநாவுந் திகழ்புரி முந்நூன்மார்பும்
வான்முத லுலகமூன்றும் வகுத்தருள் மகிழ்வின்சீரு
மேன்முறை முனிவர்போற்று மேதக வடிவுங்கண்டான்.

(இ-ள்.) நாலுவேதங்களு மோதப்பட்ட சதுர்முகத்தழகும் இனிய சொற்களையுடைய வெண்மை நிறம்பொருந்திய சரஸ்வதி யமர்ந்திருக்கின்ற நாவுந் திகழ்ந்து விளங்கிய முந்நூன் மார்புந் திரிலோகங்களையுஞ் சிருஷ்டிக்கப்பட்ட பெருமையையும் சிறப்பும் வெண்மையையுடைய முனிவர்கள் வணங்கித் துதிக்கின்ற அழகிய வடிவுங் கண்டான்.—எ-று (கச

கண்டதா ருகன்கொண்டாடி கவிழ்ந்திரு பாதம்போற்றிப்
புண்டரீ கத்துவந்த போதனே வேதரூபி
யண்டரண் டங்களெல்லா மாக்கிய வையாவெய்ய
தண்டமா கரத்தவேத செயசெய போற்றியென்றான்.

(இ-ள்.) பிரமதேவனைக்கண்ட தாருகாசூரன் மகிழ்ச்சியுடையவனாகி மிகவு மனமுடனே இரண்டு பாதங்களிலும் நமஸ்கரித்து தாமரைப்பூவி லுதித்தெழுந்தருளிய வேதனே, வேதரூபனே, அண்டபகிரண்டங்க ளெல்லாம் படைத்த வையனே, தண்டாயுதம் பிடித்த கையனே. பிரமதேவனே, செய செய போற்றி போற்றியென்று வணங்கினான்.—எ-று. (கரு)

சிறிதுமைக் கருத்துள்வைத்த செகத்தவர் நினைத்தவெல்லா
முறைமுறை புதவுந்தெய்வ மூர்த்தியே யெமதுவாழ்வே
குறைவறக் கருணைபூத்த கோகன கப்பூங்கண்ணா
மறைமொழிப் பொருளேயண்ட வைப்புறு மனத்தபோற்றி.

(இ-ள்.) சிறிதுநேர மும்மை மனதிலனினைத்த உலகத்தார்களுக்கு இஷ்டகாமியமெல்லா முறை முறையே கொடுக்கப்பட்ட தெய்வமூர்த்தமே, என்னுடைய பாக்கியமே, குறைவில்லாத கிருபாநோக்கமுடைய கமலக்கண்ணனே, சதுர்வேத வாக்கியப் பொருளே, அண்டவைப்புக ளடங்கியிருக்கும் மானசத்தையுடையவனே போற்றிபோற்றி யென்றான் தாருகாசூரன்.—எ-று. (கசு)

போற்றிசெய் யடியேற்கெய்த நல்வரங் கேண்மோவென்று
மாற்றல்கூர் வலியுந்துஞ்சா வங்கமு முனிவர்வானோர்
கூற்றனை முதலாந்தேவர் குலப்படை யனைத்துமென்மே
லெற்றசெங் கழுநீர்மாலை யெனவாக வருகவென்றான்.

(இ-ள்.) போற்றி போற்றியென்று வணக்கஞ் செய்யும் அடியேனுக்கு வேண்டிய வரங்களைச் சொல்லுகிறேன் கேளுமென்று சொல்லுகிறான், எனக்கு மகா சவுரிய புஜபல பராக்கிரம நிலைமையுஞ் சாகாததேகமும் தேவாதி முனிவர்களை யமன் வருணன் வாய்வு முதலான தேவாயுதங்களெல்லாம் என்மேலேவிட்டாலும் அது செங்கழுநீர்மாலையாய் விழ்ந்திருக்க வரங்கொடுக்கவேண்டுமென்றான் தாருகாசூரன்.—எ-று. (கஎ)

நீரினால் நெருப்பால்வான நிலையினால் நிலத்தாற்காற்றாற்
சோர்விலா மகவான்றன்னால் சூரியர் மதியென்றோதும்
பேரினால் முடியாவண்ணம் பெருவரந் தருகபின்னுன
காரியத் தொழிலுக்கேகி காக்குதி கமலமேலோய்.

(இ-ள்.) நீரினாலும், நெருப்பினாலும், ஆகாசத்தினாலும், நிலத்தினாலும், காற்றினாலுஞ் சோர்வில்லாத தேவேந்திரனாலுஞ் சூரியன் சந்திரன் என்று சொல்லப்பட்டபேர்களினாலுஞ் சாகாதவண்ணம் மகாவரம் எனக்குக் கொடுத்தருளிப் பின்பு உன்னுடைய காரியங்களைப்போய்ச் செய்வீராக பிரமதேவனே என்றான் தாருகாசூரன்.—எ-று. (கஅ)

எனவிரு பதத்தில்வீழ்ந்தங் கிறைஞ்சிய நிருதர்வேந்த
மனமுற மகிழ்ந்துநேர்ந்த வரமெலாம் பெறுகவென்னா

பாதாள சங்கநிதி பத்மநிதி மனைவாயில்
தாதாவென் றிரப்பவர்க்குத் தரும்மவையும் போத

(இ-ள்.) பாதாளலோகத்தி லிருக்கின்ற ஆதிசேடனுடைய பணமுடி மாணிக்கங்கள் தன்னுடைய மாடமாளிகை முகட்டிலிருந்து பிரகாசிக்க, மகாதானத்துக்கேதுவாகிய சங்கநிதி பத்மநிதி இவ்விரண்டு நிதிகளுந் தன்னரண்மனை வாயலில்வந்து தியாகியென்றிரப்பவர்களுக்கு இல்லையென்னுமல் கொடைகொடுத்து விளங்கி எங்கும் பிரக்கியாதி யுண்டாக வாழ்ந்திருந்தான் தாருகாசுரன்.—எ-று. (௨௩)

வானதியம் புயமனைத்து மனைவாயின் மலராகத்
தானவர்வா னவர்புறத் தளைந்துதளைத் தேவல்கொள்ள
மோனதபா முனிவர்வந்து முறைமுறையா சிகள்கூறப்
போனகமா முதலாகப் புத்தேளிர் கொணர்ந்தூட்ட.

(இ-ள்.) தேவகங்காநதியில் விளங்கிய தாமரைகளெல்லாந் தன்னரண்மனை வாயலில் தடாகத்திற் புட்பிக்கவுந் அசுரர் வானவர்களையெல்லாம் விலங்கிட்டுத் தனக்கு ஏவல்செய்யவும், மவுனிகளான முனிவரர்கள் முறைமுறையாகவந்து ஆசீர்வதிக்கவும், தேவாமிர்தத்தைப் போசிப்பாக தேவர்கள் கொண்டுவந்து ஊட்டுதல் செய்யவும் வாழ்ந்துக்கொண்டிருந்தான் தாருகாசுரன்.—எ-று, (௨௪)

சந்திரனைத் தன்சமுகத் தமனியமண் டபநிறுத்தி
மந்தநிலைக் கண்ணாடி யாகவொளி ரதவனுஞ்
சிந்துகதிர்ப் பாவகனுஞ் செறிதீப வொளிகாட்டச்
சந்ததமு மகமேரு சார்ந்திடுபொன் னணையாக.

(இ-ள்.) பூரணச்சந்திரனைவன் தன்னுடைய சொர்ன்னமயமான சபாமண்டபத்தில் நிறுத்திய நிலைக்கண்ணாடியாக, சூரியனும் அக்கினிதேவனும் நெருங்கிய தீபங்களாகப் பிரகாசிக்க சதாகாலமு மகாமேருகிரியானது தான் சாய்ந்துகொண்டிருக்குஞ் சொர்ன்னமெத்தைத திண்டுகளாக யிருக்க வாழ்ந்திருந்தான் தாருகாசுரன்.—எ-று. (௨௫)

மாருதம்வந் தாலவட்டம் வரைந்தசீச வருணன்மணந்
சேரியபன் னீர்சிதறத் திவலைசிற் சிலதளிப்பப்
பாரியவுச் சிஸ்வரமாம் பரிபுமைந்தன் பாலகரு
மேருவுவ மாதலிவந் திலகுநிறு பதர்விடுப்ப.

(இ-ள்.) வாயுராஜன் வந்து ஆலவட்டங்கள்வீச, வருணன் வந்து மணம் பொருந்திய பன்னீரைவீசி சிறு துளிகளாகத் தெளிக்க, உசிதமான உச்சிஸ்வரமென்னுந் தெய்வலோகத்துக் குதிரைகளைப்பிடித்து தன்மக்கள் ஏறிநடத்தி வீதிவட்டஞ் செய்ய, மாதலிவந்து தன்பிள்ளைகளுக்குச் சிறுதேர் கடாவி நடத்த விப்படியாண்டு வாழ்ந்திருந்தான் தாருகாசுரன்.—எ-று. (௨௬)

இவ்வியவைதா ருகனியற்று மிறைமாட்சி முறையாட்சி
தவநிலைவா னவர்முனிவர் தவறுபடத் தாருகனுற்
பவநிலையிற் பயந்துமகப் பண்ணவரும் விண்ணவருஞ்
சுகநிலைசற் றிலராகிச் சுருதியயன் பதமடைந்தார்.

(இ-ள்.) இந்தப்பிரகாரந் தாருகாசுரனென்பவன் செய்யுங் கொடுங்கோல் ஆக்கி னைக்குப்பயந்து தேவர்கள் முனிவர்கள் தலைவிலைகளெல்லாங் குலைந்துபோகவும், யாகாதி கிர்த்தியங்களுஞ் செய்யாமல் சற்றுஞ் சுகமில்லாதவர்களாய் கூட்டமாகக் கூடிக்கொண்டு வேதப்பிரம்மாவி னிடத்தில்வந்து சேர்ந்தார்கள்.—எ-று. (உஎ)

வேறு.

அடைந்தவானவர் தானவராதிபதி யமர்செய்தாருகனேவற்
கிடைந்தொடுங்கிய வின்முகம்பனிக்கடத் தெழுந்தவம்புயம்போல
அடைந்ததன்மையு மாருநெத்துள்ளமு மலைந்தருமொழித்தீஞ்சொற்
குடைந்த வள்ளமு மனமுங்கஞ்சமுங் கொண்டவன்சிறிதோர்ந்தான்.

(இ-ள்.) அப்படிவந்து சேர்ந்த தேவர்கள் முனிவர்கள் அசுரேந்திரனை தாருகாசுரனுக்கு அஞ்சி அவன் ஏவல்செய்து சஞ்சலப்பட்டு மனதுநொந்து மிகுந்த பனிபட்ட தாமரைப்போல வாடியமுகங்களையுஞ் சிந்தாகுலமாய் ஏசப்பட்ட சுடுசொல்லானா லுடைந்த கருத்தையும் அன்னவாகனமுங் கமலாசனத்தையு முடைய பிரமதேவன் சிறிது தெரிந்துகொண்டான்.—எ-று. (உஅ)

என்னைபொன்னைபின வெருஞ்சகந்தெனன்னிய வெண்ணமென்றயனோத
முன்னைநீவொருதாருகன் றனக்கெட்மை முனைவரங்கொடுத்திரால்
உன்னுரையோமை மறந்தனைமறைநெறி யேருமக்கன்பினாலேம்
பின்னுமம்பொன்மைச நம்பையமன்னவன பிறங்கடைச்சிறைபுக்கார்.

(இ-ள்.) பிரமதேவன் தேவர்களைப்பார்த்து உங்கள் மனதில் என்னசஞ்சலமெண்ணி வந்தீர்களென்று கேட்க, நீர் முன்னே ஒரு சூரனுக்கு எங்களை நெருக்கஞ்செய்யும்படி மிகுந்த வரங்கொடுத்தீர், எங்களை நினையாமல் மறந்துவிட்டீர், உம்முடைய வாக்கியத்தின்படி வேதநெறி முறைமையை யுடையவர்கள் நாங்கள் உனக்கன்பில்லாதவர்களானோம், அதுவல்லாமல் எங்கள் நம்பானதிரிகளெல்லா மந்த சூரன் வாசலிற் சிறையிற் சிக்கியிருக்கிறார்களென்றுஞ் சொன்னார்கள் தேவர்கள்-எ-று.

ஓரனுப்பொழு தும்பர்களுலகினி லுறைதருதற்கரிதையா
சீரினும்முறை யிருப்பவெங்கட்கெலாஞ் சிறிதமுதருள்கிற்பீர்
தாருகனசெய் மானபங்கத்தினிற் சாவுறலினிநெங்க
ளூருநும்பர முலகுநும்பரமெம தாயிருநும்பரங்காப்பாய்.

(இ-ள்.) ஒரு கணப்பொழுதாகிலுந் தெய்வலோகத்திலே வசிக்கின்றது அரிதாயிருக்கின்றதையா, இனி உம்மிடத்திலேதானே யிருக்குறோம் எங்களுக்குக் கொஞ்சம் அமிர்தபோசனங் கொடுப்பீராக. அந்த அசுரன் செய்கிற மானபங்கத்தினாலே சாகிறதே நன்மையா யிருக்கின்றது, எங்களுலகமும், எங்கள் வாழ்வும், நாங்களும் உம்முடைய அடைக்கலமென்று சொன்னார்கள் தேவர்கள்.—எ-று. (௩0)

என்றிரந்திமை யவருமாமுனிவரு மிந்திரன்முதலோருஞ்
சென்றடைக்கல மெனவுரைசெயவயன் செப்புதற்சினைச்சூதர்
தன்றுணைக்கிணை யாயநற்சவுனக தாபதரிவைகேட்ப
யன்றுரைத்தன ரறுமுகருரைத்ததென றவற்றையானறைகிற்பாம்.

(இ-ள்.) இப்படி தேவர்களும் முனிவர்களுந் தேவேந்திரன் முதலானவர்களும்போய் அடைக்கலமென்று சொன்னபோது, பிரமதேவன் அவர்களுக்கு அபையாஸ்தங்கொடுத்துச் சொன்னதை தனக்குச் சிநேகமான சவுனகாதி முனிவர்கள் கேட்க, முற்காலத்திலே சண்முகமூர்த்தி சொன்னார் அதையெல்லாம் விளங்கச் சொல்லுகிறேனென்று சூதமுனிவர் சொல்லுகிறார்.—எ-று. (௯௧)

தாருகன் செயற்கைச்சருக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம்.—௯௯௦.

## சண்முகருற்பத்திச் சருக்கம்.

முனிவரெம்மவர் நும்மவர் முதலியோர் முயல்தவந்தனில்மேலா
நனிகொள்மெய்த்தவத் தாருகனுலகெலா நடுக்குறுவினைகூர்ந்தா
னினைபவெம்பகை நயந்தவனெண்ணரிய வெந்நாளின்னிறும்வாழும்
தனிபுணர்ந்தனன் றாருகனிறந்தானுந் தானமுங்களுக்காமால்.

(இ-ள்.) இப்படி அடைக்கலமென்று சொன்ன தேவர்களைப்பார்த்து பிரமதேவன் சொல்லுகிறான், கேளுங்கள் தேவர்களே முனீஸ்வரர்களே எம்முடைய பரிசனங்கள் உங்களினத்தார்க ளிவர்கள் முதலாகிய பேர்களெல்லாஞ் செய்யுந் தவத்தைப்பார்க்கிலு மேலான அரியதவஞ்செய்த மகிமையினாலே தாருகாசூரன் நம்முடைய உலகங்களெல்லாம் நடுங்கத்தக்கதாக தீயவினைத்தொழில்செய்கிறான், இப்படித் தேவர்களைப் பகைத்துக்கொண்ட வலிய தாருகாசூரன் இன்னஞ் சிலநாளில் இறந்துபோய் உங்களுடைய தேவஸ்தானம் உங்களுக்கு நிலையாகுமது நான் தெரிந்துக்கொண்டேனென்று சொன்னார்.—எ-று. (௧)

என்னவன்னவா சனனுரைத்தருளிய வினிதுரையிமையோர்தங்
கன்னமீதினு மமுதமுண்பவரெனக் களித்தனர்குளித்தாற்போல்
நன்னலந்தகங் குளிர்ந்தனர்தழைத்தனர் நயந்தனர்பயந்தீர்ந்தார்
பொன்னயன்றனைப் புகழ்ந்தனர்புலப்படப் புகல்கென்றார்.

(இ-ள்.) என்றிப்படி பிரமதேவன்சொன்ன நயவார்த்தைகளைக்கேட்டுத் தேவர்களெல்லாந் தங்கள்காதுகளில் தேவாமிர்தம் உண்டவர்போலுங் களிகூர்ந்து அமிர்தத்தில் மூழ்கி எழுந்தவர்களைப்போலு மிகவும் நன்மையாக மனது குளிர்ந்தார்கள், செழிப்புடனே பயந்தீர்ந்தார்கள், ஆசையுடனே நான்முகனைப் புகழ்ந்து மகிழ்ச்சியுடையவர்களாய் சுவாமி யும்முடையமனதிலே தெரிந்துணர்ந்த வரலாற்றையெங்களுக்குத் தெரியும்படியாக வெளிப்படச்சொல்லி யருளவேணுமென்று கேட்டார்கள் தேவர்கள்.—எ-று. (௨)

அஞ்சலஞ்சலிங் கவர்களையழிப்பதற் கறுமுகச்செவ்வேளை
செஞ்சிலம்படி யுமையவளுடனரன் சேர்ந்தருளுவதாக
விஞ்சையுண்டஃ துணர்ந்தனம்யாமவன் வினைகடிவதற்கேலா
வுஞ்சுநும்மிட முறைகுவீரென்றய னோதவங்கவைகேட்பார்.

(இ-ள்.) தேவர்களே நீங்கள் அஞ்சவேண்டாம் அந்தச்சூரனைக் கொல்வதற்கு ஆறுமுகக் குமாரனைத் தருவதாக அழகியசிலம்பணிந்த பாதங்களையுடைய பார்வதா தேவியுடன் பரமசிவன் கூடி முயங்குவதற்கு ஒரு உபாயமுண்டு அது நமக்குத் தெரியும், நாம் அந்தச்சூரனைக் கொல்வதற்குக் கூடாது, நீங்கள் பிழைக்கும்பொருட்டாக யெத்தனஞ்செய்கிறேன் உங்களுடைய ஸ்தானங்களிலே வசித்திருப்பீர்களென்று பிரமதேவன்சொல்ல அதெப்படியென்று கேட்டார்கள் தேவர்கள்.-எ-று.

அந்தவாறெமக் கருளுதியெனவிண்ணோ ரடிதொழவயன்கூறுங்
கொந்துலாவிய கொன்றையஞ்சடிலனக் கொடியதக்கனைக்காய்ந்த
தந்தையென்றுள தவறுதீர்ந்திடவனற் றழற்றடத்திடைமூழ்கி
வந்துவந்திம வானிடைப்பிறந்தணி மலைமகளெனநின்றாள்.

(இ-ள்.) அந்தவரலாற்றை எங்களுக்கு அருள்செய்யவேணுமென்று தேவர்கள் வணங்கிக்கேட்க பிரமதேவன் சொல்லுகிறார், கொன்றைமாலைசூடிய சடையையுடைய பரமேஸ்வரன் தக்கனை வதைசெய்தபின்பு தக்கன் மகளென்கிற குற்றந்தீரும்படியாக அக்கினித் தடாகத்திலே மூழ்கி இமவானிடத்தில் வந்து பிறந்துவளர்ந்து மலையரசன் மகளென்று பெயர்கொண்டு யிருக்கின்றா ளுமையவள்.—எ-று. (௪)

மதியிளங்கதிர் புனைந்தவன்றனுமவ் வரையினிலேகாந்தப்
பதியெனும்படி யோகசாதனந்தினம் பயின்றனன்பசுங்காவில்
திதிதொறுஞ்சிவன் றிருவடிதொழுதிடுஞ் சிலம்பின்மங்கையுமேவும்
முதுகரும்பிறை யாலவர்கூடவோர் முயற்சிசெய்குவிரென்றான்.

(இ-ள்.) மூன்றாம்பிறையைத்தரித்த சடையையுடைய பரமேஸ்வரன் கயிலாசத்தின் தென்பாரிசத்திலே ஏகாந்தமாக யோகசாதனை தினந்தினஞ் செய்யாநின்றார், குளிர்ந்த புட்பகாவனத்திலே சதாகாலமுஞ் சிவன் திருவடிகளைப் பூசிக்கும் மலைமகளான பார்வதாதேவியும் வாராநின்றாள். அந்தப் பார்வதாதேவியைப் பரமேஸ்வரன் திருக்கலியாணஞ்செய்து கூடிமுயங்கும்படி மன்மதனைக்கொண்டு ஒரு முயற்சி உபாய நீங்கள் செய்வீராகவென்று சொன்னார் பிரமதேவன்.—எ-று. (௫)

ஓதிவாகன னோதியதுவகையுற் றவனையதாள்பலபோற்றிக்
கோதின்மன்மதன் றனையுடனழைத்துநங் கொற்றமுற்றுதியென்று
ராதல்கண்டிர திக்கிறையடியனுக் கருள்பணிசுரர்வேந்த
னேதெனப்பகர்ந் தன்னெமைத்தேவரை யினியவாழ்வுறக்காப்பாய்.

(இ-ள்.) அன்னவாகனமுடைய பிரமதேவன் சொல்லக்கேட்டு மிகவுஞ் சந்தோஷமாகி அவருடைய பாதங்களைப் போற்றிசெய்து, அழகிய மன்மதனையழைத்து எங்களுடைய காரியங்களை நிறைவேற்றித் தரவேண்டுமென்று சொல்லக்கேட்டு ரதிநாயகன் இந்திரனை வணங்கி அடியேனுக்கு என்ன யேவலிடுகிறீர் அதைச் சொல்லவேண்டுமென்று கேட்க, எம்மையுந் தேவர்களையும் இன்பமான வாழ்வைப் பொருந்தும்படி காப்பாயென்று பின்னுஞ் சொல்லுவான்.—எ-று. (௬)

அண்டமும்புவி யுஞ்சுரரனைவரு மருந்தவப்பெரியோரும்
விண்டலத்திலிந் திராணியுமரம்பையர் மெல்லியரனைவோரு

முண்டெனப்படைத் தருள்வதுன்றமையனன் றேபரமெமைக்காப்ப
வீண்டுபெற்றருள் வியன்மணியேபரன் மீதுநீசெலவேண்டும்.

(இ-ள்.) அண்டபுவனங்களுந் தேவர்களனைவர்களு மரிய தவமுடைய முனிவர்களுந் தேவலோகத்தி லிந்திராணியும் அரம்பை முதலான தெய்வப்பெண்களனைவரும் பிறந்து வளர்ந்து வாழும்படி சிருஷ்டித்தருள்வது உன் தமையனான பிரமதேவனல்லவோ, நீ எங்களை யிரட்சிப்பது உன்பாரம் மகாவிஷ்ணு பெற்றருளிய புத்திரனே, எங்கள் கண்மணியே, நீ இப்போது பரமசிவன் யோகங்குலைய பாணப்பிரயோகஞ் செயயவேண்டுமென்று சொன்னார் இந்திரன்.—எ-று. (௭)

எனப்புகழ்ந்திரந் திமையவர்புரந்தர னிருந்தவணிதுகேட்பத்
தினைக்கணத்தரன் செய்தவங்குலைத்தொரு சேய்தருகுவன்காண்டி
மனந்திடைத்துயர் விடுகவென்றலர்க்கணை மணிக்கமைச்சிலைகோலிப்
புனற்கயற்கொடி யிரதியும்வசந்தனும் பொலன்மணிமுடிவேய்ந்தார்.

(இ-ள்.) என்றிப்படி இந்திரனுந் தேவர்களும் முனிவர்களு மன்மதனைப்புகழ்ந்து கேட்டுக்கொள்ள, மன்மதனுஞ் சம்மதித்து ஒரு தினைப்பொழுதில் சிவன்செய்யுந் தவத்தைக் குலைத்துச் சிவ னுமையைக்கூடி ஒருபிள்ளை யுண்டாகும்படி செய்கிறேன் என்சமர்த்தைப் பாருங்களென்று திடஞ்சொல்லி இனி யுங்கள் மனத்துயரங்களை விட்டுவிடுங்களென் றுறுதிசொல்லி, புட்பபாணங்களுங் கருப்புவில்லுங் கையிலெடுத்து மச்சக்கொடி பிடித்துப் போர்க்கோலமாக இரதிதேவியும் வசந்தனு மலங்கரித்துக்கொண்டு இரத்தினமயமான கிரீடந்தரித்தான் மன்மதன்—எ-று. (அ)

கன்னகுண்டலந் திருத்திபொற்றோளணி கதிர்மணிப்புயத்தேற்றி
யன்னவாகன னச்சுதன்றருமணி யாரமார்பிடைபூண்டு
பொன்னணித்துகில் புனைந்துகேதகையிடை பூட்டிவிற்றொனிகாட்டி
முன்னடத்தின னிரதமுஞ்சேனைபு முழுமதிக்குடையோங்க.

(இ-ள்.) இரண்டுகாதுகளிலும் இரத்தினகுண்டலந் தரித்து, இரத்தினவாகுவலயங்கள் பணைத்த புயங்களிற்பூட்டி, பிரம்மாவும் விஷ்ணுவுங்கொடுத்த இரத்தினாரங்களை மார்பிற்பூண்டு, சொர்ன்னமயமான பூந்துகிலுடுத்து, இடையிற் கச்சைகட்டி, தாழைமடற்பூவை யுடைவாளாக யிடையிலேதரித்துக் கருப்புவில்லைவளைத்து குணாத்தொனிசெய்து, கிளிக்குதிரைகள்பூண்ட தென்றற்றேர்மேலேறி, பெண்சேனைகளை முன்னேநடத்தித் தனதுரதத்தையும் பின்னேநடத்தினான் சந்திரவட்டக்குடையேற்ற மகரகேதனனாகிய மன்மதன்—எ-று. (௯)

காளகண்டமே காளகண்டனைமனங் காமர்செய்விருதூத
நீளகண்டமை போலநாணளியெலா நிறைபிசைகளிகூற
ஆளகண்டனை யைம்முகத்திறைவனை யாறுசூழ்சடையானை
வேளகண்டனை யியக்கிடப்பாய்சர்போய் வியன்கணைக்கிடம்பார்த்தான்.

(இ-ள்.) காளகண்டமாகிய குயில்கள் காளகண்டனான சிவன் மனத்திற் காமச்சின்னமுண்டாக விருதுசின்னமூதிவரக் கரியமைபோலும் நாணாக மொய்த்த வண்டினங்களெல்லாம் நிறைந்த இசைபாடிவர, அகண்ட பரிபூரண மூர்த்தியாகிய ஐம்முகக்கடவுளாகிய கங்கைச் சடையையுடைய சிவனை மோகனஞ்செய்யும்படி சி

வயோகதலத்தில் ஒருபக்கம்போய்ச்சேர்ந்து பாணப்பிரயோகம்பண்ண இலக்குப் பார்த்தான் மன்மதன்—எ-று. (௪௦)

ஆயகாலையி லசலமாதம்பிகை யமுதபொற்குடம்போலுஞ்
சேயகொங்கையுஞ் செய்யபொற்பட்டுத்த ரீயமுந்திருத்தோட்டின்
வேயகம்மணி நீலமுஞ்செம்மணி விளக்கமுமொளிவீசத்
தூயபற்றர ளத்தொகைநிலவெழத் துடியிடைத்துகிலார்ப்ப.

(இ-ள்) அக்காலத்தில் மலைமகளான அம்பிகாதேவி அமிர்தபூரண கலசம்போலு மழகிய ஸதனபாரங்களுஞ் சிவந்த பொற்பட்டுடையும் ரவணிதமாகத் தரித்த உத்தரீயமும், அழகிய குவசகுண்டலமணிந்த வள்ளைக்கொடிபோன்ற காதுகளும், நீலோற்பலம்போன்ற நெடிய கண்களுந் திவ்விய ரத்தினாபரணங்களும் பிரகாசிக்கவும், பல்வரிசைகள் முத்துக்கோர்வைபோலும ஒளிசெய்யவும், துடிபோன்ற இடையிற்றரித்த மணிமேகலைக ளாரவாரஞ்செய்யவும்—எ-று. (௪௧)

பங்கயக்கரப் பதுமராமணிமிளிர் பைந்தொடியொளிவீச
வெங்கணங்குழல் வண்டிசைசிலம்பிசை வேள்வருகெனக்கூறத்
தங்கநந்நிறப் பொன்னலங்கலின லந் தண்டலையிருள்வாட்ட
எங்குலத்தெய்வ மேனியின்சோதிநம் மிருட்பவந்தனைநீக்க.

(இ-ள்.) செந்தாமரைப் புஷ்பம்போன்ற கைகளிற் பதுமராகமணிவைத்திழைத்த தொடிவளைகள் ஒளிவீச நெடியகூந்தல் மொய்த்த வண்டினத் திசைகளும் பாதச்சிலம்பொலிகளும் மன்மதனை வாவென் றழைப்பதுபோலுஞ் சத்திக்க, பொன்மணி யோலைகளின் சுடர்கள் அந்த புட்பவனத்து விருள்களை நீக்க வெங்கள் குலதெய்வமான உமையவள் திருமேனிப்பிரகாசம் நம்முடைய மனத்திருட்பவங்களை யகற்றப் பின்னையும்.—எ-று. (௪௨)

மதியுமெல்லையு மொருபொழுதெழுந்தென மணியணிக்கதிரோங்கத்
துதிகொள்வாணியுஞ் சுந்தரத்திருவுநற் றுணைத்திருக்கரந்தாங்க
விதியுமாலுமிந் திரனுநம்பகையிருள் விடிந்ததென நனியோங்கப்
பதிதநாருகன் புயவலித்திருவெலாம் பதைபதைத்துளமேங்க.

(இ-ள்.) சந்திரனுஞ் சூரியனு மொருபொழுதிலே யுதித்தெழுந்தாற்போலே ரத்தினாபரணத்தின் பிரகாசங்கள் உலகமெல்லாம் நிறைந்து விளங்க தவுந்திரமுஞ் செய்து சரஸ்வதியும் அழகிய லட்சுமியும் உமையவள் திருக்கைகளைத் தங்கள் கைகளால்தாங்கிவரப் பிரமாவும் விஷ்ணுவும்,இந்திரனுந் தேவர்களும் முனிவர்களும் நமது பகையிருள் விடிந்ததென்று சந்தோஷிக்க கொடுந்தொழிற்செய்கின்ற தாருகாசூரன் புயபலங்களும் அவனது சகல செல்வமும் பதைபதைத்து மனதுகலங்க பின்னையும்.

சயிலமங்கைநல் லெழுகண்டிமையவர் தத்தமர்தமையேச
வயில்விழித்தெய்வ மங்கையர்கவரிவார் கடற்றிரையெனவீச
வியனெடும்புவி மடந்தையர்கரங்களான் மென்மலர்ப்பதம்பூச
நயமகப்புரந் தரன்முதலவர்வினை நடுநடுங்கிடக்கூச.

(இ-ள்.) மலைமகளான உமாதேவி யழகைப்பார்த்து மலையமகளிரெல்லாந் தங்கள் தங்களுக்குள்ளே ஏசிக்கொள்ள, வேல்போலுங் கண்களையுடைய தெய்வப

பெண்கள் சமுத்திரத்தலைகள்போலுங் கவரிவீச, யோகமயமான பூமிதேவி அம்மன் பாதங்கள் நோகாமல் மிருதுவாகத் தன் கைகளாற் றாங்கிப் பிடித்துக்கொண்டுவர இந்திரன் முதலானவர்கள் விழுகளெல்லாம் நடுநடுங்கிக் கூப்பப் பின்னையும்.—எ-று. (௧௪)

செஞ்சிலம்பலம் பியமலரொடுந்தொடி செய்யகாந்தளினோடுங்
கஞ்சமென்கிளிக் கரத்தொடும்புயலொடுங் கயலொடுங்கமுகோடும்
வஞ்சியங்கொடி யொன்றுபொற்பணியொடு மருமலிமலர்க்காவில்
விஞ்சைவந்தெனப் பஞ்சவத்திரனெதிர் விளங்குபார்வதிவந்தாள்.

(இ-ள்.) அழகிய சிலம்புகள் ஒலிக்கப்பட்ட பாதமலர்களுடனேயுஞ் சொர்ன்ன வளைகளையணிந்த கைகளான காந்தட் புஷ்பங்களுடனேயு மரகதக்கிளியேந்தின கமலம்போன்ற கைகளுடனேயுங் கூந்தலாகிய கரியமேகத்துடனேயுங் கண்களாகிய மீன்களுடனேயுங் கழுத்தாகிய கமுகுடனேயும் இடையாகிய வஞ்சிக்கொடியுடனேயும் விளங்கச் சர்வாபரண வலங்காரத்துடனேயும் திவ்விய சொர்ணமயமான பூங்காவில் அதிசயம்போலு மைந்துமுகங்களையுடைய அழகிய பரமேஸ்வரனெதிரில் ஒரு விஞ்சைவந்ததுபோலும் வந்தாள் அழகிய பார்வதியம்மன்.—எ-று. (௧௫)

வந்துவந்தனை பலரடிக்கியற்றுவாள் மலர்க்கரத்தாலீர்ங்கொண்
டெந்தையைத்தொழு வெடுத்தபுட்பாஞ்சலி யிடையொருசராபாண
முந்துமுண்டக முண்டெனவெய்தலைம் முழுமதிக்குடைக்கீழான்
அந்தவிற்கணைச் சற்பனைத்தொழிலினே லாவுமாமுகம்பார்த்தான்.

(இ-ள்.) இப்படி பார்வதியம்மன் வந்து சிவன்பாதத்தில் வந்தனையுடனே பாதபூசை செய்வதற்குத் தனமலர்க் கைகளால் நீர் கொண்டு சிவனுடைய பாதமலர்களில் அபிஷேகஞ்செய்து புட்பாஞ்சலி பிடிக்கிற தருவாயில், ஒரு தொடையாகக்கோத்த தாமரைப் பூங்கணையை யெய்தான் பூரண சந்திர வட்டக்குடை நிழற்கீழ் நின்ற மன்மதனுனவன அப்போது மன்மதன்செய்த காமபாணம் பரிசத்தினாலே ஆதிசிவனு மையவள முகத்தைப் பார்த்தார்.—எ-று. (௧௬)

பார்வைகண்டபின் பார்வதியிறைமனப் பாங்கறிந்துளநாணப்
பேர்வயங்குமிவ் வியோகமென்பிழைபடும் பிறங்குவேள்செயலென்று
யேர்விளங்கிய நுதல்விழித்திறந்தவ னெரிந்திடக்கனன்றுநீ
தார்வயங்குமப் பன்னகசாலையைத் தணர்ந்தனன்பவரயெங்க.

(இ-ள்.) சுவாமி பார்த்த பார்வையின் குறிப்பைக்கண்டு பார்வதாதேவி சிவனுடைய மனபாக மறிந்து உள்ளத்தில் நாணமுண்டாகி யொதுங்கினின்றாள். அப்போது ஒரு நிலைமையான மனதுடனே நாம் செய்த இந்த சிவயோகந் தடைபடக் காரியமென்னவென்று தன் சுக்கியானத்தினு லறிந்து இது மன்மதன் செய்த சர்ப்பனையென்று தெரிந்து அழகிய நெற்றிக்கண்ணைத்திறந்துக் காமனையெரித்துப் புட்பசரங்களாற் செய்த பன்னகசாலையை விட்டுநீங்கினார் பரமேஸ்வரர் உமையவள் ஏங்கும்படியாய்.—எ-று. (௧௭)

வேறு

ஆங்கதுநிகழ்ந்தவள விற்பனைவருந்தி
வீங்குசடிலற்புபம் விரும்பிவிரகத...

றேன் கேளும்பெண்ணே பார்வதியேயென்று விநோதமாகச் சிலவசனங்களைச் சொல்லுகிறார்—எ-று. (௨௨.

என்பரவுபூளைவெள்ளெருக்குடலம்வேய்ந்து
துன்புறுகபாலபலி துய்த்தவொருபித்தன்
வஞ்சுடலையம்பல வனத்திடைவதிப்போன்
பின்படர்வகாளியடு பேயினொடுகூளி.

(இ-ள்.) எலும்புகள், பாம்புகள், பூளைப்பூ, வெள்ளெருக்கம்பூ இவையெல்லாந் தரித்துக்கொண்டு, விகாரமான கபாலத்தையேந்தி பிட்சைவாங்கியுண்கிற பித்தனானவன், வன்மையையுடைய சுடலையிலும் அம்பலத்திலுந் தில்லைவனத்திலும் ஆடிக்கொண்டு திரிகிறவன், பூதப்பிரேதப் பிசாசு காளிகூளிகளுமாகிய கணங்களுடனே கூடி திரியப்பட்டவன் அந்த சிவனென்றுசொல்லிப் பின்னையுஞ் சொல்லுவார்-எ-று)

உடுப்பதனாயிற்புலி புரித்துகில்கரத்தே
யெடுப்பதும்நகைப்பதும் விழிப்பதுமெழிற்றீ
தடக்கரியதட்டனை தூடற்றொடைதரிப்போ
ணடித்துவெறியிற்றிரிபெ னக்கனலமிக்கோன்.

(இ-ள்.) அந்தசிவனானவன் இடையிலுடுத்துவது புலித்தோலுடை, கையிலேந்தியிருப்பதுவுஞ் சிரிப்பதுவும் விழிப்பதுவும் அழகிய நெருப்பாகவிருக்கும், விசாலமாகிய யானையையுரித்து அதன்றோலைப் போர்வையாகத் தரித்துக்கொண்டவன், தொந்தோந்தொந்தோமென்று ஆடிக்கொண்டு லாகிரிபிடித்துத்திரிகிறவன், நிராதாரனென்றுசொல்லிப் பின்னையுஞ் சொல்லுவார்—எ-று. (௨௩)

நஞ்சுணவுவிஞ்சைமுனி நங்கையர்மருண்டே
யஞ்சவொருவஞ்சவினை யனொடுபுரிந்தோன்
கொஞ்சுமகவின்றசை யரிந்துணவுகொண்டோன்
புஞ்சவெருதின்பிடர் புறம்பிவர்புறம்பன்.

(இ-ள்.) ஆலகாலவிஷத்தையுண்டு கண்டங் கறுத்தவன், விஞ்சையையுடைய தாருகாவனத்து முனிவர்கள் பத்தினிகளை மயக்கிப் பதிவிரதாபங்கஞ் செய்தவன், வஞ்சகத்தொழில் செய்தவன். கொஞ்சிவிளையாடும் பிள்ளையை அறுத்துக் கறியாகச் சமைத்துண்டவன், புல்லிய வெருதின் முதுகிலேறி நடத்தித் திரியப்பட்டவன், உலகத்தார்நகைக்க அனியாயந்திரியுஞ் சிவனையென்று பின்னையுஞ் சொல்லுவார்—எ-று.

என்றவணடைந்தமறை யோன்பலவியம்பி
யின்றவனைமங்கையிவை நின்றதிரிபன்றோ
நன்றெனையணைந்திடுவ தான்றவமுநன்றே
குன்றரிவைகேட்டளவை கொன்றெனமுனிந்தாள்.

(இ-ள்.) என்றிப்படி பிரமசாரிவடிவான சிவன் இழிவான பலவார்த்தைகள் சொல்லி ஓஓ மலையரசன் மகளே, நீயிப்படிப் பித்துப்பிதற்றித்திரிகிற சிவனையோ சேரநினைந்து தவஞ்செய்கிறாய், இது யிழிவான காரியமல்லவோ ஆகையால் நானுனக்கேற்றவன் நீயெனக்கேற்றவள் என்னைச்சேருவதே நன்மையானகாரியம், நீசெய்யுந்தவமுஞ் சரியேயென் றிப்படிச்சொல்லவும் அவனைக் கொல்லுவதுபோலுங் கோபித்தாள் பார்வதி—எ-று. (௨௫)

முனிந்தநெறியுந்தவ முதிர்ந்ததுமுணர்ந்தே
தனிந்துமுடியுந்துடி நயங்குகரமுந்தார்
வனைந்தவுரமுந்தயை மலர்ந்தவிழியுஞ்சி
ரனந்தமுறநந்தவ வணங்கினெதிர்நின்றார்.

(இ-ள்.) உமையவள் கோபித்தகுறிப்புந் தவமுயற்சிநெறியுந் தெரிந்துணர்ந்து சந்தோஷமாகி மூன்றாம்பிறைசூடிய சடையுந் துடியியக்கிய கைகளும் பூமாலையணிந்த மார்புங் கிருபைநிறைந்த கண்களு மின்ன மனோகவிதமான வடிவுடனே தற்சொரூபமாகத் தவஞ்செய்கிற மலைமகள்கண்ணுக் கெதிரேதோன்றிக் காட்சிகொடுத்துநின்றார் பரமசிவன்—எ-று. (௨௭)

இமயகிரிமங்கைசிவ னென்றறிவுணர்ந்தே
கமலமலர்சிந்திடுரு கழலிணைபணிந்தா
ளுமையினதுசிந்தைவள முதவினமணைந்தே
யெமதுகயிலைப்புகுவ மென்றுரைபுரிந்தார்.

(இ-ள்.) அப்போது இமவானமகளாகிய உமாதேவியானவள் நமது பிராணநாயகரான ஆதிசிவன் வந்துதோன்றினாரென்று த. மனைப்பூ முரலின பட்பங்சயதாவி சுவாமிபாதங்களை வணங்கித் துதிசெய்தாள், அதுகண்டு சொல்லுகிறார் வாராயுமையே உன்னுடைய மனோபீஷ்டமான வரங்களையெல்லாங் கொடுத்தோம், இனி நம்முடைய கயிலாசகிரிக்குப்போய்ச் சேருவோம் வாரும்பெண்ணேயென்று சொன்னார் பரமசிவன்—எ-று. (௨௮)

ஆயவுரைகூறவுமை யாள்பகர்வளெனதோர்
தாயரியமேனைபெறு தந்தையமலேந்தன்
மாயனயன்மாமகவி னோர்பலர்மதிப்ப
நேயமுடனேவதுவை நேருவதுநெறியால்.

(இ-ள்.) அப்படிப் பரமன்சொல்லக்கேட்ட வுமையவள் சொல்லுகிறாள், எனக்குத்தாயானவள் மேனை, தகப்பனானவன் மலையரசன், அவர்களுக்குப் பிள்ளைமுறைமையான விஷ்ணுமுதலானவர்கள், இன்னும் அவர்களினத்த பெண்கள் அனேகம்பெயர் இவர்களெல்லாஞ் சம்மதியாக அனைபுடனே திருக்கலியாணஞ் செய்துகொடுக்க நாமும்மைச்சேர்வது நீதிமுறைமையாகுமென்று சொன்னாள் பரமேஸ்வரி—எ-று.

எனப்பணயுரைத்திட மனத்தியல்பெடுத்தே
வனச்சுரமுனிக்கண மறைபக்கணமழைத்தார்
கனத்துவடதிக்குள்விழு தெட்சணமுயர்ந்து
வனப்புறநிறுத்திட வகத்தியனைவைத்தார்.

(இ-ள்.) என்றிப்படி உமையவள் சொல்லப் பரமசிவன் நீ சொல்வது சரிதானென்று மகிழ்ந்து தேவர்களையும், முனிவர்களையும், பிராமணர்களையும் மற்றுஞ் சருவத்திரபேர்களையும் வரும்படி நினைத்தார் அப்போது அனைவரும் அங்கேவந்து சேர்ந்தார்கள். அவர்களுடைய கனம் பொறுக்காமல் வடைதிசைக்கீழே தாழ்ந்து சரிய தெற்குத்திசையுயர்ந்தோங்க அதுகண்டு பூமியைச்சமனாக்கி நிறுத்தவேண்டி யகத்தியனைப் பொதிய மலையிலே யிருக்கும்படிச் செய்தார் பரமேஸ்வரன்.—எ-று. (௩௦)

குலவமரர்குழுபலரு நலமொடுபடர்ந்தே
மலையனையன்மருகனென மணமுதவநின்றார்
பலமுடனேயபரிமித வமுதகிர்தகுளந்தா
னிலகுபலபொன்மலைக ளெனநனிசொரிந்தார்.

(இ-ள்.) கூட்டங்கூட்டமாக வந்த சகல சனங்களுஞ் சூழ்ந்து சேவித்துவர கயிலையில்நின்று புறப்பட்டு இமவானிடத்தில் போய்ச் சேர்ந்து மலையரசன் மருமகனாக மணக்கோலத்துடனே எழுந்தருளி நின்றார் பரமசிவன், அப்போதங்கே சகல பதார்த்தங்களு மலைகள்போலேகுவித்து அபரிமிதமான அமுதுகளுங் கிருததுள பாயசங்களும் பலபல பொன்மலைகள்போலே குவித்துவைத்தார்கள மலையரசனங்கள். எ-று.

வேறு.

அங்கேசிவன்போ யடைந்தாரிதுண்பா
ரெங்கேபரன்கூட வந்தாரெனுங்கா
லங்கோதுகுண்டோ தரன்போயிருந்தே
உங்கோதனஞ்சோர வுண்டேதளர்ந்தான்.

(இ-ள்.) அங்கே பரமேஸ்வரன் மணக்கோலமாக வெழுந்தருளியிருந்து கண்டு இமவான் இந்தப்பதார்த்தங்களையெல்லா முண்பதற்குச் சிவனைகூடவந்த சனங்க ளெங்கேயென்று விசாரிக்குமிடத்தில், அங்ஙனஞ் சிவனுத்தாரப்படிக்குக் குண்டோதர னொருவனும்போயுட்கார்ந்து அன்னமுதலான பட்சண பலகாரங்கள்முதலான சகல பதார்த்தங்களையும் வாரியுண்டு பசியடங்காமல் சோர்ந்துநின்றுன—எ-று. (௬௨)

வேறு.

தக்கன்முதலுற்றதரு கட்கெடுமதிக்கா
யக்கணமலைக்கரசன் மெய்க்கவறிவித்தா
ரொக்கவரவுற்றுமையை யொக்கவரனுக்கே
மிக்கமணமுற்றனர் விரும்பிலனைவுற்றார்.

(இ-ள்.) முன்னே தக்கனவன்செய்த தருக்கண்மை கெடுமதி நிமித்திடமாகப் பிறந்துவளர்ந்து தவஞ்செய்யக் கட்டளையிட்டார் சிவனென்று மலையரசனுக்குச் சம்மதியாகும்படி சத்தவிருடிகள்சொல்லி யறிவித்தார்களதுகேட்டு இமவான் சந்தோஷமாகி அனைவருங் காணத்தக்கதாகப் பார்வதியைப் பரமசிவனுக்குத் திருக்கலியாணஞ்செய்து முடித்தார்கள், அப்போது உமாசமேதராயெழுந்தருளி அனைவருக்கும் மணக்கோலக்காட்சிகொடுத்து கைலாசகிரியில் வந்துசேர்ந்து விருப்பமாக வுமையுடன் கூடியிருந்தார் பரமேஸ்வரன்—எ-று. (௬௩)

இவரிருவரும்புணரு மினிமையதுணர்ந்தே
தவமுனிவரிந்த்ரபதி தழலரசுமுன்போ
யெவரெவரும்வந்துனடி யிணைதொழுவதன்றோ
வவர்நிலையறிந்தமர ரவசமுறையென்றார்.

(இ-ள்.) அப்படிச் சிவனு முமையும் பிரியாமலின்பமுற்றிருப்பதைக்கண்டு தேவர்கள் முனிவர்கள் இந்திரன் மற்றுஞ் சமஸ்தமானபேர்களு மோரிடத்திற்கூடி யோசனைசெய்து அக்கினிதேவனையழைத்து எப்பேர்ப்பட்டவர்களும் வந்து உன்னிரண்டு பாதங்களைத் தொழுவார்களல்லவோ எல்லாரிலும் நீ மகாபெரியவன் உனக்கொருவர்

சமானமில்லையென்று மிகவும் பிரியவசனஞ்சொல்லி நீபோய்ச் சிவனைக்கண்டு மெங்கள் துயரங்களைச் சொல்வாயென்று சொன்னார்கள் தேவர்கள்—எ-று. (௩௪)

ஆரமாருக்கருள் புரிந்தருள்தியென்றே
மாரனைவிடுத்தன மறிந்தனவறிந்தாய
சேரவன்விடுத்தகணை நிலையுதவமோகஞ்
சேரமகிழ்வுற்றுமை திருத்தனமணர்ந்தார்.

(இ-ள்.) முன்னமே தேவர்களெல்லாம் பிழைக்கும்படி ஒருதவிசெய்யென்று மன்மதனை யனுப்பினோம், அவனெரிந் திறந்துபோனதும் நீ யறிந்திருப்பாய், அவனெய்த மலர்க்கணையினாலே சிவயோகங்குலைந்து மோகன மாய்கையுண்டாகிக் களிப்புடனே மலைமகளைத் திருக்கலியாணஞ் செய்துகொண்டு சேர்ந்திருக்கின்றார் பரமேஸ்வரனென்று சொல்லிப் பின்னையுஞ் சொல்லுகிறார்—எ-று. (௩௫)

இந்தவிடமெந்தவிட மெம்பதிதமைக்க
வந்தவிடமெம்மவர் வருத்தமிதுகூறி
மைந்துறவெமக்குனதோர் மைந்தனருள்கென்றே
சிந்தையிலனற்கிறைவ சென்றுறைதியென்றார்.

(இ-ள்.) இந்தலோகமு மெந்தலோகமு மெங்கள் தேவலோகமுஞ் செழிக்கும்படி நீ மனதுவைத்து எங்கள் வருத்தங்களைத் தம் சிவபெருமானுக்குச்சொல்லி சுவாமி யெங்களுக்கு உம்முடைய குமாரராக வலிமையுடைத்தாய் ஒருபிள்ளை யுதிக்கும்படி கிருபைசெய்யவேணுமென்று சிந்தையையகன்ற அக்கினிதேவனே நீர்போய்ச் சொல்லுஞ்சொல்லுமென்று பின்னையுஞ் சொல்லுகிறார்கள்—எ-று. (௩௬)

ஆதிநடனம்புரி யரங்குமரன்விழியும்
நாதர்திருமேனியு நகைத்ததிருநகையு
மேதிலிகரத்தினு மிருப்பதுநீயன்றோ
வோதமரர்வலிதினுமிங் குன்வலுமை வலிதே.

(இ-ள்.) வாரா யக்கினிதேவனே, ஆதிசிவன் நிர்த்தனஞ்செய்கின்ற சிற்சபையிலு மவருடைய நேத்திரங்களிலுந் திருமேனியிலுஞ் சிரித்த சிரிப்பிலும் அவர்கையிலும் பிரியாமலிருக்கின்றவர் நீர், தேவர்கள் வலுமையைப்பார்க்கிலும் உனதுடைய வலுமை மகாவலுமையென்று சொல்லிப் பின்னையுஞ் சொல்லுகிறார்கள் தேவர்கள்—

உன்னையடரப்படுவ தொருபொழுதுமின்று
நின்னையலதிமையவரி னோர்ப்படுவரில்லையால்
பின்னொருவரெமதுகுறை பிறிதறிபவலரோ
வென்னவனலுக்கிறைவ னிறைவனெதிர்சென்றான்.

(இ-ள்.) ஓ யக்கினிதேவனே, நீ சிவனிடத்திற்குப்போனாலு முன்னைக்கொல்லுவதொருககாலமுமில்லை, உன்னையல்லாமல் தேவர்களில் சிவனுக்குமுன் போகத்தக்கபேர்களுமில்லை, எங்கள்குறையை நீயறிவாயல்லாமல் மற்றொருவர்களறிவார்களோவென் றிப்படித் தோத்திரஞ்செய்து பிரியவசனஞ்சொல்லி யனுப்பினார்கள், அப்படியே அக்கினிதேவனுஞ் சம்மதித்துப் போகிறேனென்று சொல்லிப் புறப்பட்டு சிவனெதிரேபோனார்—எ-று. (௩௭)

சென்றனன் வணங்கினன் மகிழ்ந்திருவர்பெருந்தா
ளனமரர்வெம்பகை யடங்கவருளினபா
ரென்றனலியின்கடவு ளின்புறவிளம்ப
வென்றிகொளவென்றுசிவன் விந்துதவிசெய்தான்.

(இ-ள்.) அந்தப்பிரகாரம்போய்ச் சிவனையும் உமையையுங் கண்டு சிவந்த சிற்பாதங்களில் நமஸ்கரித்து ஸ்வாமி தேவர்களைப் பகைசெய்து செருக்கஞ்செய்கிற தாருகாசூரன் முதலான அசுரர்களைச் சங்கரிக்கும்படி கிருபைசெய்யவேணுமென்று அக்கினிதேவன சொன்னபோது வெற்றிக்கொள்ளுங்களென்று சிவன் விந்துகொடுத்தார். ()

அக்கினிகரத்தினி லளித்திடுபரத்தின்
சுக்கிலமெடுத்தகல துற்பிலமெனப்போய்
நக்கர்சடையிற்புன னதிச்சரவணத்தி
லக்கணம்விடுத்தன னதன்பிறகுரைப்பாம்.

(இ-ள்.) அக்கினிதேவன் கையிற்கொடுத்த பரமசிவனுடைய விந்துவை தாங்குதற்கு பலன்போதாமல் வருத்தமாகச் சுமந்தெடுத்துக் கொண்டுபோய் சிவனுடைய சடையில் வசித்திருக்கும் கங்காநதி சரவணப்பொய்கையி லந்தட்சணமே வைத்தான், அதின்பிறகு நடந்தசெய்தியைச் சொல்லுகிறேன் முனிவர்களே கேளுங்களென்று சொல்லுகிறார் சூதமுனிவர்.—எ-று. (௪௦)

வேறு.

சரவணத்தீர்த்தந் தனந்தருவும்பொழிற் சங்கமீள
திரவணக்கனமுனிவ ரகரங்கள்பலபல சிறந்தார்
பரவணச்சுக்கிலங் கைபுகும்பாங்கினிற் பாவக
னுரவணக்கன்மைய லுறமுனிவர்மாதரை யுகந்தனன்.

(இ-ள்.) அந்த சரவணப்பொய்கைக் கரையில் அனந்தமரங்கள் நெருங்கிய சோலையில் திரளாக நெடுந்தாய் எந்நாளுமுடைய தவப்பெருமை மிகுந்த முனிவர்கள் வாசஞ்செய்கிற அக்கிராரங்கள் அனேக சிறப்பாயிருக்கின்றது, அந்நாளம் சிவன் விந்துவை கைக்கொண்டு வந்தபடியினாலே அதிகமோகமுண்டாய் முனிவர்கள் பத்தினிமார்களைப் புணரும்படி நினைத்து ஆசைகொண்டான் அக்கினிதேவன்.—எ-று. (௪௧)

உகந்தகனலிக்கரசி யுயர்மனைவியெனுமச் சுவாகாவுறிந்
நகந்தனில்விரும்புமுனி வரர்மனையிலருவுருவ மாயினு
ளிகந்தநினைவின்கொழுந னெண்ணினுனிதுபரி கரிப்பவே
சுகந்தருசுவாகவ வெனும்படிமனத்திடர் தொலைந்தனள்.

(இ-ள்.) ஆசைகொண்ட அக்கினிதேவன் நினைவைக்கண்டு அவன்தேவி சுவாகா வென்பவள் யோசனைசெய்து என் பர்த்தாவானவன் அனர்த்த நினைவினாலே அந்த முனிவர்கள் பெண்களைப் புணரும்படியாக யிச்சித்தான், அது தெரிந்தால் முனிவர்கள் சபிப்பார்கள், அப்படி யனர்த்தம் வராமல் உபாயஞ்செய்து அவன் மோகத்தை நான் தீர்ப்பேனென்று அந்தமுனிவர்கள் பத்தினிகளைப்போ லுருவமெடுத்துப் புணர்ந்து ஆசையைத் தீர்த்தாள். அந்தப்பெண்களென்றே எண்ணிக் கூடி முயங்கி ஆசையுந் தீர்ந்து மேலிடுக்கண் வராமல் தப்பித்துக்கொண்டான் அக்கினிதேவன்.—எ-று. (௪௨)

வருநந்தவ சூரர்மங்கைய ரழுதெம்புன லனைவர்
உதவஞ்சல திரளின்றுக மொருபுன்களை தொடவே.

(இ-ள்.) இப்படி உயுத்தஞ்செய்த சதுரங்கசேனை சூரர்களை யெல்லாம் கந்தசுவாமியானவர் தமது கைவில்லை வளைத்து நாண்பூட்டி குணத்தொனிசெய்து ஒரு அக்கினியாஸ்திரத்தை தொடுத்துவிடவே அது கோடானகோடி அஸ்திரங்களாய்ப் பெருகிப் பாய்ந்து சங்கரித்து அளவில்லாத ரத்தங்கள் பெருகிச் சமுத்திரத்திற்சென்று செந்நிறமாகியது யெப்படி யிருந்ததென்றால் இறந்த சூரர்களுடைய மங்கையர்க ளழுத கண்ணீர் பெருகம்போலு மிருந்தது.—எ-று. (௫௨)

வேறு.

எழுதினத்தவண் முருகரிப்படி யிகல்விளைத்தன ருசிதமாய்
விழுகதிர்க்குதை யழுமிதற்கிது விடிவெனத்தெரி கிலதா
வெழுபிணக்குரு திகள்சமுத்திர மினையவக்கட லிடையிலே
செழுமயிற்குக ரிரதம்விட்டனர் நிமாமரக்கல மெனவே.

(இ-ள்.) இப்படி ஏழுநாள் யுத்தகளத்திலே முருகவேள் விசித்திரமாகிய யுத்தஞ் செய்யும்போது உதையகாலம் அஸ்தமானகால மிவையென்று தெரியாமல் சமர்செய்து அனந்தங்கோடி சூரர்களை சங்கரித்தார் அசுரர் பிணங்கள் மகா பருவதங்களபோலுங் குவிந்தது இரத்தவெள்ளங்கள் சமுத்திரம்போல யிணாந்து பெருகிற்று அந்த இரத்தக்கடலிற் செழுமையுடைய மயிலவாகனக் கடவுளாகிய கந்தசுவாமி இரதம நடத்தினார் கடலிற் கப்பல் ஓடுவதுபோல.—எ-று. (௫௩)

எட்டுநாளினில் விட்டதானவ ரெண்ணில்கோடிகள் விண்ணுறப்
பட்டுவீழ்ந்தனர் சூரபன்மனோர் பாவியேதனி நின்றுவான
முட்டவோடினர் முண்டகன்முதல் மூவருஞ்செரு முருகரன்
றிட்டதிண்சமர் கண்டுகந்தன ரமராவதி தழைந்தவே.

(இ-ள்.) எட்டுநாளளவிலே சூரன் முறைமுறையா யனுப்பிவைத்த சதுரங்கச் சேனைச் சூரர்க ளளவில்லாத கோடிபேர் இறந்துவீழ்ந்தார்கள் மகா பாவியான சூரபத்மன் ஒருவனுந் தனியே வெளிப்பட்டு நின்று அண்டகடாகமுட்டி வோடிப்புகுந்தான் பிர்மா முதலாகிய மூவர்களும் முருகக்கடவுள் செய்த சமர் வெற்றியைக் கண்டு சந்தோஷித்தார்கள் தேவர்களெல்லாம் நாங்கள் பிழைத்தோம் பிழைத்தோமென்று சொல்லி சுவாமியைக் கொண்டாடினார்கள்.—எ-று. (௫௪)

சூரனெங்குளன் வீரவாகு துரந்தறிந்தவ னாவியின்
வேரமுண்பது நமதுவேலென நின்றுவேலர் நிகழ்த்தியே
பூரிமானில கோடிசூரியர் போல்விளங்கின னவ்விடை
கோரமாகியோர் தேரிலேறி யகோரசூர னடந்தனன்.

(இ-ள்.) அப்போது கந்தசுவாமியானவர் வீரவாகுவைப்பார்த்து அந்த சூரபத்மனவன் யெங்கும் ஒளிந்து யிருக்கிறான். அதுவறிந்து அவனுடைய உயிரைவாங்கும்படி நமது வேலாயுதத்தை விடுகிறேமென்று சொல்லி அனந்தங்கோடி ஆதித்தர்போலச் சோதிப்பிரகாசமாக விளங்கினின்றார். அந்தச்சமயத்தில் மகாகோரங்களுடனே கனகமயமான ஒரு தேரிலேறி அஷ்டகாசஞ் செய்துக்கொண்டு உத்தஞ்செய்யக் கந்தசுவாமியுடனே யெதிர்த்து வந்தான் சூரபத்மன்.—எ-று. (௫௫).

எதிரிசூரனனந்தபார விருப்புவன்முச லகமெடுத்
ததிரவண்டமுக டதிரவிண்டலமு மதிரமண்டலமு மதிரமீ
னுதிரவேலவ ருரத்தெறிந்திட லோங்கினனமர் தாங்கினர்.
கதிருமோடின மதியுமோடின கனலுமோடின ககனமே.

(இ-ள்.) சூரன் அளவில்லாத கனம்பொருந்திய வன்மையான இருப்புலக்கையை யெடுத்து தேவர்கள் மனம் நடுங்கியதிர ஆகாசம் பூமியெல்லாம் அதிர சந்திர சூரியர் நட்சேத்திரமெல்லாம் அதிர்ந்து உதிரும்படியாக வேலவருடைய மார்புக்கு நேராகச் சுழற்றி யோங்கி யெறிந்தான் அந்த உலக்கையானது அசிகவிசையுடனே மார்பிற்றாக்கவே அப்போது சோமசூரி யாக்கினி யென்னு முச்சுடர்களுமோடி ஆகாயத்தில் மறைந்தது.—எ-று. (௫௬)

பட்டநெட்டை யிருப்புலக்கையோர் பானல்மாலிகை யானதாற்
றொட்டகுந்த மெடுத்தெதிர்ந்தெதிர் சூரன்மார்பு பிளக்கவே
ரிட்டசோரிக னீலமால்வரை யெழுமணிச்சொரி யருவியின்
முட்டவொத்தனன் வேறோர்தேரொடு முகிலிடத்து மறைந்தனன்.

(இ-ள்.) எறிந்த இருப்புலக்கைவந்து கந்தசுவாமி மார்பில் தாக்கிச் செங்கழுநீர் மாலையாகி விழுந்தது அதுகண்டு சீக்கிரத்திலே ஆறுமுகக்கடவுள் ஒரு குந்தத்தை யெடுத்து சூரன் மார்புபிளக்க விடுத்தார் அதுவந்து சூரன் மார்பில் தாக்கினவுடனே இரத்த வெள்ளப் பிரவாகமாகப் பெருகிய தோற்றமானது நீலகிரியிலிருந்து யிறங்கிவருகிற செம்மணி யருவிபோலு மிருந்தது தேருஞ் சின்னபின்னமாக முறிந்து விழுந்தது பின்னையு மொருதேர்மே லேறிக்கொண்டு பாய்ந்து மேகமண்டலத்திற்குள்ளே மறைந்திருந்தான் சூரபத்மன்.—எ-று. (௫௭)

மறைந்துகற்கவண் மாரிபெய்தடு வாளிமாரி வழங்கவேள்
சிறந்தவாளிக ளண்டகோளகை நீழல்செய்து மறைந்தபின்
னறைந்தமாருத வம்புதொட்டன னஃதறப்பணி யம்பினால்
புறந்தாற்கசுரன் றொடுத்தவைபோக வாளிகளுதவினர்.

(இ-ள்.) முகிலில் மறைந்த சூரனானவன் கவண்டுக் கல்மாரி பொழிந்து அஸ்திரங்களையும் மாரியாகப் பொழிந்தான் அதை யெல்லா மறுத்தெறிந்து செவ்வேளாகிய கந்தசுவாமியும் அளவில்லாத பாணப் பிரயோகஞ் செய்து அண்டகோளகை யெல்லாம் நிழலாகி மறையும்படி சரக்கூடங் கட்டினர். அதுகண்டந்த சூரன் வாய்வாஸ்திரந் தொடுத்தெய்தான் அதை நாகாஸ்திரந் தொடுத்தெய்து அறுத்தெறிந்தார் பின்னையுஞ் சூரன் தொடுத்த பாணங்களுக் கெல்லாம் அஸ்திரப்பிரயோகஞ் செய்து அறுத்தெறிந்தார் கந்தசுவாமி.—எ-று. (௫௮)

பின்பனற்கணை பிணையல்வெட்சி பிறங்குபிள்ளை தொடுத்தபின்
வன்கனற்செய சுவாலைகண்டவன் வருணவாளி வழங்கினன்
பன்கனத்துள மோகவாளி பசாசவாளி யியக்கரோ
முண்கதித்தமய னஸ்திரநாலுமோர் முகமுனைந்துசமர் முடுகினன்.

(இ-ள்.) அழகிய வெட்சிமாலை சூடிய மார்பினையுடைய குமாரசுவாமி யகோரமான அக்கினியாஸ்திரத்தைத் தொடுத்தெய்தார் அதனாலே அண்டமெல்லாம் அக்

கிளரிச் சுவாலையாக முழங்கி வருகிறதைக்கண்டு வருணாஸ்திரம் தொடுத்து ...க்கினான். பின்பு பெருமையான மோகனாஸ்திரம், பேயாஸ்திரம், இ...ரம், மயூராஸ்திரம் இந்நாலு அஸ்திரங்களும் தொடுத்து ஒருமுகமாக...போர்செய்தான் சூரபத்மன்.—எ-று. (௬

முனையினுலவு கைச்சரந்தனை முண்டகன்கணை கொண்டறுத்
துனையமர்க்கிடை மற்புயத்திலு டற்றுகென்ன விடுத்துவான
றனில்மறைந்தரி வராகவன்புலி தகர்க்கிடாகரடி தடவுரகா [தான
வினைகொள்புள்ளின் மென்குவார்மாய விதத்தெதிர்ந்துபல் வினைசெய்

(இ-ள்) சூரனானவன் ஒரு முகமாகத் தொடுத்தெய்த நாலுதேவாஸ்திரங்களையும் பிர்மாஸ்திரந்தொடுத்து அவைகளை அறுத்தெறிந்தார் கந்தசுவாமியானவர் பின்னுமனேக அஸ்திரங்களினால அவர் புயங்களில தாக்குமபடியாகப் பிரயோகஞ்செய்து ஆகாயத்திலே மறைந்து சிங்கம்போலும், பன்றிபோலும், வலிய புலிபோலும். தகர்க்கிடாய்ப்போலும், கரடிபோலும், பெரிய பாம்புகள்போலும் இப்படியனேக வடிவெடுத்துவந்து வினைகளைச்செய்து பின்பொரு சக்கரவாளப்பட்சிபோலும் மாயாசொரூபமெடுத்தெதிர்த்துப் போர்செய்தான் சூரன்.—எ-று (௪0)

மாய்கைவன்றொழில் வலலசூரன்ம லைந்தபூசலு லைந்திட
வீய்கைமேருவெ னச்சிறந்தவ னேமவெற்பென நின்றுதம்
பாய்கதிர்ச்ர ணம்பரன்பத மெண்ணிமாயைசெய் திருதர்கோன்
சாய்கையிற்பொரு சத்திகொண்டுச மர்க்கெதிர்ந்தனர் சண்முகர்.

(இ-ள்.) இப்படியனேகவித மாயகையான விஞ்சைகளில வல்லவனான சூரன் செய்கின்ற மாயாவிஞ்சையெலலா மடங்கும்படியாகச் சொர்ண்மயமான சிறப்புடைய மகாமேருபோலு மசையாது விளங்கித் தனது தந்தையான பரமேஸ்பரர் சுடர்பொருந்திய பாதங்களை யிருதயத்தில் தியானஞ்செய்து சூரன் செய்த மாயாவிகார விஞ்சை சாலங்களெல்லா மொழியும்படிசெய்து தம்முடைய கையிலே சத்திவேலாயுதத்தை யேந்திக்கொண்டு முனைந்து போர்செய்தார் சண்முககுமாரர்.—எ-று. (௪௧)

பாகமாதவி யிரதமேலவரு பாரவேலவர் வேல்தொட
நாகமும்பல நாகமுந்திசை நாகமுங்கிடுகி டென்னவே
மேகபந்திகள் சூாதிதார்பிளிர வெள்ளியின்குல மதிரவின்
பூகணைக்கந டுங்கிமுச்சுடர் போயிருண்டன புவனமே.

(இ-ள) மாதலி நடத்தப்பட்ட இரதத்தின்மீதேறிவருகிற கந்தசுவாமி சூரன் பேரிலே சத்திவேலையெடுத்து விடுத்தா ரப்போது நாகலோகங்களும, பல மலைகளும், அஷ்டகுல பருவதங்களும் அதிர்ந்து சப்திக்க மேகவரிசைக ளெல்லா மிரத்தமாரிகளாகப்பொழிய நட்சத்திரக் கூட்டங்களெல்லா முதிர பூமி நடுங்கி சோமசூரியாக்கினியென்னு முச்சுடர்களும் ஒளிமழுங்கி புவனங்களெல்லா மிருண்முடினது.

இன்னதூற்குறி சூரனெஞ்சக மெய்திமெய்த்தரு மாலுறத்
துன்னுபுன்முதற் றுருவின்பல சொருபமாயொரு சூததாய்
வென்னுறைப்பெரிய வாரியிற்பத மேலதாய்முடி கீழதாய்த்
தன்னிலைக்கா வுடனெழுத்தொரு தாருவின்படர் தக்கனன்.

(இ-ள்.) இப்படி கந்தசுவாமிவிட்டவேல்வருகிற அதிர்ச்சியைக்கண்டு பயந்து ...டுங்கி அனேக துற்குறி யுண்டானதகண்டு சூரன் மனதகலங்கி புல்முதலான...

னைகவிருட்சங்களாக மாயாசொரூபமெடுத்துபின்பு ஒருபெரிய மாமரவடிவெடுத்து வெண்ணுரையும்பொருந்திய பெரிய கடல்நடுவில் கால்மேலுந் தலைகீழுமாகத் தன்மனக் கூடாகக் களவுசெய்து ஒளித்து நடுங்கிதுன்பத்தைக் கொடுத்தான் சூரபதமன்.-எ-று.

திரிபுரந்தனை யுமதுதந்தைமுன் பெரிபுரஞ்செய்த செயலைப்போல்
பரிபுரந்தரு பதசவுந்தரி பயனுகந்தருள் சத்தியால்
விரிபுரம்வெருவு மயபுரந்தனில் வீரசூரனை வெல்கவென்
றரிபுரந்தர னயனருந்தவ ராசியோடலர் வீசினர்.

(இ-ள்.) அந்த வேளையில் திரிபுரத்தை உமது தந்தையான பரமேஸ்பரன எரித்ததுபோலுஞ் சிலம்பணிந்த பாததலைதயுடைய அழகிய திரபுரசுந்தரியான பராசத்திகொடுத்த வெற்றி வேலாயுதத்தினாலே விசாலமாகிய மயேந்திரபுரத் திறைவனாகிய சூரனைக்கொன்று வெற்றிபெறுகவென்று கந்தசுவாமியை பிர்மமா, விஷ்ணு, தேவேந்திரன், தேவர்கள், முனிவர்கள் ஆசீர்வாதஞ்செய்து புஷ்ப வருஷம் வருஷித்தார்கள்,-எ-று. (௬௫)

கூறுமாசிகொடு வீரசேனையொடு கொற்றவேலவரும் கொடுமைகண்
டூறில்சூரனன் ஞகவெற்பினி லிடைந்திடைந்து விழுந்தனன்
மாறிலவ்வறை வருதலாலொரு வன்மைசண்முகர் வேலினாற்
கூறுபட்டுவி ழுந்தனனிரு கூறுகோழிபு மயிலுமாய்.

(இ-ள்.) அப்படி தேவர்கள் செய்யப்பட்ட ஆசிர்வாதங்களுடனேயும் வீரவாகு முதலான வீராதிவீராகளுஞ் சூழ்ந்து போற்றிசெய்ய விளங்கா நின்ற கந்தசாமி சூரனைகொன்றுவாவென் றேவிவிட்ட வெற்றிபொருந்திய வேல்வருகிற கொடுமையைக்கண்ட அறிவில்லாத வீரசூரனானவன் நடுங்கி நாககிரிச்சாரலின் புறத்திலே யிடைந்திடைந்து விழுந்தான மாறுபாடில்லாத கிரிச்சார்பில் வருத்தலினாலும் வலிமையுடைய சண்முகக்கடவுளுடைய வேலாயுதத்தினாலும் இரண்டு கூறுபட்டு விழுந்தான் ஒருகூறு கோழியும் மற்றொருகூறு மயிலுமாயினான் சூரபன்மன்.—எ-று.

தோகைமாமயி லாகியரவிறை சுடிகைதன்னிடு வலகுகொண்
டேகுநாளெழு சேடனுமவர் வெந்தைகந்தர னிந்துதம்
வாகனாதிக மாகவேறி மடக்கினார்பொறி யெனவுடு
பாகுகோழிகொக் கரிக்கவென்றுப தாகைகொண்டனர் குமரரே.

(இ-ள் ) அப்படி கூறுபட்டு விழுந்த சூரனானவன் ஒருகூறு தோகைமயிலாகி நாகேந்திரன்முதலான அநேக நாகங்களை தன்வாயழகினாலே கொத்திக்கொத்தி யெடுத்திடுக்கஞ்செய்வதானம் எம்முடைய சாமியாகிய முருகக்கடவுள் தம்முடைய வாகனமாக யேறிநடத்தி மடக்கியடக்கினார் நட்சேத்திரங்களையும் பொறிகளாகக் கோழிகொக்கரிக் கொக்கரிப்பதுகண்டு அதனை வெற்றிக்கொடியாகக் கொண்டருளினார் குமாரசுவாமி.—எ-று. (௬௬)

குமரவீர னெதிற்பொருங்கன கோரசூரனை வென்றவன்
றமரார்வன்சிறை யாவுமீண்டவ ரடிவணங்க விருந்தபின்
றமருகந்தரு தாமனாக்கர சங்கரன்றனை வெங்காத்
தெமரவென்றிரு தாள்பிடித்தினி தின்பவன்பி னிறைஞ்சுவார்.

(இ-ள்.) வீரபராக்கிரமமுடைய குமாரக்கடவுள் தம்முடனே எதிர்த்து வலிய போர்செய்த சூரபன்மனைக்கொன்று வெற்றிகொண்டபின்பு தேவர்கள் சிறையனைத்தையும்மீண்டு அவர்கள் அடிவணங்க விருந்தருளினார். பின்பு தமருகமேந்தி

தாமரைக் கைகளையுடைய சங்கரனை பரமேஸ்வரனைத் தம்முடைய கைகளாலேயஞ்சலிசெய்து இரண்டு பாதபத்மங்களையும் பிடித்துக்கொண்டு இனியதாகிய மனோ பக்தியினாலே பூசித்திருந்தார் வேலவர்.—எ-று. (எள)

சூரபத்மன் வதைச்சருக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம்.—ருஉரு.

---

# முருகர் சிவார்ச்சனைச் சருக்கம்.

புத்தேளிர் தமைப்புரப்பப் பொருந்தாரு கனைத்தடிந்து புவனமூன்றில்
மெய்த்தேசு தாவெழுந்து விளங்கியநா கக்கிரியில் வேலர்மேவிப்
பைத்தேசு பெறவணிந்த பரனையடி வணங்கியெதிர் பகைமைக்காய்ந்த
வத்தீமை யகல்வதற்கே யறுமுகவர் சிவார்ச்சனையி லருள்வைத்தாரால்.

(இ-ள்) தேவர்களை இரட்சிக்கும்பொருட்டாக தாருகாசூரனைச சங்கரித்து திரி புவனங்களிலும தேககாந்தியுடனே யெழுந்தருளி விளங்கிய நாககிரியிலவந்துசேர்ந்து பாம்புகளை யாபரணமாகததரிதத பரமேஸ்வரனைசகண்டு அவருடைய் பாத கம லஙகளை வணஙகி யெதிாதத பகைவரான சூரர்களைகொன்ற தீமையான பிரமகத்தி தோஷம் தீரும்படிககுச் சிவார்ச்சனைசெயயக கிருபைகூர்ந்து அருளினர் ஆறுமுகக் கடவுள.—எ-று. (க)

அகத்தியர்நா ரதர்வசிட்டர் கவுதமர்சீர் விசுவாமித் திரப்பேரானோ
மகத்துஜம தக்கினிப்ப ராசரர்பா ரத்வாசர் மறைவியாசர் [வானோர்
சுகத்தவர்மார்க் கண்டர்கவுண் டிகர்முதலோர் தொல்முனிவர் சுரர்கோன்
மிகக்குழுமி வேதனும்வே தனைக்கமல வுந்திதந்த விண்டுசூழ.

(இ-ள்) அகஸ்தியர், நாரதர், வசிஷ்டர், கௌதமர், விசுவாமித்திரர் என்னும் பெயரையுடைய முனிவர்களும், சதாயாகஞ்செய்கின்ற சமதக்கினி, பராசா, பரத்து வாசர், வேதவியாசர், சுகா, மார்க்கணடேயா, கவுணடிகர், முதலாகிய பூர்வார்ச்சித மான முனிவர்களும், தேவர்களும, தேவேந்திரனும், பிரமாவும், விஷ்ணுமுதலான சகலரும் சூழப்பெறறூர குமாரக்கடவுள.—எ-று. (உ)

தனதுதிருப் பேரதனாற் றண்குமா தீர்த்தமெனச் சயிலத்தாக்கித்
தினமுனிவர் மூழ்கநவ தீர்த்தமதிற் றாபித்துத் தினந்தான் றோய்ந்து
மனதினா கேசுரனை வந்தித்து முப்பொழுதும் மலாத்தாளபோற்றி
யனவரத மைந்தெழுத்தை யறுமுகத்து மானுபதே சத்தாற்பெற்றார்.

(இ-ள்.) அப்படி யனைவருஞ் சூழ்ந்துவா விருந்த குமாரக்கடவுள் அந்த நாககிரி யில் தம்முடைய பெயரால் குமாரதீர்த்தமென் றொருதீர்ததமுண்டாககி தினந்தினம் முனீஸ்வரர்கள் முழுகும்படியாக அந்தத்தீர்த்ததில் கஙகைமுதலாகிய நவதீர்த்தங்க ளும் ஸ்தாபித்து அதில் தாம்மூழ்கி மனவுறுதியாக நாகேஸ்வரனை வந்தனைசெய்து திரிசந்திகாலமும் அவர் பாதாரவிந்தங்களைப் போற்றிசெய்து அனவரதகாலமும் சிந்திக்கும்படியாய்ப்பஞ்சாட்சரஙகளை ஆறுமுகத்தினுஞ் சிவ னுபதேசிக்கப்பெற்றார்.

பெற்றுமையா கனைத்தினமும் பெருமிதப்பின் னிருகாத்தாற் பிரசமென்பூங்
கற்றைகுலை குவைசொரியக் கற்பகப்பூங் காமலையின் கண்ணதாக்கிக்

கொற்றமுற வட்டிருதர் கொன்றபிர மஹத்தியறக் கோலத்பாக
னற்றளிம வடிவையுள களின்மல ரிடையிருத்தி னைந்தார்கந்தர்.

(இ-ள்.) அருமையாகப் பெற்றுக்கொண்ட பஞ்சாக்ஷரங்களைத் தியானஞ்செய்துக்கொண்டு அர்த்தநாரீஸ்வரரைத் தன்னுடைய பன்னிரண்டு கைகளினாலுந் தேனைபொழியப்பட்ட திவ்விய புட்பங்களைக் கற்றைகற்றையாய்க் குப்பல குப்பலாக வாரிச் சொரிந்து பூசிக்கும்படியாகக் கற்பக புட்பகாவனந் திருநாககிரியி னிடத்தி லுண்டாக்கி அகோரமான கோபத்துடனே அடர்ந்தெதிர்த்து யுத்தஞ்செய்து அசுரர்களைக்கொன்ற பிரமகத்தி தீரும்படியாக உமைபாகருடைய திருவடியைத் தமது மனத் தாமரைப்பூ மத்தியிலிருத்தி அன்பினா லுருகி ஆனந்த பரவசமானார் கந்தஸ்வாமி ()

பின்னலைமன் னியமுடியும் விண்டொளிரம் பிறைநுதலும் பிணையினோக்கு
மன்னியபுன்னகைவாயும் வளைக்குழையும் மானகனறும் வயங்குங்கையுந
துன்னியவங் கதப்புயமுநறுடைகொங்கை நிறைமார்புந துசச்செம்பட்டின்
பன்னியலு மருங்குலும்பொற் பாடகப்பா தமுநினைந்து பணிந்தார்வேலர்.

(இ-ள்.) பின்னலையுடைய சடைமுடிக் கூந்தலும், பிரகாசிக்கின்ற பிறைபோன்ற நெற்றியும், மானபோன்ற பார்வையையுடைய கண்களும், நகைபொருந்திய திருவாயும, சங்ககுழையும, மானமழுவேந்திய கையும, நாகசேயூரந்தரித்த புயங்களும,சொர்ன ரத்தின மாலைகள் நிறைந்த முலைமார்பும, செம்பட்டுடுத்திய இடையும், சொர்னபாடக மணிந்த திருப்பாதமும் இப்படி அர்த்தநாரீஸ்வரருடைய ரூபத்தை மனதிலே நினைந்து துதிசெய்து வணங்கினார் வேலாயுதக்கடவுள்.—எ-று.(ரு)

வேறு.

அம்மனுக்கும், ஸ்வாமிக்கும், உபயார்த்தமாகப்பாடிய
அர்த்தனாரீசுரர் திருக்கவிதை.

* மனத்தினில்தியானம் மகரவகரம் யகரநகரம் சிகரஞ்சியே
வனத்த சிகரம் யகரநகரம் மகரவகரம் வகரஞ்சியே
தினத்த மகரம் யகரநகரம் நகரமகரம் சிகரமவா
யுனத்த யகரம் நகரமகரம் சிகரவகர மோதினரால்.

வேறு.

ஓதியசு ரேசர்பிர மத்திமுற்று முடைநதோட வெழுத்தோரைநதும்
பேதமுற விப்படியே செபத்தொழிலிற் குமரேசா பெரிதுகூறி
வேதநெறி தருபூசை தினம்புரிநது விமலரிணை யடியைப்போற்றிக்
காதலுறுங் * குமரேச ரெனுஞ்சிவலிங் கப்பூசை கருதுகினறார்.

(இ-ன்.) இந்தப்பிரகாரமோதிய அசுரர்களுடைய பிரமகத்தி முழுதும் நிவாரணமாகியோட ஐந்தெழுத்தையும பேதா பேதமாக மாறி மாறி தியானித்து செபஞ்செய்து மிகுந்த வன்புடனே வேதாகமபபடி பூசைநித்தியமும புரிந்து சிவனுடைய திருவடித்தாமரையைப் போற்றிசெய்து ஆசையுடனே குமரேஸ்வரர் சிவலிங்கபூசைசெய்ய மனதில் கருதினார் சுப்பிரமணணியசுவாமி.—எ-று. (எ)

கிளர்ந்ததெய்வ தீர்த்தத்தின் கிழக்காகப் பிரமதீர்த் தத்தின்றென்கீழ்
வளர்ந்தபன்னு கத்தீர்த்தத் திற்குமேற் றிசையாக வானோர்போற்றித்

---

குமாரதேவா சிவபூசை செய்தமையால் பரமசிவத்துக்குக் குமரீஸர் என்று பெயராயிற்று.

இத் திருக்கவிதை மந்திரத்தியானமாகையால் உரையிடாமல் எட்டினுள்ளபடி பதிப்பிக்கப்பட்டது.

தளர்ந்தபெருந் துயரகலத் தாருகனைற் றரும்பிரம கத்திநீங்க
விளைந்ததிருக் குமரேசர் வியந்தசிவ லிங்கமொன்று விதித்தாரன்றே.

(இ-ள்.) கிளர்ச்சியை யுடைய தெய்வ தீர்த்தத்தின் கிழக்காகப் பிர்ம தீர்த்தத்தின் தென்கிழக்காக வளர்ச்சியையுடைய நாகதீர்த்தத்திற்கு மேற்குத்திசையாக தேவர்கள் போற்றிசெய்து தளர்ச்சியுடைய மிகுந்த துயரங்கள் தீரத் தாருகாசூரனைக்கொன்றதைப்பற்றி வந்த பிரமகத்தி நீங்கத்தக்கதாக திருக்குமரேசர் அற்புதமான ஒரு சிவலிங்கத்தை அங்கனே விதித்து ஸ்தாபித்தார்.—எ.று. (௮)

தாபித்த சிவலிங்கந் தனிற்கயிலை நாயகனை யாவாகித்து
சேபித்தர்ச் சனைபுரிந்து சிவன்பதஞ்சோ டசவுபசா ரத்தாற்போற்றி
கோபித்துத் தனையடர்ந்த வசுரர்பிர மத்தியறக் கோமூன்றனை
நாபித்துஞ் சதுர்வேத மந்திரத்தாற் ருேத்திரங்க ணவிலாநின்றார்.

(இ-ள்.) அங்ஙனம் ஸ்தாபித்த சிவலிங்கத்தில் கைலாசநாதனை யாவாகனஞ்செய்து தெரிசித்து அர்ச்சனைபுரிந்து சிவனுடைய பாதமலர்களைச் சோடசவுபசாரங்களால் பூசித்துப் போற்றிசெய்து தம்மைக் கோபித்துவந்த அசுரர்கள் பிரமகத்தி தீர திருநேத்திரனை நாவினாலே சதுர்வேத மந்திரங்களா லர்ச்சனைசெய்து வணங்கினார்.—எ-று. (௯)

சிவலிங்க மதுபடிக நிறமாகத் திருமுகமைந் துந்தோட்பத்துந்
தவசிந்தை தருந்திருக்க ணைம்மூன்றுந் தடங்கரத்திற் படையீரைந்தும்
நவசிந்து ளாயமதி புரகமுறைந்திடுசெடில நறுங்கிரீடம்
பவசிந்தை யறும்பணையின் பாங்குமுரு கேசருளம் பதித்தாரன்றே.

(இ-ள்.) அந்த சிவலிங்கத்தில் படிகநிறமாக ஐந்து திருமுகமும், பத்துத் தோள்களும், தவசிந்தைகொடுக்கும் பதினைந்து திருக்கண்களும், லகையிற் பற்றிய தசாயுதமும், புதுமையான சங்கையும், இளம்பிறையும், நாகமும் பிரியாமல் வசிக்கப்பட்ட சடைமுடியோங்கிய கிரீடங்களும், பவசிந்தாகுலந தீர்க்கப்பட்ட உமையொருபாகமுமாகத் தமதுள்ளத்தில் நினைத்து ரூபத்தியானஞ் செய்தார் முருகேசர்.—எ-று.

அமரேச ரடிபரவ வசுரேசரிடர்தொலைய வகிலம்வாழ்கக்
குமரேசனொன்றுசிவ் லிங்கத்துக்கொருதிருநா மந்தான்கூறி
நமரேசரெனப்பணிய நகரேசர்நயந்ததிருச் செங்கோடாங்கண்
சமரேசனெனவெதிர்த்த தாருகனைக்கொன்றநவை தணிந்தார்வேலர்.

(இ-ள்) அமரேசரான இந்திரரும், தேவர்களும் அடிவணங்க அசுரேசரான சூரர்குலங்களெல்லாம் அற்று நசித்துப்போக அகிலாண்டங்களெல்லாம் வாழ்வுண்டாக அப்போதந்த சிவலிங்கத்துக்குக் குமரேசனென்று ஒரு திருப்பெயரிட்டு நம்முடைய சுவாமியென்றும் நராதிபதிகளான சகலரும் பத்தியுடனே வந்து சேவிக்கும் திருச்செங்கோட்டுத் தலத்தில் யுத்தத்திலே நாசகாலனென்று வந்தெதிர்த்த தாருகாசூரனைக்கொன்ற பிரமகத்தி தீர்ந்து பிரகாசமாக விளங்கினார் குமாரர்.—எ-று.

தாருகன்றன் பிரமகத்தி தனியகன்றுபின்னரவண் சண்முகேசர்
காரகன்று பிரியாத கனகதிருச் செங்கோட்டிற் கடிந்தசூரன்
பேரகன்றங்கவன்போலப் பின்பிடிய வன்மமுதற் பின்னுந்தம்பேர்ச்
சீருக்ந்தமுருகேசரெனுஞ்சிவலிங் கப்பூசை செய்தன்மேய்ந்தார்.

(இ-ள்.) தாருகாசூரனைக்கொன்றதினால் வந்தபிரமகத்தி தம்மைவிட்டு நீங்கினபின்பு அங்ஙனம் சண்முகக்கடவுள் மேகம்பிரியாமல் மொய்த்த கனகமயமான

திருச்செங்கோட்டுத் தலத்தில் தம்முடைய கைவேலால் சங்கரித்த சூரபன்மனிறந்து அவன் பேர்போயும் அவனைப்போலச் சாயாசொரூபமாகத் தொடர்ந்து வந்த பிரமகத்தி நீரும்படியாகத் தம்முடைய பேராலே அழகிய முருகேசனென்னும் ஒரு சிவ லிங்கத்தைப் பூசித் தர்ச்சனை செய்யத்தொடங்கினர்.—எ-று. (கஉ)

தேவருலகத்துமிகச் சிறந்தகற்பதாருவெலாந் திதியின்சூரன்
பர்வமனையிடத்துவைத்தா னவற்றையெல்லாம் பணிமலையிற் பதித்தாரந்த
காவிலொருகற்பகக்கா கதித்தனவத்தருவினிழற் கண்ணதாகத்
தாவிலருள்முருகேசர் தனைத்தாபித்தற்சிக்குந் தன்மைகூர்ந்தார்.

(இ-ள்.) தேவலோகத்தில் மிகுந்த சிறப்பையுடைய கற்பகதருவையெல்லாந் திதி புத்திரனான சூரன் தன்னுடைய பாவஞ்சூழ்ந்த மாளிகையினிடத்து வைத்திருந்தா னதுகளையெல்லாங் கந்தசுவாமியானவர் கொண்டுவந்து திருநாககிரியிடத்திற் பதித்துவைத்தார் அந்தப் புட்பகாவனத்தில் சிரேஷ்டமாக யிருந்த கற்பகவிருட்சத்தின் நிழலினிடத்திற் சற்றுங் குறைவில்லாத கிருபாமூர்த்தியான முருகேசுரனைப் பூசித் தர்ச்சிக்குந் தன்மையாக அன்புகூர்ந்தார், முருகக்கடவுள்.—எ-று. (கங)

வந்தியபாடாணமலைப் பாண்டீசர்வளமேற்பால் வந்தநீர்த்த
தந்தகுமரச்சுனையிற் சண்முகர்சென்றாடிமுனி வர்தற்சூழ
முந்துநியதிகள்முடித்து *முருகேசர்தமைத்தொழுது முக்கண்ணனைச்
சந்ததமும்பிணாபாங்க ரஞ்சதாசிவவிலிங்கந் தன்னுட்கண்டார்.

(இ-ள்.) பாண்டீசுரசாமி யெழுந்தருளியிருக்கின்ற வந்தியாபாடான மலைக்கு மேற்குப்புறத்தில் தம்மால் ஏற்படுத்திவைத்த திவ்வியகுமார தீர்த்தத்தில் முழுகி நேமத்துடனே முனீஸ்வரர்கள் தம்மைச் சூழ்ந்துவர முதன்மையான நித்தியகன்ம நியதிகளெல்லா முடித்து முருகேசுரனை யாகப்பிரகாரம் பூசைசெய்து அர்ச்சித்துக் கைதொழுது சதாகாலமும் திருநேத்திரனை உமையொருபாகமாக வெழுந்தருளிய சதாசிவமிதுவென்று அந்தச் சிவலிங்கத்துள் சிவசொரூப தெரிசனங்கண்டார்.—()

கண்டுமுரு கேசர்தமைக் கைதொழுதபடிமுருகே சரையும்போற்றி
மண்டலஞ்சூழ்பணிமலையில் வருநாகதீர்த்தத்தின் மகிழ்விற்றோய்ந்து
விண்டலஞ்சூ ழிமையர்விர தியருமுனி வர்களும்விழை யாடிக்கூடிப்
புண்டரிகன்முதல்விரும்பச் சத்திரபோசனங்கொடுத்துப் புரிந்தார்கந்தர்.

(இ-ள்.) அப்படி தெரிசனங்கண்டு பக்தியுடனே முன்குமரேசுரனைப் பூசித்தபடியே முருகேசுரனையும் பூசித்து பூமண்டலங்களெல்லாம் வணங்காநின்ற திருநாககிரியிலிருக்கும் நாகதீர்த்தத்தில் மிகுந்த மகிழ்ச்சியுடனே மூழ்கி விண்ணுலகஞ் சந்தோஷத்துடனே வந்து சேர்ந்து பிரமாமுதலான பிராமணசனங்களனைவரும் விரும்பிப் புசிக்கும்படியாகச் சத்திரங்கட்டிப் போசனங்கொடுத்துப் பிரியகூர்ந்தார்.—எ-று. (சரு)

இப்படியிப்படிதெய்வ யுகத்தனந்தநாள்முருகே சரையுமேத்தி
மைப்படிவநாகேசர் மலர்ப்பதத்தையாதரித்து மங்கைபாகன்
மைப்படியுஞ்சடைமுடியான் பங்கயப்பாதந்தொழுது பருணபேத
மொப்பறுமந்திரமோதி யுரகவரைமீதுதவ முதவாநின்றார்.

(இ-ள்.) இந்தப்பிரகாரம் தேவயுகத்தி லளவில்லாதநாள் பூசைசெய்து வணங்கி வாழ்த்தி நாகேசர் பாதாரவிந்தங்களைப் பணிந்தேற்றி சற்பாபரணங்களைத் தரித்தச

முருகர் பூசித்தமையால் பரமசிவத்துக்கு முருகேசரென்று பெயராயிற்று.

டையையுடைய அர்த்தநாரீஸ்பர சுவாமி பாதமலர்களைத்தொழுது வணங்கி வருண பேதமாகி யொப்பற்ற மந்திரங்களை யுச்சரித்துக்கொண்டு நாககிரியின்மீது தவஞ் செய்கின்றார் கந்தசுவாமி —எ-று, (கசு)

உதவியன்று ளதனினுடற் றியதாருக்கன்சூரா னுமைசேய்மீதில்
விதமுறப்பற் றியவினைகள் விட்டனந்தகாந்தியுடன் விளங்காநின்றார்
திதமிகுசெங் கோட்டிலந்த நாகநீர்த் தஞ்சத்ர தீர்த்தமென்று
மிதவியநாமம்படைத்து இமையவருந்தமதுவினை யாவுந்தீர்ந்தார்.

(இ-ள்.) அப்படி த்தவஞ்செய்கின்ற காலத்தில் தம்முடைய கைவேலினாலே சங்கரிக்கப்பட்ட தாருகாசூரன் உமையின் புதல்வனான முருகேசர்பேரில் வர்ணபேதமாகப் பற்றிப்பிடித்த பிரமகத்தி தோஷவினைகளெல்லாந்தீர்ந்து விமோசனமாகி அனந்தங்கோடி சூரியப்பிரகாசமான தேசகாந்தியுடனே விளங்கிநின்றார் பெருமை மிகுந்த திருச்செங்கோட்டில் நாகதீர்த்தஞ் சத்திரதீர்த்தமென்று மழகிய பேர்படைத்து தேவர்களுந் தங்கள் வினைகள் தீர்ந்து சுகம்பெற றிருந்தாகள்.—எ-று (கஎ)

தமதுவினையகன்றதற்பின் றருமருவுதிருச்செங்கோட் டானைச்சார்ந்து
நமதுயிராகியமுருக நாயகந்தைவிடுகவெனா நளினத்தோனு
மெமதுமுனிவாருநிறை யிமையோருமிந்திரனும் பாருமீணடி
யமதுகுமாரருக்கடியோ முதவுகைமா றென்றுளதென் றுரைக்கலுற்றார்.

(இ-ள்.) இப்படி தங்கள் வினைகளெல்லாந் தீர்ந்தபின்பு கற்பகச்சோலை சூழ்ந்த திருசசெங்கோட் டர்த்தநாரீஸ்பரரைக் கண்டு வணங்கிச் சொல்லுகிறார்கள் சுவாமி யெங்களுக்கு குயிருக்குயிராகிய முருகக் கடவுளை யெங்களுடனே அனுப்பவேண்டு மென்று பிர்மதேவனும் முனீஸ்பரர்களும் நிறைந்த தேவர்களும் தேவேந்திரனும் வந்து தேவரீருடைய குமாரருக்கு அடியேங்களால் செய்யப்பட்ட கைமாறென் னவென்று அறிவிக்கின்றார்.—எ-று. (கஅ)

தெய்வமகபதியுதவு மடவாலைமுருகருக்குத் திருக்கல்யாண
முய்வரச்செய்தமருலகத் துலவாவீரேழுலகு முவந்துபோற்ற
விவ்வளங்கண்டடியேங்க ளிருவிழிபுங்களிகூர்தற் கேமைபாக [ரால்.
செவ்விதருள்புரிகெனச்செங் கோட்டிலரன் றிருப்பதந்தோத் திரஞ்செய்தா

(இ-ள்) தேவேந்திரன் மகளான தெய்வசேனையை முருகக்கடவுளுக்கு நாங்களுய்யும்படி திருமணஞ்செய்தா செய்வலோகத்தில் உலாவி வரும்படியான அழகை கண்டு ஈரேழுலோகமும் போற்றிப்புகழ எங்கள் கண்களுளிரக்கண்டு சேவித்து சந்தோஷிக்கத் தக்கதாக உமையொருபாகனை நன்மையாகக் கிருபைசெய்தருளுமென்று திருச்செங்கோட்டில சுவாமி திருப்பாதங்களைத தெரிசித்து வணங்கிப் போற்றிசெய்தார்கள.—எ-று. (க௯)

தேவர்கணமடிபோற்றிச் சேய்க்கினியதிருமணம்யாஞ் செய்துமென்னு
மாவன்மொழிதிருவுளத்தி லடைந்துளம்பா கருமாறுமுகத்தான்றன்னைப்
போவதுநன்றென்னவருள் புத்தேளிருடன்போற்றிப் புயலின்வெய்யோன்
மேவியதுபோல்மயில்வா கனமேற்கொண்டெங்கள்கந்தர் விரைகின்றால்.

(இ-ள்.) தேவாகளெல்லாம் சுவாமிபாதத்தைப் போற்றிசெய்து கநதசுவாமிக்குத் திருக்கல்யாணஞ் செய்குவோம் நாங்களென்று மனமகிழ்சசியுடனே சொன்ன பிரிய வசனங்களைக்கேட்டு சுவாமி திருவுள்ளத்தி லன்புவைதது சுவாமி ஆறுமுகக் குமாரனைப் பார்த்து நீ யிப்போது தெய்வலோகத்துக்குப் போவது நன்மையான காரியமெ

ன்று விடைகொடுத்தருள அப்படியே அவர்கள் கூட்டத்துடனே போற்றிசெய்து கார்மேகத்திற் சூரியன் சேர்ந்ததுபோல மயிலவாகனத்தின்மேலெழுந்தருளிச் சென்றார், கந்தசுவாமி.—எ-று. (உய)

கந்தர் சிவார்ச்சனைச்சருக்கம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-ருசரு.

---

# குமாரர் திருமணச் சருக்கம்.

தோகைமாமயில் மீதுவேலவர் சுந்தரந்தர விந்திர
நாகதேவ புரத்திலேகு நலத்தையாதென நவிலுவா
மீகமேரு வெடுத்தமுப்புவ னங்களெங்குமோ ரின்பமா
யாகமெய்த்துய ரற்றுவாழ்ந்தன ரண்டரண்டம் விளங்கியே.

(இ-ள்.) தோகைமயில் வாகனத்தின்மேலேறி வேலவர் அழகுபெறத் தக்கதாக இந்திரநகரத்திற்குச் செல்லாநின்ற விசேஷத்தை யென்னென்று சொல்லுவோம்! மகாமேருவைச் சூழ்ந்த திரிபுவனங்களெங்கும் மோகவின்பமாகத் தேகசவுக்கியமாகத் துயரங்களெல்லாந் தீர்ந்து வாழ்ந்தார்கள், அண்டபகிரண்டங்களெல்லாம் விளங்கி யிருக்கும்படியாக.—எ-று. (க)

சண்முகன்வரு போதுவானவர் தானவர்க்கிறை தாருகன்
விண்முனைந்து பிடித்தவன்சிறை மேயதெய்வ ரம்பையர்
கண்முகங்கதிர் கண்டபோன்மலர் காணநண்பரோ டெதிர்கொளா
எண்முனைச்செய்திவ் வாழ்வுதந்தநீ ரின்னவின்பநீ ரெய்துவீர்.

(இ-ள்.) ஆறுமுகக்கடவுள் வருகிறபோது தேவர்களை அசுரேந்திரனான தாருகாசூரன் தேவலோகத்திற் போர்செய்து பிடித்துக்கொண்டுபோய் அவன்வைத்த சிறையில் சிக்கியிருந்த தெய்வரம்பைகள் சூரிய உதயங்கண் டலர்ந்த கமலம்போலும் முகமலர்ச்சியாய்த் தேவர்களான தங்கள் தங்கள் சனைருடனே யெதிர்கொண்டு கண்குளிரக்கண்டு சேவித்து எண்ணுதற்குரிய விஜயஞ்செய்திந்த வாழ்வுதந்தீ ரின்னம் அனேகவின்பங்களை அனுபவிப்பீரென்று பிரியவசனங்கள் கூறினார்கள்.—எ-று. (உ)

என்றுதேவரோ டனையமங்கைய ரிந்திராதியர் சந்திரர்
துன்றுசூரியர் வருணர்மாருதர் சொன்னமன்னிய வுத்தரர்
நன்றுதாருக னுக்கிடைந்தவ னூழியத்தி லழுந்தினோம்
வென்றிவேலவ வாழிவாழிநின் வேல்விளங்க விளங்கினோம்.

(இ-ள்.) என்றிப்படிச்சொல்லி தேவர்களுடனே மற்றுள்ள தெய்வப்பெண்களும் இந்திராதியர், சந்திரசூரியர், வருணர், வாய்வுகள் சொர்ன்னமுடைய குபேரர்களும் வாரீர் சுவாமி, அன்று தாருகா சூரனுக்குப் பயந்து அசுரருடைய ஊழியத்திலழுந்தினேம் வெற்றி வேலாயுதக்கடவுளே வாழி வாழி, உம்முடைய வேல்விளங்க விப்போது நாங்களும் விளங்கினோம்.—எ-று. (ங)

எனவியம்பினர் புட்பமாரி யிறைத்திறைஞ்சினர் வானுளோர்
கனிவினிந்திரன் வந்துநல்லரி யாதனத்தி லிருத்தினன்

கனகபோதடிகை புனைந்து கனிந்தரம்பையர் கானமோ
டினியநாடகமாட வேலவரின்ப முற்றுவிளங்கினர்

(இ-ள்.) என்றிப்படி பிரியவசனங்கள்கூறி புட்பமாரி பொழிந்திறைஞ்சினார்கள். தேவலோகத்திலுள்ளவர்கள் அப்போது அழகிய தேவேந்திரன்வந்து கந்தசுவாமியை மேன்மையான வொரு ரத்தினமயமான சிங்காதனத்திலிருத்திப் பொற்புட்பங்களிட்டு பாதபூசைசெய்து அலங்காரத்துடனே மனங்கனிந்து தெய்வரம்பாஸ்திரீகள் நடனசங்கீதங்களைப்பாட யின்பமுற்று விளங்கினர் வேலவர்.—எ-று. (ச)

சத்தமாமுனிவரரும்விந்தை கொள்நந்தியுஞ்சதுர் வேதனு
மைத்துனச்சதுர்முகனும் வாழியமாமுகூர்த்தம் விதித்தனர்
சித்திரச்சசிவத்திரத்தொளிர் தெய்வசேனையை மெய்விளங்
குத்தமக்கதிர் வேலவற்குயர்வதுவை செய்தனனும்பர்கோனே.

(இ-ள்.) அப்போது சத்தமகாமுனிவர்களும் விஞ்சையுடைய நந்திகேசுரரும் சதுர்வேதங்களையுடைய மைத்துனனென சதுர்முகப்பிரமாவும் நன்மைபொருந்திய கலியாணமுகூர்த்தம் விதித்தார்கள். அழகிய பூரணசசந்திரனைப்போலும் பிரகாசிக்கின்ற முகமுடைய தெய்வசேனையை யலங்கரித்து நல்லவேலாயிற் ஒளியுடைய கதிர் வேலவற்கு திருமணஞ்செய்தவைத்தான் தேவேந்திரன்.—எ-று. (ரு)

வதுவைசெய்தயிராபதப்பிடர்வைத்து மச்சிரன்முதலியோர்
துதிவரமபையா நாடகத்தொடு தெய்வதுந்துமி முழவொழத்
துதிகொள்நந்திரர் கின்னரத்தொனிசுருதியின் சுருதிகளொழ
வுதவுமைந்தரு நிழலிரற்றெய்வ வுலகெலாம்வலம்வந்தனர்.

(இ-ள்.) அப்படித் திருக்கல்யாணஞ்செய்து வெள்ளையானையின்மீ தேற்றிவைத்து யிந்திரன்முதலான தேவர்களனைவருஞ்சூழ்ந்து சேவித்துவர தெய்வரம்பையர் நடனஞ்செய்ய துந்துமிவாத்தியங்கள்முழங்கத் துதிசெய்து தந்திராகிய கெந்திருவர்களும் கின்னரர்களும் செய்யும்வீணை கானமும் வேதசுருதிகள் ஓசை முழங்க யீந்துகையையுடைய பஞ்சகற்பகச் சோலைநிழலில் தெய்வலோகமெல்லாம் வலமாகவந்தார் கந்தசுவாமி.—எ-று. (சு)

வந்திருந்தரியாசனத்தில் வயங்குமுப்பத்து மூன்றெனு
மந்தவானவர் நாலுபத்தொடெண்ணாயிரத்தவ விருடிகள்
சந்ததம்புடை சூழ்ந்துவாசிகடத்தமன்பொடு சாற்றுமா
விந்திரன்பிரமன்குகற்கிவ ரிட்டமா முடிசூட்டினர்.

(இ-ள்.) அப்படி தேவலோகநகரில வலமாகவந்து அழகிய சிங்காதனத்தி லெழுந்தருளியிருந்தது முப்பத்துமுக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் முனிவர்களும் புடைசூழ்ந்துசேவித்தது மனமகிழ்ச்சியுடனே ஆசீர்வாதஞ்செய்துவிளங்கயிந்திரனும் பிர்மதேவனும் கந்தசுவாமிக்கு இரத்தினமயமான முடிசூட்டினார்கள்.எ-று.

என்றுமெங்கள் சேனாபதிப்பெயரெய்திநீ தெய்வசேனையும்
வன்றிறள்குமரேசா நீருநம்வாழ்வு தந்தருள்வாழ்கென
வொன்றுபோல வெலலோரு மோதினரும் பரிம்பரிந்திறைஞ்சிறு
ரன்றவற்கபையவர் தங்களோடருள் கொடுத்தனர்றுமுகா.

(இ-ள்.) இன்றுமுதலென்றைக்கும் யெங்கதேவர் சேனாபதியென்னும் பேர் பெற்றுவிளங்கி நம்முடைய தெய்வசேனையையும் வலிமைத்திறமுடைய குமரேசர்

நீரும் நமது வாழ்வுதந்தருளினீர். நன்றாகவாழ்க வாழ்கவென்று அனைவரும் ஒருவர்போல் யெல்லாரும் ஆசீர்வதித்தார்கள். உம்பரான மேலுலகத்தவரும் பாம்பரான பூலோகத்தாருமவ்வாறே வணங்கி வழுத்தினார்கள். அப்போது நன்மையாக காட்சிகொடுத்து அவையவர்களுடனே கிருபைசெய்தருளினார் ஆறுமுகக்கடவுள்.—எ-று.

அயில்விழிக் கமலமுகமுமைக்குழ லணிமணிக்குழையமுதவாய்க்
குயின்மொழிப்பிறைநுதல் வளைக்கரகொடி யிடைக்குல மலைமுலை
மயிலியற்கமுக விளைபுயத்தணைவனை மணிக்களவனநடை
செயலெழிற் பெறுதெய்வமாமயில் தெய்வசேனையோ டெய்தினார்.

(இ-ள்) வேலபோன்ற கண்களும், தாமரைப்பூப்போன்ற முகமும், மேகம்போன்ற கூந்தலும், அழகிய தாடகங்களணிந்த குழைகளும் அமுர்தவாயுங் குயில்போன்ற மொழியும், பிறைபோன்ற நெற்றியும், வளைகளைக்கைகளுங் கொடிபோன்ற யிடையும், மலைபோன்ற முலைகளு, மயில்போலுஞ் சாயலும், பசுமைசமூங்கிறபோன்ற தோள்களும், அலங்கிர மான திருமங்கலியாபரண மணிதரித்தும். அன்னம்போல நடையுமாக அழகையுடைய தெய்வசேனைப் பெண்ணுடனேசேர்ந்து மகிழ்ந்தெய்தினார் முருகவேள—எ-று. (௯)

தேவர்சூழவராமலைச்சிவ தேசிகன்றிரிபுரைபுரங்
காவலபெற்றருளாகி யீசுராகமலபாதம்வணங்கிநின்
றேவிழிக்குயி றெய்வசேனையை யிருவர்தாளு மிறைஞ்சுவித்
தாவலின்வலம்வந்து தந்தையை யன்னையைத்துதி பண்ணினார்

(இ-ள்.) தேவர்கள்சூழ்ந்து சேவித்துவர ஸ்ரீநாககிரியில் வந்தெய்தி சிவதேசிகரான திரிபுரசுந்தரி யிடப்பாகம பொருந்திவிளங்க அழகுபெற்றுடைய நாகீசுரர் பாதகமலங்களை வணங்கிநின்று அயில்விழிக் குயில்மொழியாளாகிய தெய்வசேனையும் சுவாமி அம்மன் இருவர்பாதங்களிலும் வணங்கி அன்புடனே பிரதட்சணம்வந்து தந்தையுந் தாயையுமவணங்கி தோத்திரஞ்செய்கின்றார் குமாரசுவாமி.—எ-று. (௰)

அடியன்யானறியாது செப்பிழையை நீபொருத்துய்யவென்
கொடியவலவினை மாற்றியாண்டிருகொங்கைதந்தென தன்னைமாற்
படியளந்தருள் படியினலடர் பாரதாருகன விதமெலாம்
பொடிபடித்திய வலியெனக்கருள் புதியவேல செய்தபுதுமையே.

(இ-ள.) அடியேன் என்னை யறிந்துசெய்த பிழைகளையெல்லாம் சுவாமி நீர் பொருத்தருளி வாழியென்று கொடிதாகிய வலவினைகளெல்லாந் தீர்த்தெனையாண்டு உபயமுலை யமுதந்தந்தருளிய யென் தாயிடமாகியபடியளந்தருளியபடியினாலே என்னை யடர்ந்தெதிர்ந்து யுத்தஞ்செய்த வலிபதாருகாசூரன்போர்த்தொழிலெல்லாம் நிர்த்தூளியாயபோகும்படி யெனக்கு வலிமையும வெற்றியும்கொடுத்த புதுமையையுடைய சத்திவேல்செய்த மகிமையென்றுசொல்லி துதித்தார்கந்தசுவாமி.

எனவணங்கிய சேயையிருவரு மிருகையார வெடுத்தணைத்
தனதுகல்வியு முனதுசீருநம் முயர்வுபோலுயர்ந்தோங்கவென்
றனநடைத் தெய்வசேனையைத் தமதருகணைத்தெமதறுமுகற்
கினியவின்முமன்பு மெய்துக வென்றுநண்பிலியம்பினார்.

(இ-ள்.) என்றிப்படிச் சொல்லிவணங்கிய குமாரசுவாமியை சாமி அம்மனிருவருந் தங்கள் கைகளால யெடுத்தணைத்து உன்னுடைய கல்வியும் அழகியசிறப்பும் நம்முடைய மேன்மைபோலுற றுயர்ந்தோங்கவென்று திருவாய்மலர்ந்தருளி யன்ன

டாக்கி யதன்கனிகளை வேலவர் திருவுளப்படி யமுதுசெய்வதாய் அனுக்கிரகஞ்செய் தருளினா ரதின்பெருமையை பிரமதேவனாலும் மதிக்ககூடாது.—எ-று. (கசு)

அந்தமாங்கனியறுமுகத்தரருந்து வாரிமையவர் பெறச்
சிந்துசிந்தமுத்ததினு லவர்திருவடிக்கு முடிக்குமாய
முந்த வெயதபிடேக முற்றி நம்முரு கரக் கனிமுக்கணு
ரெந்தைகொல் கெனவெத்தியுந்தம தென்றுமென்று மருந்துவார்

(இ-ள்.) இப்படி வதிசெயமான மாமரத்தின்கனிகளை யாறுமுகக்கடவுள் புசிக்கு மவ்வாறுதேவர்கள் பெரும்படியாக தேன்பொழிந்து சிந்தப்பட்ட வமுதரசமுடையதாய் நல்லகனிகளை சுவாமி திருவடிகளுக்கு முடிகளுங் குளிர்ச்சிபொருந்த முந்திச் சிலகனிகளை அபிஷேகஞ்செய்த சிலகனிகளை நிவேததியமாகவைத்து திருநேத்திர முடைய தந்தையே யென்கர்த்தனே அமுதுசெய்யுமென்று வன்படனே உபசாரமாக நிவேதித்து யென்றைசரும் அருந்துவார் வெற்றியையுடைய குமாரசுவாமி.-எ-று.

அருள்புரிந்துளபடி யெவர்க்கு மவ்வறுமுகர்க்கு மளிக்குமா
தெருள்புரிந்த நலலர்ச்சனைத் தொழில்செய்து நித்தமருந்தலால்
மருகளகன்றிடு மமுதவப்பினில வைப்பதாக வழங்குநம்
பருள்விளைந்தரு ளமுதமாவிரு பாற்பணைத்தெழு பாதமும்.

(இ-ள்.) சிவனுடைய கிருபையினாலே அர்த்தனாரீஸ்பரருக்கும் ஆறுமுகக்கடவுளுக்கும் நாளதவராமல் அமுதகனிகொடுத்துவரு மாதக்கனிகளை ஞானவறிவுடனே சிவனை யற்சினைசெய்து நிவேதித்து நிதநம்பொசித்துவருவார். குமாரர் மருட்சியிலலாத அமுர்தவைப்பில்லவைநது விளங்குவதாக பரமசிவன் கருணைகடாட்சத்தினாலே அந்த வமுதமாமரம் யிருபாரிசமும் பணைசெழுந்து ஓங்கிவளர்ந்து விளங்கியிருக்குதென்றவாறு. (கஅ)

அந்தவண்கனி யானுமம்மையு மறுமுகந்தனு மன்றிவே
றெந்தவானவர் எந்தமாதவருரனு முன்கவிசைந்திடார்
சிந்தையாலரு தொருவர்நுய்ப்பது செய்யிலங்கவர் செய்யநர்
நந்துவெங்கனலைச் சொரிநதிடு நரகம்விட்டும னன்பரோ.

(இ-ள்.) அப்பம வன்மையையுடைய மரத்தின் கனிகளானது சுவாமியும் அம்மனும் ஆறுமுகக்குமாரரும் அமுதுசெய்வதல்லாமல் மறறப்படி யெந்தத்தேவாகளானாலும, யெநதமாதவர்களானாலும. விரும்பிய புசிக்கனிகளைதநுப் புசித்தால் அவர்களுடைய ராவு வெந்துபோகுமபம வெப்பியநெருடபுகலை வாரிச்சொரிந்து நரகக்குழியில்தள்ளி உபத்திரஞ்செயவார்கள்.—எ-று. (கக)

சங்கவெண் குழைமங்கைபங்கர் சடாடவிப்பறையழதினால்
லங்கமெங்குமடித்தலைத்து யிறத்தநீரென வூறியோர்
பங்குமென்றளை பங்குபைந்துணர் பங்குபிஞ் சொருபங்கெலாந்
தங்குசெங்கனி தருநுமனனவர் தங்கள்கண்ணுறு லரியலாம்.

(இ-ள்.) சஙகக்குழையைத் தரித்தருளிய அர்த்தனாரீஸ்பரர் சடாமகுடத்தில் பிரகாசித்திருக்கின்ற சநதிரபிறை யமுர்தத்தினாலே அந்த மாமரத்தினுடைய தேகமெல்லாம் அஷ்டதலத்திலும் நிறைந்து நிரப்பினதுபோலும் அமுர்தமூரியொருபங்கு பசுமையுடைய பூங்கொத்துகளும். ஒருபங்கு மெல்லியதழைகளும். ஒருபங்கு பிஞ்சுகளும், ஒருபங்கு சிவந்தகனிகளாக விளங்கியிருக்கும் அப்படித் தெயவீகமான மாமரம் யிந்த மணவுலகத்து நரமனிதர்கள் கணகளுக்குத் தெரியவராது மகா அருமை.—எ-று. (உ0)

பாவைபங்கனு மாவுமொன்றன பான்மையா லொருகாலமும்
பூவுடன்சினைபொன் நிடாயுக புங்கவற்கு மோருதவியாய
தேவர்வேதியர் முனிவர்மறையவர் திரளொருக்குற முறணுற
வாவலிற்றவ மரிதுபண்ணுதல் வதியினன்றன வரதமே.

(இ-ள்.) அர்த்தநாரீஸ்பாரும் அந்த மரமும் ஒரு தன்மையைப்பெற்ற யெக்கால‌ங்களிலும் புட்பங்கள், காய்கள், கனிகள், மாறுமலழிவாறிருக்கும யுகபேதங்களிலும் தேவர்களுக்கொரு உதவியாகும் மற்றும்தேவர்கள், வேதியர், முனிவர்கள் சித்தர்கள் முதலாகிய கூட்டங்களமிருந்து ஆசையுடனே அரியதவஞ்செய்குவார்கள். அதன்மகிமை யளவில்லை.—எ-று. (௨௧)

இவர்தவந்தின முயலருந்தின னிறையவன் பணிமலையரன்
சிவதுரந்தரன் ஞானபெங்கடல் திரிபுரமபடமுனிபவர்
புவனைசங்கரிதிரிபுரந் தரிபுனிதை யந்திரிபுருடனார்
தவவிரும்பத முருகர்வந்தனை தனில்வணங்குவர் தினமுமே.

(இ-ள்.) இப்படி இவர்கள் யெத்தேசகாலமும் தவஞ்சனைச் செய்யாநின்றார்கள். வளர்ச்சியையுடைய விறைவன் நாககிரியுடையவன் சிவதுரந்தரக்கன் ஞேமய திருபாசமுத்திரர் திரிபுரமெரியும்படி கோபித்தவர வாலைபுவனை திரிபுரசவுந்தரி- சங்கரி - புனிதமான அந்தரிமணவாளராகிய அர்த்தநாரீஸ்பரருடைய பாதயுகங்களை ஆகமப்பிரகாரம் தினமும் பூசைசெய்தார் முருகவேள்.—எ-று. (௨௨)

கமலையாரணி பராபராபரா கனகபூரணி கருணையா
ளமலையாகம வறிவிஞரணி யமுதவாசகி யருளினள்
விமலைகோமளை விரதியாமளை விபுதைமாதவி யிமையமா
னுமைதயாநிதி குமரியாய்பத முளம்விடாமலே முருகரே.

(இ-ள்.) கமலைமாது, வேதாம்பிகை, சிற்பரை, பராபரி, சொர்ணபூரணி. கருணைசயச்செல்வி, மலவற்றவிமலை, ஆகமவறிவையுடைய நாராயணி. அமுர்தவாசகி, திருபாநிதி, நிர்மலாதேவி, கோமளவல்லி, விரதவிநோதி, திவ்வியயாமளை, விபுதை, யிமையமான், உமாதேவி தயாபரி, கவுமாரியென்னும் பெயர்களையுடைய தமது தாயாகிய பாரவதியம்மன் பாதயுகங்களை யுள்ளத்தில வைத்துவிடாமல தியானஞ்செய்திருந்தார். மலைக்கதிபனுன முருகர்.—எ-று. (௨௩)

குமாரர் திருமணச்சருக்கம் முற்றிற்று
ஆகச்சருக்கம் - ௧௯-௧௫ - செய்யுள் - ருநரு.

# கிஷ்ணைச் சருக்கம்.

தேவர்க்கிறை யுதவுந்தெய்வ சேனைத்திரு மயிலைச்
சேவிற்பிடர் வருவோர்தரு செவ்வேலர் மணந்தங்
காவற்பெற வளைகின்றபி னமுதச்சொலி னிதளங்
கோவைக்கனி வள்ளிக்கொடி கூடுந்திற நவில்வாம்.

(இ-ள்.) தேவேந்திரன் பெற்றவழகிய மயில்போலுஞ் சாயலையுடைய தெய்வசேனையை யிடபவாகனருடரான பரமேஸ்வரன் புத்திரனுகிய வேலவா, திருமணஞ்செய்திருந்தார். பின்பு அமுர்தம்போலுஞ் சொல்லையுடையகொவ்வைககனியையொ

த்த அதரமுங்கொடிபோன்ற யிடையையுடைய வள்ளியம்மன் மருவுஞ்செயலைவிளக்கச்சொல்லுகிறோம். கேளுங்கள் முனிவர்களேயென்று சொல்லுகிறார் சூதமுனிவர்

ஏகாதசிவிரதத்தினி லினிதாந்தவ நிபுணன்
மாகாவலர் வணங்குஞ்செய ருக்மாங்கதன் வாமன்
யோகாதிபற்கருள்கூ ருக்குமணியாகிய வொருபெண்
ணுகார்கர கரியோனை நயந்தாதா மரனுள்.

(இ-ள்.) முன் ஏகாதசிவிரதத்திற்சிறந்த வன்புடைய தவநிபுணனானவன் மகாராஜர்கள்வணங்கும் வெற்றியையுடைய ருக்குமாங்கதராஜன் தவபுத்திரியானமானை போலும் பார்வையையுடையவளாய யோகீஸ்பரர்களுக்கு அன்புடையவளாகிய ருக்குமணியென்னும் பெயரையுடைய பெண்ணானவள் சங்கமேந்திய அஸ்தத்தையுடைய கரியோனாகிய கிஷ்ணசுவாமியை மருவும்படி யிச்சையுடனே ஆசைகொண்டாள்.

மறையோனுடனெனையின்று மணத்தற்குவாரானேல்
முறையோதிய பிறருக்கெமர் மொழியாமணமருள்வார்
குறையோதின நெரியேதுதி கோலத்திருமாலின்
றிறையாயெனை யணையாவிடி லிறுவேனென வுரைத்தாள்.

(இ-ள்) ஒரு பிராமணனையழைத்துச் சொல்லுகிறாள். இன்றையதினத்தில்வந்து என்னை திருமணஞ்செய்துகொள்ளாவிடில் என்து தாய்தந்தைகள் முறைமையாக வரசர்களையழைத்து பொருத்தமுடைய வரசனுக்கென்னை திருமணஞ்செய்வார்கள். ஆகையால் நீர் துவாரகாபுரிக்குப்போய் யெனது மனக்குறையைச்சொல்லி ஸ்ரீகிஷ்ணமூர்த்தியைவந்து என்னைத் திருக்கலியாணஞ் செய்துக்கொண்டுபோகும்படி சேவித்துச்சொன்னாளென்றுசொல்லவும் அப்படி அவர் வராமற்போனால் இறந்துவிடுவேனென்றுசொல்லவும் — எ-று (௩)

மறையோனந்த மயிலவாயமொழி வசுதேவனமகற்கே
பெறவோதினன்வர தேரொடுபெருமாநகர் வந்தார்
திறமார்கவுரியை யேத்தியகோத்தினி லிடைபோ
ந்துறுதேர்மிசை வைத்தேகின ருற்றார்பிறகுற்றார்.

(இ-ள்.) பிராமணனானவன் துவாரகாபுரியைச்சேர்ந்து வசுதேவன்மகனான முகுந்தனைக்கண்டுவணங்கி ருக்குமணிதேவிவாய் மொழியெல்லாந் தெரியப்படச் சொன்னான். அது கேட்டவுடனே தேரிலேறி அந்த ராஜன்நகரத்திற்கு அப்போது அழகிய கௌவுரியைத் தொழுதுவணங்கி விரதஞ்செய்யாநின்ற மத்தியிலசென்று ருக்குமணிதேவியை தேரின்மீதேற்றிக்கொண்டு சுற்றத்தார் பின்றொடரச்சென்றார்.

முட்டாடல்விளைத்தார்கெச ரதமாவின முந்தார்.
கட்டாண்மையில வந்தானவள் கண்ணுகிய தமையன்
பட்டாவிடரென்றோத பங்காவினி லணைத்தார்
றொட்டாது மரித்தேபொரு மொட்டார் பிறகிட்டார்.

(இ-ள்.) அப்படிப் பின்றொடர்ந்துவந்து வளைத்துக்கொண்டு ரதகெஜதுரகபதாதிகளுடனே முனைந்துபோர்செய்தார்கள். அப்போது அட்டகாசஞ்செய்து, ஆண்மையுடனே வந்தெதிர்த்தான். ருக்குமணிக்கண்ணனுக்குச் சமானமான தமையனானபடியினால் அவனைகொன்றால இடருண்டாமென்று தேர்க்காலில் கட்டிவைத்து ரதத்தைவிட்டு செலுத்துகிறபோது மருத்தவரசர்களெல்லாம் பின்னிடும்படி போர்செய்தார். (௫)

அக்ககாலையி லரசன்றனேடரு நாரதமுனிவன்
மெய்க்காதலி னுரைகூறு நல்விரதத்தி லுனமகடான்
பொற்காரிகை யமையும்படி புவனங்களுமுன்னீரு
னிக்காரண முணராதென்கொ லெம்மானொ டெதிர்த்தாய்.

(இ-ள்.) அவ்வேளையில் அரசனுடனே பெரியதவமுடைய நாரதமுனிவன் மனதாசையுடனே சிலவார்த்தைகள் சொல்லுகிறான். ஓய் ராஜனே விரதசிலியாகிய வுன்மகள் ருக்குமணியென்பவள் லட்சுமிதேவியென்றுஞ் சொல்லப்படும். எம்மவர்களையும் புவனங்களையும் முன்னாளிலே பெற்றருளினவளாம். இதுகாரணம் மறியாதுயெம்முடைய ஸ்ரீகிஷ்ணதேவருடனே யேன்யெதிர்த்தாய்.—எ-று. (சு)

இம்மாதுலகத்தாயிவள் கரியோன்மணமின்றி
யம்மானிடர்க் கொன்றுனகுதகதோபிழையலவோ
மைம்மால்வரைப் புயத்தாய் ருக்குமணியை மன்னவயாற்
கெம்மாதரவர நீவதுவைகள் செய்தருளென்றான்.

(இ-ள்.) இந்த ருக்குமணியென்னும்பெண்ணானவள் உலகமாதாவென்று சொல்லப்படும் இவளை கிருஷ்ணதேவர் திருமணஞ்செய்யவேயன்றி இந்த மானிடசென்மங்கள் மணஞ்செய்யகூடுமோ. அப்படிசெய்வது மகாகுற்றமல்லவோ நீலகிரிபோலும் புயத்தையுடைய ருக்குமாங்கராசனே யுனக்கவை மாலாகிய மாதவனுக்கு திருக்கலியாணஞ் செய்தருளுமென்றான்.—எ-று (எ)

என்றுதிபனுட னாரதனியம்பும் கவிபொருள்கேட்
டன்றுழியனுக்கன் னவரணிமணநலமடைந்தார
மின்றுவியதுவராபதி மேவிக்கரியோனும்
நனறுய்ருக்குமணியைப்புணர் நன்னாளினிலொருநாள்

(இ-ள்.) என்றிப்படி வரசனுடனே நாரதமுனிவன்சொல்லக்கேட்டு மனமகிழ்ச்சியாக அன்றையத்தினத்தில நலலமுகூர்த்தத்தில் கிருஷ்ணமூர்த்திக்கு ருக்குமணிமாதை அருகுபெற திருக்கலியாணஞ்செய்தருளினா. அபபோ துவாரகாபுரியேப்போயசோந்து யிருக்குமநாளில் ஒருநாள.—எ-று. (அ)

கரியோன் மடங்கற்றிங்களினு லாம்பிறைகண்டே
தெரியோர்பதி வம்பாதிபர் செம்மற்குள நோனு
தரியேனவனிருந்தானது தடையிற் சிலசொல்வா
முரியோய்சவுனக்கே ளனவுயா சூதருரைபபார்

(இ-ள்) கிருஷ்ணசுவாமியானவா ஆவணிமாசத்தில் சுக்கிலபட்சத்துச் சதுர்தசியில் நாலாம்பிறையைக்கண்டார் கண்டதனாலே இவருண்மைதெரியாமல் வம்பாக பழிவசனங்கள் சொனனார்கள். அதறகு மனஞ்சகியாமல் இதற்கு யென்னசெய்து தவிர்ப்போமென்று விசாரமிட்டிருந்தார். அதில நடநதவிபரஙகளை சில தெரிந்தமட்டுஞ் சொல்லுகிறோம். கேண்மின்கள் தவமுரித்தாகிய சவுனகாதிமுனிவர்களேயென்று சொல்லுகிறார். மேன்மையுடைய சூதமுனிவா.—எ-று. (கூ)

வேறு.

தத்திராதடியவருளத்திரா விடியலித்தவ மூடிருட்
கொத்திராவகலவெங் குமுதங்குவிந்து கோகனகமலருய்யவும்

யத்திராறுகவன் றெழுசூரி யன்றன்னையுள முன்னியேவெகு
சத்திராசித்தெனு மொருமன்னவன் பெருந்தவமுன்னினன.

(இ-ள்.) அவமிருத்தீவுயில்லாத அடியவர்களுள்ளத் திருள்விடியவு மிந்தத்தல மாகிய பூமியை முடிக்கொண்டிருந்த இருள்நீங்கவும் வெவ்விய அல்லிப்பூக்கள்குவி யவுந் தாமரைப்புட்பங்கள் மலரவும் சுடர்க்கிரணங்களையுய்த்துப் பன்னிரண்டு பெ யராக வுதித்தெழுந்தருளி நிதம்வருகின்ற சூரியபகவானை யுள்ளத்திலே நினைத்து தி யானமாக சத்திராசித்து வென்னும் ஒருராசன்மிகுந்த தவஞ்செய்தான்.—எ-று. ௧௦

தரைமீதனந்தகாலங் கதிரைநோக்கித் தவம்பண்ணவே
வரமளித்து வேண்டுமென நல்கியாதித்தனொரு மணியுதவினன்
புரமேவிமணியது சமந்தகப்பெயரதைப் பொன்னுமா
யுரமேவுதெய்வபூசையில்வைத் தருச்சனை யுகந்தானரோ.

(இ-ள்) பூமியிலனந்தகாலஞ் சூரியபகவானைநோக்கிச் சத்திராசித்துராசன் அரியதவஞ்செய்யக்கண்டு சந்தோஷித்து ஆதித்தபகவானொரு திவ்வியமான மணி கொடுத்தருளினார். அமராபதியிலுங் கிடையாதமணியது சமந்தகாமணியென்றுபெய ர் அந்தமணியை சொர்ணபுரத்திற்பொருந்து பூசையில்வைத்துப புட்பமலர்களால் அர்ச் சனை யுகந்துசெய்தான்.—எ-று. (கக)

அருச்சனைசெய்நாளிலவன்றம்பி பிரசேனனந்தமணியைத்
தரிச்சனைவருஞ்சூழ வேட்டையிற்சார்ந்தனன் சார்ந்தபொழுதே
நெரிச்சவனைப்போ ரெண்குநெஞ்சைப்பிளந்து கொன்றந்தமணியை
விரிச்சகதிரொளிதாகக்கொண்டு சென்றக் கரடிவீடுற்றதால்.

(இ-ள்) அப்படி சத்திராசித்துராசன் அர்ச்சனைசெய்யாநின்ற நாளிலொருநாள் அவன்தம்பி பிரசேனனென்பவன் அந்தமணியையெடுத்துத் தரித்துக்கொண்டு அனை வருஞ்சூழமிருக வேட்டைக்குப்போனான். போனபொழுதில் ஒருகரடிவந்து அவன் தலையைநெரித்து நெஞ்சைப்பிளந்து கொன்றுபோட்டு அந்த மணியைக் கைகொ ண்டு விரிந்தகதிரொளி வீசும்படியாகச்சென்றது.—எ-று. (கஉ)

அப்பொழுதுசாம்புவ னவனவேட்டைவந்தன னவற்றையுணர்வுற்
றிப்பொழுதிதேநீங்கக் கரடியிடிப்பினன ரேருமளவிற்
பைப்படியிற்பருதி போலொளிபரப்பிய சமந்தகமெடுத்
தொப்பவதிரெண்கினை கொன்றுதன் றிருமனையி லுடனேகினன்.

(இ-ள்.) அந்தவேளையில் சாம்புவராசன் வேட்டைக்குவந்தவன் அந்த மணிப் பிரகாசத்தைக்கண்டு யிதேதிந்த வெளிச்சமென்று கரடித்தானையைப் பற்றிப்போ கையில் பூமியிற் சூரியஉதயம்போல சுடர்விரிக்கின்ற அந்தச் சமந்தகாமணியைக் கவர்ந்தெடுத்துக்கொண்டு ஒப்பாகவெதிர்த்த கரடியைச்சங்கரித்து உடனே தன்னு டைய திருமாளிகையிற் போய்ச்சேர்ந்தான்.—எ-று. (கங)

ஆங்கதுநிகழ்ந்தவகை சத்திராசித்துளத் தறியாமலே
யீங்குமணிமாயமாய் போவதெனகரியவ னெடுத்தானென
வோங்குபழிவம்புரை வினையகசதுர்த்தியா லுயற்கரியவன்
றூங்கியிதுமாத்திவெயி றருமணியெடுப்பச் சமைந்தானரோ.

(இ-ள்.) அங்ஙனம்நடந்த விருத்தாந்தத்தை அறியாமல் சத்திராசித்துராஜன் யிங்கேயிருந்த மணிமாயமாய்ப் போவதென்ன கிருஷ்ணனே யெடுத்துக்கொண்டா

மிறுக்குவர்கட்டி யெடுப்பரிளைப்ப ரிளைப்பொரு சற்றுமிலா
மறுக்குறநின்று மலைந்து மலைந்தனர் மலையொடு மலையெனவே.

(இ-ள்.) ஒருவரையொருவர் ஊங்காரஞ்செய்து உருக்குவார்கள் கால்களாலுதைப்பார்கள் மிதிப்பார்கள் உடற்றுவார்கள் கீழேவீழுவார்கள் கைகளை முறுக்குவார்கள் சாரிசாரியாக நடப்பார்கள் கழுத்துகளை யிறுகப்பிடிப்பார்கள் சற்றேயிளைப்பாருவார்கள் யிளைப்பாரிவந்தடிப்பார்கள் கைவிடாமல் கட்டியிருக்குவார்கள் யிருக்கிக்கட்டி யடிபெடுப்பார்கள் சற்றுமிளைப்பில்லாமல் மல்லாடுவார்கள் மருக்கமாக நின்று மலைவில்லாமல் மல்லுயித்தியஞ்செய்வார்கள் மலையுடனே மலைபொருந்தினால் போல.—எ-று. (௧௮)

இப்படி யிரெழுநாளிற் கரியவனெதிர் சாம்புவன் மலையு
மற்பொருபூசலாராகவ னமருமகாபாரதமாமுனிகர்
செப்புவதல்ல வெனும்படி நின்று செருத்தொழில் கொண்டனர் பின்
னொப்பிலர்யாதென வொருவற்கொருவ ருளத்தி லுணர்ந்தனரே.

(இ-ள்.) இப்படிப் பதினாலுநாளவரையிலும் கிருஷ்ணனும் சாம்புவனும் தோராமல் பொருதிப்போர்செய்து மல்லுயித்தத்தின் பெருமையானது இராமராவண யுயித்தியமும் சுந்தர்சூர பதமனுயித்தியமும் மகாபாரதயுத்தமு மிதற்குச்சமானமென்று சொல்வதல்ல வென்னும்படியாக நின்றெதிர்த்து மகாவீரபராக்கிரமத்துடனே செய்த மல்லுயித்தியத்தில் ஒருவர்க்கொருவர் வெற்றிதோல்வையில்லாததாலும் ஒப்புவமை யில்லாதவர்களானதாலும் யிது யென்னவென்று தங்கள்தங்கள் மனதில் யோசித்தார்கள்.—எ-று. (௧௯)

ஆம்புவனங்களி லாதிபரொன்றுடனுறுமிரித்தனை நாளாய்த்
தேம்புவனங்களின் றலையிப்புவியிற் செய்தனரிலையிப்போர்
விம்பு வனங்களின் மேகநிறத்தினன் விண்டுவனென்றுணராச்
சாம்புவனுங்களி யொடுதொழுவானந் தாமோதரவெனவே.

(இ-ள்.) அழகிய பூமண்டலத்திலே யென்னுடனே யிதுநாள்வரையில் யிகலோகத்தார் பரலோகத்தார்களில யிப்படி யுத்தஞ்செய்பவரில்லை நான் வீம்புபாராட்டி யறியாமல் இந்த யுயித்தியஞ்செய்தேன் இந்த மேகவண்ணனான யிவன் ஆதிவிஷ்ணுவே சரியென்று நன்றாகத்தெரிந்து மனமகிழ்ப்புடனே சுவாமி தாமோதரனை இவனைமூர்த்தியேயென்று தொழுதுவணங்கித் தோத்திரஞ்செய்தான்.—எ-று. (௨௦)

மீனுருவாகி மறைப்பொருளைத்தரு வித்தகபோற்றிகடற்
பனமலைக்கணையாகியகமடப பெருமைய போற்றிபுவிக்
கினமுறுதிரணிய கண்ணனை யடவேனத் தவபோற்றி
சேனைகொளிரணியனைபபோர்வரு நரசிங்கச்செயபோற்றி.

(இ-ள்.) ஆதியில மச்சருபமாகி கடலிலொளித்த சோமுகாசூரனைக்கொன்று வேதப்பொருளைத்தந்தருளியவித்தகனேபோற்றி அமுர்தங்கடைக்கிறபோது சாய்ந்த மந்திரகிரிக்காதாரமாக கூர்மாவதாரஞ்செய்து ரட்சித்த பெருமையையுடையவனே போற்றி புவனங்களுக்கு யிடுக்கிவராமல இரணியாட்சதனைக்கொன்றவராக மூர்த்தியேபோற்றி அளவில்லாத சேனைகளையுடைய இரணியாசூரனை பொருதிக்கொன்ற நரசிங்கமூர்த்தியே போற்றிபோற்றி.—எ-று. (௨௧)

வாமனமாயொரு மாவெலியைச்சிறை வைத்தபொன் மால்போற்றி
கோமுடிகாமா பிரமுவாற்றுணி குலமுனிசெயபோற்றி

காமனிலங்கை யிராவணனைப் பொருதகன ராகவபோற்றி
பூமகிழ்புத்திரன வசுதாபுரத்தைப பொருவித்தவபோற்றி.

(இ-ள்.) வாமனவதாரமெடுத்து மாபலிவாணனைச் சிறையிலிட்டுவைத்தருளிய லட்சுமிமணாளனேபோற்றி கார்த்தவீரியார்ச்சுனராஜன் கைகளாயிரங்களையும் மழுவினாலெயறுத்த வெற்றிகொண்ட மேற்குலமான சமதக்கினி புத்திரனான பரசுராமனேபோற்றி அதிமோகத்தையுடைய யிலங்கையில் இராவணனைப்பொருதுகொன்ற கனமுடைய இராகவனேபோற்றி பூலோகம் புகழ்த்தக்கதாக புத்தர்குருவாக வடிவெடுத்துவந்து அசுரமாயக்கிரீவனைக்கொன்று திரிபுரங்களை யெரிப்பித்தவனே போற்றிபோற்றி.—எ-று. (உஉ)

செருவின வத்திரம் மொருபலபத்திரர் பின்னவசெபபோற்றி
தனைவருசிதியென வருவசுதேவன றருமணியேபோற்றி
யருள்பதினாயிர மிடைமடவியரனை நாயகபோற்றி
குருகுலம வருபஞ்சவருக் குதவுங் குணசிதியேபோற்றி

(இ-ள்) மகாபாரதயுத்தத்தில கலப்பையாயுதத் தரமையுடையவனாகவந்த பலபத்திராமனேபோற்றி அவர்க்கிளையவனாகவந்த கிஷ்ணமூர்த்தியேபோற்றி யிந்தப் பூலோகத்திபோலுமவதரித்தருளிய வாசுதேவன்பெற்ற மணி கமணியேபோற்றி அன்பாய பதினாயிரம் கோபியர்களை மருவின நாயகனேபோற்றி குருகுலத்தி லுதித்து விளங்கிய பஞ்சவர்களுக்குதவிசெய்தருளிய சற்குணநிதியேபோற்றி போற்றியென்று தோத்திரஞ்செய்தான் சாம்புவந்தன்—எ-று. (உ௩)

இப்படிசாம்புவ னெண்ணிலியத்துதி யிந்திராமணவாளர்
கொப்புரவோதி யறிந்திலனிப்பிழை யுரவபொருத்தியெனச்
செப்பினன் முலைமலை செறிநகையமுகின திருவனசாமபவியைக்
கைப்புகவுதவி யம்மணியுமளித்துக் கண்ணனை யடிதொழுதான்.

(இ ள்.) இந்தப்பிரகாரம் சாம்புவராசன் அளவில்லாத தோத்திரஞ்செய்து இந்திராமணவாளன் கிஷ்ணமூர்த்தி மகிழும்படி சுவாமி அடியேன் அறியாதுசெய்த பெரும்பிழையைப் பொருத்தருளுமென்றுசொல்லி மலைபோன்றமுலைகளும் நிறைந்தநகையும் அழகிய லட்சுமிபோலும விளங்கிய தனமகளாகிய சாம்பவியைக கிஷ்ணமூர்த்திக்கு திருமணஞ் செய்துவித்து சமந்த கொமணியையும்கொடுத்து ஸ்ரீகிஷ்ணமூர்த்தியை வணங்கினான்.—எ று. (உச)

தொழுவனக்கண்டு சுரத்தருள்மேவண்டிய சொல்லிமகிழ்ந்தாய
னெழுவனசிதைதயி லெய்தினன்மன்னன்முன னிடுபழிமொழிதீர்ப்
செழுமணிகொண்டுமன் பின்னவனுமபிர சேனன்வனமேகும் [பச்
பொழுதொருகாடி வதைத்ததமமணிதன புகலிடை வைத்ததரோ.

• (இ-ள்.) அப்படித்தொழுத சாம்புவனுக்கு கிருபை கூர்ந்தருளிபிரியவசனங்கள்சொல்லி மகிட்சியுடனே கிஷ்ணதேவன அங்கிருந்துபுறப்பட்டுவந்து சத்திராசித்துராசன் முன்னிட்டபழி வசனங்களை தீரவருக செழுமையுடைய இராசனைக்கண்டு சொல்லுகிறார் ஓய்இராசனே உன்தமபியான பிரசேனன் யிந்தமணியைத்தரித்துக்கொண்டு வனங்களில் மிருகவேட்டை செய்யபபோகும்போது ஒரு காடிவந்தவனைக் கொன்றுமணியைக கொண்டுபோய் தான்யிருக்குமிடத்தில வைத்துக் கொண்டு யிருந்ததென்று சொலலிப்பின்னை-சொல்லுவார்.—எ று. (உரு)

வைத்தபின்னுளினிற் சாம்புவன் வந்தவன் வதைபட்டதுமுனியஞ்
சுத்தசுமந்தகமணிகொண்டதுமறி வுற்றுச்சுடர்மணிகொண்
டத்தையும் வென்றுதன் மகனொருதொட்டிற் கணிபாகத் தூக்கி
வைத்தனன்யாமீ ரெழுதினமவனுடன் மலைவுற்றிவைகொண்டேம்.

(இ-ள்.) மறுநாள் சாம்புவராசன் வனவேட்டைவந்தான் உன்தம்பி வதைபட்டதையும் காடியானது ஒளிவுடைய மணியைகொண்டு போயிவைத்திருந்ததையும் யறிந்து அந்தக் காடியைக்கொன்று மணியைக்கவர்ந்துக்கொண்டுபோய் தன் மகன் தொட்டிலில் அழகாகத் தூக்கிவைத்திருந்தான் யிதுவெல்லாம் நாந்தெரிந்து போய் அந்தச் சாம்புவனுடன் பதினான்குநாட் போர்செய்து வெற்றிகொண்டிவை யெல்லாம் பெற்றுக்கொண்டு வந்தோம்பாரா யென்று சொல்லுகிறார் கிஷ்ணமூர்த்தி.—

என்றுரைதாமோதரர்சாம்புவதியோ டெழின்மணியுங்காட்டி
யுன்றனதுள்ளந் தெளிகெனவே சத்திராசித்துவகையினால்
சென்றனமணமுரசந்திசை பெட்டுஞ் சென்றன திருவுறவே
மன்றலினனருள் சத்தியபாமையும் மணியையு முதவினனால்.

(இ-ள்.) நடந்த வர்த்தமானமெல்லாஞ்சொல்லி கிஷ்ணதேவர் சாம்பவதியெ ன்னையும் அழகியமணியையுங்காட்டி யினிஉன் சமுசியம் தெளிவாயென்றுசொன்னார். அப்போது சத்திராசித்துராசன் மகாசந்தோஷமாகி தன்மகளான சத்தியாமையை கிஷ்ணருக்குத் திருக்கல்யாணஞ் செய்துகொடுத்து அந்தமணியையும் கொடுத்தருளினான். அப்போது கிஷ்ணதேவர் யெழுந்தருளிச்செல்லாநின்றார் மணமுரசவாத்தியமெட்டுத் திக்குகள் செவுடுபடத்தக்கதாக ஓசைமுழங்க அழகுபெற.—எ-று.

பலபத்திரனுஞ் சாத்தகியுங் கோபாலப் பெருவெள்ளம்
நலபத்திரவிழி நங்கையர்யாவரு நன்சோபனமோதக்
குலபத்திரமலர் கொண்டவர்பாதக் கோகனகம்போற்றச்
சுலபத்திரண்மென் பகைவென்று துவாரகையிற் புக்கான்.

(இ-ள்.) பலபத்திராருஞ் சாத்தகியும் ஆயராச்சியர்கூட்டமான பெருவெள்ளமும் அழகிய அம்புபோன்ற கண்களையுடைய ஸ்ரீசனங்களனைவருஞ் சுபசோபனங்களபாட பக்த்தசனங்களெல்லாம் பலநிறங்களையுடைய பத்திரபுட்பங்களிட்டு அவர் பாதகமலங்களைப் போற்றிசெய்ய சொற்பத்திரணமாக சத்துருக்களைச்செயித்து வெற்றிகொண்டு துவாரகாபுரியில் புகுந்தருளினார் கிஷ்ணதேவர்.—எ-று. (உஅ)

கொண்டலைவென்ற குழற்பிறைநுதல்விற் குனிபுருவப்பானல்
வண்டலர் விழிவள்ளைக்குழை மணிநாசிகையாம்பற்
றண்டரளப்பற் செவ்வாய்மெதுசொற் றண்மதிவதனவளைக்
கண்டமலர்க்கைக் கனதனவிடைநூற் காலம்புயசூழ்வார்.

(இ-ள்.) கார்மேகத்தைவென்ற கூந்தலும் பிறைபோன்றநெற்றியுங் குனித்தவிலவுபோன்ற புருவங்களும் நீலோற்பலம்போலும் வண்டுகள்போலும் ஒத்தழகிய கண்களும் வள்ளைக்கொடிபோன்றகாதும் செண்பகப்பூப்போன்ற அழகியமூக்கும் ஆம்பல்ப்பூப்போன்ற சிவந்தவாய்களும் குளிர்ந்த முத்துநிரைபோன்ற பல்வரிசைகளு மிருதுவான வசனங்களுங்குளிர்ந்த பூரணச்சந்திரன்போல முகங்களும் வலம்புரிச்சங்குபோன்ற கழுத்தும் தாழம்பூப்போன்ற கைகளும் கனத்த தனபாரங்களும் நூலொத்தவிடையுந் தாமரைப்பூப்போன்ற கால்களுமாக விப்படி அழகுபெற்றவுடைய ஸ்ரீசனங்கள் சூழ்ந்துவிளங்க வெழுந்தருளியிருந்தார் கிஷ்ணர்.—எ-று. (உகூ)

அவ்விடைருக்கு மணித்திருவுஞ் சத்தியபாமையு மிருபாற்
செவ்விகொள்கார சலத்திருபாங்குந் திருமயிலெய்தினபோல்
மெய்விளைவுற வெய்தினர்கரியவ ரரியாசனமேவினர்கா,
னவ்விவிழிக்குற வள்ளியுதித்தருள் நன்மையினிப்புகல்வாம்.

(இ-ள்.) அப்போ தங்கனம் ருக்குமணிதேவியும் சத்தியபாமையும் மிவ்வி ருவரு மிரணபெக்கத்திலுஞ் சேவ்விதாகிய ஒருநீலகிரிச் சார்பி லிரண்டுபெக்கத்திலும் அழகியமயில்கள் சேர்ந்திருந்ததுபோலும் திருமேனிபுளகமுற மருவிமனங்களிப்புற கிஷ்ணதேவர் ஒரு சிங்காதனத்தி லெழுந்தருளியிருந்தார். பின்பு கானகத்தில் மான் போலும கணகளையுடைய குறமாதாகிய வள்ளிநாயகி யுற்பவித்தமுறைமையை சொல்லுகிறேம் கேணமின்களென்று சொல்லுகிறார், சூதமுனிவர் —எ-று. (௬0)

கிஷ்ணச்சருக்க முற்றிற்று.

ஆகச்சருக்கம - உறு-க்கு செயயு - ருகூரு

# வள்ளிநாயகி உற்பத்திச் சருக்கம்.

இப்படிநம் வசுதேவர்க்கினிய திருக்குமாரனெனு
மைப்படியுங்கரியமலை வந்தனபொற்கரியவனா
மைப்படியிற் பொதுமடவார் பதினாறுயிரவருடன்
மெய்ப்படியு மனுராகவிதம்படியு மொருநாளில்.

(இ-ள்.) வாசுதேவருக்குப் பிரியமுடைய திருககுமாரராகிய மேகம்படியும் நீல கிரிபோலும் அழகியகிஷ்ணதேவா துவாரகாபுரியில் பொதுமடவாா பதினாயிரம பெ ணகளுடனே லீலாவிநோதமாகமருவி அனுராகததொழில்நடாத்தி சுகமாகவாழுகின் றநாளில் ஒருநாளவேளையில்.—எ-று. (க)

மருக்கிளருந் தொடையுருக்கு மாங்கதன்றன்வழிவந்த
வுருக்குமணிமயிலெனுமம் போருகப்பெணொருபாங்கும்
மருப்புமுமர்கிலன்சத்தி ராசித்த னருளிவரும்
பருப்பதுபோற்றன சத்தியபாமைக் கண்ணொருபாங்கும்

(இ-ள்) மணம்பொருந்திய புட்பமாலைசூடிய ருககுமாங்கதராஜன் வரபுத்திரி யான அழகிய ருக்குமணியம்மனென்னு மிலட்சுமிதேவி யொருபக்கத்திலும் குறை மில்லாத சத்திராசித்துராசன் வரபுத்திரியான மலைபோலு முலைகளையுடைய சத்திய பாமையென்னுங் கண்மணியொருபக்கமும்.—எ-று. (உ)

இனிதணைந்துவிளையாடு மெலலையிலவற் கலையுடையும்
பனிமலாமென் சடைமுடியும் படிகநிறத்திருநீறுங்
கனியுமிசைத்திரிதண்டுங் கமண்டலமுங் கனிநகையும்
நனியழகு பெறத்தேவர் நகர்விட நாரதர்வந்தார்.

(இ-ள்.) இப்படி யின்பமாக உபையநாச்சிமாருடனேகூடி விளையாடியிருக்கின் றவேளையில் மாவுரியுடையுங் குளிர்ந்த புட்பஞ்சூடிய மெல்லிய சடைமுடியும படிக நிறமான திருவெண்ணீருதரித்த திருமேனியும் யிசைபாடி யேந்தியவீணையுந் திரித

ஜடமுங் கமண்டலமுங் கனிந்தகையுமாக மிகவும் அழகுபெரும்படி தவவடிவுட னே தெய்வலோகத்திலிருந்தும் புறப்பட்டுவந்தார் நாரதமுனிவர்.—எ-று. (ங)

வந்தவர்சந்தனக்கதம்ப மணிப்புயக்கண்ணன் கரத்திற்
றந்தீந்திரன்பாரி சாதநறுந்தணபோது
யிந்தமலர்யாதெனநம் மிறைவனுட னிமையமயில்
கொந்தவிழுஞ் சடைமுடிக்குங் குழற்குமுடிப்பனவென்றார்.

(இ-ள்.) வந்த நாரதமுனிவன் சந்தனகதம்பந்தரித்தருளிய புயங்களையுடைய ஸ்ரீகிஷ்ணதேவனைக்கண்டு அவர்கையில் இந்திரலோகத்து பாரிசாதபுஷ்பக்கொத தொன்று கொடுத்தார். அதைவாங்கியே சிந்தப்புதுமையான புஷ்பமென்றுகேட்க யிதுபரமேஸ்பரனும் பார்வதாதேவியும் அலர்ந்தபூமணம்பொருந்திய சுவாமி சடை முடிக்கும் அம்மன்கூந்தலுக்கு முடித்துக்கொள்ளும் மகிமையையுடைய பாரிசாத புட்பமிதுவென்று சொன்னார்.—எ-று. (ச)

கிளியமுத மொழித்தெய்வ கீதவத்திற் கிளர்குமர
அளிவிரவா மனமகலாத் தலர்புலராத் தழகொளியாத்
துளிதருசெந் தேனொழுகும் துணாப்பாரிசாதமலர்
தெளிகருணைக்கரியவனின் றிருவுளத்திற் கினிதென்றார்.

(இ-ள்.) கிளிபோலும் அமுர்தமொழியுடைத்தாய்த் தெய்வகானகீதம்பாடி கி ளர்ச்சியுடனே யிளமையுடைய தேன்வண்டுகள் மூசாததாய் மணங்குறையாததாய் மலர்கள் வாடாததாய் அழகுபோகாததாய் துளிக்கப்பட்ட செந்தேனொழுக்கமாகிய ஒளிபொருந்திய யிந்தப்பாரிசாத புட்பக்கொத்துத் தெளிவானகிருபையுடைய கிஷ் ணமூர்த்தியே உம்முடைய திருவுளத்துக்கு மிகவுமின்பமான திவ்வியபுட்பமிதுவெ ன்று சொன்னார் நாரதமுனிவன்.—எ-று. (ரு)

நாரதராற் பெற்றமலர் நளினமயி லுருக்குமணிக்
காரருளாலரியளிப்ப யதுசத்தியபாமையறிந்
தோருளத்திற் புலவியனுற் றூடுதல்பெற் றனளதனாற்
காரணையகரியவனுற் கனிந்தொர்மொழி பகருகின்றார்.

(இ-ள்.) நாரதமுனிவராற்பெற்ற மலர்ச்சியுடைய பாரிசாதபுட்பத்தைத் தாம ரைமகளான மயில்போலுஞ் சாயலையுடைய ருக்குமணிதேவிக்கு மிகுந்தகிருபையுட னே கொடுத்தார், அதுகண்டு சத்தியபாமை தனதுள்ளத்திற்சகியாமல் மனம்புலர்ந் து வாடிக்கொண்டாள். அதுகண்டு கார்மேகம்மொய்த்த கிஷ்ணதேவர் பிரியமாக ஒரு வசனஞ்சொல்லுகிறார்.—எ-று. (சு)

பூவென்றே யுருக்குமணிப் பூவைபெற்றா ளுனக்கந்த
காவொன்றி லொருபாரிசாதமலர்க் கற்பகத்தின்
மாவொன்று நின்மனைவாய் வைப்பனென வுரைத்துமறைக்
கோவொன்று புரத்தெழுந்தான் கோகனகத் திருமாயன்.

(இ-ள்.) வாராய் சத்தியபாமையே நாரதர்கொடுத்த புட்பக்கொத்தொன்றே பொன்று ருக்குமணிக்குக்கொடுத்தோம். அவளதை வாங்கிக்கொண்டாள். வுனக்கு அந்தக் கர்ப்பகப்பூங்காவில் ஒரு பாரிசாதப்புட்பம் புட்பிக்கின்ற கற்பகமரத்தைக் கொண்டுவந்து உன் வீட்டுவாசலில்வைக்கிறேன் பெண்ணே யென்றுசொல்லி அவளூடலைத்தீர்த்து வேதப்பிர்மா விருந்தருளிய பிரமபுரத்தில் எழுந்தருளிவந்தார் கமலமகள் புணர்ந்தமார்பனான கிஷ்ணதேவர்.—எ-று. (எ)

பிரமபுரத்தெய்திமுகிற் பெருமுழக்கின் வளைமுழக்கித்
தருகநறுமலர்ப்பாரி சாதமென வுரைப்பவயன்
அரமகளிர் விளையாடு மாயிரங்கண்ணன் புரக்கும்
புரமிசை யுண்டெனா வுரைப்ப போந்தனனப் புரத்தாயன்.

(இ-ள்.) பிரமபுரத்தில்வந்து மேககெர்ச்சிதம்போலும் பெருமுழக்கமான சங்கத்தொனிமுழக்கி நறிய புட்பங்களையுடைய பாரிசாதந்தருவாயென்றுசொல்ல அது கேட்ட பிரமதேவன் ரம்பாஸ்ரீகள் விளையாடிவாழ்கின்ற யிந்திரனாளப்பட்ட யிந்திர புரத்திலுண்டென்றுசொல்ல அப்படியேயென்று அமராபதிக்கெழுந்தருளிப் போனார் கிஷ்ணதேவர்.—எ-று. (௮)

போந்துவலம் புரிமுழக்கிப் பொற்றருவைக்கொணர்காலை
யாய்ந்தவரமகளினர்வந் தாயனழகினைப்பார்த்தார்
வேய்ந்தவவரிடையொருத்தி விபுதையெனும் வியன்மடந்தை
வாய்ந்தகரியவன் றனக்குமனமுருகி மயலானாள்.

(இ-ள்.) அப்படி சங்கத்தொனிமுழக்கிப் பாரிசாத தருவைக்கொண்டுவரும் போது அங்கனம் விளையாடிக்கொண்டிருந்த தெய்வப்பெண்களவந்து கிஷ்ணதேவருடைய அழகைப்பார்த்தார்கள அவர்களுக்குள்ளே ஒரு தெய்வப்பெண் அதிரூபசவுந்தரியமான விபுதையெனபவள வாயப்பாக மாயவன்பேரிலமோகித்து மனங்களைந்துருகி விரகமானாள.—எ-று. (௯)

விபுதைமடமயி லதிக விரகமுளாந்தாவணசக
கபுதைமட லெழுதிவருங் காமநிரம்பித முறுசெய்மெய்
விபுதைநலங் களிகூர விண்டலக்கற்பகக்காவில்
மபுதைவிழி வனிதையுடன மருவிமணாந்தனன் மாயன்.

(இ-ள்.) மடமையுடைய மயில்போலுஞ் சாயலையுடைய விபுதையென்பவள் மனதில் அதிகமோகம் பிரவேசிக்கத்தனது தாமரைக்கைகளால் மடலெழுதி மிகுந்தஆசையுடனே தொடர்ந்துவருவதைக்கண்டு மோகமாக நலவின்பமுண்டாய்க்களிகூற அந்தப்பொன்னுலகத்துக கற்பகப்பூஞ்சோலையி லோரிடத்தில் மதர்த்தவிழிகளையுடையவளுடனே மருவி மணம்புணர்ந்தார் கிஷ்ணதேவர்.—எ-று. (௧௦)

அவர்புணர்ந்தபொழுதிலெழு தரியமட வணங்குதித்துத்
துவர்புணர்ந்த கனிவாயுஞ் சுகம்புணர்ந்த பனிமொழியுந்
தவர்புணர்ந்த நுதலுமலர்ச் சண்பகநாசியுங் கரமுங்
கவர்புணர்ந்த கயல்விழியுங் கவின்பெறக் கன்னிகை யுதித்தாள்.

(இ-ள்.) அங்ஙனம் விபுதையுடனே கிஷ்ணதேவர்கூடி மருவிப்புணர்ந்தபோது பவழம்போன்ற கனிவாயுங் கிளிபோன்ற குளிர்ந்தவசனமும் இளம் பிறைபோன்ற நெற்றியுஞ் சண்பகப்பூப்போன்ற நாசியுங் காந்தள்புட்பம்போன்ற கைகளுங் காமுகருயிர்க்கவரும்படி மீன்போன்றழகிய கண்களும் யிப்படி யழகுடனே வொருதெய்வகன்னிகைப் பெண்பிறந்தாள்.—எ-று. (௧௧)

ஆங்கதுகண் டேகந்துவிபு தையையகன்றங் கடைந்தனன்மா
லோங்கியமின் மடவயினை யுயர்விபுதை குலத்தரியோர்

பாங்குரவங் கவர்வளர்த்தார் பன்னிருகல் வயதின்மலர்ப்
பூங்கமிழ்கற்பகக்காவிற் பொன்னூச லேற்றினரால்.

(இ-ள்.) அங்ஙனம் அதுகண்டு கிஷ்ணதேவர் மகிழ்ச்சியுடனே விபுதையை விட்டுப்பிரிந்து தம்முடைய துவாரகாபுரிபோய்ச்சேர்ந்தார். இப்படி யழகுடனேபி றந்த பெண்மயிலை யந்த விபுதைகுலத்தி லுரியவர்கள் நல்லபராக்குசெய்து அங்கே வளர்த்தார்கள் பன்னிரண்டு பிராயத்தளவில் வாசனையுடைய அந்தக் கற்பகப்பூங்காவில் அந்தப்பெண்ணை சொர்ணமயமான ஊஞ்சலிலே ஏற்றிவைத்தார்.—எ-று. கஉ

ஏற்றிவல்லி மணியூச லினிதாட்ட வெழிற்குகனைப்
போற்றிமயிலவாகனமும் புண்டரிகத்துணைத்தாளு
மேற்றிதிரு வுடையழகு மெழில்மார்பு மீராறுதோ
ளாற்றலுறுமணிக்கரமு மறுமுகமுந் தியானித்தார்.

(இ-ள்.) இரத்தினமயமான ஊஞ்சலிலே யந்தப்பெண்ணை யேற்றிவைத்து ஆட்டும்படியாகக் கந்தசுவாமியைநினைத்துப் போற்றிசெய்து மயில்வாகனமுங் கமலமலர்போன்ற விருபாதங்களும் உசிதமான திருவுடையழகும் யெழிலுடையமார்பும் பன்னிரண்டுதோளும் வலிமையுடைய ரத்தினமணி வளைகளணிந்தகைகளும் ஆறுமுகமாகத் தியானஞ்செய்தார்கள்.—எ-று. (கங)

ஆறெழுத்தின் பெயர்பாடி யாறுதிருமுடிபாடி
வீறியபன்னிருகதிரின விளங்குமணிக் குழைபாடி
கூறியபன் னிருநயனக் கோலங்கள் பலபாடி
யீறில்கனிவாய்மலரி னெழில்பாடி யிசைபாடி

(இ-ள்.) குமாரருடைய திருநாமங்களெல்லாம்பாடிச் சடாட்சரப் பெருமை பாடி ஆறுதிருமுடிகளும்பாடிக் கதிர்விளங்கிப் பிரபைவிரிக்கின்ற பன்னிருகாதில் இரத்தினமணிக்குண்டலங்கள்பாடி பன்னிரண்டு கண்களினுடைய அழகுகள் பலவும்பாடிக் குமுதபுட்பம்போலுங் கனிவாய அழகுபாடி யிசைகளும்பாடி யூஞ்சலாடினார்கள்.—எ-று. (கச)

பன்னிரண்டு புயம்பாடிப் பணைத்தெழுகந் தரம்பாடி
மின்னுருண்ட் தனையகுழை விளங்கிய குண்டலம்பாடித்
தொன்னிரண்டு வாகைநறுந் தொடையுரமும் புயம்பாடிப்
பன்னிரண்டு கரத்துணையிற் படைபாடிக் குடைபாடி.

(இ-ள்.) பன்னிரண்டுபுயங்கள்பாடிக் கதிர்த்தெழுந்த திருக்கழுத்தழகும்பாடி மின்ன லுருட்சியானதுபோலுங் குழைகளவிளங்கிய குண்டலங்களபாடி யிருபாலு மணிந்த நறியவெட்சிமாலை புனைந்தழகியமார்பி னெழில்பாடி பன்னிரண்டுகைகளில் தரித்திருக்கின்ற பலவாயுதங்கள்பாடி குடைபாடி ஊஞ்சல் நாட்டினார்கள்.-எ-று.

சித்திரப்பெண்ணுடைபாடித் திருவுதரக்கவின்பாடிச்
சுத்தமலர்ப் பதம்பாடி துணையடிபொற் கழல்பாடி
மெத்தமரர் சிறைமீட்ட விறல்பாடி வேல்பாடிக்
கொத்தகின் றிறற்சேவற் கொடிபாடி யாட்டினரால்.

(இ-ள்.) அழகிய மணிபட்டுடைபாடித் திருவயிற்றின் அழகுபாடி நிஷ்க்கலங்கள் சுத்தமான வனசபுட்பம்போலும் பாதங்கள்பாடி இரண்டுபாதங்களில்தரித்த

சொர்ன வீரக்கழல்பாடி மிகுதியானதேவர்கள் சிறைமீட்டருளிய வீரவலுமைபாடி வேலாயுதம்பாடி கொத்தப்பட்ட அழகினையுடைய திரம்பொருந்திய சேவலங்கொடிபாடி ஊஞ்சலாட்டினூர்கள் —எ-று. (கசு)

அவ்வேலை மைய்வேலை யணிவேலை நிகர்விழிமான
வைய்வேலர் திருவழகால் மையலவேலை மணங்கொண்டா
ளிவ்வேலை விபுதைபெற்ற யேந்திழைகைக் கொண்டதற்பின்
செவ்வேலை தரித்தபிரான் சேரவர் தவஞ்செய்கென்றார்.

(இ-ள்.) மேகமொய்த்த கடலபோலுமழகிய வேலைப்போலு மதற்கண்களையுடைய அந்தப்பெண்ணானவள் குரிதாகிய வேலாயுதக்கடவுளினுடைய திருவழகுகளை காதுகுளிரக்கேட்டு மனதிலேகுறித்த ஆசைக்கடலிலே மூழ்கினள். அதுகண்டவ்வேளை விபுதைபெற்ற கன்னிப்பெண்ணானவள் கொண்ட ஆசைமிகுதியைக்கண்டு பின்பு அழகிய வேலைத்தரித்த குமாரக்கடவுளைஅடைவதற்கு தவஞ்செய் பெண்ணேயென்று சொன்னார்கள்.—எ-று. (கஎ)

என்றுசரவணக்கரையி லெழின்மடவார் பலகோடி
நின்றுமுருகனைப்பணிந்து தவநிலையி னிறுத்தினரா
லன்றுகருங் குழல்விபுதை யளித்தமயிலாணவள
ரென்றுமுணராள்குகனை யுளத்திருத்தித் தவஞ்செய்தாள்.

(இ-ள்.) யென்றிப்படிசசொல்லி சரவணப்பொய்கை கரையருகில் அழகியப்பெண்கள் அனந்தங்கூடி நின்று கந்தசுவாமியைப்பணிந்து தவநிலையில நிறுத்திவைத்தார்கள். அன்றுமுதற்கரிய கூந்தலையுடைய விபுதைபெற்ற மயிலைப்போலுமழகிய கன்னிப்பெண் பன்னிரண்டுவருடம் வேறொன்று நினையாமல குமாரனை உள்ளக்கமலத்திலநிறுத்தி அரியதவஞ்செய்தாள்.—எ-று. (கஅ)

சரவணப்பொன்மடுக் கரையிற்றவம்புரிந்து தனிந்தெழிற்பஞ்
சரவணத்துக்கிளிபனையா டவம்புரிபு நிலைபுணர்ந்து
சரவணத்துவிழித்தெய்வ சேனைநாயகர் சண்முகருஞ்
சரவணத்துக்குழையா மைந்தர் தமதுருந் தவணடைந்தார்.

(இ-ள்.) சரவணப்பொய்கைக் கரையருகில் அரிய தவஞ்செய்து தனிமையான அழகிய பஞ்சவர்ணக்கிளிபோன்ற கன்னிப்பெண்செய்யுந் தவநிலைமையையறிந்துவந்து அம்புபோன்ற கண்களையுடைய தெய்வசேனை மணவாளராகிய சண்முகக்கடவுள் ஐந்து தலைகளையுடைய பாம்புக்குண்டலங்களைத் தரித்த செவிகளையுடைய பரமசிவனுடைய திருக்குமாரர் தமமுடைய வடிவைமறைத்து அங்கணமடைந்தார்.-எ-று.

தவமியின்றவங்குலைப்பச் சரத விநம்பலகூறி
யவுருவின லலழகு நாயகனைப்புகழ்ந்தார
சிவசிவவச்சிறியா ளச்செயலறியா சரவணத்துற்
பவனையுள நினைப்பதலலாற் பகர்வனவொன்றுமகருதாள்.

(இ-ள்.) அரியதவஞ்செயயாநின்ற கன்னிப்பெண்செய்யுந் தவங்களையு மப்படியாக அனேக சரசசல்லாப விநோதவார்த்தைகளைப்பேசி புதுமையான வடிவுடையவொரு புருடநாயகமாகப் புகழ்ந்தார். அப்போது சிவசிவா அந்தச்சரியவளான கன்னிப்பெண் அந்தச் செயலைத் தெரியாதவளாய் சரவணோற்பவனை தனதுள்ளத்தில் நினைத்து தியானிப்பதல்லாமல் அவளபேசிய விநோதவசனமொன்றும் காதுதவளாய் ஒருமனநிலையாய்த் தவஞ்செய்தாள்.—எ-று. (உ0)

அறுமுகமுங் கடம்பமரையணிபுயமும் பன்னிருகை
யுறுபடையும் பன்னிருகுண்டலக் கதிர்வந்துலவு மார்புஞ்
செறுமயிலின் பெறு மயிலின் திருமயிலு மிருமையிலும்
வறுமையிலென் றுதவடியும் வயங்கமயிலெதிர் நின்றார்.

(இ-ள்.) ஆறுமுகமுங் கடம்பமலர்மாலைதரித்த புயங்களும் பன்னிரண்டு குண்டலங்களின் பிரபையுயுலவும் திருமார்பும் அசுரரைக்கொன்ற கூர்மையுடைய வெற்றி வேலும் அழகிய மயில்வாகனமுமாக விம்மை மறுமை இரண்டிக்கும் வறுமையில்லையென்று ரட்சிக்கும் பாதங்களுமாக விளங்கிப்பிரகாசிக்க மயிலபோலுந் தவஞ்செய்துநின்ற கன்னிப்பெண்ணுக்கெதிரே காட்சிகொடுத் தெழுந்தருளிநின்றார். குமாரசுவாமி.—எ-று. (௨௧)

கந்தர்தவப்பூமியினிற் காட்சிகொடுத்தன மயில்கண்
டுய்ந்தனமென் றுளமகிழ்வுற் றுலர்ந்தகொடி மழைபெற்றங்
கந்தமுறத்தழைத்தெழுந் தொர்பொற்றருவின் படர்வனபோற்
றந்தமுலைவிழுதைமயில தந்தகுயிலெழுந்துளதால.

(இ-ள்.) கந்தசுவாமி தவபூமியிலே வந்தெய்தி திருக்காட்சிகொடுத்தருளினதை அந்த மயிலபோன்ற கன்னிகையானவள்கண்டு உய்ந்தே னுய்ந்தேனென்று உள்ளங்களிப்பாகவேகி உலர்ந்தகொடியானது மழைபெய்யப்பெற்று அழகுபெறத தழைத்தெழுந்தங்கே ஒரு சொர்ணத்தருவின்மேலே படர்வதுபோலும் ஆனைக்கொம்புகள்போலும் முலைகளுடைய விபுதை மயில்பெற்ற குயிலபோலு மொழியையுடைய அழகிய கன்னிப்பெண் தவத்தைவிட் டெழுந்துவந்து குமாரசுவாமியைத் தோத்திரஞ்செய்கின்றாள்.—எ-று. (௨௨)

ஆறிருபுயபோற்றி அறுமுகபங்கயபோற்றி
சீறுடற்றோகைமயிற் சேவகபுங்கவபோற்றி
கூறுகத்தாருகனைச் சூரனைக் கொன்றவபோற்றி
பேறுகவெனையாண்ட பெருங்கருணைக்கடல போற்றி.

(இ-ள்.) பன்னிரண்டு புயக்கடவுளேபோற்றி ஆறுமுக பங்கயபோற்றி நடனஞ்செய்கின்ற தோகைமயில்வாகனரு சேவகனே தேவர்தேவனேபோற்றி அடியாள் பேறுபெறத்தக்கதாக காட்சிகொடுத்து வரந்தந்தென்னையாளவந்த கிருபைக்கடலே போற்றிபோற்றி.—எ-று. (௨௩)

உமையவள் பெற்றவபோற்றி யுமாபதிதந்தவபோற்றி
சிமையமலையகலாத திருவிளையாட்டின போற்றி
யமைவளையபுயத்தெய்வ சேனையணை பவபோற்றி
யிமையவர்கள் சிறைமீட்டயெலா ருயிர் நாயகபோற்றி.

(இ-ள்.) உமாதேவி பெற்றவனேபோற்றி உமாதேவி தந்தவனேபோற்றி சிங்காரங்களையுடைய மலைகளெல்லா முலாவிப்பிரியாமல் திருவிளையாடல் செய்தவனே போற்றி பசுமூங்கிற்போலும் புயங்களையுடைய தெய்வசேனையம்மன் மருவும் மணவாளனேபோற்றி தேவர்கள் சிறைமீட்டருளி ரட்சணைசெய்த வென்பிராணநாயகனே போற்றிபோற்றி.—எ-று. (௨௪)

போற்றியினியெனத்துயம் பொருந்தவருள் பொருந்துகவென்
றேற்றதுதி பலபகர்ந்த வேந்திழைசொற்குளமகிழ்ந்து

கூற்றுதைத்த பரனுதவுங் குமரர் மறையவன்சிரத்தி
லூற்றமுறவிரற்புடைத்த வொருமுருகருனை பகர்வார்.

(இ-ள்.) இப்படி துதிசெய்தது தேவரீர் யென்னுடைய தனபாரங்கள்பொருந்த மருவியணையும்படி மணஞ்செய்யக் கிருபைசெய்தருளுமென்று அன்பாகதோத்திரங்கள் பலவிதமாகச் சொல்லித் துதிக்க அவளசொன்ன பிரியவசனங்களைகேட்டு மனமகிழ்ச்சியாகி யெமனையுதைத்த பரமேஸ்பரன் பெற்றருளிய குமாரரானவர் பிரமதேவனைச் சிரசிலே யிரத்தமொரி வரும்படியாக தமது கைவிரல்களாலே குட்டிய ஒப்பற்ற முருகக்கடவுளிவைசொலலுகிறார் —எ-று. (உரு)

தேவாதிபதியுதவுஞ் சேனைக்கொரு வப்பிணியில்யா
மூவுலகில்மடந்தையரை முயங்கிலெமென்றுரைபகர்ந்தோ
மாவலினுலிங்குனைநா மணைகிலமான் வயிற்றுதித்துப்
பூவுலகமலையிடத்தில் பொருந்துகென வரங்கொடுத்தார்.

(இ-ள.) வாராய்பெண்ணே முன்னமேயிந்தவேந்திரன் பெற்றபுத்திரியான தெய்வசேனைப்பெண்ணுக்கு ஒருநாள மருவிமலைத்த சந்தோஷத்திலே ஒரு வரங்கொடுத்தருளினேம் உன்னையல்லாமல் திரிலோகத்திலுமுண்டாகிய பெண்களைச்சேர்வதில்லையென்றுசொன்னேம் ஆகையா லிப்போதிங்கே உன்னை மணஞ்செய்து சேர்வதில்லை. யிப்பிறப்பையொழிந்து பூமண்டலத்திலே திவ்வியருபமான ஒரு மான்வயிற்றிலே வந்துபிறந்து மலையிடத்திற் சேர்ந்துவளர்ந்து பருவமானதருணத்தில் நாமங்கேவந்து உன்னை மணஞ்செய்து பிரியாமற்சேருகிறோமென்றிந்த வரங்கொடுத்தெழுந்தருளினார் கந்தசுவாமி.—எ-று. (உசு)

அந்தவரம்பெற்றபின்ன ரகில்மிசையணிமட்மான்
வந்ததுகண் டுகந்துகலைக் கோட்டுமகாமுனியணைந்தான்
சந்தனப்பொற்கொடிபோலத் தையலைமையலிற்பிணைமா
னந்தவள்ளி நறுங்கந்த மழகுழியிற் பெற்றதுவாம்.

(இ-ள்.) வரம்பெற்றபின்பு அந்தக்கன்னிகை தன் செனனத்தையொழித்து நின்றகாலத்தில் யிந்தபூமியின்பேரிலே அழகிய பிணைமான்வந்ததைகண்டு கலைக்கோட்டு மகாமுனிவன் புணர்ந்தான. புணர்ந்தவுடனே சந்தானமென்று சொலலப்பட்ட காமவல்லிக்கொடிபோலுமழகிய வொருபெண்ணை ஆசையுடனே அந்தப்பிணைமான் விழுமிய வள்ளிக்கிழங்கு கெல்லின குழியில் பெறறருளினதென்றவாறு. ( )

பெற்றமான்பிணைபார்த்துப் பேதலித்துமயங்கிவள்ளி
நற்றழகுமதிமுகமு நாகமணி யொளிநிறமு
முற்றெமது மரபலவென் றோடினதோடியகாலை
யற்றைவனக் குறவரங்கண்குழந்தையைக்கண் டருகணைந்தார்.

(இ-ள்.) அந்தப் பிணைமானானது அழகியபெண்ணைப்பெற்று உற்றுநோக்கிப் பார்த்து பேதனமாகமயங்கிப் பூரணச்சந்திரன்போலமுகமும் நாகமாணாக்கம்போல தேககாந்தியும் அழகுக்கண்டுதெரிந்து யிது நம்மிடமான் சாதியலலவென்று தான் பெற்றகுழந்தையை யங்கே போட்டுவிட்டுபபோனது அன்றையதகுனம் அங்கனம் வனக்குறவர்கள் அந்தக்குழந்தையைக்கண்டு அதின்பக்கத்தில் வந்தார்கள்.—எ-று.

எய்தினரித்திருவணங்கை யீன்றவர்யா ரெனவடிபார்த்
துய்தலமானிடாடிக ளொன்றுமிலாதறிந்தெடுத்தார்

பொய்தருசிற்றிடைமயிலை போற்றிவளர்த்தற்கொருபேர்
மெய்தருநம்வள்ளியென விளைத்தபடி விளம்புகின்றார்.

(இ-ள்.) வந்தகுறவர்கள் அந்தப் பெண்குழந்தையைபபார்த்து யிந்தத் தெய்வ ரூபமான பெண்குழந்தையைப்பெறறவர்கள யாரென்றுசுற்றிலுந் தாமைபார்த்தாக ள யெங்கும்மானடிக தாமையேயொழிய வேறு மனிதர் தாமையிலலாததால் அந்தப் பெண்ணை யெடுத்துககொணடுவநது வளர்த்துப் பெணணுக்கொரு பேரிடும்படி கா ரணார்த்தமாக வளளிக்கிழங்கு செல்லிய குழியிலிருந்தபடியினாலே வள்ளியமமன் யெனறுந் திருப்பேரிட்டு யனைவரும் அழைததுவாழ்ந்தனர்கள.—எ-று. (உகூ)

அப்பெயரிட்டமுதமொழிக் குமுதமலர்க்கனியணிவாய்ச்
செப்புமுலைத்திங்கணுதற் செங்கைமலர்ச் சங்கமடற்
றப்புவிழிப் பொற்கமலத் தலர்வதனத் திலவிதழ்பெற்
றிப்படியிற் றிருவெனப்பன் னிருவயதாற் றிலங்குகின்றாள்.

(இ-ள) அப்படிப்பெயரிட்டு அமுர்தம்போன்றமொழியும், குமுதப்பூவனைய கனி வாயும், சொர்ன்ன சிமிழன்னமுலைகளும், பிறையொததநெற்றியு, காந்தள்மலரிசைந் து சிவந்தகைகளும், வலம்புரிச்சஙகை நிகர்ததகழுத்தும, அலரிமனையகண்களும், க மலமலர் நேர்முகமு, முருக்கமபூவொதத யிதழுமும, அழகுபெற யிந்தப்பிரகார அதி ரூபசவுந்தரியமாக பூலோகலட்சுமியெனறும் யாரும்புகழநதுசொல்ல வளாந்து பன் னிரண்டுவயதாகி யொளிபொருநதி விளஙகாநின்றாள் வள்ளியம்மன்.—எ-று. (௩0)

அவ்வயதிற் பெண்ணரசை யணிப்பவழ மலையொருபால்
மைவதியும்வச்சிரமலை மாணிக்க மலையிருபாற்
பௌவமரகதமலையோர் பாங்குநடுக் கற்பகக்காச்
செவ்விமலையதனுப்பண செழுங்கனக பரணிசேர்த்தார்.

(இ-ள்.) பன்னிரண்டுவயதான பெண்ணரசியான வள்ளியம்மனை அந்த மலைக் குறவர்கள் பவளமலையொருபுறம் மேகமெய்த்த வசிரமலையும், மாணிக்கமலையும், இரண்டுபக்கமும் பொருந்தநிற்க அழகிய மரகதமலைசசாரலி லொருபுறத்திலே வி ளங்காநின்ற ஒப்பிய பூங்காவனததில செவவியமலை பூமிநடுவில் செழுமையுடைய சொர்ன்னமயமான தொருபரணபோட்டு வைத்தார்களா.—எ-று. (௩க)

இதன்மீதாசந்தனக்கா லிடைநிறுத்திப்பொற்சுவரிட்
டதன்மீதுகொண்டவர்பாங் கருளுநிதியெனச்சொரிந்து
மதமேவுகரிக்கோட்டின் மணியழுத்திக்கொடுங்கைவைத்து
விதமேவுநவமணியால் வேய்ந்துமலர்விதானித்தார்.

(இ-ள்.) அப்படி யழகுபெறப்போட்ட பரணின்மீது சந்தனக்கால் நடுநிறுத்தி பொன்சுவரமைத்து அதன்மேற்கொண்டு சிவனது தோழரருளிய நிதிப்போலப் பொழிந்து மதம்பொருந்திய யானைக்கொம்புகளால்மணியழுததிய கொடுங்கைவைத் து விதவிதமான நவரத்தினங்களால்மேய்நது பலபுஷபஙகளா லலங்கரித்தார்கள்.

அவ்விதனிற் கொவ்வையிதழ் மவ்வனகை யமுதசுவைச்
செவ்விதனித் திடுகிளவித் திருந்திழையைக் கொணர்ந்திருத்தி
நவ்விதனித்திடுநயன நங்கையனைப் பாங்குவைத்து
யிவ்விதனின் பொடுமணிக்க லேமகவண்காங்கொடுத்தார்.

(இ-ள்.) அப்படி அலங்கிர்தஞ்செய்தழகிய பரணிமேலே கோவ்வக்கனிபோ ல தரமும் முல்லை யரும்புகள்போற பல்வரிசையும் அமிர்தரசத்தைப்பழித்த யிருது

வான வசனமுடைய திருந்திழையாகிய வள்ளியம்மையை அழைத்துக்கொண்டுவந்து யிருத்திமான பார்வையைப்பழிக்கும் கண்களையுடைய சிலபெண்களை அவளுக்குத் துணைபாங்கிமாராகவைத்து அந்தப் பரணின்மேல்நின்று ஓட்டுவதாக வன்பமுடனே பலமாணிக்கக்கல்லுகளும் பொன்னாற்செய்தகவிணு கைகொடுத்தார்கள் குறவர்கள் —எ-று. (ருரு)

வேறு.

புனமென்கிளிகா ளாலோலம் பூவைத்தோகைக ளாலோலங்
கனமின் பிணைகளாலோலம் கானக்குயில்காளாலோலம்
வனமென் மயில்களாலோலஞ் வரையின்பிடிகாளாலோலம்
தினைதின் கரிகாளாலோலஞ் செறியுங்கலைகாளாலோலம்.

(இ-ள்.) அந்தப்பரணின்மீது வள்ளியம்மனின்று கவண்கல்வீசி வோலஞ்செய்வ தெப்படியென்றால்; இந்தப்புனத்தில் மெல்லிய கிளிக்கூட்டங்களா லோலமாலோலம் நாகணவாய்ப்புள்ளி மான்களாலோமாலோலம், திரட்சியுடைய மெல்லிய பிணைமான்களா லோலம, கானக்கருங்குயில் தோகைகளாலோலம், வனத்தில் மெல்லியமயில் பேடைகளாலோலம், இந்தமலையில் திரிகின்ற பிடியானைத் திரள்களாலோலம், இப்புனத்தில், தினைகள் தின்கின்ற யானைகள ஆலோலம, நெருக்கமாசவருகின்ற கலைமான் கூட்டஙகளா லோலமாலோலம என்றாள் —எ-று. (ருசு)

மரையிற்கிளைகா ளாலோலம் மாடப்புறாவினாலோலங்
குருவித்திரள்காளாலோலங் கொலத்தோகைகா ளாலோலங்
திரிபுட்கினங்காளாலோலஞ் சேவற்பேடைகளாலோலம்
மருவிக்கிரிமீ திவ்வகையின் றாயோவெனனுங் குரலெழுமால்.

(இ-ள்.) மான்மரைக்கூட்டங்களா லோலமாலோலம, மாடப்புறாவினங்களாலோலம், குருவிக்கூட்டங்களா லோலம், காடுப்பன்றி தோகைகளா லோலம், கானங்கோழி சேவல்பேடைகளா லோலம் தென்றிப்படி யங்கண மறிவியிரங்கும் மலைச்சாரலிலிட்ட பரணின்மேல்நின்று சொர்னனகவணில் மாணிககல்லைவைத்து சுழற்றி எறிந்து குயில்போன்ற குரலோசையால ஆயாலோவென்று தொனிகளெழுப்பினள் வள்ளியம்மன்.—எ-று. (ருஎ)

எழுந்ததொனிகேட் டுலர்ந்தமரம் யாவுந்தழைத்துத் தழைந்துமலர்
கொழுந்தி னெழுந்து தேனொழுகக் குனறங்கனிந்துகுழைந்துருக
வழுந்துங்கிளியுங் குயிலினமு மடுங்கப்படினும் பரவாமல்
விழுந்துமெழுந்துங் குரமடவார் வெந்தின்பணவ்வயகலாதால்.

(இ-ள்.) இப்படி வள்ளியம்மன் ஆயாலோட்டும் குரலோசையைக்கேட்டு வுலர்ந்த மரங்களெல்லாம் பசுமையுண்டாய் நன்றாய் தழைத்து மிருதுவான கொத்து கொழுந்துகளாக வோங்கியெழுந்து புஷ்பித்து தேனொழுகச்செய்ய பலமலைகளெல்லாம் கனிந்து மெழுகுபோலுருகிக் கதிர்களில் மொய்த்தெழுந்த கிளிகளும் குயிலினங்களும் அவளெறிந்த கவண்கல் விசையாகவந்து மேலே பட்டபோது வெழுந்து பரவாமல் விழுந்து யெழுந்து அங்கனம் குறவமகளிற் கரசியாகிய வள்ளியமமன் குரலோசையைக் கேட்டதிசயப்பட்டு அந்தப்புனதலைவிட்டுப் பிரியாமல் வசிக்கும். எ-று (ருஅ)

அந்தக்குரலினிசைவழியே யமரர்பதியின் றருந்தவத்தோர்
விந்தத்தலங்களிடையினவி விரவுந்தவநாரதமுனிவன்

வந்தப்புனத்துவள்ளியெனு மடவார்க்கரசை மழைகிரண்ட்
கந்தக்குழலை மொழிக்கரும்பைக் கண்டான்பவங்கள் காணுதான்

(இ-ள்.) அந்தவள்ளியம்மன் குறலோசைவழியாக யிந்திரபுரியில் நின்றும் புறப்பட்டு யெங்கெங்குஞ் சஞ்சரித்து அரியதவமுனிவர் செய்யுந்தவமகிமைகளைக்கண்டவர்களுடனே வினவிக்குலாவி யிராநின்ற தவமுடைய நாரதமுனிவன் வந்து அத்தினைப்புனத்தில் வள்ளியம்மாள் என்னும்பெண்ணை பெண்களை சிறோமணியை மேகம்போலும் திரட்சியுடைய மணமகலாத கூந்தலையுடைய கரும்புபோலும் மிருதுவானவசனமுடைய அதிரூபசவுந்தரியத்தைக் கண்குளிரக்கண்டான் ஒருகாலமும் பவங்கள் காணுத்தவமுனிவன். எ-று. (௬௭

கண்டான்மனமுங் கண்ணுமிகக் களிந்தான் களிந்தேயாயெனவுட்
கொண்டான் குமரர்தமக்காய குலப்பூங்கொடியென றுளத்துற்றுன
றண்டாமனையாள் மருகனிடஞ் சார்ந்தான் கண்ட தன்மையெலாம்
விண்டான்விளம்ப முருகருளம் விரகானலத்தால் வெதும்பினரால்.

(இ-ள்.) வள்ளியம்மனை யழகைக்கண்ட நாரதமுனிவன் மனமுங்கண்களும் மிகவுங் களியாகக் குளிர்ந்து பத்தியுடனே யிவளெநமக்கெல்லாந் தாயாகுமென்று மனதிற்கொண்டு குமாரக்கடவுளுக்கிசைந்த தேவியிவளென்று நினைத்து குளிர்ந்த தாமரைமகளான லட்சுமிதேவி மருமகனான குமாரக்கடவுளிடத்திலவந்து தான்கண்ட புதுமையெல்லாம் விளங்கச்சொன்னர். அப்படிச்சொன்னவுடன் முருகர் அதிமோகமாகி விரகங்கொண்டு வுள்ளம்வெதும்பினர்.—எ-று. (௬௮)

கயிலைமலையும் பணிவரையுங் கண்ணும்வரையெனு நுணுடி
யியலகொண்மலையிற் றினந்தினம்போய் விளையாடிய காலையில்வேலர்
புயலையனைய குழலிருவிற் புருவக்கணைப்போல் விழிக்கனக
மயிலைநினைந்து வழிதேடி மயங்கிநடந்தார் மயில்பாகர்.

(இ-ள்.) கைலாசகிரியும், திருநாககிரியும், இவ்விரண்டும் தமது கண்களுக்குச் சமானமான மலைகளென்று தமதுளத்தில்நினைத்து அன்றுயர்ந்தமலைகளில் தினந்தினம்போய் விளையாடல்செய் துகந்திருந்தகாலத்தில் வேலவர் மேகநிறம்போன்ற நெடியகூந்தலும், வில்லைப்போன்ற புருவங்களும், போர்செய்யும் புட்பபாணங்கள் போலுங்கண்களும், அழகிய சொர்ணக்கொடிபோன்ற சாயலையுடைய வள்ளியம்மனைநினைத்து அவளிருக்குமிடந் தேடிநடந்தார் மயில்வாகனக்கடவுள்.—எ-று. (௬௯)

வள்ளியம்மன் உற்பவச்சருக்கம் முற்றிற்று.

ஆக சருக்கம் - உக - க்கு - திருவிருத்தம் - ௬௯.

# வள்ளிநாயகி திருமணச் சருக்கம்.

குத்துங்கரியின் மருப்புருந்து குழுமுந்தாளக் குலையுநிலா
நித்தம்வதியுங் கழைமணியும் நெருங்கிநெருங்கி நிறைந்துசெழு
முத்தஞ்சொரிந்து மணிசொரிந்து முரலும்பசுந்தே னருவிவிழுஞ்
சத்தம்பொழியுமழைமொகிலைத் தாக்குஞ்சயிலம்பலதேடி

(இ-ள்.) ஆனைகளானது கொம்புகளாற் பாய்ந்துகுத்தி உதிர்ந்தமணிமுத்துகள் திரட்சியாகக்குவிந்து நிலாபபிரபைசெய்ய அங்ஙனமவிளையப்பட்ட மூங்கிலமுத்து

களும், நெருங்கிச்சொரிந்து நிறைந்து செழுமையுடைய பலமணிகளும் பொலிவுடையதாய்க்குவிந்து மூரலப்பட்ட செவ்வியபசுந்தேன் ஒழுக்கமுடையதாய் அருவியிற குசத்திக்கின்ற மழைமேகமண்டலத்தை யளாவிநிற்கு பல மலைகளைத்தேடி.—எ-று.

எட்டுப்புயத்தேழ் சத்தியர்க்கு ளினிதாயர்க்கு சமயவர்க்கு
மட்டுற்றைம்பாதகமகற்றும் வளர்நான மறையாள் மூவிழியாள்
நட்டத்திருக்கா லொருத்திவன நடந்தார்கடந்தார் தடந்தாள்வென்
முட்டைத்துருவுங் குடைவேலின் முனைச்சூருதிர முடைவேலர்.

(இ-ள்.) எட்டுபுயத்தையுடையவளாய்ச் சத்தமாதாவாகிய சத்திகூட்டங்களில் மேன்மையான இனியசத்தியாய் அறுசமயத்தாருக்கும் அங்கங்கே அவரவற்கு யிஷ்டதெய்வமாகவிளங்கி பஞ்சபாதகங்களை தீர்க்கின்றவளாய் வளமையான சதுர் வேதப்பொருளாய் திரிநேத்திரமுடையவளாய் திருநடனஞ்செய்யப்பட்ட பாதங்களையுடைய அழகிய துர்சகாதேவி உரித்தாகிய பாலநிலமானசுரத்தை சார்ந்தவிட மெங்குந்தேடி பெரியதாள்களில் முட்டுடை வேல்முனை முல்லுகள்தைத்துருவி குருதிநாதோய்ந்த அயில்வேலர் கடந்துநின்றார்.—எ-று. (உ)

மாமற்கினிதாம்வனம்புகுந்து மறிமான்றனைக்கண் டுயிர்மானின்
காமர்த்துணைக்கண்டனைநினைவார்க் கனிவார்நஞ்சேவலைமறந்தோம்
போமிக்கணத்தி லெனப்புகல்வார் பூங்கொன்றையைக்கண்டணங்கினி
தேமுற்றிடுவா ரதனிடைச்சா தாரிக்கிடைவார் நடவாராய். [றத்

(இ-ள்.) தம்முடைய மாமனான விஷ்ணுவுக்கு சொந்தமான முல்லைவனத்தில் புகுந்து அங்கே குதிக்கப்பட்ட மான்பிணைகளைக்கண்டு தம்முயிர்போலும் மெழிவுடைய வள்ளிப்பெண்ணைநினைத்து வன்மையாகவெண்ணி கனிவுநிறைந்து, நம்முடைய சேவலைமறந்து வந்தோமிங்ஙனம் மொருகணப்பொழுதிற் போகவேண்டுமென்று நினைப்பார். பூத்த போர்க்கொன்றையைக்கண்டு யிந்தநிறமாக அழகியபெண்ணுடைய மேனியிருக்குமென்று முல்லைநிலத்தார் வேயங்குரலோசையைக்கேட்டு மெல்லமெல்ல நடந்துசென்றார் குமரவேள்.—எ-று. (ங)

மருதப்பழனம் புகப்பயந்த வகைபொற்பதங்க டடுமாறிக்
கருதிப்புணர்ந்த மடந்தைதந்தை கண்டாற்றவறென் றுளமயிர்த்து
வொருசற்குணம்போ லுறநடந்தா ருயர்நீர்க்கமல முகுழமலர்
வருவிற்றடங்கண் வளமுலையும் வதனத்தமுகு மெனமகிழ்வார்

(இ-ள்.) மருதநிலத்தில்புகுந்து பயந்தவர்போல் கால்கள்தடுமாற கருதிச்சேர்ந்த செய்வசேனைப்பெண் தகப்பனான யிந்திரன்கண்டால் மோசமென்று உள்ளத்தி லியர்ப்புடைய ஒரு சத்துவகுணம்போலும் வியர்ந்து நடந்தார். அங்கனம்நிறைந்த நீர்க்கயங்களில் தாமரைப்பூ முகிழுமுற்றிய முகிழ்மலாச்சியுங்கண்டு செவ்வரிபொருந்திய கருந்தடங்கண்ணினையுடைய வள்ளிப்பெண்முலைகளும் முகமும் யிப்படியிருக்குமென்று உவமித்து மகிழ்வாய்நடந்தார் குமரவேள்—எ-று. (சு)

செந்திற்றுறைவர்பணியசலச் செவ்வேள்முருகர் கைவேலர்
அந்தத்துறையோ வலவோவென் றுழிக்கழிசூழ்பதியேறி
வந்தக்கனமோகனமுங்நீர்ச் சுழியுமறலு மகாமுங்கண்
டுந்திச்சுழியுங்குளிவுநில வுதிக்குங்குழையும் மெனவியப்பார்.

(இ-ள்.) நெய்தநிலத்துக்குவந்து கடற்கரையிலிருக்கும் திருச்செந்தூரிலும் திருநாகமலையிலும் வசிக்கின்றவர் அழகிய செவ்வேள் முருகர் வேலாயுதக்கையர் அந்தக்

சமுத்திரக்கரைத் துறையோ யல்லவோவென் றையமுற்று கழிசூழ்ந்த கடற்கரை பட்டினங்களெல்லாம் மூலாவி யோடமேறிக்கடந்துபோம்பொழுது தாமிகுந்த மோகனமாக நீர்சுழியுங் கருமணலொழுக்கமும் மகரமுங்கண்டு அந்த வள்ளிப்பெண்ணினுந்திச்சுழியும் நெடியகூந்தலும் பிறைசெய்யுங் குழைகளும் யிவ்வாறிருக்குமென்று வியந்தார் முருகர்.—எ-று. (ரு)

வனத்திக்குறவரிடந்தேடி வழங்கூர்வள்ளி மலைதேடி
மனத்திற்குறப்பெண் வடிவிருத்தி மலர்கணிடத்து மவ்வாறாய்
புனத்துட்படரும்வழிதேடி போவார்வருவார் தமைத்தேடி
தனப்பொற்கொடியின் குரல்தேடி தடந்தாள்வருந்தி நடந்தாரால்.

(இ-ள்.) குறவர்களிருக்கும் வனங்களைத்தேடி வளமைகூர்ந்த வள்ளிமலையெதுவென்று தமது மனதில் வள்ளிப்பெண் வடிவழகையிருத்தி மலர்போன்ற கண்களிடத்திலு மவளுருவமமையும்படி அவ்வனங்களில்வருவார் போவார்களையும் விசாரித்துதேடி தனபாரம்பொருந்திய பொற்கொடியின் பவழக்குரல ஓசையைநாடித்தேடி பெரியபாதங்கள வருத்தமுற நடந்துசென்றார் வேலவர்.—எ-று. (சு)

வேறு.

வன்னக்குமரன் றிணையை வகையின்வழிதேடி
யன்னப்பெடையைக் குறமின்னைக்காணுவேலைக்
கனத்தமுதம்கருதிப் பருகுங்கவினேயப்பப்
பொன்னற்கவணின்றொனியுங் குரலும்புகவாழ்ந்தீர்.

(இ-ள்.) எவ்வர்ன்னமான குமாரக்கடவுள் ஐந்துநிலங்கள் யாவையுந்தேடி அன்னப்பேடையைக் குரவள்ளிப்பெணணைக்காணாது முழுதுந்தேடிப போகும்போது காதுகளில் திவ்வியாமிர்தம் பருகுவதுபோலும அழகுபெற அங்ஙனம் அவள் வீசியெறிந்த சொர்ணக்கவண் கல்லோசையும் ஆலோலமென்னுங் குரலோசையும் செவிகளிற்கேட்டு மிகுந்த மனமகிழ்சசியாக வாழ்ந்தேன் வாழ்ந்தேனென்று சொல்லி நடந்தார்.—எ-று. (எ)

கர்னக்கரிகாள் பிடிகாள்பிணைகாள் கலைமான்காள்
மானத்தலைவி யிருக்கும்வரையின் வழிகாட்டீ
ரேனக்கிளிகாள் பெடைகாள் நீரேயினிதாளீர்
யானிப்படியெப் பொழுதேபெறுவே னிசையீரோ.

(இ-ள்.) கானகத்தில்திரியாநின்ற யானைக்கூட்டங்களா பிடியினங்களா பிணைமான் றொகுதிகாள மலைமான்காள் நீஙகளிந்தமாநின்ற தலைவியாகிய வள்ளிப்பெண்ணிருக்கும் மலைகிவழியையக காட்டுவீர திணைக்கதிரைகொயயுங் கிளிகாள் கிளிபபேடைகாள் குருவிககூட்டங்களா நீங்களினிதாக வாள்வீர்கள் யானிப்படி தேடித்திரிகிறேன் யெப்போதவளைக் காணப்பெறுவேன் சொல்மின்களென்று நடந்தார் முருகவேள்.—எ-று. (அ)

என்றக்குறவின்வழிசென் றேயினர்க்குயிர்போலும்
குன்றத்தமுதைக் கொடியைப்பிடியைக் குலமாதைத்
தென்றற்குயிலைச் சயிலத்திருவைச் செழுமானின்
கன்றைக்கனியைக் கனிசொற்கிளியைக் கண்டாரால்.

(இ-ள்.) என்றிப்படி யவள்குரலோசை வழியேசென்றுசேர்ந்து குறவர்களுக்குயிர்போலு மலைப்பெண்ணமுர்தக் காமவல்லிக் கொடிபோன்றழகிய பிடியானை

போல் யிடையையுடையவளை உச்சிதமான குலமடந்தையைத் தென்றல் வீசும்போது கூவுகின்ற குயில்போலும் மலைத்திருமகளைச் செழுமையான மானின்கண்ணைப் பெண்கனியைக் கனிந்த சொற்பேசும் பெண்கிளியை அழகிய வள்ளிப்பெண்ணை தமது கண்குளிரக்கண்டார் முருகேசன்.—எ-று. (கூ)

கண்ணாகியபன் னிருதேவரும்க் கவின்மாதின்
மண்ணுவழகா ரமுதம்பருகி வளங்கூர்ந்தார்
பண்ணார்மொழியின் மருவுந்தமநோய் பாழாக
உண்ணாடினர்விண் ணுடைருவப்பார் சிலசொல்வார்.

(இ-ள்.) கண்களாகிய பன்னிரண்டு தேவரும் அந்த அழகிய வள்ளிப்பெண்ணுடைய அதிரூபசவுந்தரியமான நிறைந்த அழகமுர்தம்பருகி வளமைகூர்ந்தார்கள். பண்ணிசைபோலு மிருதுவான மொழியையுடையவளை மருவும்படித் தமது விரகனோய் தீரும்படி வுளளத்திலெண்ணி விணணுலகத்தார் வணங்கும் குமரீசர் சொலலத்தொடங்கினார்.—எ-று. (௧0)

இந்தப்புன மீதுதனந்தனி யிப்படிவைகில்
நந்திக்குரலால் மொழியால்விழியால் நடைநன்றால்
முந்தப்புள்ளால் மாவாலேநாள் முழுதும்போ
யந்தத் துறவ ரருந்தவமுற்று மழியாதோ.

(இ-ள்.) வாராய்பெண்ணே நீயிந்தப் புனக்காட்டில் அழகிய பரணின்பேரில் யிப்படிக்கிருந்தா லும்முடைய குரலோசையால் நீ பேசு மிருதுவசனங்களால் கண்களினுடைய பார்வையால் நடையால் முந்திப்பட்சிகளால் மிருகங்கள்யாவும் போய்த் துறவாகிய முனிவர்கள்செய்யும் அரிய தவமுழுதும் அழியாதோ.—எ-று.

பொன்னங்கிளியைப் பொருளல்லனவிப் புனமீதே
தன்னந்தனிவைத் தந்தோகுறவர் சதித்தாரோ
அன்னம்படரும் பிரமன்மதியு மதுவாறு
லென்னிங்கறிவற் றிடும்வேடுவரென் றிசைப்போர்மால்.

(இ-ள்.) சொர்ன்னக்கிளிபோலும் அழகிய பெண்ணே பொருளல்லாத யிந்தப்புனத்தில் பரணின்மீதில் தனியாக யிருக்கவைத்து அந்த மலைக்குறவர்கள் சதிமோசஞ் செய்தார்களோ அன்னவாகனநான பிரமதேவன் விதியான மதியும் அதுவேயானால் யிங்கே யறிவிலலாத வேடுவர்களை யென்றென்று சொல்வோம்.—எ-று.

பொன்மேலாய்மணி யெல்லாங்கீழாய்ப் பொற்காந்தி
மின்மேலாயொரு மேகங்கண்டது மெய்யன்றோ
தென்மேலாவிர் தத்துள்ளே செங்காவி
நன்மேதகைதா வாம்பல்மலர்ந்தது நவமாமால்.

(இ-ள்.) சொர்ன்னமெலலாம் மேலாகவும் இரத்தினமணியெல்லாம் கீழாகவும் பொன்னொளிக்காந்தியையுடைத்தாய் மின்னலுக்கு மேலாக ஒரு கார்மேகங்கணடது மெய்ப்பாமல்லவோ அழகுநிறைந்தலர்ந்த ஒரு தாமரைப்பூவினுள்ளே செவ்விய நீலோற்பல புட்பங்களும் நலமாகப்பொருந்தி விருப்பமுற்று மொரு செந்தாமரைப் புட்பம் அலர்ந்திருப்ப திதவொரு நல்லபுதுமையாம்.—எ-று. (௧௩)

மலைமேல்வல்லிய தல்லால்மெல்வல் லியன்மீதே
கலைமேவியபொன் மலைகளிரண்டிது கண்டேமால்

சிலைமேற்பிறையும் பிறைமேலிடுசிந் தூரவாய்ப்பும்
நலமேதகையிவை நாகர்தலத்துங் காணேமால்.

(இ-ள்.) மலைமேலே கொடியிருக்குமல்லாமல் மெல்லிய கொடியின்மேலே கலைடொரிந்திய யிரண்டு பொன்மலை யிருப்பது மிதுவுமொரு அதிசயங்கண்டோம். வில்லின்மேலே பிறையும் பிறைமேலிட்ட சிந்தூரத்தி லதவாய்ப்பும் நலமாகப் பொருந்திய அழகான விவை தெய்வலோ கத்திலும நான் காணேன். எ-று. (கச)

தேவர்ப்பதியோ செம்பொற்கிரியோ தேவேந்திரன்
பூவைக்கிடமோ புணரித்தலமோ புனலோவென்
னுவற்கிதுவென் றறிதற்கறிதா யமுதூறுங்
கோவைக்கனிகண டழகுக்கழகாங் கொடியென்றார்.

(இ-ள்) தேவநகரமோ செம்பொன் மேருவோ தெய்வீகமான யிந்திரனாயா கிய லட்சுமிக்கிடமான தாமரைப்பூவோ கடலிலமொய்த்த புனந்தானோ யிவற்குரித் தானதலம யென்னுடைய ஆவலாசை மிகுதியின லிதுவென்றறிந்து சொலலுவதற கரிதாய அமுர்தமூறும், கோவைக்கனிபோலும, அதாமழகு பெற்றிருப்பதுகணடு அழகுக்கெலலாம மேலான கட்டழகாகிய சாமவல்லிக்கொடிபோன்ற விவளென்று சொன்னார். குமாரசாமி —எ-று. (கரு)

சங்கத்தொளியே குயிலைத்தருமோ மாவன்றோ
விங்கிப்படியா னெங்குங்காணே னியனல்லோ
கங்குற்பொழுதோர் பகலிற்பெறுமோ கண்டாலுந்
துங்கப்பிறையு மதியும்வருமோ சொல்கின்றார்.

(இ-ள்.) சங்கு சுவாரமானது குயிலோசையைத் தருமோ மாவான் திருவல்லவோ பெங்கே யிந்தப்பிரசாரம் நானெங்குங்காணேன். நிகழ்வையுடைய மடநலலீர் யிராப்பொழுதான தொருபகலில வருமோ அப்படிவரக்கணடாலும் உசிதமான பிறையையும் பூரணச் சந்திரனும் வருமோ தெரிந்து சொல்லுமென்றார் குமாரர். ()

தினையோமணியுந் தின்றுதென் றப் புனமீதே
யெனையேயொலமிடச் சொல்வீரேவற் கெளியேன்யான்
வினையோடுலவுங் களியுங்கலையு மென்புள்ளும்
தினையாதிவடத் தணுகாதிங்ஙன னிற்கின்றேன

(இ-ள்.) யிந்தப்புனத்தில் ஒருமணியுங் குருவிகள் தின்றுதபடிக்கி யென்னை யிதின்மேலே ஒலமிடசசொலவீராக. உமதேவலுக்கு யெளியவன் யான் வினையோடுலாவும யானைகளுங் கலைமான்களும, மெலலிய குருவித்திரள்களும், நினையாமலிவவிடத்திலே அணுகவொட்டாமல காவலாயிருக்கிறேன். பெண்ணேயென்று சொன்னார்.—எ-று (கஎ)

எறியுங்கவணுக் கடுமுத்தங்க ளெடுக்கோகைச்
செறியும்பந்து களங்காடற்குத தெரிகோதென்
வெறிநன்மலரா மென்பூங்காவில விளையாட
நறுமெனசிற்றி லிழைக்கோசொல்வீர் நல்லீரே.

(இ-ள்.) நீ யெறியுங் கவணுக்கேற்ற பெரியமுத்துகளாக யெடுத்துக்கொடுக்கவோ உமது கையிற்செறிந்த பந்துகள் களங்குக்களாடுதற்கு யிசைவு தெரிந்துசெய்கவோ மணமுந்தேனும் பொருந்திய நலல நலல புஷ்பங்களால் மெல்லிய பூஞ்சோ

லயில் விளையாடத்தக்கதாக சுரியமணலிற் சிற்றிலிழைக்கவோ யிவைகளில் யின்ன து செய்யென்று யேவல்சொல்வீராக.—எ-று. (கஅ)

பிடிபோல்சிற்றிடை நோகாது பிடிக்கோமென்
கொடிபோலிடையின் கோசிகமணிகோ கற்பூரப்
பொடியோதலரின் பொதுளிப்புனைகோ குழன்மீதே
வெடிபோதிடுகோ விளைகூர்விழியீர் மொழியீரே.

(இ-ள்.) பிடியானையைப்போல் மெல்லநடந்து வருகிறபோது உமது சிற்றி டைநோகாமற் பிடிக்கவோ மெல்லியகொடிபோலு மருங்குற்பட்டாடை கொசி கம் சுவத்தடுத்தவோ கற்பூரப்பொடியும், மலர்த்தாதுகளும்கலந்து மார்பிலப்பவோ கூந்தல்மீதில் அலர்ந்த புஷ்பங்களைச்சூடி அலங்கரிக்க காமனைச் செய்யுங் கூறிய கண்களையுடையீர் சொல்லியருளுவீர்.—எ-று. (கக

மயினீரன்றோ வென்புயமலைமேல் மருவாதென்
பயில்காமற்றினென் றுயர்கண்டொன்றும் பகரீரால்
வெயில்வாயமுதக் குமுதமலர்ந்தால் விளையன்றோ
குயில்வாசகமுங் கிளியுங்குன்றுங் குறிகொண்டோ.

(இ-ள்.) நீரழகிய பெண்மயிலல்லவோ யென்னுடைய புயமலைமேல்வந்து ம ருவாததென்ன. யிங்ஙனம் பயின்றுலாவும், காமனாயிற்படுமென் துயர்கண்டு ஒரு வார்த்தை சொல்லாமலிருக்கின்றீரோ வெய்யலெரிக்கும்பொழுதில் அமுதச்செவ்வா யாகிய குமுதபுட்பம் மலர்ந்ததில விளையன்றோ குயிலோசை யமுதவாசகமுடைய கிளிமொழிகளும் குன்றிப்போமென்று சொன்னார்.—எ-று. (உ0)

பொன்னுகியநீர் புனமென்றிணையைக் காக்கின்று
லன்னேபொன்னைக் காத்தற்கருளா ரடல்வேடர்
பன்னளினும்யான் காத்தற்குரியான் பரிவாலே
மின்னாரமுதே யினியான்போதல் விதியன்றே.

(இ-ள்.) பொன்னை யொப்பாகிய நீரிந்தப்புனத்தில் மெல்லிய திணைகாத் திருந்தாயாகில் அன்னே பொன்னைக்காத்து சருவதற்குச் சற்று மிரக்கமில்லாதவர் கள குரோதமுடைய வேடர்கள் பலநாளும் நான் காத்தருள்வதற்கு உரியவன் பெ ண்ணாரமுதே யினியானும்மை விட்டுப்போகுவல விதிமுறைமையல்லவே. -எ-று. உக

நாமின்றிருவோ ரன்னந்தனியே நண்ணுங்காற்
கோமன்னிய வேடற்குட் பெரியோன் கொடுவேடன்
வீமன்கனையா லெம்மைப் பொருதே வினையார்க்குந்
தேமெல்லிய ரெம்மூர்வயினுஞ் செல்வோமே.

(இ-ள்.) நாம் யின்று யிருவருந் தனியே யிசைவாக நண்ணும்போது குரோத் முடைய வேடர்களுக்குள் பெரியவனானவன் மகாகொடிய வேடன் வீமனைப்போ லே இருகணையா லெம்மைப்பொருதி வினைசெய்வானாகையால் தேன்போலும் மொ ழியை யுடையீர் யெம்மூரிடத்திற்போவோமோ.—எ-று. (உஉ)

என வேலவர்கின் றின்னீ விரந்தே யிசையாமுன்
கனமேவியகூற் றென்னவிருங் கானகவேடர்

புனமீ தொளியின் புகுதும் படிகண் டிகல்வேல
ரினமேவிய பைங்கிளிசேர் கனியொன் றினவானார்.

(இ-ள்.) என்றிப்படி வேலவர்நின்று யிவ்வாறிரக்கமாய் சொல்லி யிசையாமு ன்னம் கனம்பொருந்திய மின்கூட்டங்கள்போலும் கொடிய கானக்குறவேடர்கள் அந்தத்தினைப்புனத்தில் சத்தங்களுடனே புகுந்துவரககணடு வெற்றிவேல்முருகா யினம்பொருந்திய பச்சைக்கிளிகள்வந்து சேர்ந்திருக்கும் ஒரு வேங்கைமரமானார்.()

வந்துபுகுந்த மரவேடுவர்கண் டிம்மரமேதென்
றந்தவுளங்களியிரத்தமுகென்பா ரடலென்பார்
ரிந்தமரம்புன வள்ளிக்கினிதா மிடுநீழற்
பந்திவிளங்கி யிருப்பதெனத்தாம் பரிவுற்றார்.

(இ-ள்.) வந்துபுகுந்த கொடியவேடர்க ளிந்த வேங்கைமரமேது புதிதாயிருக் குதென்று தங்கள்தங்கள் உள்ளத்தி லயயமுற்று சிலரிந்தமரததை வெட்டுமென்பார் கள் சிலர் வெட்டவேணடாமென்பார்கள யிந்தமரம் புனத்தில் வள்ளியம்மைக்கி னிதாக நிழலசெய்து நாமெலலாமல நாம்வந்து வரிசையாகப் பந்திவிளங்கி யிருப் பதற்கும் ஆகுமென்று மனதிரங்கிப் பரிவுகூாந்தார்.—எ-று. (உச)

பரியுந் தேனுங் கனியுங் கந்தப் பயன்யாவும்
வரியுங் கோதைக் குந்தளவல்லி மலர்கைக்கீய்ந்
தரியும் வலியு மாளியுமேகும் படிபோலத்
தெரியுங் கணைவிற் குறவர் நடந்தார் சிற்றூரில்.

(இ-ள்.) பரிவாகத் தேனும் கந்தமூலபலன்களயாவும் புட்பம்பொருந்திய பின் னற் சடைக்கூந்தலையுடைய வள்ளியம்மன் மலர்க்கையிற்கொடுத்து சிங்கங்களும் புலிகளும் யானைகளும் போகுவதுபோல அம்புபூண்ட சிலைகளையுடைய குறவர்கள் போனார்கள் தங்கள சிறறூரில.—எ-று. (உரு)

கணியாய்நிற்கு மொருகாமற் களவின் கதிர்வேலர்
பணியாகிக்கந் தருவமணத்தின் பரிவானார்
ரணியாமீரொண் வயதிற்காளை யழகாகி
[illegible]ணியார் தூரியி னெழுதற் கரிதாம் வடிவானார்.

(இ-ள்.) வேங்கைமரமாகிநின்ற ஒரு காமக்கள்வனான கதிர்வேல்முருகர் பணி வுடைதி காந்திருவமணத்தி லிச்சைபட்டு மனதுணிந்து அந்தரூபத்தைமாறறி யலங் காரமாகப் பதினாறு பிராயத்துக் காளைபபருவத்துக் குமாரனைப்போல் வடிவெடுத்து அழகுபொருந்த மணியிழைத்த தூரிகைகோலினு மெழுதுவதற்கு அரிதான சவுந்தி ரீக சுரூபமெடுத்துநின்றா.—எ-று. (உசு)

வேடுவரெம்மை யடாதருள் செய்தீர் மின்போல்வீர்
கூடியெமக்குயர் தருவீர் மருவீர் குறைகேளீர்
பாடகமென்னும் பைம்பொன்னடியின் பணிகூர்ந்து
நாடுவதல்லாற் போதலுமுண்டோ நண்பாகிர்.

(இ-ள்.) ஓய் பெண்ணே வாதவேடுவர் யென்னைக்கொல்லாதபடி கிருபைசெ ய்தருளினீர் மின்னக்கொடிபோலும் ஒளிவையுடைய நீ யிப்போது கூடியெமக்கு உயிர்கொடுப்பீர் மணம்பொருந்திய கூந்தலையுடையீர் யென்குறையைக் கேட்பீராக உமமுடைய பாடகர்தரித்தழகிய பாதஙகளிற்படிந்து நாடிச் சேர்வதல்லாமல் யினி சும்மாய்போவதுணடோ யில்லை ஆகையால் மருவும்படி யன்புசெய்வீராக.—எ-று.

இன்னம் வேடுவ ரெய்திற் றமியர்க் கிடராகும்
மன்னம்போ லென்னுடனீர் வந்தாலாகாதோ
பொன்னின் மலையும் வெள்ளிக்கிரியும் பொன்மேடை
வன்னத்திரு மாளிகையுந் தருவேன் வருகென்றார்.

(இ-ள்). இன்னமொருதரம் அந்த வேடுவரிங்கே வந்தா லடியேனுக்கிடராகும், ஆதலால் யிப்போது அன்னம்போலநடந்து யென்னுடனே நீர் வந்தாலாகாதோ. அப்படி நீர் வந்தால் பொன்மலையும், வெள்ளிமலையும், பொன்மேடைகளும், சித்திர வன்னத் திருமாளிகைகளும் தருவேன். வாரீர் வாரீர் யென்று சொன்னார் முருகர்.—எ-று. (உஅ)

யென்னவ முருக ரிரந்து பரிந்தா தரவோது
மன்னறி மொழிகேட் டண்ணமுறைக்கு மயின்மாற்றந்
துன்னியவேடர் ரிரைத்துவரும்போர்த தொனிகேளிர்
ரொன்னுரை நிமிடத் துமதுயிர் விண்ணிற் கிடுவாரால்.

(இ-ள்.) என்றிப்படி அந்தமுருகவேள் விரைந்து பரிந்து ஆதரவாகிய ஆசை வார்த்தைகள்சொல்லும் அந்த நெறிமுறைமையான வசனங்களைக்கேட்டு அன்னம் போலு வள்ளிபபெண் சொல்லுகிறாள். வாரீர் குமாரரே கூட்டமாகவேடர்கள் யிரை ந்துக்கொண்டுவருகிற யிகலோசைத் தொனிகளைகேளீர் யிதென்னவார்த்தை ஒரு நிமிஷத்திலே உம்மிட உயிரை விண்ணிலேசோவதாக கொல்வார்கள்யென்று சொல் லினாள் வள்ளியம்மன்.—எ-று. (உகூ)

யேகுதியாசே யெம்மையு நும்மையு மிகல்வேடர்
ராகுதிகொள்வா ரமருக்கிளையா ரொனும்வேலை
மாகுதை வின்னு ணெலிவா ளொலியின் மலிவாகச்
சேகுருகாலன் றிரளனவேடத் திரளீண்டி.

(இ-ள்) போவீர் பாலகுமாரரே யெம்மையும், உம்மையும், அந்தக் கொடிய பரிகளுடைய வேடர்கள் வதைசெயவாரகள. போருக் கிளைக்கமாட்டார்கள் டென் றிப்படி வள்ளிப்பெண் சொன்னபோது விற்குதைகளில நாணிகள்பூட்டிய குணத் தொனிவணி லிடிச்சத்தமபோலு மிகுதியான குரூரத்தையுடைய யெமபடர்கள போலும் அந்த வேடர்கூட்டஙகள அங்கனம யீணடிவந்தார்கள.—எ-று. (௩௦)

வெண்ணறை யுடலின் மெய்கூன் வடிவன் விரதத்தின
கண்ணுறு குழியன் கைவிழி நூலன் ஙககோல
ணண்ணு முன்னூலன ஞகச்கிழவன குறமாதின்
மண்ணியகிழவன வழிவிழு கிழவன் வடிவானார்.

(இ-ள்.) அப்படி வருவதுகண்டு மிகவும் வெளுத்தநரைமயிர் பொருந்திய முடி யையுடையவனாய் கூனிவளைந்து தளர்ந்த மேனியனாகத் தவமுனிவனாக குழிக்கண் ணனாக தோளின்வழியே சரிந்த முன்னூல நாககோல்பிடித்தூன்றி நகைகித் தத் தித்தமொழி தளாநடையனாக ஒரு பிறமணக்கிழவன்போலுங் குறிஞ்சிககிழவனை முருகவேள் குறவள்ளிக் குரியகிழவனாக அங்கே ஒருவழியில் தவறிவிழுங்கிழவனாக வடிவாகி நின்றார் முருகக்கடவுள்.—எ-று. (௩க)

அவ்வழிவாகிப் பவ்வரிதாங்தெழு மடல்வேடர்
கல்வையில் வால்க் கண்டிவ் வுருவொடு கைசேர்ந்தே

மெய்விழும் நரைதிரையுடன் வேடர்க்கரசான
தெவ்வினர் முனைபோ யாசிமொழிந்தார் செவ்வேலர்.

(இ-ள்.) அந்த வடிவாகிக் கடல்பொங்கி யெழும்பிவந்ததுபோலும் வேடர்கள் குரூரமாக வருவதுகண்டு அங்கனமபெரிய தவகிழவனாக அவர்கள் பக்கத்தில் போய்ச்சேர்ந்து மேனியெங்கும நரை திரை மிகுந்த வேடற்கரசனுன மறவர்முன் போய் ஆசீர்வாதஞ்சொன்னார் வடிவேலர்.—எ-று. (௩௨)

எப்பதி யிப்பதி யென்கொலடைந்தீர் யார்நீரொன்
றெப்பது வேடர்க்கரசனிதோத வுரைக்கின்று
ரப்பவிவ் வரையிற் கன்னிகைதீர்த்த மாடற்கே
யைப்புவிநாடி யெழுந்தனமென்று பகர்ந்தாரால்.

(இ-ள்.) ஆசீர்வதித்த முனிவனைப்பார்த்து நீ ரிருப்பதெந்தத் தலம்யிங்கே யென்னசோலியாய் வந்தனுகி நீர் யார் நீரயென்று தனக்கோபாலகுற வேடுவராசன் கேட்க ஓய் வேடுவராசனே நா மிந்தமலையில கன்னிகாதீர்த்த மாடுவதற்கு யிந்தப் பூமண்டலமெங்கும் சஞ்சரித்து தீர்த்தயாத்திரையாக யிங்கே நாடித்தேடி யெழுந்தருளிவந்தோம் யென்றுசொன்னா கிழமுனிவரான குமாரதேவர்.—எ-று. (௩௩)

ஆருக ஆருக ஆருக ஆருக அறவோயென்
றேரைகயி ஞேகிய வள்ளிக்குறுதி னுரைசெய்தார்
பாகுறு தேனுந் தினைமாவுங் கைப்பய நீய்ந்தார்
மாகருணையினங் கைப்பெற்று ரவ்வடிவேலர்.

(இ-ள்.) அதகேட்ட வேடுவர் அப்படியே யாகும் ஆகும் தீர்த்தமாட்லாம் ஆட்லாம் பெரியவரோயென்று சந்தோஷத்துடனே பிரியவசனஞ்சொல்லி அங்கனம் யிந்தவள்ளிப்பெணணுக்கு வருகியான வசனங்களைசசொல்லி பாகுபோன்ற தேனுந் தினைமாவுங் கைபபலனுக அவருக்குக் கொடுத்தாகள் மிகுந்த தயவுடனே அவை தமதுகைக்கொண்டார்.—எ-று. (௩௪)

அவரவர் சென்றபி னமுதக் கனிவாயின்
றுவர்மடவள்ளி துணைத்தாள்போற்றிச் சுனையூட்டென்
றிவளொ டுரைத்தா ரின்னமுதங்கவர் பின்னேகிக்
கவருறு மனதின் கனசுனைசென்றே காண்பித்தாள்.

(இ-ள்.) அந்தகுரவர்கள் போனபின்பு அமுர்சரசம்பொருந்திய குமுதப்பூப் போன்ற கனிவாயழகிய மடமையுடைய வள்ளிப்பெண்ணி னிரண்டு பாதங்களைப் போற்றிசெய்து ஓ! பெண்ணரசே. எனக்குச் சுனைத்தண்ணீ ரூட்டுமென்று ஆசையுடனே சொன்னார், அதுகேட்ட பெண்ணமூர்தம் அங்ஙனம் அவர் பின்னேபோய் கவர்ச்சியுடைய மனதுடனே சென்று பெரிய நீர்ச்சுனை ஒன்று அவருக்குக் காண்பித்தாள் வள்ளியம்மன்.—எ-று. (௩௫)

தேனுந் தினையுந் தின்பவர்போலச் செயல்காட்டி
மானன் றுதவுஞ் சுனையுண் பவர்போல் மாயஞ்செய்
தானந்தமயத் தனுராகத் தாயிணையைப்பார்த்
யானின் புறவந் தணைவீ றொன் றீரடி வீழ்ந்தார்.

(இ-ள்.) அங்கனம அந்ததேனுந் தினைமாவுந் தின்பவர்போலும் மாயமான ஒரு செய்ல்காட்டி வள்ளிப்பெண்காட்டிய சுனைத்தண்ணீர் குடிப்பவர்போலேமாயஞ்செயது ஆனந்தமயமான அனுராகத்திற்கு அகைவலைப்பார்த்து யானின்பம் பெ

ருகும்படியாகவந்து புணர்ந்தணை வீராகவென்று அவளுடைய விரண்டுபாதங்களை யும் வணங்கி நமஸ்கரித்தார் முருகர்.—எ-று. (௬௬)

தருமஞ் செய்த லஃதே தவறைத் தருமோவென்
றுருமங்கல பைங்கல நிறையுடைய தனப்பூவை
தெருமந் தயர்வுற் றேகினளேகச் செவ்வேலர்
பெருமங்குல நிற்கரி முகனைத்தாம் பெட்புற்றார்.

(இ-ள்.) தருமஞ்செய்தலாவது மிகுந்தகுற்றத்தை விளைக்குமோவென்று உருவுடைய மங்களம் நிறைந்தழகிய மணிப்பணிபூண்ட உபையதனங்களையுடைய வள்ளிப்பெண்ணானவள் பயந்து மனதயர்ந்து விரைந்து தமக்கிசையாமல் செல்லுதலுங்கண்டு வடிவேலர் பெரியகருமுகில் நிறமுடைய தமது தமயனான யானைமுகத்து விநாயகமூர்த்தியைத் தியானித்தார்.—எ-று. (௬எ)

அண்டமிடிக்குங் கொண்டலெனத் தருவை நூறித்
தெண்டிரை முற்றுங் கையில்விலாவிச் செயலாகிப்
புண்டரீகங் கோடகனேக போர்வலிபொங்கத்
தண்டாளப்பற் றையல்முன் வந்தோர் தனிவேழம்.

(இ-ள்.) ஆகாசத்தை யிடித்து முழங்குங்கார் மேககர்ச்சிதம்போல சப்தித்து மரங்களையெல்லாம் முறித்து தாளாக்கிக் கடல்நீரெல்லாம் துதிக்கையில் வீசிவிசரும் செயலையுடைத்தாய் திகருக்கெஜமான புண்டரீகம்போலும் போர்வலிமைபொங்கும் வலிமையுடையதாய் குளிர்ந்த முத்துநிறைபோலும் பல்வரிசையுடைய வள்ளிப்பெண்முன்னே யெதிர்த்து முடுகிவந்தது ஒரு மதயானை.—எ-று. (௬அ)

வந்தம்தாசல வரவையறிந்தொரு மலைமாது
கந்தர் புறத்திரு தனமுலை புணரக் கைசேர்ந்தா
ளந்தர மீதன் றறிபவர்போல வணைந்தாளிற்
சிந்துமதக்கரி சேணகலச்செயல் செய்கின்றார்.

(இ-ள்.) யானைவந்த வரவையறிந்து ஒருமலை மாதாகிய வள்ளிப்பெண் பயத்துடனே மீண்டுவந்து யென்னை ரட்சியும். நான் நீர்சொன்னபடி கேட்கிறேனென்றுசொல்லி கந்தருடைய முதுகின்புறத்தில்வந்து தனதனமழுந்த தழுவிக்கட்டிகைசேர்ந்தாள். அங்ஙனம் அந்த மிதுவென்றறிவார்போல் அணைந்து, காமாக்கினி தணிந்து, மதமபொழியப் பட்டயானை நெடுந்தூரம்போகும்படியாய்ச் செய்தருளினார் அழகிய குமரவேள்.—எ-று. (௬௯)

வேறு.

கைவனக்களிறு தந்த கருணையால் கடக்கக் காந்தட்
டெய்வயானையைமுன் சேர்ந்த சேவக செவ்வேற் கந்தர்
மைவனஞ் செறிந்தவள்ளி மலையினிற் செழுந்தேன் மாரி
பெய்வன மலர்ப்பூங் காவில் பிடியையும் பெட்பிற் சேர்ந்தார்.

(இ-ள்.) பின்பு துதிக்கையுடைய யழகிய யானைசெய்த கிருபையினாலே கடகஞ்சொரிந்த காந்தப்புட்பம்போன்ற கைகளையுடைய தெய்வயானையை முன்னே சேர்ந்த சேவகரான அழகிய செவ்வேள் முருகர் அங்ஙனம் மரங்கள் நெருங்கியிருண்ட வனஞ்செறிந்த வள்ளிமலையிடத்தில் செவ்விய தேன்மழைபொழியாநின்ற அழகிய புட்பகாவனத்தில் வள்ளிப்பெண்ணென்னும் பிடியானையை மிகுந்த ஆசையுடனே சேர்ந்தார்.—எ-று. (எ0)

அணைந்தபின் வள்ளிக்கீரா றணிப்புயத் தோன்ற லோரா
றிணங்குபொன் முகங்கள்தோன்ற வெழில்மயில் புறத்திலின்பக்
குணந்தர் வதுவைகாட்சிக் குறிபெற மறிபெற்றேங்கு
மணங்குமுன் னின்றானனோ ரவள்வர வுரைத்தர் செய்தார்.

(இ-ள்) அவ்வா றங்ஙனம் மருவி யணைந்தபின்பு பன்னிரண்டு புயமும் பிறையையுடைய ஆறுமுகம் எழிலுடைய மயில்வாகனரூடராகத் தமது வடிவுதோன்றப் பண்புடைய மணக்காட்சிக்குரியப் பெரும்படி மறியான் பெற்றேங்கியழகிய வள்ளிப்பெண் கண்குளிரக் காணத்தக்கதாக அவள்முன்னே காட்சிகொடுத்தருளினார். அப்போது அவளுடைய ஆசைமகிழ்ச்சி யிவ்வாறென்று சொல்லக்கூடாதென்றவாறு.

வள்ளிதன் பாங்கி பாங்கு வந்தபின் வடிவேலெந்தை
யுள்ளுறு தமர்களீண்ட யுறுபுனத் திருவர் மாட்டும்
புள்ளுனு குழற்றார் மின்னுட் புணர்ச்சியி னடைந்தாரந்த
வள்ளலு மணங்குங்கூட்டு மணத்திணை யறிந்தார் மன்னே.

(இ-ள்.) உடனே வள்ளிப்பெண் தன்னுடைய பாங்கிபக்கத்தில் வந்துசேர்ந்தாள் அதன்பின்பு எமதுடைய சுவாமி வடிவேல்முருகா உள்ளப்புணர்ச்சி யீட்டமாக வுற்றினங்கும் அந்தப்புனத்தில் வண்டுமொய்த்த மலர்சூழ்ந்த கூந்தலழகிய வள்ளிப்பெண்ணுடனே களவின்புணர்ச்சியாகச் சேர்ந்தணைந்தார். வள்ளலாகிய முருகரும் அணங்காகிய வள்ளியம்மனும் கூடியணைந்த காந்திருவமணக்குறிப்புகளை நன்று யறிந்துணர்ந்தாள் பாங்கி.—எ-று. (௬௨)

எம்மைநீ மறைத்தலின்ப மின்றெனா மணியும் பொன்னுந்
தம்மினிற் செறிந்த தேனுந் தாங்கியாங் கிழைப்பார் வேண்டு
மும்முனொருவா ன்றோ உங்க ணன் மணங்கள்யானே
செம்மலிவ் வளர்ப்பனென்று சேர்த்தினு ளிருவே யின்பம்.

(இ-ள்.) எம்மை யறியாமல் ஒழித்துக்களவராக கூடியிணங்கு முங்களுடைய வின்பம் நிசவின்ப மன்னென்று ரத்தினமணியும், சொர்ணத்தகடும் தமக்குத்தாமே நெருங்கிச்சேர்ந்தாலும், அங்ஙனமவற்றைத் தாங்கியிழைப்பவ ரொருவர்வேண்டும். அவ்வா றிங்ஙனம் உங்களில் நாம் ஒருவரல்லவோ? உங்களுடனே புணர்ச்சியை நாமே செவ்விதாக வளர்ப்பனென்று பிரியவசனஞ்சொல்லி யின்பஞ்சேர்த்தினள் பாங்கி.—எ-று. (௬௩)

ஆயகாலையிலவ்வேன லருவிகளீந்தார்வள்ளி
போயினன் சிறுவரங்கன் புணர்முருகருஞ் சென்றுய்த்தார்
சேயநள்ளிரவிலந்தச் சிற்றிடைச்சிலம்பிற்றேனை
நாயககொண்டேகென்ன நல்கினள்பாங்கியம்மா.

(இ-ள்.) அந்தவேளையில் குறவர்கள் வந்துபுனத்தில் விளைவுமுதிர்ந்த தினைக்கதிரறுத்துக் குவித்தார்கள் அவர்களுடனே வள்ளிப்பெண்ணும் போயினாள் சிற்றூரில் அங்ஙனம் அவளைப்புணரும் முருகருஞ்சென்று சேர்ந்தார் செறிந்தவிருட்காலம நடுச்சாமத்தில் அந்தசிற்றிடை யழகிய மலைக்குறமகளான தேன்மொழி வள்ளிப்பெண்ணை நாயகரே நீர்கூட்டிக்கொண்டு போமென்ன வவரிடத்தில் அவளைநல்கி கூட்டியனுப்பிவிட்டாள் பாங்கி.—எ-று. (௬௪)

அவ்வடமற்பின்னர்பற்றி யமர்செயுங்காலை காலக்
கவடுறுங்கணைகள்வேலர் காவிடுமலரின வீழுங்

குவடுறவொளிப்ப நீபோய்க் கூடுதியென்னவொள்ளர்
தெவடவேற் கணையிற்கந்தர் செயித்திடின்ர் வீழக்கண்டாள்.

(இ-ள்) அப்போது அவளுடைய தமயர்களாகிய குறவர்கள் பின்றொடர்ந்து போய் மறிததெகிர்த்து ஆயுதங்களை யெறிந்து முருகருடனே யுத்தஞ் செய்தார்கள். அதுவேளையில் யமனைப்போலுங் கொடிய பாணங்கள் வந்து வேலவருடைய தலைகளில் தூவும் புஷபங்களைபபோல வீழாநின்றன; ஓய்பெண்ணே! நா னிந்த மலையின்புறத்திலோடி யொளிததுக் கொள்ளுகிறேன்; நீ போய உன்னினததார்களைச் சேர்ந்துகொள்ளென்று சொனனார். அதுகேட்டு மனங் கொளளாதவளாய்த் தொடாந்து வாரா நின்றாள். பகைவரைச் சஙகரிககபபட்ட வேலாயுதங்களை விட்டு செயிததார். குறவரெல்லாம பட்டுவிழுந்தார்கள்.—எ-று. (சரு)

படுந்தமர் மீதுவீழ்ந்து பசுங்கொடி யகலுங்காலை
நடுங்குறு மினனைப்பாரா நணபரிநடந்தார்வேல
ரொடுங்கிய மனத்திரேடு முதிரமென் றூசிரேடுங்
கடுந்திருக் கற்பினேகிக் கந்தர்பொற் கழலின்வீழ்ந்தாள்.

(இ-ள்) பட்டிறநது வீழ்ந்த உரிய சுறறததார்களமேலே விழுந் தழும்படியாக அழகிய கொடியிடை வளளிபபெண பிரிந்தபோது நடுசகமுடையவளைப் பாராமல் நண்பாபோலும் நடந்தார் வேலவா, அதுகணடு ஒடுங்கிய இரத்தங் கோய்ந்து துகிலுடனேகூடிய திருக்கற்புடையவளாகசசென்று மணவாளருடைய பொற்கழலில வீழ்நதாள்.—எ-று. (சகூ)

எமரைநீயெழுப்பவேண்டு மென்னவன் னவரைச்செவ்வேள்
குமரிநீயெழுப்பென்றேதக் கூறினன் கூறுங்காலை
தமரவரெழுநதார்தோகை தனிலவறு முகமுமீரா
றமர்புரிகரமுந்தோனற வவர்க்கருட் காட்சியீந்தார்.

(இ-ள்.) சுவாமி யும்மா லிறநதுபட்ட என் னினத்தார்களைத் தேவரீர் யெழுப்ப வேண்டுமெனறு வள்ளியமமன சொல்ல செவ்வேள்முருகர் சொல்லுகிறார். வாராய பெண்ணே! உன் னினததார்களை நீயே யெழுப்பெனறுசொல்ல வவர் சொன்னபடியே நீங்க ளனைவரு மெழுநதிருங்களென்றுசொன்னாள். அப்போ துடனே அவ னினத்தார்க ளனைவரும் உயிாபெறறெழுநதிருந்தார்கள, அங்ஙனம் தோகைமயில் வாகனருடராய் ஆறுமுகமும, பன்னிரணடு கைகளும், ஆகத் தமது வடிவுதோனற வெவர்களுக்கும் காட்சிகொடுததருளினார் கந்தசாமி.—எ-று. (சஎ)

ஆங்கவரெமதுதெய்வ மாமென வறிந்துதம்மூ
ரோங்கியமணங்கள்செய்தாங் குள்ளன வுதவிவள்ளி
பூங்கொடியுடவேற்கந்தர் போதநா ரதருந்தாமும்
பாங்குயர்கயிலைவெற்பிற் படர்ந்தன ரமரர்போற்ற.

(இ-ள்.) அதுகண்டு குறவர்கள் நம்முடைய குலதெய்வமா மென்றறிந்து அழைத்துக்கொண்டுபோய் மேன்மையான திருக்கல்யாணஞ்செய்து அங்குள்ள வரிசைகளுங் கொடுத்தனுப்பினார்கள். பூங்கொடிபோலும், அழகிய வள்ளியம்மனுடன் வெறறிவேலுடனே கந்தசுவாமி போதமுடைய நாரதமுனிவனுந் தாமுமாய உயர்ந்த கயிலாச கிரியிற்சென்று தேவர்கள் போற்றிசெய்ய வீறறிருநதார்கள்-எ-று.

வள்ளிநாயகியார் திருமணச் சருக்கம் முற்றிற்று.

ஆக சருக்கம். உஉக்கு செய்யுள். கஅஉ.

---

# கணபதி தீர்த்தச் சருக்கம்.

திகழ்முப்பத்துமுக்கோடி தெய்வதீர்த்தஞ் செங்கோட்டிற்
றருமெண்டிக்கினும்பஞ்ச குரோசஸ் தலத்தின் கதிகாட்டும்
பருவெற்பினினாற்பத்தெண்ணா யிரநேர்பாமச்சுனைதீர்த்த
மிகுதிற்சித்திக்கின்றவெண்ணா யிரமெண்டிக்கின் மிசைந்துளதால்.

(இ-ள்.) திருச்செங்கோட்டில் தகைமையுடைய எட்டுத்திக்கிலும் பஞ்சகுரோசஸ்தலத்திலும் திகழ்ந்து விளங்கிய தீர்த்தங்களில் யாதொருத்தர்வந்து மூழ்கினால் முப்பத்து முக்கோடி தெய்வதீர்த்தங்களில் மூழ்கினபலனென்னும் சிவகதியாகிய மோக்ஷத்திற்கு வழிகாட்டும். கிரியின்பேரி லெட்டுத்திக்கிலும், திக்குக்கு ஆயிரஞ்சுனையாக எண்ணாயிரந் தீர்த்தமிசைந்துள்ளன. அந்தத் தீர்த்தங்களில் மூழ்கினால் நாற்பதெண்ணாயிரந் தீர்த்தங்களில் மூழ்கின பலன் சித்திக்கும்.—எ-று. (க)

எண்ணாயிரம்வன் சுனையினினூற்றொன் றாயினதினிலினிதா
முண்ணாடியசந் திரபுட்கரணியொ டொளிர்சூரியகரணி
விண்ணாரொருசுனை கைப்பனமாலும் விருத்தன்பாலனெனும்
பண்ணாரும்பாவமனைத்தும் பற்றறுமொருசுனையே.

(இ-ள்.) வண்மையுடைய எண்ணாயிரஞ் சுனைதீர்த்தங்களில் நூற்றிலொன்றாய் விளங்கு, மினிதான சந்திர புட்கரணி தீர்த்தம் பிரகாசிக்கப்பட்ட சூரிய புட்கரணி தீர்த்தமொன்று, இரகசியமான கைப்புச்சலமாகிய சுனை ஒன்று, வார்த்திகர் மூழ்கினால் வாலகுமாரனாகுஞ் சுனையொன்று, பெரியோர்களறிந்து சொல்லப்பட்ட சகல பாவங்களும் பற்றறத்தீர்ந்து நன்மைதருகின்ற சுனைதீர்த்தமொன்றுண்டு.—எ-று. (உ)

பொற்செங்கோட்டிற் புகல்சுனைமூன்றிற் புகுதுமிரும்பதனைச்
சற்செம்பாக்குவ தொன்றேசெம்பைத் தகைவெள்ளியதொன்றே
பொற்செம்படிவப் புகல்வெள்ளியைநற் பொன்னாக்குவதொன்றே
நற்செங்கனக வரைச்சுனையதனை நல்குத னவமன்றோ.

(இ-ள்.) சொர்ன்னமயமான திருச்செங்கோட்டிற் சொல்லுதற்கரிதாய் விளங்கிய சுனைகள் மூன்றுண்டு. அவைகளில இரும்பைக் களிம்பற்ற செம்பாக்குஞ் சுனை ஒன்று, செம்பை வெள்ளியாக்குஞ் சுனையொன்று, வெள்ளியைப்பொன்னாக்குஞ் சுனை ஒன்று, இப்படி காரணமகிமைச் சித்திகள் அனேகமுண்டாயிருக்கும். அதன் புதுமையை அளவிட்டுச் சொல்லவொண்ணாது.—எ-று. (௩)

பத்திற்பத்திற் கோரொன்றாகப் பதினெண்டீர்த்தமென
முத்திக்குரியன வென்றுமொழிந்தார் முன்சவுனகர்கேட்ப
வத்திற்கணபதி தீர்த்தமுன்னோதுவ மசலத்துமைமூழ்கிச்
சித்தித்தவமுற் றிறைவன்பாகஞ் சேரப்பெற்றனவாம்.

(இ-ள்.) மகிமையையுடைய திருநாககிரியில் உண்டாகிய தீர்த்தங்களில் நூற்றுக்கொன்றாக பதினெட்டு தீர்த்தம மேன்மையாகிய முத்திமோக்ஷங் கொடுப்பதற்குரித்தாய் விளங்கி யிருப்பனவென்று சவுனகரிஷி முதலாகிய முனிவர்கள்கேட்க சூதமுனிவர் சொன்னா. அந்தத் தீர்த்தங்களில் கணபதி தீர்த்த மகிமையை முன்னே சொல்லுகிறோம். அதில் மலைமகளாகிய உமையவள்மூழ்கிச் சித்தியாக அரியதவஞ் செய்து இறைவனாகிய சிவனிடப்பாகஞ்சேர அருள்பெற்றாள்.—எ-று. (௪)

கணபதிதீர்த்தமுதற் பதினெண்டீர்த்தங் கண்பணமலையின்மே
லெண்ணயிந்திரன்முத லெண்மரியற்று மெழிற்றீர்த்தமு மெட்டாம்
குணபைங்கடலன கோமூன்றனடி கூடத்தருவனவா
மணபங்கயபுன றனிலங்கரனருள் வர்விச்செயல்சொல்வாம்.

(இ-ள்.) கணபதி தீர்த்தமுதலாகிய பதினெட்டுத்தீர்த்தங்கள் நாககிரியின்மீதில் எண்ணுதற்கரிதாகிய இந்திரன்முதல் திக்குப்பாலகரெட்டுப்பெயருலும் பெட்டுசதீர்த்தம் விளங்கியிருக்கும் கிருபைக்கடலான திரிநேத்திரமுடைய சிவன்பாதங் கொடுக்கததகுந்த தாய்மணம்பொருந்திய தாமரைகளநெருங்கிய தீர்த்தங்களில் கணபதிதீர்த்த மகிமைசெயலைச் சொல்லுகிறோம்.—எ-று. (ரு)

கயிலையினின்றுமை கேதாரத்திற் கருதுந்தவமுற்றிப்
பயிலுங்காசிப் பதிநதிமூழ்கிப் பரைநற்றவமெய்திச்
செயலின்கச்சிக கம்பையிலர்ச்சனை செய்தருணையினண்ணிப்
புயலின்செங்கோட் டேகிமுதற்பெறு புதல்வனுடன்புகல்வாள்.

(இ-ள்.) பார்வதா தேவியம்மன் கயிலாசகிரியில் நின்றும் புறப்பட்டு கேதாரத்தில் சிலநாள் தவஞ்செய்து பின்பு காசிததலத்திற் கங்காநதியிலமூழ்கி நல்ல தவஞ்செய்து பிறகு காஞ்சிபுரததில் கம்பாநதியில்மூழ்கி சிவார்ச்சனைசெய்து அருணகிரித் தலத்தி லரியதவஞ்செய்து அங்கிருநது மேகமொய்த்த திருச்செங்கோட்டு தலத்தில்வந்துசேர்ந்து தான் முனபெற்றருளிய புத்திரனை யானைமுகத்து பிள்ளையாருடனே யொருவசனஞ் சொல்லுகிறாள.—எ-று. (சு)

அன்னதலத்தி லருந்தவமெய்திபு மரனையணைந்திலமா
லென்னதுயர்த்தனி மகவெனுமைங்கர விப்பணிமலைகயிலைக்
குன்னதமுற்றதெனப் பரன்முன்னு முரைத்ததேனுடனதனு
லின்னகமிக்கொரு தீர்த்தமியற்றெம திறையை யிறைஞ்சுகவே.

(இ-ள்.) கேதாரமுதலாய் காசி. கச்சியருணகிரி தலங்களிலு மெய்தி அரியதவஞ்செய்தும் இன்னம் சுவாமிபாகஞ் சேர்ந்திலன் என்னுயிர்போலு மூர்தன பிள்ளையாகிய ஐங்கரகையை யுடைய விநாயக மூர்த்தியே இநத திருநாககிரிகைலாசகிரியிலும் உசிதமான ஸதலமெனறு பரமசிவன் முற்காலத்தில் என்னுடனே சொன்னார் ஆகையால் இந்ததலத்தில் தவஞ்செய்து சுவாமிபாகம் நான்சேருவதற்கு இந்தகிரியின்பேரில் ஒருதீர்த்தமுணடு செய்யுமபிள்ளாய என்று சொல்லியருளினாள உமையவள்.—எ-று. (எ)

எனமலைமங்கையியம்புபி னென்னு யிரநவதீர்த்தபலன்
கனமுறவடபாற் பாதலபூதல கண்ணுயிரநகரிற்
புனைவன தீர்த்தமனந்தம்புருதப் புகரங்கையில் வாரித்
தனதுபெயர்ச்சுனையாக விதித்தனன்றந்தி முகத்திறையே.

(இ-ள்.) என்றிப்படி யுமையவள் சொன்னவுடனே புதுமையாகிய எண்ணுயிரர்தீர்த்தங்கள் அதிகபலனுண்டாக வடபுறத்துமலையில் திருலோகத்தில் உணடாய் விளங்கியிருந்த அனந்த தீர்த்தங்களும் வந்துசேரும்படியாக புகர்சிறநீடிய தமது துதிக்கையினல் வாரித்தமது பெயராற் கணபதிதீர்த்த முதலாக சகலதீர்த்தங்களுமளித்தருளினர் விநாயகமூர்த்தி.—எ-று. (அ)

அக்காலையிலிமையாசலவனிதையடைந்து புகர்ப்புதல்வன்
றக்கானெனவு வகைத்திறமோதித்தண் சுனையின்கரையின்

மிக்காரமுதருந்திப்ப விதித்து விதித்தவைதன் பெயரர்
லெக்காலமு மந்தம்மைபயெனப்பெய ரிட்டப்புனரேய்வாள்.

(இ-ள்.) அப்போது இமவான் மகளான உமாதேவி பார்த்துயானை முகப்பின் ளையானை மகாசமர்த்துடைய பெரியவனென்று பிரியவசனஞ் சொல்லித்திண்ணிய கணபதிதீர்த்தக் கரையருகில் தன் பெயரால் விளங்கிய யமூர்தமயமான தீர்த்தமொன்றுண்டாக்கி யருளி அதற்கு அம்பையென்னும் பெயரிட்டு யெக்காலமு மதுவே பெயராய்விளங்கும்படி கிருபைசெய்து அந்தசுனைத்தீர்த்தங்களில் மூழுகினன் அம்மன் எனறவாறு. (க)

தோயுங்கணபதிநற் சுனையம் பாசுனையின்றெென்னலமுற்
றேயும்பணிமலை நாகேசுரனை யிறைஞ்சித்தவநாடி
வேயுங்தொடியும் படியும்புயமின் விமலனுடன்கூடி
மாயன்பணியப்பிரமன் பரவவம் மலையினுறைந்தனளால்.

(இ-ள்.) மூழ்கின கணபதிதீர்த்தம் அம்பைச் சுனைகளின் மகிமை விசேஷங்களினாலே பணிமலையுச்சியில்வந்து நாகேசுரனைப் பூசித்து மேலானதவஞ்செய்யவேண்டி பசுமூங்கிற போன்றிவளைகள் பொருந்திய அழகிய புயங்களையுடைய உமாதேவி சிவனுடன்கூடி பிரமமா விஷ்ணுவும் வந்துபணியும்படி அந்நாககிரியில் வசித்திருந்தாள் அம்மன்.—எ-று. (க0)

அத்தீர்த்தத்தினிலைங்கரனுஞ் சென்றுடித் தனதன்னை
வைத்தியொளி மழுவலவன் சரசமலர்க் காதரவுற்றுச்
சித்திதெனவறி வெய்தித்தன்னைத் தெரிசித்தவர் நினையு
மெய்த்திவினையற நிதியம்பெற வருளிவிளைவு புரந்தன்றல்.

(இ-ள்.) அந்ததீர்த்தத்தில் கணபதியார் சென்றுதீர்த்தமாடி தனதுதாயாகிய உமையவளபாதங்களையும் கூறியதீயொளி மழுவேந்திய கைவல்லவனான பரமேஸ்வரனிரண்டு பாதாரவிந்தங்களையும் பூசித்துவணங்கி சகலசித்தியும் இவை இவையென்று அறிவுணடாகித தன்னைவந்து தெரிசிததபேர்களுடைய தேகாதிபிரபஞ்சத்தீவினைகளெல்லாம் விமோசனமாயி நினைததபடி நிததியம்பெற்று வாழக்கிருபா கடாக்ஷஞ்செய்து இரட்சித்தருளினர் விநாயகமூர்த்தி.—எ-று. (கக)

யாதொருதொழில்புரி பவர்கலைகற்பவ ராருமுதற்போற்றி
மாதருவெனவந் தவருககருள்புரி வகையின் கற்பகமென்
றோதவுரம்பெற் றுலகத்தவருக குறுமெய்த் துணையாகி
மாதவர்முழுதும் வணங்கவிருந்தனர் மாமுகவடிவானர்.

(இ-ள்.) இயாதொரு தொழிலில் முயற்சிசெய்பவர்களை கலைக்கியானவித்தை கற்பவர்கள் முதலாகயாவரும் மகாகறபகமே யென்றுவந்து வணங்கினவர்களுக்கு கிருபைகூர்ந்து அவர்களிஷ்டகாமியம் கொடுத்தருளவதினால் அழகிய கற்பகவிநாயகரென்றும் அனைவருஞ்சொல்ல மேன்மைபெற்று உலகத்தவர்க்கு மெய்த்துணையாகி அரியதவஞ்செய்யு முனீஸ்வரர்கள் யாவரும்வணங்கி வாழ்த்த எழுந்தருளியிருந்தார் யானைமுகத்து விநாயகமூர்த்தி.—எ-று. (கஉ)

பின்னுமோர்கதையீதுரைப்பன் கணபதி பெருந்தியின்பிறழ்வால்.
முன்னியபாரிடர் நரர்வானவர்மா முறைநாலங்கமுறத்

துன்னியதோற்றத் தோர்வடிவதனாற் றொடர்கயமுகனிருதன்
றன்னிலைகுலையத் தந்தமுறித்துச் சமரிற்கொன்றனனால்.

(இ-ள்.) பின்னையுமொருகதையுள்ளது அதைச் சொல்லுகிறோம். கணபதி தீர்த்தப்பெருமையினாலே நினைத்தபடி பூதரூபம், மனிதரூபம், தேவரூபம், மிருகரூபமென்றிப்படி நால்வகை தேகவுருவமாகத் தோன்றும்படி யுருவமெடுத்து அவ்வடிவினாலே தம்முன் முனைந்து யுத்தஞ்செய்த கெஜமுகாசூரனை வலுமைதொலைந் தழியும்படி தமதொருகொம்பை முறித்தெய்து அவனைக்கொன்றருளினார் கணபதி.எ-று.

ஐங்கரவிறையவனாலிங்கம்பெற் றடர்கயமுகனையடுஞ்
சங்கெயெனங்கட கிங்கிதரூத தபோதனசாற்றுகெனத்
துங்கமறச்சவுனகருக்கோதுந் தொல்கதை நன்கருளின்
பங்கயனுதவும் படியவரிதையம் படியப்பகர்கின்றான்.

(இ-ள்.) ஐந்துகையையுடைய கெஜமுகப்பிள்ளையார் நால்வகைத் தேகவடிவாய் முனைந்த கெஜமுகாசூரனை சங்கரித்த முறைமையையெங்களுக்கு விளங்கச்சொலலுமைய்யாவென்று சவுனகாராதி முனிவர்கள் கேழ்க்க பூர்வகதை விர்த்தாரத்தை மிகுந்த கிருபையினாலே பிரமதேவன முன்பு சொன்னபடியே முனிவர்கள் மனோரதமாகும்படி சொல்லுகிறார் சூதமுனிவர்.—எ-று. (கச)

தாருகன்வலியுஞ் சூரன்மெய்வலியுந் தாழ்வுற மேலுயரும்
பேருக முழுதும் பெருமை படைத்தோன் பெரிதாமறையெல்லா
மோரொரு நொடியி லுறுஞ்சியநாவா னொருபடி யினுமடியா
தேருருபரனை இறைஞ்சி வரத்தா லிடைவரு பெலமுற்றான்.

(இ-ள்.) தாறுகாசூரன் வலுமையுஞ் சூரபத்மன் வலுமையுந் தாழ்வுபட அதிக புஜபல பராக்கிரம முடைத்தாய பாரிய யுகங்கள் முழுதும பெருமையடைந்தவன் மேன்மையான வேதங்களை யெல்லாம் ஒவ்வொரு நொடிப்பொழுதிலே வுறிஞ்சிய நாவை யுடையவன் யாதொரு வகையிலும் மடிவில்லாதவன் அழகிய பிரமேசுவரனை வணங்கி யரியதவஞ்செய்து அவர்கொடுத்தவரத்தால் சற்றும் இடையூறில்லாத பலமும் சவுரியமும் பெற்றுடர்ந்தான கெஜமுகா சூரன.எ-று. (கரு)

பூதப்பகையால் நரரின் பகையால் பொருதெய்வப் பகையால்
வேதத்துறவீர் மிருகப்பகையால் வீயாதானயன்மால்
மாதத்துவ முனிவரர் கந்தருவர் வழங்குவ ரப்படையால்
வீதற்கிடமற் றிவ்வரமுற்றான வேழமுகத்தசுரன்.

(இ-ள்.) பூதப்பகையாலு மனிதர் பகையாலுந் தெய்வப்பகையாலு மிருகப்பகையாலுஞ் சாகாதவன்; பிர்ம்மா, விஷ்ணு, தத்துவஞானிகள், சிவயோகிகள், முனிவர்கள், காந்தருவர்கள் முதலான யாவராலும் அவர்கள பெயரால் விளங்கும் ஆயுதங்களாலுஞ் சாவில்லாத வரம்பெற்றுடையவன் அந்த கெஜமுகாசூரன்.—எ-று. கசு

ஆவன்படியா லைங்கரனாலுரு வாகியமர்க்கேகி
தாவிகல் விளைவின் றானவனெண்ணிலி சாயச்சமராடி
மாவிரணியனுந் தாருகனுஞ் சூரனு மம்மனுவோனைப்
பூவிழவென் றப் பொருகயமுகனைப் பூசல்செய்தே மாய்த்தார்.

(இ-ள்.) ஆனபடியால் ஐங்கரனான கெஜமுகப்பிள்ளையார்முன் சொன்ன நால்வகை யுருவமாகச் சென்று செருவில் கெஜமுகாசூரனுடன் முனைந்தெதிர்த்து அகோரமான யுத்தஞ்செய்து அளவில்லாத அசுரர்கள் யாவரையுஞ் சங்கரித்து சமர் பொரு

ந்தி சவுந்த ரியனுண இரணியன் தாருகன் சூரன் மனுமந்ராதிகள் இவர்களை யெல்லா ம் பூமியில் விழும்படி வென்று வெற்றிபடைத்த கெஜமுகாசூரனைச் சங்கரிக்கும்படி யாக அஸ்திரப் பிரயோகஞ்செய்து அவன் சவுரியங்களை தாழ்வுறச்செய்து மாய்த் தார்.—எ-று. (கஎ)

அச்செரு விடையவ னருவரமுடையவ னுயுதபேதமெலாம்
பொய்ச்சிகலறவெறி பாசாங்குசமொடு பொருதன னைங்கரனுர்
மெய்ச்செருபடையின் வீயாவிறலால் வெண்கோ டொன்றுதிருக்
கைச்செறு படையின் கடிதுமுறித்துக் கயமுகன மேல்விட்டார்.

(இ-ள்.) அப்படி சமர்செய்யும்பொழுதில் மேன்மையானவரம் பெற்றுடைய வன் மூனந்த தேவாஸ்திரங்களை யெல்லாம சின்னபின்னமாக முறித்து நிர்த்தூளி யாகும்படி தமது கைப்பாசாங்குசங்களை விடுத்து போர்செய்தார் கயமுகப்பிள்ளை யார் அப்போது மெய்யாகிய பாசாங்குசங்கள முதலான தேவாஸ்திரங்களால் அவ ன் சாகாததைக்கண்டு தமது வெள்ளிய கொம்புகளில் ஒருகொம்பை யொடித்து அதுவே தமது கைக்கேற்ற படையாகப் பற்றி யந்தக் கெஜமுகாசூரன் மேல் விடுத் தெய்தார்.—எ-று. (கஅ)

ஐங்கரன்விட்ட வடற்கோடொன்ற வரக்கனுறக்கனமே
றுங்கமுறத்துளை செய்வசுரன்றுணி பட்டுத் துஞ்சியபின்
செங்கணரக்கன் ஜெடஜெய வென்றொரு செருமூடிகமாக
அங்கணருட்கணபதி சரணத்தினடைந் தார்தியினின்றான்.

(இ-ள்.) ஐங்கரப் பிள்ளையார்விட்ட வெற்றிக்கொம்பொன்று அங்கனஞ் செ ன்று அவ்வசுரன் மார்பிற்றுக்கித் துளைத்தது, அப்போ தந்தகெஜமுகாசூரன் து ணிபட்டிறந்தான் இறந்தவுடனே சிவந்த கண்களையுடைய அசுரன் சாவில்லாதவ னைபடியால் ஒரு மூஷிகமாகி ஜெபஜெட வென்று அங்ஙனம் கிருபாமூர்த்தியானக ணபதியார் பாதங்களில் வந்தடைந்து அவர்க்கொரு வாகனமாய் நின்றான்.—எ-று.

அக்கயமுகவசுரன் பொருவினைக ளகற்றித் தலமூன்று
மிக்கதொன் முனிவரர் விரதநிறுத்தி விண்ணவரைக்காத்து
நக்கனைநாகமலைப் பெருமானை நறுங்கொடி யிடைநீங்கா
மைக்கந்தரசிவ தருவைக்கண்டு வணங்குமோர்கற்பகமே.

(இ-ள்.) அந்தகெஜமுகாசூரனை பொருது வெற்றிகொண்டு திரிலோகமும் புக ழ்ந்து போற்றிசெய்ய மேன்மையுடைய பூருவார்ச்சிதமான முனீஸ்வரர்கள் தவங்க ள்நிறைவேறும்படி அநுக்கிரகஞ் செய்து இந்திரன் முதலான தேவர்களை இரட்சித் தருக்கனை நாககிரிப பெருமானுகிய மெல்லியகொடியிடை யுமையிடப் பாகம்பிரி யாதகரிய மிடறுடைய சிவகற்பகத்தைக் கண்டு தெரிசித்து வணங்கினார் அழகிய கற்பக விநாயகர்.—எ-று. (உ0)

அவ்விசையஞ் சிவனர்ச்சனையம்மைக் கருள்தரவுதவியதால்
தவ்வுபுனர்க்கணபதிதீர்த்தக் கரைதருமம்பாதீர்த்த
மிவ்விதியுடையனலவ்வரையின் சுனையருளும் பலவெனம்மாற்
செவ்வையினுரை செய வரிதரி தென்றனர் தென்றமிதல் சொல்வாம்.

(இ-ள்.) அவ்வாறு சிவனையும் அம்மையையும் பூசித்து அருள்பெற் றருளினர், குற்றமில்லாத புனலுடைய கணபதி தீர்த்தக்கரை யருகில் அம்பாள் தீர்த்தமும் இம் முறைமை யுடைத்தா யிருக்கும் அந்தக்கிரியில் மிகுந்த சுனைதீர்த்தங்களாதிகுல் ஆதி

னவர்க்கருளும் பலன்களை நம்மாற் செவ்விதாகச் சொல்வதரிதரிது: அத்தீர்த்தங்களி ற்சென்றுமூழ்கு முறைமையைச் சொல்கிறேமென்று சொல்லுகிறார் சூதமுனிவர்.—எ-று.

கணபதிதீர்த்தங் கைதொழுதான்றன் கருணையெமக்குறவன்
றனைவுறு மொற்றைக் கொம்பனை வந்திற் றாதியுமந்தமும்மற்
றுணர்வரியான்றரு முத்தமவென்றுயர் வேலனையிமையத்தி
இணையிலி வாமத் தேவனையெண்ணி யிழிந்தாடுகமாதோ.

(இ-ள்.) கணபதிதீர்த்தத்தைக் கண்களால் தெரிசித்துகைதொழுது கைதொழுது உம்முடைய கிருபையெனக்கு வேணுமென்று அவனமழகிய ஒற்றைக்கொம்பனைவந்தனைசெய்து ஆதியுமந்தமுமில்லாத யாவராலுமறிவதற்கரிய பரமேஸ்வரன் பெற்ற உத்தமப்பிள்ளையாரே யென்று வேலாயுதக்கடவுளையும் இமவான்மகளாகிய உமாதேவியையும் தமக்கொப்பில்லாத வாமதேவனையும் நினைத்து தியானஞ்செய்து சுனையிலிறங்கி தீர்த்தமாடுதல் முறைமை.—எ-று. (உஉ)

வல்வினை யேழ்பவ மாறுத்துயர்நோய் மாறுவமுட்கொண்டால்
தொல்வினை மாற்றுஞ் சுனைமூழ்கிற்பர சொர்க்கம் பெறலாகும்
நல்வினையாமணி மந்திரவவுடத நாடுஞ் சிவலோகத்
தெல்லையி தெல்லையி னெய்தினருக்குள தென்றனர் சூதருமே.

(இ-ள்.) அந்தக்கணபதி தீர்த்தத்தை உட்கொண்டபேர்கள் யெழுபிறப்பிலுஞ் செய்தவலியவினைத் துயரமுடையநோய்களெல்லாந் தீரும்பழவினையுந் தீரும்சுனையின் மூழ்கினால் பரகதியாகிய சொர்க்கபோகம் பெறுவதாகும். நல்வினையாகிய மணிமந்திர அவிழ்தங்கள நன்றாய்ப்பலிக்கும் அந்தியத்தில் சிவலோகத்தெல்லையி லெய்திவாழ்வார்கள் இன்னம் அளவில்லாத மகிமையுண்டென்று சொன்னார் சூதமுனிவர்.—எ-று. (உங)

தேவவயித்தியராகாசக்கெம னச்சித்தர்களாறு
மூவருமூலிகை பெறவன்னதியில் முயன்றவரவர்மூழ்கி
யோவறுமெழிலும் மொழியாவிளமையு முறுதவநெறியுமனத்
தாவலுறத்தரு கணபதிதீர்த்தத் தருள்சொல வரிதரிதே.

(இ-ள்.) தெய்வவயித்தியர்கள் ஆகாசகமனம்போய்கிற சித்தர்கள் யாவருஞ் சித்துக்கேதுவாகிய பதினெட்டு மூலிகைகளும் பெறுக்கொள்ளும்படியாக அந்தக் கணபதிதீர்த்தத்தில் முயற்சியாக அவரவர் வந்துவந்து மூழ்கி கெடுதலில்லாத அழகும் மாறாத இளமையுந் தவமகிமையுமுற்று மனோபீஷ்டங்களுந் தரப்பெற்று வாழ்வார்கள். ஆதலால் அந்தக் கணபதிதீர்த்தத்தின் பெருமையை அளவிட்டுச் சொல்லுவது அரிதரிது.—எ-று. (உச)

அத்தீர்த்தப்புடையமுத சஞ்சீவியடைந்தது கணபதியாற்
சித்தியும்வன்னம்பலவாகுந் தேவர்தினஞ்சூழ
முத்தீயுய்ப்பது வந்தனைசெய்வது முனிவர்கள்முதலோருஞ்
சத்தீதெனவுந் தவமீதெனவுந் தாமொருபொழுதகலா.

(இ-ள்.) அத்தீர்த்தக்கரையில் கணபதியாருடைய கிருபையினாலே அமிர்தசஞ்சீவி யடைக்கப்பட்டது. நினைத்த சித்தெல்லாந்தரும் பலபல வர்ன பேதங்களுண்டாகுஞ் சதாநித்தியமுந் தேவர்கூட்டங்கள் சூழ முனீஸ்பரர்கள் முதலாகிய யோகீஸ்பரர்களும் முத்தீவளர்த்தோமஞ்செய்வதும் வந்தனைசெய்வதும் சத்தீது அசத்தீதுவென்றறிவதும் ஒருகாலமும் பிரிவில்லாமல்இவையாவுஞ்செய்து வசித்திருப்பார்கள்.—எ-று

கச்சித்தவமுத்திக்காமாட்சி கனிந்திறை பெறவருணு
ளிச்சைக்கம்பையு மம்பையுமக்கரை யெய்தியதென்னாளும்
விச்சைத்தவமும் வேதகுழாமும் விண்ணவரவர் வொலியும்
மச்சிற்பொலியுங் கணபதிதீர்த்தத் தழகினமைந்துளதால்.

(இ-ள்.) காஞ்சிபுர ஸ்தலத்தில் சிவார்ச்சனைசெய்து காமாட்சியாகிய பரமேஸ்வரி அன்புடனே அந்த திருநாககிரியிலெய்தி சிவனிடப்பாகம் பெறும்படியாக வந்தருளில் இனிதான கம்பைநதியும் அந்தத் தீர்த்தக்கரையருகிலெய்தியிருக்கின்றது. எந்தக்காலமும் வித்தைப்பெருமையுடைய தவமுனிவர்களும், வேதியர்கூட்டங்களுந் தேவர்கள்வருகிற ஆரபாரத்தொனிகளும், அழகாகப் பொருந்தியிருக்கும் மகிமையுளது கணபதிதீர்த்தம்.—எ-று. (உசு)

அந்தத் தெய்வப் புனலாடற்கென் றடியொரு பத்திட்டால்
முந்தச் சென்மந் தனில்வரு பாதக முற்றுந் தொலைவாகுங்
கந்தன்றிருவே ரகமிசை சென்றார் கண்ணுயிர நகராம்
வந்தப் புனலைக் கண்டார்க்குண்டாம் வருபல னளவிலையால்.

(இ-ள்.) அந்த தெய்வதீர்த்தத்தில் தானம்பண்ணவேண்டுமென்று நினைத்து பத்தடி நடந்தவர்கள் முன்சென்மங்களிற்செய்த பாதகமெல்லாந் தொலைந்துபோகுங் கந்தசுவாமி யெழுந்தருளிய திருவேரகமென்னுந் திருச்செங்கோட்டு நாககிரிமீதில் யாதாமொருவர் பக்தியுடனேசென்று சேர்ந்தா லவர்களுக்கு சொர்க்கலோக பதவியுண்டா மந்த சுனைப்புனலை கண்குளிரக் கண்டபேர்களுக்குண்டாகும் வரப்பிரசாதபலன்க ளலவில்லை.—எ-று. (உஎ)

தடமூழ்கினர் கங்கையை முடிமூழ்குவர் தண்கரைமிசைவந்தே
இடமூழ்கியவம் பாநதியாடி யிறைஞ்சுந் தொழில் செய்தால்
நடவர்மேவிய நாகேசன் சரணிடை நண்ணுத றிண்ணமெனத்
தொடைமேவு புராணஞ்சொலுமென வரசூதனுரைத்ததனால்.

(இ-ள்.) அந்தக் கணபதிதீர்த்த முழுகினவர்கள் கங்காநதியில் மூழ்கினவர்களாகவும் தண்ணிய சுனைக்கரையில்வந்து சிவனிடப்பாகம்பெற்ற அம்பாநதி தீர்த்தமாடி நேமமுடித்து சிவபணி விடைசதொழில்கள் செய்தார்களாகில் நடேசமூர்த்தியாகிய நாகேசுவரர் பாதபங்கய நிழலிலசேர்ந்து வாழ்வார்கள் இது நிச்சயமென்று தொடர்ச்சியையுடைய புராணங்கள் சொலலுமென்றுசொன்னார் சூதமுனிவர்.

கணபதி தீர்த்தச்சருக்கம் முற்றிற்று.

ஆக சருக்கம். உரு-க்கு செய்யுள். எாய.

---

## விஷ்ணு தீர்த்தச்சருக்கம்.

இப்படி யமைந்த தீர்த்த மின்னமு முண்டோயாங்க
ளப்புனற் றீர்த்தமாடி யாம்பதம் பெறவும் வேண்டும்
செப்புது மெனவேசூதர் திகழ்முனி யவர்பாற் கூறும்
மெய்ப்புறு விண்டுதீர்த்த விளைவினை விளம்பலுற்றும்.

(இ-ள்.) மகிமையுடைய தீர்த்தங்க ளுண்டாயிருந்தால் இன்னுஞ் சொல்லுவீராகளாங்களந்தத் தீர்த்தங்களாடி சிவபதம் பெற்றுக்கொள்ள வேண்டுமென்று சவுனகாரதி முனிவர்கள் கேழ்க்கசூதமுனிவர் சொல்லத்தொடங்கி மெய்ப்பாகிய விஷ்ணுதீர்த்தத்தின் பெருமை முறைமையை வழுவாமற் சொல்லுகிறோம்.—எ-று. (க)

கயிலையும்வேதங்கண்ணுங் கனிந்துறைமுனிவர்ஞானத்
தியலுறும்பெரியர்நாலா யிரவர் வெண்ணீறோடக்கம்
மியலுறத் தரிப்போரைந்து மியனெழுத் துரைப்போர்சீலச்
செயலுறச் சிவனைப்பூசை செய்திடுஞ் செயற்கைமேலோர்.

(இ-ள்.) கைலாசகிரிச் சார்பிலும் வேதபிர்ம்மா விடத்திலும் கனிவுடனேதவஞ்செய்து வசித்திருக்கின்ற முனீஸ்வரர்கள் ஞானத்தியல்பை யுடைத்தாகிய பெரியோர்கள் நாலாயிரம் பேர்கள் விபூதி ருத்ராட்ச முசிதமாகத் தரித்திருப்பவர்கள் தகைமையுடைய பஞ்சாக்ஷர செபம்விடாமல் செபிப்பார்கள் சிச்சாரமுறைமை வழுவாமல் சிவனைப் பூசிக்குந் தொழிலில மேன்மையானவர்கள் ஆவார்கள்.-எ-று.

ஆயவர்பிரம்மதீர்த்தத் தாடியசாரல்சூழ
மேயிருந்தவசுபண்ணும் வேலையின் கையிலைப்பாங்கி
னேயகாந்தருவன்விஸ்வா வசுவினுக் கினியமைந்தன்
சேயதோர் ஜெயந்த னெனபான் றேவியர்சூழப்புக்கான்.

இ-ள்.) அப்படி ஒப்பில்லாத முனீஸ்வரர்கள் பிரம்மதீர்த்தத்தில் ஸ்நானமாடி அதன சார்பில்மேவி அனைவருஞ்சூழ விருந்து தவசுகள செய்யாநின்றவேலையில் கைலாசகிரிச் சார்பில் வசித்திருக்கின்ற காந்தருவன் விசுவாவசுவென்பவனுக் கினிதாகிய புத்திரனழகிய ஜெயந்தனென்பவன் தேவிமார்கள சூழப்புகுந்தான்.-எ-று.

அனந்தகாந்தருவப்பெண்க ளவருடன்பிர்ம்மதீர்த்த
வனந்தனில்நிருவாணத்தோ டாடியுண்மகிழும்போதிற்
கனந்தருமுனிவரோடுங் கருணைகூர்வசிட்டரெயத
நினைந்தவம்மடவார்தூசு நெறிபடப் புனைந்துசென்றார்.

(இ-ள்.) அளவில்லாத காந்தருவப் பெண்களுடனேகூடி யந்த ஜெயந்தனென்பவன் பிர்ம்மதீர்த்தத்தில் நிர்வாணத்துடனே மூழ்கி உள்ளக்களிப்பாய விளையாடும்போதில் பெருமையுடைய முனிவர்கள கூட்டங்களுடனே கருணைகூர்ந்த வசிஷ்டமுனிவர் அங்கேவந்தார், அவர் வந்ததைகண்டு நினைவுடனே அந்தக்காந்தருவப் பெண்களெல்லாந் துகில்களை யுடுத்திக்கொண்டு நெறிமுறைமை தவிராம லங்ஙனமொதுங்கிச் சென்றார்கள் —எ-று. (௪)

ஆங்கவன்மதியான்றூசு மரைக்கொளானுக்நிற்குங்
காங்கியைச்சயந்தன்றன்னைக கண்டருநதுதியின்காந்தன்
ஓங்கியவரக்கனாக வுழலுதியெனறுகோபித்
தேங்குறச்சபித்தாரச்சொல் லேந்திழையாருங்கேட்டார்.

(இ-ள்.) அங்ஙனம் முனிவர் வரவுகண்டு சற்றும் மதியாதவனாய் இடையில் வஸ்திரந் தரித்துக்கொள்ளாதவனா யிறுமாப்பாக நிற்கின்ற காமியாகிய ஜெயந்தனைக்கண்டு அருந்துதிக் காந்தரான வசிஷ்டமுனிவர் மகாகோபத்துடனே ஓ ஜெயந்தனே, நீ யொரு ராட்சதனாய் உழன்று திரிவாயென்று சபித்தார் அவர் சபித்தசொல் லந்தப்பெண்களெல்லாமகேட்டு அங்ஙனம் ஓடிவந்தார்கள்.—எ-று. (௫)

கேட்டவரடியில்வீழ்ந்தெங் கேள்வனிம்மடவார்க்கெல்லாம்
பூட்டருள்முனிவவென்னப் புனைதுகின் மருங்குநீவிர்
சூட்டியப்படியார்சாபச் சொற்பெறுதிருந்திரின்றேன்
வேட்டுவன்போன்றதேனும் வியன்றழையுடுப்பதன்றே

இ-ள்.) அந்தப்பெண்களெல்லாம் ஓட்டமாகவந்து வசிஷ்டமுனிவர் பாதங்

களில்விழுந்து வணங்கி சுவாமி எங்களுக்கெல்லாம் பத்தாவாகிய விவன் ஆகை யால் தேவிமார்ப்பெண்களாகிய எங்களுக்கெல்லா மங்கிலியப்பிட்சை கொடுத்தரு ளுமையா முனீஸ்வரரோ யென்று சொல்ல நீங்களனைவரும் நாம்வருவதுகண்டு யிடைகளில் துகில்களையுடுத்திக் கொண்டீர்கள். ஆகையால் நீங்கள் சாபச்சொற் பெருமற் பிழைத்தீர்கள்; இவன் மமதையுடையவனுய வஸ்திரந் தரியாமல் நிர்வா ணத்துடனே நின்ற னுதலால் மகாராட்சதனுகவென்று சபித்தோம், இடையில் இலைதழை யுடுத்தித் திரிவதாகவென்று சொன்னூர்.—எ-று. (சு)

என்றவர்க்கிரங்கியிட்ட சாபங்களெளிதிற்போகா
நன்றிவனீரெட்டாண்டு நரக்கனுய்த்திரிதல்வேண்டும்
நின்றதற்பின்னரீச னீள்படையதனுலங்கம்
பொன்றினுங்கொழுனனுவன் போருதிரென்றுமீட்டார்.

(இ-ள்.) வசிஷ்டமுனிவ ரந்தப்பெண்களுக்காக மனதிரங்கிச் சொல்லுகிறார், நாமிட்டசாபம் யெளிதிற் போகாது யிந்தஜெயந்தன் பதினறுவருஷம் ராட்சதனுய்த் திரியவேண்டும் அதன்பின்பு நாககிரி அர்த்தநாரீஸவரருடைய கடாயுதத்தினுல் ம் ராட்சததேக மொழிந்து பழயஜெயந்தனுகி உங்களுக்கு பிராணநாயகனுவான், நீங் களனைவரும் போவீர்களென்று விடைகொடுத்தருளினூர்.—எ-று. (எ)

செயந்தனம்மட்வார்காண்பச் சேணிமிருடலம்வீங்க
வுயர்ந்தெரிகுஞ்சிநூங்க வுறும்பிறையிரண்டுமேங்க
நயந்தெனப்பேழ்வாயோங்க நனிக்கரஞ்சூலந்தாங்கப்
பயந்தெரிவிழியிற்செந்தீப் பறந்தெழுமுழங்காநின்றுன்.

(இ-ள்.) ஜெயந்தன் அந்தப்பெண்களெல்லாம் காணத்தக்கதாக வுயர்ந்து வுட ல்பாரித்து மேனேக்கியெரிகின்ற அக்கினிச் சுவாலைபோலுஞ் சிகையுண்டாகப் பெ ளவாயாகி யிரண்டு கடைவாயிலு மிரண்டு பிறைகள்போலுங் கோரப்பல்லுகளுண் டாக மலைபோன்ற கைகளில் சூலவேல்தாங்கிவர யாவரும் பயப்படும்படியாக வட் டக்கண்களை விழித்துப்பார்த்து அக்கினிபொறி சிந்தித் தீப்பறக்க செழித்து முழங்காநின்றுன் மகாராட்சத ரூபமாக.—எ-று. (அ)

அவனுருக்கண்டகாலை யணங்கனுர்வாயுவேகத்
துவருறுசிந்தையார்கண் டோடினரனந்தமாக்கள்
கவனமீதிருடியெனபோர் கண்டகர்நரனையெல்லாந்
தவமுறுதடித்துநுங்கித் தாழ்வுறப்பசிமிக்கொண்டான்.

(இ-ள்.) அவன் ரூபத்தைக் கண்டவுடனே, அந்தப்பெண்க ளனைவரும் பயந் து வாயுவேகமாக மனததுயரமுடனே ஓடிப்போனூர்கள்; அப்பாலந்தச் ஜெயந்தரா ட்சதன் அளவில்லாத மிருகங்களையும், வனசித்தர்களையும், இருடிகளையும், முனை ந்தெதிர்த்த அசுரர்களையும், மனிதர்களையு மிவர்களை யெல்லாந் தப்பவிடாமல் அடித் துக்கொன்று வாரி வாயிலிட்டு விழுங்கி அடங்காத பசி மேற்கொண்டு திரிந்தலைந் துழன்றுன்.—எ-று. (கூ)

இப்படிதிரிந்துபன்னு ளுண்டினிற்செயந்தனென்பான்
மெய்ப்புறுநாகவெற்பில் விண்டுதீர்த்தத்தைநோக்கித்
தற்பரசுருந்தபொன்னுந் தவமுனிவனைத்தான்றுய்க்கப்
பொய்ப்பெறுஞ்சேனையோடும் புகுந்தனன்புகுந்தகாலை.

(இ-ள்.) இந்தப்பிரகாரம் மலைவனங்களெல்லாஞ் சுற்றிச் சஞ்சரித்து சுழன்ற லைந்து திரிந்து ஆண்டு பதினறுஞ்சென்ற வளவில் அந்த ஜெயந்தராட்சதனென்ப

வன் மெய்யாகிய நாககிரியில் விஷ்ணுதீர்த்தத்தைநோக்கித் தற்பரனுண சகுந்தரென்னுந் தவமுனிவனை விழுங்கத்தக்கதாகப் பொய்யாகிய ராட்சசச் சேனைக்கூட்டங்களுடனே விரைவாகவந்து புகுந்தான் அப்படிப் புகுந்தவேளையில,—எ-று. (கo)

சிவசிவசகுந்தரோடித் திகைத்தனர்திகைத்துநாக
நவகிரியதனிற்பாக நாரிநாயகனைப்போற்றிக்
கவருறுவினையைவெல்லக் கனிந்தொருகடகமீந்தா
ரவாருதவன்மேலேவ வறுத்ததவ்வரக்கன்சென்னி.

(இ-ள்.) சிவசிவா அந்த சகுந்தமுனிவர் ஓடித் திகைத்தார் திகைத்து நாககிரியில் அர்த்தநாரீசுரனை வணங்கிப்போற்ற அந்த அரக்கனை செயிக்கும்படி சுவாமி கனிவுடனே ஒரு கடகாயுதங் கொடுத்தார், அதை அவர் அவன்மேலேயேவி அந்த ஜெயந்தராக்ஷதன் தலையை அறுத்தார்.—எ-று. (கக)

அறுத்தபின்னரக்கனுய வடலுருமாறிப்பண்டை
நிறத்துறுசயந்தனுகி நின்றுபூவிமானத்தெய்தித்
துறைப்புனற்கடகந்தன்னைத் தோத்திரஞ்செய்துபோற்றி
மறைபகாசகுந்தர்பாதம் வணங்கியைம்முகன்றாள்கண்டான்.

(இ-ள்.) அப்படி அறுந்தவுடனே ரூபமாறி பழபபடி யெதார்த்தமான நிலைமையுடைய காந்தருவச செயந்தனுகி ஒளிபெறநின்று புட்பவிமானத்திலிவர்ந்து விஷ்ணுதீர்த்தக்கரையில் அந்த கடகாயுதத்தைத் தோத்திரஞ்செய்து வேதியரான சகுந்தமுனிவர் பாதங்களில் வணங்கி ஐந்துமுகவனுன பரமேஸ்வரன் பாதங்களைக்கண்டு துதிசெய்தான்.—எ-று. (கஉ)

தனதுகாந்தருவப்பெண்க டமைந்தழீஇக்கொண்டுசென்று
பினதரன்கொடுத்தகடகம் பிரளயவிண்டுதீர்த்தந்
துனதருளதனுல்வந்தோர்க் குள்ளபாவங்கடீர்ந்து
நினைவுறவிருத்தியென்றே நிமலனாருளிச்செய்தார்.

(இ-ள்.) அப்போது அந்த செயந்தன் தன்னுடைய பத்தினிப் பெண்களாகிய காந்தருவப் பெண்களனைவரையுங்கண்டு தழுவிககொண்டு தன்னூரிற் சேர்ந்து வாழ்ந்திருந்தான்; அவன் போனபின்பு சுவாமிகொடுதத கடகாயுதத்தை ஜலப்பெருக்குமுள்ள விஷ்ணுதீர்த்தத்தினுள் உன்னுடைய கிருபையினாலே இங்கேவந்து சேர்ந்தவர்களுடைய பாவங்களெலலாந் தீர்ந்து நன்மையருளி நல்ல நினைவுடனே நீ யிருப்பாயென்று நிமலனுன பரமேஸ்வர னருளிசசெய்தாா —எ-று. (கங)

சிவன்றிருக்கடகமாயோன் றீர்த்தமுட்புகுந்தபின்னர்
புவநதிக்கடகதீர்த்த நாமமுமுடையதென்றுந்
தவம்புரிசகுந்தரந்தத் தடாகக்கீழிருப்பையொன்றுண்
டுவந்ததன்கீழ்த்தொல்லோரோ டுறுதவமுதவலுற்றார்.

(இ-ள்.) சிவனுடைய கடகாயுதஞ் சுவாமியனுக்கிரகப்படிக்கு விஷ்ணு தீர்த்தத்தினுட்புகுந்திருந்தது, அதன்பிறகு புதுமைபொருந்திய கடகதீர்த்தமென்னும் பெயராய் விளங்கிற்று எந்நாளும் அங்ஙனம் தவஞ்செய்யுஞ் சகுந்த முனிவர் அந்தத் தீர்த்தத்தி னருகாக கீழ்ப்புறம் இலுப்பைமர மொன்றுண்டு அதினிழலின்கீழ் பெரியோருடனே மருவி அரியதவஞ் செய்திருந்தார்.—எ-று. (கச)

அந்தவண்டருமூலங்க ளாரணவேதமென்றும்
விந்தைமென்பனுவலெல்லாம்வேதசாஸ்திரங்களென்றும்

பைந்தருவிலைகள்முற்றும் பகர்மறைபுராணமென்றும்
தந்தையிலினியசூதர் சவுனகாதிபர்க்குச்சொன்னார்.

(இ-ள்.) அந்தவளமையுடைய இலுப்பை மரத்தி னடிவேர்கள் அனைத்தும் ஆரண வேதங்களென்றும் அழகாகிய மெல்லிய பனைகளெல்லாம் வேதசாஸ்திரங்களென்றும் அதின் பசுந்தழை இலைகளெல்லாஞ் சொல்லுதற்கரிய வேதபுராணங்களென்றுந் தந்தையிலுமேலான அன்புடைய சூதமுனிவர் சவுனகராதி முனிவர்களுக்குச் சொன்னார்.—எ-று. (கரு)

அத்தருமுதலாயுள்ள அர்த்தநாரீசன்சென்னி
வைத்தனபிறையின்வார்ந்து மலிந்தொழுகமுதந்தன்னால்
வித்தியவேருங்கோடும் வியன்றழைமலருங்காயுஞ்
சுத்தமென்கனியுமார்த்துத் துலங்குவதிலங்கள்காணாய்.

(இ-ள்.) அந்தயிலுப்பைமரம் ஆதிமுதலாகிய அர்த்தநாரீஸ்வரன் சிரத்தில் தரித்தருளிய பிறையிலார்ந்து மலிவாக வொழுகிப்பெருகும் அமுர்ததினால் குளிர்ச்சியுடைததாய் வித்துமுதலாகிய வேர்களுங் கொம்புகளுந் தழைததழைகளும் புஷ்பங்களுங் காய்களுஞ் சுத்தமான கனிகளுமாக நிரம்பியார்தது இங்கிலங்காணுமபடியாக ப் பிரகாசிததிருக்குது. -எ-று. (கசு)

ஆகையால்வசிட்டராதி யடைந்தருந்தவங்கள்செய்ய
மாகருணையினாலென்றும் வருவரப்பிலத்தினாடென்
றோகையில்வியாஸரோத வுணர்ந்தனம்பின்னுமந்த
நாகமேற்றருவின் வண்மை நாஞ்சிலசொல்வமனறே.

(இ-ள.) வசிஷ்டர் முதலானமுனிவர்கள யாவரும் அங்ஙனம் அரியதவங்கள் செயவதற்கு மிகுந்த அன்புடனே என்றென்றும் பிலததுவாரவழியாக வருவார்களெனறும் மகிழ்ச்சியாக வேதவியாஸா சொலல நாமறிந் துணர்ந்தோம் பின்னையுமந்த நாககிரியின்மேலிருக்கின்ற இலுப்பைமரத்தின் மகிமைப்பெருமையுந் தெரிந்தமட்டுஞ் சில சொல்லுகிறோமென்று சொலலுகிறா சூதமுனிவர்.—எ-று. (கஎ)

முதலுகத்தகிலிரண்டா முகத்தினிலமுழுப்பூஞ்சந்த
முதவுக்மூன்றிலச்சு வத்தநான்குகத்திலாதி
கதித வியமரவாய்ப்பின்ன ரிருப்பையாயிறைவன்மாயோன்
விதமுளகற்பந்தோறுஞ் சிறந்தறநதிகழுமன்றே.

(இ-ள்.) முதல்கிரேதா யுகத்தில் அகிலவிருட்சம், இரண்டாவது திரேதாயுகத்தில் முழுதும்பொலிவுடைய சந்தனவிருட்சமும, மூன்றாவது துவாபரயுகத்தில் அரசமாமும், நாலாவது கலியுகத்தில சிவனுக் கிஷ்டமாகிய மாமரமாய்ப் பின்பு இலுப்பைமரமாகி பிரம்மகறபம விஷ்ணுகறபமற்று மிதமாகிய கற்பகாலங்கள்தோறுஞ் சிறப்புடைத்தாய் புண்ணியபலன் மிகவுந்திகழ்ந்து விளங்கியிருக்குது.—எ-று. கஅ

மூலமுண்டகனநாப்பண் முராரியாமுடியேவேலை
யாலமுண்டவனுமந்த நீழலினடகுநீர்கூழ்
சீலமுண்டவற்குநல்கிற் சிவசிவகோடிபார்ப்பார்க்
கோலமுண்டமுதநலகு முறுபயனுதவுமாலோ.

(இ-ள்.) அந்தயிலுப்பை மரத்தின் மூலவேர்கள் பிர்ம்மசொரூபம் நடுமரமியாவும் விஷ்ணுசொரூபம் மேல்மரமெல்லாஞ் சிவசொரூபமாக இப்படித்திரிமூர்த்தி சொரூபமாக விருக்கின்றது அந்தமரத்து நிழலில் அடகாகிய குளிர்ந்தநீர் மோர்பானக்கம்

கடழன்னங்கள் யாதாமொருவர் சீலமுடைய பெரியோர்களுக்கு யிஷ்டமர்கக்கொ டுக்கும் அன்னதானப் பலன்களினு மதிகபலனாக விர்த்திக்கும்.—எ-று. (கக)

அத்தருநிழற்கண்ணோர்செம் பரும்புனல்பிடிக்குட்பட்ட
வுத்தமமன்னபார்ப்பார்க் குதவுநீருததிபோலு
மெய்த்தவவுண்டியண்ட மேருவாய்வளருமென்மேல்
சுத்தமாதவங்கள்செய்வர் சுபலநாஞ்சொலற்பாற்றே.

(இ-ள்.) அந்த மரத்தினிழலினிடத்தில் உத்தமரான பிராமணர்களுக்கு நல்ல ஜலம் வைத்து கொள்வதாக ஒரு பிடிசெம்புதானங் கொடுத்தார்களாகில் நீர்நிறை ந்தகடல்போலு மெய்த்தவமுடைய பெரியோர்களுக்கு கொடுத்த அன்னதானப்பல ன்அண்டாண்ட மகாமேருகிரிபோலு மென்மேலும் வளரும் பரிசுத்தமான அரிய மாதவங்களைச் செய்கின்ற நிஷ்டர்களுக்குப் பலிக்கின்ற சுபபலன்களை நம்மாற் சொல்லிமுடியாது.—எ-று. (உ0)

அன்றியும்பழங்காயேனு மந்தணர்க்கீந்துதீர்த்தம்
நன்றியிற்சிறிதாகல்கில் நான்முகன்பதத்தில்வைகும்
வன்றிறற்பசுவொன்றந்த மரநிழலமறையோர்க்கீந்தா
லொன்றுமாயிரங்கோதான முதவியபலன்களுண்டாம்.

(இ-ள்.) அது வலலாமலுங் கனிகாய்கள் முதலான பதார்த்தங்கள் பிராமணரு க்குக் கொடுத்து நல்ல தீர்த்தஞ் சிறிது கொடுத்தார்களானால் அவர்கள் பிர்ம்ம பதத் தில் வைகி வாழ்வார்கள் வலிய திறமுடைய அந்த இலுப்பை மரத்து நிழலில் வே தியருக்கு ஒரு பசு தானங்கொடுத்தால் அது வொன்றும் ஆயிரங்கோதானங் கொடு த்த பலன்களுண்டு.—எ-று. (உக)

அவ்விருப்பையின்கீணின்றே யகமறையவருக்கீந்தார்
செவ்விதின்புடவிமன்னர் செழுங்குடைககீழ்வைத்தாள்வர்
நவ்விகொள்கலையொன்றுய்த்தால் நடுக்குறுசுரங்கள்தீரும்
தவ்வியவெட்டானத்தாற் றலைமுறைப்பாவம்போமால்.

(இ-ள்.) அந்த யிலுப்பைமரத்து நிழலினின்று யாதாமொருவர் பிராமண சனங்களுக்குக் கிரகதானங் கொடுத்தார்களானால் இந்தப் பூமண்டலமெல்லாஞ் செழு மையுடைய ஒரு குடைக்கீழடக்கி இராஜனாகி வாழ்வார்கள். அழகிய புது வஸ்திர மொன்று தானங்கொடுத்தால் நடுக்கமுற்ற சுரங்கள் தீரும் இயலபாக எள்ளுதான ங்கொடுத்தால் தலைமுறைப் பாவங்களெல்லாம் தீர்ந்துபோம்.—எ-று. (உஉ)

பேதமறும்பொற்றானம் பிதிர்வகைக்குண்டாமுத்தி
யோதுசங்கிரம்பாந்த ளுபையவண்சுடரைத்தீண்டி
வீதமாவாசைதன்னி லினியவன்னங்களீந்தார்
மீதுளபலன்களின்ன வினைவெனவிளம்பற்பாற்றே.

(இ-ள்.) சொர்னதானங்கொடுத்தால் பேதமற்றுப் போகும் அவர்கள் பிதிர் வர் க்கங்களுக்கும் முத்தியுண்டாஞ் சொல்லப்பட்ட மாசப்பிறப்பாகிய சங்கிரம நாள்க ளில் இருசுடராகிய சந்திர சூரியர்களை இராகு கேதுகள் தீண்டிய கிரகண புண்ணி யகாலங்களிலும் அமாவாசைத தினங்களிலு மினிதாக அன்னதானங் கொடுத்தவ ர்களுக்கு மேல்வரும் பலன்கள் இவ்வண்ணஞ் சொல்லும் பகுதியல்லவென்று சொன்னார் சூதமுனிவர்.—எ-று. (உ௩)

மகரசங்கிரமந்தன்னில் மேடசங்கிரமவைப்பில்
பகர்புரட்டாசிமுப்பான் பரிந்துதம்பிதிர்க்களுக்கித்
தகைமறையவருக்கன்ன தானஞ்செய்தவருக்குண்டாய்
மிகுபலன்மாலந்த வேதனல்விளம்பற்கெய்தாது.

(இ-ள்.) மகரசங்கிரம தினத்திலு மேடசங்கிரம தினத்திலுஞ் சொல்லப்பட்ட புரட்டாசியின் முப்பது தினத்திலும் பரிவுபட்சமாக யாதாமொருவர் தங்கள் பிதிர்க்களைக்குறித்து நோக்கி தகைமையுடைய வேதியர்களுக்கு அன்னதானஞ்செய்தால் அவர்களுக்குண்டாய் மிகவும் வரு பலன்களை நம்மாலும் நான்முகப்பிரம்மாவாலும் அளவிட்டுச் சொல்லக்கூடாது.—எ-று. (உ௪)

பன்னபாதபக்கீழ்நூறு பலங்குளமளித்தநோச்சி
யின்னுருவிலையுந்தான மீந்தவர்பாவம்யாவுஞ்
சின்னபின்னங்களாகித் தென்றிசைக்கடவுள்வாதை
மன்னுராகாமித்துள்ள வரம்பலநிரம்புமன்றே.

(இ-ள்.) அந்த யிலுப்பை மரத்து நிழலில நூறுபல வெல்லம் மறையவர்களுக்கு தானங்கொடுத்தாலும் அதற்குள்ள விலைக்கிரயம் கொடுத்தாலும் அவர்கள்செய்த பாவஞ் சின்னபின்னங்களாகி எமதண்டனையு மவர்களுக்கில்லை. இஷ்டகாமியான சகல வரப்பிரசாத பலன்களும் நிரம்ப வுண்டாகும்.—எ-று. (உ[illegible]

சித்திராஷ்டமியிற்பௌவத் திதியினிலறங்களிவ்வா
றுத்தமதிவசந்தன்னி லுரைப்படிபுரிதல்வேண்டும்
நத்தினந்தீர்த்தத்தாரு நண்ணுசோடசதானத்தின்
முத்தியும்பலனுமேனை முனிவருமொழிந்துமுற்று.

(இ-ள்.) சித்திரைமாதத்தின் அஷ்டமிதினத்தில் சித்திராபவுர்னமி தினத்தில் முன்சொல்லிய தானதாம்மங்களை யாதாமொருவர் செய்தார்களாகில் பின்னையுமுத்தமமான புண்ணியதினங்களில் சொன்னபடி தானங்கள் செய்யவேண்டும் நல்லசுபதினங்களில் விஷ்ணுதீர்த்தக் கரையிலு மிலுப்பைமரத்து நிழலில்சோடசமகா தானங்கள் செய்யுமவர்களுக் குண்டாகிய பலன்களுமுத்தி மோட்சங்களு மிவ்வளவென்று நம்மாலு மற்றுமுள்ள முனிவர்களாலுஞ் சொல்லிமுடியாது.—எ-று. (உ௬)

பாதுகைவிசிறிசத்ரம் பரிந்தளித்தார்பாற்கூற்றின்
வாதையங்கில்லையோமஞ் செபஞ்சிவார்ச்சனைமாயோனைப
போதடிபணிதல்சேவித் தவன்கொள்புண்ணியங்கள்யார்க்கு
மோதுவதரிதுபூமி யுதவில்மால்பதங்கணல்கும்.

(இ-ள்.) பாதுகை, விசிறி, குடை, பரிவாகத் தானங்கொடுத்தவர்களிடத்தில் யமவாதனையில்லை அங்ஙனம் ஓமம், தர்ப்பணம், ஜெபம், சிவார்ச்சனை அரிபூசை செய்தவர்கள் செய்வித்தவர்களுக் குண்டாகிய புண்ணியபலன்களை இவ்வளவென்று யாவராலுஞ் சொல்லுதற் கரிதாகும பூமிதானங் கொடுத்தால விஷ்ணுபதம் பெறுவார்கள்.—எ-று. (உ௭)

அவ்விடைபுரவிதான மளித்தவனஸ்வயர்கஞ்
செவ்விதாயிரஞ்செய்வித்த செயற்கையின்பலன்கள்சேர்க்குங்
கௌவைபிற்றனமுமேலோர் கருதுமாதனமுமீந்தாற்
பௌவநீள்படியில்யாக மாயிரம்பலித்தற்பாலாம்.

(இ-ள்.) அந்த யிலுப்பைமரத்து நிழலில் அஸ்வதானங் கொடுத்தவர்களுக்கு ஆயிரம் அஸ்வமேதயாகஞ் செய்வித்த முயற்சியின் பலன்கள் கிடைக்கும்; மாறுபாடில்லாத மனத்துடனே பெரியோர்களுக்கு சொர்ணமும் கன்னிகாதானமும் அன்னதானமுங் கொடுத்தார்களாகில் கடல்சூழ்ந்தபூமியில் ஆயிரம் அஸ்வமேதயாகஞ்செய்வித்த பலன்களுண்டாய் விர்த்தித்து வாழ்வார்கள்.—எ-று. (உ அ)

பீதகம்வெள்ளியீந்தார் பிதிர்க்களுக்குண்டாஞ்சொர்க்க
மாதிலரிருநாலெச்சங் கடைந்தவர்பிணியின்மேலோர்
மாதவர்வறிஞர்பாலர் மலைவயின்வசிப்போர்க்கீதல்
நீதியித்தானமொன்றும் நெறிபடக்குறிப்பிற்கூறும்.

(இ-ள்.) சொர்ணதானம் வெள்ளிதானங் கொடுத்தால் அவர்களுடைய பிதிர்க்களுக்கு சொர்க்கபதமுண்டாகும், அதுவலாமல் யெண்பெய ரெச்சமாக வந்தடைந்தவர்கள் வியாதிமேலிட்டவர்கள் வறியவர்கள் பாலர்கள் மலையிடத்து வசித்திருப்பவர்கள் இவர்களுக்குமுன் சொல்லப்பட்ட தானங்கள் கொடுப்பது நீதிநெறிமுறைமையென்று குறிப்பாக வேதங்கள் சொல்லும்.—எ-று. (உகூ)

அதிற்றுலாபாரந்தூங்கு மதிப்பர்க்குப்பிறவிவாரா
மதித்திடுகுமருண்டாய் மானிலமனைத்துங்காப்பார்
கதித்திடுவன்னமான்கிற் கன்னிகாதானஞ்செய்தோர்
மதுப்பகைதடிந்தார்பாத மனனவர்சிவத்துச்சேர்வார்.

(இ-ள்.) அங்ஙனந் துலாபாரந் தூங்குதானங்கொடுத்த அரசர்களுக்கும் பிறவியில்லை நினைத்தபிரகாரம் புத்திரருண்டாய் பூமண்டலமெல்லாம் ரட்சணைசெய்து ஆள்வார்கள் கதித்திருக்கின்ற நாலுவன்னங்களில் கன்னிகாதானஞ் செய்தவர்கள் மதுகைடவரைச் சங்கரித்தவிஷ்ணு பதம்பெறுவார்கள்; பின்பு சிவகதியுஞ் சேர்வார்கள்.

விண்டுவின்றீர்த்தமேன்மை விளம்பினர்கேட்போரன்பு
கொண்டவர்படித்தோர்க்கியாதுங் கொடுப்பவரரியின்பாங்கே
யிண்டெனும்பதனுன்குண்டா முறுபொருளுதவுமன்றே
தண்டகைச்சூதர்பேத சவுனகாதிபர்க்குச்சொன்னார்.

(இ-ள்.) விஷ்ணுதீர்த்தத்தின் பெருமையைச் சொன்னவர்கள் கேட்டவர்கள் அன்புகொண்டவர்கள் படித்தவர்களுக்கு யாதானு மொருபொருள் கொடுப்பவர்கள் இவர்களெல்லாம் விஷ்ணு சமீபம் பெறுவார்கள் அவரவருக்குத்தக்க நாலுபதங்களுஞ் சேர்ந்து வாழ்வார்கள் உறம்பொருளாகிய வீடுஞ்சேர்வார்களென்று விற்பத்தியுடைய சூதமுனிவர் சவுனகாதி முனிவர்களுக்குச் சொன்னார்.—எ-று. (௩௰)

விஷ்ணுதீர்த்தச்சருக்கம் முற்றும்.

ஆகச்சருக்கம் - உ௬-க்கு திருவிருத்தம் - எ௱௬௰க.

---

# பிரமதீர்த்தச் சருக்கம்.

மாய்வன்றன்றீர்த்தவகை மாமுனிவனிற்குரைத்தேயந்தத்தீர்த்தம்
நேயமுறவாடியபின் னெடியமாலுங்கிவந்த நெறிகொள்வேத
ஞயசதுர்முகன்பிர்ம்மதீர்த்த மெனவொன்றளித்தானவற்றின்வண்மை
தூயசவுனகர்முதலோர் கேளுமெனச் சூதமுனிசொல்லச்சொல்வாம்.

(இ-ள்.) விஷ்ணு தீர்த்தத்தின் மகிமையை மகாமுனீஸ்வரர்களே உங்களுக்குச் சொன்னேமே அன்புடனே யந்தத்தீர்த்தமாடினபின்பு மகாவிஷ்ணு உந்திக்கமலத்தில் வந்துதித்த வேதநெறிமுறைமை தவிராத வேதாவான சதுர்முகப் பிரமதேவன்வந்து சிவனைப்பூசித் தர்ச்சிக்குங்காலத்தில் தன் பெயராலே பிர்ம்மதீர்த்த முண்டுசெய்தார் அதிலே ஸ்நானம்பண்ணவேண்டும் அதின் வளமையை மேன்மையான சவுனகர் முதலான முனிவர்களே கேண்மின்களென்று சூதமுனிவர் சொன்னார். ()

பிர்ம்மதிருத்தீர்த்தத்தை நினைத்தார்க்கும்பெரிதாடிப் பிறங்கினோர்க்கு
முரணுறுபாதகமகற்றி யுயர்வேதனுலகத்தை யுதவும்வேதன்
பனையொருபாகனைப்பணிந்த படியதனாற்பிரமகிரி பணிப்பூந்தீர்த்தம்
வரமுறவன் றுதவவருபிர்மதீர்த் தப்பெயரின் விளங்கிற்றுமால்.

(இ-ள்.) அந்த திருபிர்ம்ம தீர்த்தத்தை நினைத்தவர்களுக்கும் பக்தியுடனே ஸ்நானஞ்செய்து பெருமைபெற்றவர்களுக்கும் வலிதாகிய பாதகங்களைத் தீர்த்து மேன்மையான வேதப்பிர்ம்ம லோகத்தைக் கொடுப்பான் பிர்ம்மதேவன முற்காலத்தில் வந்து அர்த்தநாரீஸ்வரரைப் பூசித்து வணங்கியபடியினாலே அந்தக்கிரிக்கு பிர்ம்மகிரியென்னும் பிர்ம்மதீர்த்தமென்னும் பெயராய் விளங்கிற்று.—எ-று.

வேதியரும்வானவரும் விஞ்சையருஞ் சனகர்சனக்குமாரர்யாரு
மோதுசிவபத்தரரிபத்தர்முற வோர்யாரு முடனாற்சூழ
நாதர்கணபதிவயிரவன்சூலி நவதுர்க்கை தேவர்தங்கள்
மோதுபடைக்கரத்தேந்திப் பிர்ம்மதீர்த்தங் காப்ப முயன்றுசூழ்வர்.

(இ-ள்.) வேதியர்களுந் தேவர்களும் விஞ்சையர்களுஞ் சனகர் சனற்குமாரர்கள் முதலான சிவயோகிகளும் சிவபத்தர்களும் விஷ்ணுபத்தர்களும் இருடிகளும் முனிவர்களும் யாவர்களு மொருமிக்ககூடிச் சூழ்ந்து துதிசெய்ய கணபதியாரும் வயிரவர்களுங் காளிகளுந் துர்க்கைகளுந் தேவர்களுந் தங்கள் ஆயுதங்களைக் கைகளிலேந்திப் பிடித்துக்கொண்டு அயன் சுனையைக் காக்க முயற்சியாய்ச் சூழ்வார்கள்.—எ-று. ()

ஆங்கவரிற்றுர்க்கையொண் மறைப்பிர்மதீர்த்தத்திற்காங்கனுங்கன்[யோன்
பாங்குபடவிருத்திதிகழ்வயிரவியைத்தம் பாலனுமைப்பரித்தான்வெய்
நீங்கசுற்றுமெழுமாதர் தென்றிசைமேற்றிசைவடுகன் வடபால்வேற்கை
கோங்கயற்குமுன்னுதித்த கடவுளேபணிமலையைக் காப்பவைத்தார்.

(இ-ள்.) அந்த தேவர்களில் அஷ்டதுர்க்கைகளை பிர்ம்ம தீர்த்தத்துக்கு அங்கங்கே காக்கும்படியாக விருத்தி காளியை குமாரர் திருமுன்னிறுவி கிழக்குத்திசை சூரியனை யங்கே நிறுத்தி சப்தமாதர்களை தெற்குத் திசையாக நிறுவி மேற்குத்திசை வயிரவன் காக்கவும் வடக்குத்திசை குகனுக்கு முன்னவனான யானைமுகக் கடவுளை அழகிய பணிமலையைக் காக்கும்படியாகவும் வைத்தருளினா சுவாமி.—எ-று. (ச)

மெய்யனகிக்கிரியில்வந்த வமைதியினி லுடன்வந்த வீரன்றன்னை
யய்யனையம்மலையடியி னணிமலையிற்காக்கவென வமைத்தீவைத்தான்
றுய்யபுனற்சாபமணிச் சுனையுளதங்கதின்விரும்பித் தோய்ந்தார்பாவம்
வெய்யகன்றபஞ்சினிறும் நினைத்தசெயவவற்குதவி விளங்கிற்றுமால்.

(இ-ள்.) சிவன்பணிமலைக்குவந்தபோ துடன் வந்தவீரசேனையும் அய்யனாரையுஞ் செங்கோட்டு அடிமலை அணிமலையில் காக்கும்படி யனுக்கிரகஞ் செய்து அழைத்து வைத்தார் சுவாமி வீரோசுர னயலிலொரு சாபதீர்த்தமிருக்கிறது அதில்மூழ்கினவர்களுடைய பாவங்களெல்லாம் நெருப்பிலிடும் பஞ்சுபோல் நிவாரணமாகும் இஷ்டகாமியார்த்தங்க ளுதவிவிளங்கி யிருக்கின்றது.—எ-று. (ரு)

நாகமிரியினிற்பிரமதீர்த்தத்திந்த ஞானிலத்தில்நாவலஞ்சூழுர்த்தமியாவு
மேகியுறைந்தவரவர்தோய்பாவமகற் றுதற்காடுமெனுமத்தீர்த்த [நூலின்
மோகைபெறச்சிரந்தெளித்தார்க் குதவுமயன்புரம்புகழ்ந்தரர்க் குபைய
பாகுபெறுகலைபலிக்குமாடினர்க்கும் பிரமபதம் பயக்குமாதோ.

(இ-ள்.) அரவகிரியின் பிரமதீர்த்தத்தி லிந்த நாவலந் தீவிலிருக்கின்ற தீர்த்தங்களெல்லாந் தம்மிடத்தில் யாதொருவர் மூழ்கினபாவங்களைத் தீர்க்கும்படி நீராடும் புத்தீர்த்தம் அன்போடு சிரத்திற தெளித்துக்கொண்டவர்களுக்குப் பிரமபத முண்டாம், புகழ்ந்து நமஸகரித்தவர்களுக்கு உபயநூற பகுதிபெற்ற கலைகளெல்லாம் பலிக்கும், நாளும் முழுகினவாகளுககுப் பிரமபதங்கொடுக்கும்.—எ-று. (சு)

வேறு.

ஆயன்றடமூழ்கிலாயுட் டருமகவுடைத்தாய்ப்பின்ன
ரயனுலகிருப்ப ரந்தவரும்பதத்தவர்களிந்த
வியனதிமூழ்கிநாக வெற்பினைத்தொழுதுநாளும்
பயனுறத்துதித்துத்தங்கள் பதத்தினிற்புகுவரொன்றும்.

(இ-ள்.) பிரமதீர்த்தத்தில் யாதாமொருவர்வந்து பக்கியுடனே ஆயுள்வேண்டுமென்று மூழ்கினல் ஆயுள்வாத்திக்கும். நல்ல புததிரர்களைப்பெற்று வாழ்ந்திருந்து பின்பு பிரமலோகததில் வீற்றிருப்பார்கள். அரியபதத்தி லிருககின்றவர்களும், அந்தத் தீர்த்தத்தில்மூழ்கித் திருநாககிரியைப் பிரதக்கணஞ்செய்து தொழுதுவணங்கியெநநாளு மதிகபலன்களைப்பெறறுத் துதிசெய்து தங்கள தங்கள் பதவிகளிற் புகுந்து சேர்வார்கள்.—எ-று. (எ)

அப்புனலாடித்தேவ ரர்த்தநாரீசன்பாத
மொப்புறவணங்கியந்த வுரகவெற்பிருப்பரொன்றும்
பைப்புனலாடித்தானம் பண்ணினர்பிரமலோகந்
தப்பிடாதென்றும்பிண்ட தானமுய்த்தியாருமென்றும்.

(இ-ள்.) அந்தப் பிரமதீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணி நேமர்துடனே தேவதேவனை அர்த்தநாரீஸ்வரருடைய ஒப்பற்ற பாதாம்புயங்களைப் பணிந்தேத்தி நாககிரியிலே வாசஞ்செய்து பிரியாமலிருப்பார்கள். மனிதாகளும் மனைபக்தியுடனே பிரமதீர்த்தமாடி ஸ்நானம்பண்ணினர்களாகில் அவரவாாலியன்ற தருமதானங்கள்செய்து பிண்டப்பிரசாதங் கொடுப்பவாகளுக்கெல்லாந் தப்பாதபடி பிரமலோக பதங்கிடைக்கும்.—எ-று. (அ)

தற்பணம்பண்ணிலந்தத் தடமவன்கிளைகட்கெல்லாஞ்
சொற்கமுற்றுதவுமென்றுந் திலம்பலஞ்சுரக்குமென்றும்
நற்பசுதானம்பண்ணி நான்முகனுருவங்கொண்டு
பொற்கமலத்தன்பாங்கே புரத்தினிதிருப்பரென்றும்.

(இ-ள்.) பிரமதீர்த்தக்கரையிற் பிண்டப்பிரதானமிட்டுத் தர்ப்பணம்பண்ணினுல் அவர்கள் கிளைகளெல்லாஞ் சொர்ககலோகமுழுதும் பெற்றுவாழ்வாாகள. திலமத்தனை பலன்கள்பலிக்கும் சுரப்பையுடைய பாற்பசுக்கள் தானஞ்செய்தபேர்கள் அந்தப் பிரமாவைப்போற் சதுர்முகமாகப் பிரமசொரூபம்பெற்றுப் பிரமபுரத்திலே பிரமதேவன் பக்கத்தி லினிதாக வீற்றிருப்பார்கள்.—எ-று. (கூ)

தேவனும்ர்கவென்று சிந்தித்துமூழ்கிலந்த
மூவுருவளிப்பதென்று முனிவர்க்குச்சூதவேத

ராவலின்பகர்ந்தாரீதி லன்புளார்படிப்பார்கேட்பார்
நாவமாவாணிவாழ நற்கதியடைவிற்சேர்வார்.

(இ-ள்.) நதின் றேவனுக வேணுமென்றுநினைத்து மூழ்கினார்களாகில் அழகிய மூமமூர்த்தி சொரூபங்கொடுக்குமென்று முனிவர்களுக்குச் சூதமுனிவர் அன்புடனே சொன்னார். இங்ஙன மீதி லன்புடையவாகள் படிப்பவர்கள் கேட்பவர்கள் நாவுகளிற் பிரியாமல் வாணிகாதேவி வாழவுற்றிருப்பள அன்புடன் நல்லகதிகளுமடைவுடனே சேர்வார்கள்.—எ-று. (௧0)

அரிவையோர் பங்கன்கோவி லருகுறவடபால்வைகும்
பிரமதீர்த்தத்தின்மூழ்கிப் பிறங்கிருகாலேகாயத்
திரியுரைத்தொழிந்தபின்னர் சேவகன்சம்புமங்கை
பரனைவந்திப்போர்க்கெய்தும் பலனெமக்குரைக்கப்போகா.

(இ-ள்.) உமையொருபாக ரெழுந்தருளிநின்ற திருக்கோவிலுக்குச் சமீபமாய் வடவணடையில வைகியிருக்கும் பிரமதீர்த்தத்தை அந்திசந்தி இருபொழுதும்ஸ்நானஞ்செய்து காயத்தரி ஜெபஞ்செய்து பின்பு சேவகனை குமாரனையும் சுவாமியையும் அம்மனையுந் தரிசனைசெய்து வந்தித்த புண்ணியவான்களுக்கு உண்டாகிவரும பலன்களை நம்மாற் சொல்லப்போகாதென்று சொன்னார் சூதமுனிவர்.

ஆதிவர்ணத்தரல்லான் மூவருமாதியார்க்கே
யீதுசெய்தயனார்தீர்த்தத் திப்பரிசியற்றிவித்தாற்
பூதனங்கன்னிசொனனம் புண்ணியகோதானத்தின்
மீதுறும்பலன்கள்சேர்வார் வெந்துயரொழிந்துவாழ்வார்.

(இ-ள்.) ஆதிவருணத்தாரல்லாமல் மற்ற மூன்றுவருணத்தாரும் வந்து நாகிசரருக்கு சோடச வுபசாரமாகப் பூஜைசெய்து வணங்கிவாழ்த்தி அந்தப் பிரமதீர்த்தத்தில் முன்சொன்னவண்ணந் தானதருமமுதலாகிய விதிகளைச் செய்வித்தார்களேயானாற் பூமிதானங், கன்னிகாதானஞ், சொர்ன்னதானம், புண்ணிய கோதான பலன்களினு மேலானபலன்களைப்பெற்றுப் பிறவித்துயர்தீர்ந்து வாழ்வார்கள்.—எ-று.()

அயனருடீர்த்தமூழ்கி யணிகவெண்டூசுவெண்ணீ
றியலுறப்படிகங்கைக்கொண் டெண்கணன் றேவிதன்னைச்
செயலுறத்தியானித்தந்தச் செபத்துடன் றுதிப்பார்க்கெல்லாம்
புயலெனக்கவிதையாவும் புத்திமுத்திகடப்பாதால.

(இ-ள்.) பிரமாவுண்டாக்கிய பிரமதீர்த்தத்தில் யாதாமொருவர்வந்து மூழ்கிக் குளித்து வெவ்வடுகினுடுத்து வெண்ணீறுதரித்துப படிகமாலே கைக்கொண்டு எண்கண்ணன் றேவியான சரஸ்வதியம்மனைத் தியானஞ்செய்து ஜெபதபங்களுடனே துதிபபார்களெலலாம பொழிவதுபோலுங் கவிதைகள யாவும்பாட அருளுண்டாகும் பத்திமுத்திகளுந் தப்பாது.—எ-று. (கக)

பிரமதீர்த்தச்சருக்கம் முற்றும்.

ஆகச்சருக்கம், உ௫ககு, திருவிருத்தம், எ௱௫௪.

# துர்க்கை தீர்த்தச்சருக்கம்.

சொர்க்கமீயுஞ்சுருதியின் றீர்த்தமீ, தொக்கமூழ்கியுறுபயன் பெற்றபின்
றுர்க்கைதீர்த்தந்துதைந்துதன்றென்புல, வர்க்கதர்ப்பணம்பண்ணுதல்வண்
மையால்.

(இ-ள்.) சொர்க்கபதந் தரப்பட்ட சுருதி பிரமதீர்த்தத்தில் மனோகரமாக மூழ்கியுற்ற பலன் பெற்றபின்பு துர்க்கைதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து தனகளுடைய தென்புலவர்க்கமான பிதிர்க்களனைவருஞ் சந்தோஷிக்கும்படியாக அதில் தர்ப்பணஞ்செய்வது நியதிமுறைமையாம்.—எ-று. (க)

சூழிநீரிற் சுருதிகள்சொல்லினுஞ், சாலநெய்யொடும் பாலொடுந்தர்ப்பணங்,
கேடிலியேபலதானங்களீயினு, மேலும்வர்க்கத்தில் யாருங்கதிக்குளார்.

(இ-ள்.) திரிசூல பாணிச்சியாகிய துர்க்காதேவி தீர்த்தத்தில் மூழ்கி நியதிமுடித்து வேதச்சுருதிகளோதினுலு மிகவும் நெய்பாலுடன தர்ப்பணங்கள் கோலிசசெய்து பலதானங்கொடுத்தாலு மிப்பாகிய வவர்கள வர்க்கத்தாக எனைவருஞ் சிவகதிசேர்வார்கள்.—எ-று. (உ)

கனகபூஷணத்தோடொருகன்னியை, யனகதாருகைதீர்த்தத்தளித்தவர்
பனகவெற்பினர்பாங்கரிற்பாங்கரென், றுனகவாதரசூதான்றோதினர்.

(இ-ள்.) சொர்ன்னுபரணத்துடனே யொருகன்னிகையை அழகிய துர்க்கை தீர்த்தத்திற் றுனங்கொடுத்தவர்கள் நாககிரியீசுரன் பக்கத்திற் பாங்காவார்களென்று மனோபக்தியுடனே முற்காலத்திற் சூதமுனிவர் சொன்னுர்.—எ-று. (ங)

மகரவாதபன்கன்னியின்மாதமற், றிகருளைப்புண் ணியதிவசங்தனில்
நிகரிலன்னமந்நீர்க்கரைநல்கினர், பகருகின்றனகோடிபலன்களே.

(இ-ள்.) மகரசங்கிராந்திதினத்திலுங் கன்னிமாதத்தினங்களிலு மிகலோகத்தார் சொல்லப்பட்ட புண்ணிய திவசங்களிலு மொப்பிலலாத அன்னதான மயேசுரர்களுக்கு அந்தத்துர்க்கைதீர்த்தக்கரையிற் கொடுத்தவர்கள பெறும்பலன் கோடிலன்களாக வர்த்திக்குமென்றுசொல்லுஞ் சுருதிகள்.—எ-று. (ச)

கிரணகாலங் கிளரச்சுனையிலே,சரணெனச்சென்று தாழ்ந் நுறமூழ்குவார்
முரணுறும்பவந் தீர்ந்துநம்முக்கண, னரணலோகத் தடைவன்திண்ணமே.

(இ-ள்.) கிராணபுண்ணியகாலங்களிற் கெழுமிய துர்க்கை தீர்த்தச்சுனையிலே சரணஞ்சரணமென்று மடிந்துமூழ்கிக் குளித்தவர்கள் முரட்சியான பாவஙகளதீர்ந்து திரிநேத்திரனுன சிவனுடைய சிவலோகத்திற் சேர்வார்கள் நிச்சயமாக.—எ-று.

அகிலதீர்த்தத்தி லாடும்பலனெலாம்,புகலுங்காண்கினும் போற்றுங்கதியுறு
மிக்லகற்றுங் குரோசமைந்திற்குளாஞ்,சகலசீவனுஞ் சங்கரனென்னுமால்.

(இ-ள்.) இந்த பூமண்டலத்திலுள்ள தீர்த்தங்களியாவும் மூழ்கினபேர்களுக்குண்டான பலன்களெல்லாம் அந்தத்துர்க்கை தீர்த்தத்தைக் கண்குளிரக்கண்டாலும் நாவிற் றுதித்தாலும், போற்றிவணங்கினுலும், அவர்கள் முன்செய்தபாவங்கள் விமோசனமாய்ப் பரகதிசேர்வார்கள். பஞ்சக்குரோத தலத்துக்குள்ளாகிய சகல சீவனுஞ் சிவசொரூபமென்று சொல்லும் வேதாகமங்கள்.—எ-று. (கூ)

நெய்யும்பாலுந்தயிருநிறைதில, கையிற்றர்ப்பணங்காட்டிற்பலர்பலன்
செய்யுமென்னுமளவையைச்செப்பநாம், வையகத்தி லியார்க்கும்வகைவரா.

(இ-ள்.) நெய்யும், பாலும், தயிரும், எள்ளும் தங்கள் தங்கள் கைகளில் தர்ப்பணங்கள் செய்யுமவர்களுக் குண்டாகிவரும பலன்களை இவ்வளவென்று அளவிட்டுச்சொல்ல நமமாலு மிந்த வையகத்தில் யாவராலுஞ்சொல்லக்கூடாது.—எ-று. (எ)

ஏறுமாவுமருணமயுங் கன்றுமவ், வாறுநீர்த்தத் தளித்தவர்க்கர்ம்பலன்
கோறிலிதநனை யென்றேகுறிக்கொள, மாறிலாப்பிதிர் வாழ்வதுசொர்க்கமே.

(இ-ள்) இடபக்காளையும், பசுவுங் கன்றுகளும், எருமைகளும் தானங்கொடுத்தவர்களுக் குண்டாகும்பலன்கள் இவ்வளவென்று குறித்துச்சொல்லக்கூடாது. மாறுபாடில்லாம லவர்கள் பிதிர்க்களனைவருஞ் சொர்க்கபதத்திற் சேர்வார்கள்.—எ-று.

காளிவண்சுனை யாடியகாளைய, ராளிரும்பரி யாகப்பலனுடன்
கோளிகோதம தீர்த்தமுங்கங்கையும், நாளுமாடிய நன்பலனுமால்.

(இ-ள்.) அழகிய காளிதீர்த்தத்திலுந் துர்க்கைதீர்த்தத்திலுந் தானம்பண்ணின காளைப்பருவத்துப் புருஷர்கள் அனைவரும் அஸ்வமேதயாகஞ்செய்த பலன்களுமுண்டாய் மற்றும் யமுனாதீர்த்தமுங் கௌதமதீர்த்தமுங் கங்காதீர்த்தமும் நாளுநாளு மாடினவர்கள் பலன்களுமுண்டாகி சிவகதியெல்லை நாடிவாழ்வார்கள்.—எ-று. (கூ)

பிண்டதானம் பிதிர்க்கிடுதானமாய்க், கொண்டுதுர்க்கைச் சுனையிற்கொடுத்தவர், அண்டர்நான்முக னச்சுதனைம்முகன், மண்டுலோக மதித்தனகிட்டுமால.

(இ-ள்.) அந்தத் துர்க்கைதீர்த்தத்தில் யாதாமொருவர்வந்து தீர்த்தமாடி சுனைக்கரையில தங்கள் தங்கள் பிதிரர்களைக்குறித்து பிண்டப்பிரதானமுதலாகிய தானங்களுங் கொடுத்தவர்கள் தேவர்பதம், பிரமபதம், விஷ்ணுபதஞ், சிவபதமுதலாகிய தங்களில் மனோபீஷ்டமான பதங்கள கிடைத்துவாழ்வார்கள்.—எ-று. (க0)

கன்னிமாரெழு பேர்கன்னிவண்சுனை, தன்னிலாடிவித் துன்னுடைதான்கொடுத், தன்னநல்கி யவரெழுசத்தியென, நின்னியற்பெறு வார்பலனெண்ணிலா.

(இ-ள்.) அந்தத் துர்க்கைதீர்த்தத்தில் ஏழுபேர் கன்னிப்பெண்களை ஸ்நானஞ்செய்வித்து உசிதமான துகிலாடைகள்கொடுத்து யிஷடமாக அன்னம்படைத்து அவர்களை யேழுசத்திமார்களென்றெண்ணித் துதிசெய்தபேர்கள இயல்பாகப் பெற்றுக்கொள்ளுமபலன்கள் அளவில்லை.—எ-று. (கக)

மாதலங்களின் மாற்றப்படாதவைம், பாதகங்கள் பயிரவிதீர்த்தமுட்
காதலிற்கொண்டு கண்ணுதலைந்தெழுத், தோதவொக்கு முதயத்திமங்களே.

(இ-ள்.) மகா ஸ்தலங்களில் வாசஞ்செய்து தீராத பஞ்சமா பாதகங்களையாவுந் திருநாகிரி ஸ்தலத்தில்வந்து துர்க்கைதீர்த்தத்தில அன்புடனேமூழ்கி யுட்கொண்டு சிவனுடைய பஞ்சாக்ஷரங்களை யோதிசெபிக்கில் அந்தபபாவங்களெல்லாஞ் சூரியோதயங்கண்ட பனிநீங்குவதுபோல் நிவாரணமாகிப் புனிதராய்வாழ்வார்கள். ()

நீலமேனியு நேமியுங்கட்கமுஞ், சூலமுங்கண்டமுங்கரத்தோலுஞ்செங், கோலதுாசுங்கண் மூன்றுங்கொண்டாளையுட், சாலவச்சுனை தோயிற்சயங்களாம்.

(இ-ள்) நீலநிறமான திருமேனியுஞ், சங்கமுஞ், சக்கரமும், கட்காயுதந் திரிசூல

முர், தண்டயுதமுங் கைகளிற் பிடித்தவளாகவும், அழகியசெம்பட் டுடையுந் திருநேத்திரமும்முடையவளாகவும் மனதிற்பாவித்துத் துர்க்காதேவியை ரூபத்தியானஞ்செய்துமிருந்தவன்புடனே யந்தத் தீர்த்தமாடிய பேர்களுக்குத்தொடுத்த காரியங்களெல்லாஞ் செயமாகும்.—எ–று. (கங)

துர்க்கைதீர்த்தந் துனியதைத்தோய்ந்தவர், பொற்கதிர்பதம் போற்றிப் புகழ்ந்தவே, லற்புமுன் றொழு தன்னைதன் மந்திரங், கற்கவோடுங் கனவினைத்துன்பமே.

(இ-ள்.) துர்க்கை தீர்த்தத்தி லன்புடனே மூழ்கிச் சூரிய நமஸ்காரஞ் செய்து போற்றிப் புகழ்ந்து வேலவர் திருமுன் சென்று கைதொழுது வணங்கிப் பராசத்தி மந்திரங்கற்று செபித்தவர்கள் ஜன்மவினைத் துன்பங்களெல்லாம் நிவாரணமாகிப் புனிதராவார்கள்.—எ–று. (கச)

மயிடனைப்பொரு மாதவடீர்த்தநீர், மயிடனைப்பொரு பரனன்புள்வைக்குமம், மயிடனைப்பொரு வற்றவன்றன்னையம், மயிடனைப்பொரு வங்கம் வழங்குமால்.

(இ-ள்.) மயிடாசுரனைச் சங்கரித்த மாதாவாகிய துர்க்கை தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து அன்புடனே மூழ்கி உமையொருபாகரைத் தரிசித்து வணங்கினவர்கள் யமனுக் கியமனுமாவலுமையுடைத்தாய் தேஜசுடைய திவ்வியதேகம் பெற்று வாழ்வார்கள்.—எ–று. (கரு)

கண்டபோதிற் கனவினைநீருங்கைக, கொண்டபோதினிற் கொற்றவைகொற்றமா, முண்டபோதி லுயர்கலைஞானமேற், கொண்டுமூழ்கக் கொடுப்பனமுத்தியே.

(இ-ள்.) அந்தத் துர்க்கை தீர்த்தத்தைக் கண்ணாற் கண்டபோது தீராதபாவங்களுந்தீரும், தீர்த்தத்தைக் கைக்கொண்டபோது துர்க்கையினுடைய வலுமையுஞ் சவுரியமுமுண்டாகும், உட்கொண்டபோது உயர்ந்த கலைஞானமான சித்திகளெல்லாம் பலிதமாகும், சிரசின்மேல புரோட்சித்துக்கொண்டு மூழ்கினால் முத்திமோக்ஷங் கொடுக்கும்.—எ–று. (கசு)

முனிவர்பாத ரெழுவருமுக்கணுள், பனிகடீர்த்தம் படிந்தவளைப்பணிந் துனியுறும்பிறப் போடப்பணிமலைக், கனியையென்றுங் கனிந்தடிபோற்றுவார்.

(இ-ள்.) சத்தவிருடிகள் பத்தினிகளேழுபேருந் திரிலோசினையான துர்க்கையினுடைய குளிர்ந்தசுனையில் தீர்த்தமாடி அவளைப்பணிந்து போற்றிசெய்து துன்ப நீங்கும்படியாக பணிமலைக்கனியாகிய பரமேசுவரனை நாளுநாளும் பக்தியுடனே அடிவணங்கிப் போற்றிசெய்வார்கள்.—எ–று. (கஎ)

வேறு.

அருணைவெற்பினி லடர்மயிடாசுர னடவதைத்தருடீர்த்துத்
திருணகைப்பெறும் வாள்கழீஇயெம்பிரா னிவணென வினிதேகிப்
பொருணமற்புடன் பூங்கொடிபாங்கனைச் சுயம்புவைப்புகழ்ந் தேத்தி
மருணவைத்துய ரர்ப்பணிமலையினில் விதித்தவம்மலர்த் தீர்த்தம்.

(இ-ள்.) முற்காலத்தில் துர்க்காதேவியானவள் அருணகிரி தலத்தில்வந்து தன் பெயரால் விளங்கிய சிவ தர்க்கைதீர்த்தத்தில் மகிடாசுரனைச சங்கரித்த சூரியமுனைவாள்களைக்கழுவி அருணகிரி யீசுரரைத்துதித்து திருநாககிரி தலத்தில்வந்து

அர்த்தநாரீசுரரான சுயம்புமூர்த்தியைச் தரிசித்துவணங்கித் துதித்துத் தன்னைப்பற்றிய கன்மவினையாவுந் தீர்ந்துபுனிதமாகிவிளங்கி அங்ஙனந் தன்பெயரால் ஒருதிவ்விய தீர்த்தம் விதித்தருளினன்.—எ-று. (கஅ)

துர்க்கைதீர்த்தமுங் கங்கையும் யமுனையுஞ் சுரந்தகாவிரிநீரு
மொக்குமென்றுமா தவர்தினந்தினம்படிந் துறுதவமொழியாரால்
நக்கர்கந்தருற் பவித்தசெங்கோட்டிலிந் நலத்தினை யெவர்கேட்பா
ரக்கணத்திலவ் வருவினையொழிந்துபி னரன்பதம் பெறுவாரே.

(இ-ள்.) அப்படிவிளங்கிய துர்க்கை தீர்த்தமுங் கங்காதீர்த்தமும் யமுனாதீர்த்தமும் பெருக்கமாகிய காவேரிநீருஞ் சரிசமானமாக வொக்குமென்று மகாசிவமுனிவர்கள்வந்து நாடோறும் அந்தத்தீர்த்தத்திலமுழ்கி யங்ஙனம் வழுவாமல் அரியதவஞ் செய்யாநின்றார் பரமேசுரனுங் கந்தசுவாமியு முதித்தெழுந்தருளிய திருச்செங்கோட்டி லிந்தநலமாகிய மான்மியங்களை யாவரொருவர்கள் காதுகுளிரக் கேட்பார்களாகில் ஒருநொடிப்பொழுதி லரிய வினைகளெல்லாந்தீர்ந்து புனிதராய்ப் பின்பு சிவனுடைய பாதங்களிற் சேர்ந்து வாழ்வார்கள்.—எ-று.

துர்க்கை தீர்த்தச்சருக்கம் முற்றும்.

ஆகச்சருக்கம், உ௲-க்கு திருவிருத்தம், ௬௱௭௩.

## நாகதீர்த்தச் சருக்கம்.

நாகமாம்லைநமதுகாரணத்தி னுனிலத்துள்தென்றே
நாகநாதனுமாங்குளனுதலால் நம்மரனெனச்சேட
னேகமாமிருவனாயுமாதரித்தவ நீன்றகந்தனையேத்தி
யோகைபெற்றொரு பொய்கைதன்பெயரினு லுதவினன்பலகூற.

(இ-ள்.) நாகமலையானது நமது காரணத்தினால் நாவலந்தீவி லுசிதமாகவிளங்கியிருக்குதென்று கலியுகாதியில் நாகராஜனும் அங்ஙனம்வந்து வசித்திருக்கிறன் ஆகையால் நமதிறைவனென்று சிவனு முமையுங் கலந்திருக்கும் யேகரூபமாகிய அர்த்தநாரீசுரரையும் அவர்பெற்றருளிய கந்தசுவாமியையும் அன்புடனே பூசித்து மகிழ்ச்சியாய்த் தன்பெயரால் விளங்க வொருதிவ்விய தீர்த்தம் விதித்தருளினன் அநேகபலன்களுமுண்டாக அன்றுமுதல் நாகதீர்த்தமென்று விளங்கிறது.—எ-று. (க)

ஏரகக்கிரிநாகதீர்த்தந்தனை யிருவிழிதனிற்கண்டா
ருரியாயிரமாயிரம்பசுப்பதி னாயிரநகவேழும்
பாரிலீந்துளபலனுளவச்சுனை பயம்பரிசித்தார்க்குச்
சேரும்வானவர்சேரிடமாறிடச் சிந்தையர்களிகூர.

(இ-ள்.) திருவேரகமாகிய நாககிரி நாகதீர்த்தத்தில் யாதாமொருவர்வந்து தங்களிரண்டு கண்களிற் கண்டார்களானல் அவர்களுக்கு ஆயிரமாயிரங்கன்னிகாதானமும் பதினாயிரங்கோதானமும் ஆயிரங்கெஜதானமும் அங்ஙனங்கொடுத்த பலன்களுண்டாகி வர்த்திக்கும். அந்தச் சுனைதீர்த்தம் பரிசித்தபேர்களுக்குத் தேவலோக போகமான சொர்க்கபதங்கிடைக்கும் இருடிகள் மனது களிகூரும்படியாக.-எ-று.

துர்க்கைதீர்த்தமதாடியபின்னரச் சுடர்மணிப்படனுகப்
பொற்சுனைத்தடம் புகுவதுசெறியதிற் பூவையோர் புரந்தானை

யுற்றுமூழ்கினன் பிண்டமிட்டொருபசு வுதவிலப் பசுவாலைப்
பற்றியங்கவன் பிதிர்நரகின் கரை யேறுவர் பதஞ்சேர்வார்.

(இ-ள்.) துர்க்கைதீர்த்தத்திற் றீர்த்தமாடினபின்பு சுடர்விரிக்கின்ற மணிபொருந்திய படமழகிய நாகராசனசெய்த சொர்ண்னநிறமான நாகதீர்த்தத்திற் சென்றுபடிந்து அர்த்தநாரீசுரனை நினைத்துத்துதித்து ஸ்நானஞ்செய்து நியதிமுடித்து நன்கமையாகப்பிண்டப்பிரதானமிட்டு அங்ஙனம ஒருபசுதானங் கொடுசெதார்களாகில் அந்தப் பசுவாலைப்பற்றி ஆங்கவர்களுடைய பிதிர்ககள் நரகின் கரையேறுபவர்கள் நலலபதங்களிற் சேருவீார்கள்.—எ-று. (ங)

அத்தடந்தனில் மூழ்கினுற்கூபமும் வாவியுமலர்க்காவுஞ்
சுத்ததாகநன்னீரு மாலயத்திருச் சுற்றுங் கோபுரம்யாவு
நித்தனுலயமுங் கண்ணனுலைய நிலைகளும்புவிமீது
வைத்தபுண்ணியம் பெறுமெனச்சூதரம் மறையவர்க்குரைசெய்தார்.

(இ-ள்.) அந்த நாகதீர்த்ததகில் இயாதாமொருவர்வந்து மூழ்கினல் தருமக்கிணறுகளும், வாவிகளும், புட்பகாவனங்களுந் தாகசாநதமாகச் சுததமான தண்ணீர்ப் பந்தல்களுங் கோயில் திருமதில்களுங் கோபுரஙகளனைத்துஞ சிவாலயங்களும், விஷ்ணுவாலயங்களும், நிலைக்கும்படியாக இந்தப் பூமண்டலத்திற் செய்துவைததவர்கள் பெறும்புண்ணியம் பெறுவார்களென்று சூதமுனிவர் மறைமுனிவர்களுக்குச் சொன்னுர்.—எ-று. (ச)

நாகவண்சுனைசூழ யீந்துட்ன்றரு நாகுகோங்கொடுபூங்காப்
பூகமென்பனவைத்தவனுய்த்தவன் புண்ணியன்சிவலோகத்
தேகும்அப்புனல்மூழ்குவான்கங்கையீ தென் றுமூழ்குதல்வேண்டும்
பாகுபெற்றசொற்பரவுநன் கலைகளும் பலித்தரன்பதஞ்சேர்வார்.

(இ-ள்.) வள்ளியநாக தீர்த்தச் சுனையைச்சூழ வீந்து மரங்களுஞ் சந்தனத் தருக்களுந் தென்னைமரங்களுங் கமுகுமரங்களும் பூங்காவனஙகளும் வைத்துப் பயிர்செய்துவளர்ச்சியாகப் பரிபாலனஞ் செய்த புண்ணியவான்கள் சிவலோகபதஞ் சேர்வார்கள் அந்தத்தீர்த்தத்தில் வந்து மூழ்கும்போது இது கங்காநதியென்று மூழ்கவேண்டும் நல்லபால்போலுஞ் சுவையுடைத்தாகிய வினிய சொற்களாற் பரவினகலைகளனைத்துஞ் சித்தித்துச் சிவன்பாதஞ் சோவாாகள.—எ-று. (ரு)

ஆலகாலமுண்டௌ விடம்ருந்தினு மாடராக்கடித்தாலுங்
கோலமுற்றெழுகுஷ்டரோகம்பல கொள்ளினுஞ்சுரபேத
மேலெழுந்துயர்வெந்துயர்படரினும் வேணிகங்கையைப்போற்றிச்
சூலபாணியைநினைத்ததிற்றோயவுந் துய்ப்பவுந்துயர்போமால்.

(இ-ள்.) ஆலகாலவிஷத்துக்குச் சமானமான கொடியவிஷங்களைப் புசித்தாலுங் கடியபாம்பு கடித்தாலும் அழகு குலைய குஷடரோகங்கள், பேதாபேதமாகிய குளிர்சுரங்கள்மேலிட்டுத் துயர்கொணடாலும், மேகரோகங்களுஞ் சிவன்சடையிலுறையுங் கங்கையைநினைத்துப் போற்றிசெய்து சூலபாணியாகிய சிவனைநினைத்து அந்த நாகதீர்த்தத்திற் குளித்தாலும், பருகினுலும, முன்சொல்லிய துயர் நோய்களெல்லாந் தீர்ந்துபோம்.—எ-று. (சு)

அங்கிதச்சுனையரா மலைவருநதி யாதிகேசவனுன
சங்குசக்கரனனந்தபொற்சயனன்பாற் சமுத்திரமெனலாரு
மிங்கிதிற்பயனனந்தபல்பயன்களை யினிதருளியபாங்காற்
கங்கையிப்புனலென்பதேயன்றியாங் கருதுவதிலைமாதோ.

(இ-ள்.) அழகிய நாகதீர்த்தச்சுனை நாககிரியி லுதித்து விளங்கியது. சங்குசக்கரந்தரித்த கைகளுடைய ஆதிகேசவனென விஷ்ணுமூர்த்தி அனந்தசயனன் செயயாநின்ற திருப்பாற்கடலென்றுஞ் சொல்லப்படும். அங்ஙனம் அதினாலாகிய அனந்தங்கோடி திவ்வியபலன்களை யாவருக்கு மினிமையாகக் கொடுத்தருளும் பகுதியினாலே அத்தீர்த்தத்தைத் தெய்வகங்காநதி தீர்த்தமிதுவென்று சொல்வதேயன்றி மற்றொன்றும் நாங்கருதிச் சொல்வதில்லையென்றுசொன்னார் சூதமுனிவர்.—எ-று.

நாகதீர்த்தமென்றொருபெயரதுவிட நாகநாதனைப்போற்றுஞ்
சேகறுக்கணபணுடவியாயிரச் சேடதீர்த்தமுமாகும்
பாகறுதவனபலன்பலகோடியாம் பாத்திரபதிவிட்டால்
மாகதீர்த்தமச்சுனைப்புனலாடியம் மாநிலந்தனையாள்வார்.

(இ-ள்.) அப்படி மகிமையான தீர்த்தத்துக்கு நாகதீர்த்தமென்றொருபெயர் அதுவல்லாமலும் நாகநாதனுகிய பரமேசுரனைப்பூசைசெய்து போற்றியவிடமருந்த கணபணுடவிகளை யுடைத்தா யழகிய ஆயிரமுடிகளையுடைய ஆதிசேஷனென்னும் பெயரால் அங்ஙனம் சேஷதீர்த்தமென்று மொருபெயருண்டாகி விளங்கும் பகுதியுடைத்தா யளவில்லாத அதன்பலன்கள் ஒன்று பலகோடியாய் வர்த்திக்கும். அரசர்கள், கிராமம், பூமிதானங்களும், வேதியர்களுக்குக்கொடுத்து மாமகதீர்த்த நிகரான அந்தச்சுனையிற் றீர்த்தமாடினாகளாகில இந்த மாநிலமுழுதும் ஒரு குடைக்குள் ளடக்கி யாள்வார்கள்.—எ-று. (௯)

சேடதீர்த்தநீர்முதலுகத்தாடினர் தேகம்பொன்னிறமாகு
நாடிநின்றிரண்டாமுகத்தாடுவார் நடுக்குறுகிழநீரும்
பாடல்வேண்டிமூன்றாமுகத்தாடுவார் படிந்தமூகைநயமாற்றும்
நீடுநாலுகத்தோர்மதியாடுவார் நிலைத்தனநிலையாக்கும்.

(இ-ள்.) அந்தச் சேடதீர்த்தத்தில யாதாமொருவர்வந்து முதல்யுகத்தில் மூழ்கினார்களாகில் அவர்கள் தேகம் பொன்னிறமாகவிளங்கும். இஷ்டமாக நாடிநின்று இரண்டாவது யுகத்தில் ஸ்நானஞ் செய்தாகளாகில் நடுக்கமுடைய வார்த்திகந்தீரும், இளமையுடையவர்கள் பேசும்படியாகவேண்டி மூன்றாவதுயுகத்தில் குளித்தார்களாகில வாய்பேசாத ஊமையென்பது சீர்ந்து வசனிப்பார்கள். நெடிதாகிய நாலாவதுயுகத்தில் ஒருமாதமுழுதுமுழுகினால அவாகள நினைத்தகாரியங் கைக்கூடி வாழுவார்கள்.—எ-று. (௬௰)

விண்டுவின்பதம் வேணுமென்றுடிலவ் விண்டுவின்பதங்கூட்டுந்
துண்டவெண்பிறை சூடிதாழ்வேண்டிலச் சோதிபொற்பதம்பூட்டு
மண்டர்நாயகன் பதம்புனலருந்திலோ ரஞ்சிறிதளித்தார்க்குக்
கொண்டல்வண்சுனைதரும்பலன் பலபலகூறுதற்கரிதாமால்.

(இ-ள்.) பின்னையுமந்தத் தீர்த்தத்தில யாதாமொருவர்வந்து விஷ்ணுபதம் பெறவேண்டுமென்று தீர்த்தமாடினல் விஷ்ணுபதம் பெறுவார்கள். துண்டமாகிய வெள்ளைப்பிறைசூடிய சடையையுடைய சிவபதம் பெறவேண்டுமென்று மூழ்கினவர்கள் சோதிப்பிரகாசமாகிய சிவபதஞ்சேர்வார்கள்; அந்தத் தீர்த்த சலத்தை யுட்கொண்டு சில தருமங்கள் கொடுத்தால் அவர்கள தேவேந்திரபதம் பெறுவார்கள். ஆகையால் மேகமொய்த்த திருநாககிரித்தலத்தில் நாகதீர்த்தந்தரும் அனேகபலன்களை யளவிட்டுச்சொல்லுதற் கரிதென்று சொன்னார் சூதமுனிவர்—எ-று. (௬௰)

நாகதீர்த்தச்சருக்கம் முற்றும்.

ஆகச்சருக்கம் - உ௯-க்கு, திருவிருத்தம் - ௭௱அ௰உ.

---

# சிவ தீர்த்தச் சருக்கம்.

ஈதாநிற்கநம்மிறையவன்றிருப்பெய ரிடுந்திருச்சிவதீர்த்த
மோதுவன்றவத்தன்மனென் றொருமுனிக் குதவியததுகேண்மோ
பூதலந்தனிற்றீர்த்தமெல்லாமவண் புகுதவும்பெறுமூத்தோ
ராதிதேவர்வந்தாடவுநாடவு மமைத்தநாரியைபாகன.

(இ-ள்.) நாகதீர்த்தத்தின் மகிமை யிப்படிநிற்க நம்மிறைவனாகிய சிவன்றிருப்பெயரிட்டு விளங்கியழகிய சிவதீர்த்தமகிமையைச் சொல்லுகிறோம் அரியதவமுடைய தருமமுனிவனென் றொருமுனீஸ்வரனுக்கு உதவிசெய்தருளியது அதின்பெருமையை முனிவர்களே கேண்மின்கள் இந்தப்பூமண்டலத்திலுள்ள தீர்த்தங்களெல்லா மந்தச் சிவதீர்த்தத்தில்வந்து புகுந்து மூழ்கப்பெறும் மூத்தாயினோர் முதலாகிய தேவர்கள்வந்து தீர்த்தமாடும்படி யமைத்துவைத்தார் அர்த்தநாரீசுரசுவாமி.—எ-று.

தன்மமோர்முனியாய்க்கரையிருந்துமெய்த் தவம்புரிந்தான்பூசை
நன்மகம்பலசெய்தான்வரந்தர நயந்தஐம்முகன்றாட்கீட்
பொன்மயத்துடனிருப்பதின்னமுமெனும் புராணநூலெனக்கூறச்
சொன்மறைச்சவுனகர்முதற்றுறவினர் சொற்றுகவெனக்கேட்பார்.

(இ-ள்.) தருமமேயொரு தவமுனிவனா யவதரித்துச் சிவதீர்த்தக்கரையிலிருந்து மெய்யாகிய தவசுஞ் சிவபூசையுஞ் செய்து நன்மைக்கேதுவாகிய பலவகை யாகங்களுஞ் செய்தார்; அங்ஙனஞ் சிவன்வரப்பிரசாதந் தப்பொழு மனோகரத்துடனே நயப்புற்று ஐந்துமுகமுடைய சிவனடிக்கீழ் பொன்மயத்துடனே நாளுமிருப்பபொன்று புராணநூல்கள் சொல்லுமெனச் சூதமுனிவர் சொல்ல, சொல்லுதற்கரியவேதியரான சவுனகாதிமுனிவர்கள் சொல்லுமய்யா சூதமுனிவரே யென்று கேட்கிறார்கள்.—எ-று. (௬)

சிவபுனற்றடந்தீர்த்தமீதாடிய தெய்வ தன்மனென்சோதி
நவபதத்துணையர்ச்சனைபண்ணியே நாளுநன்றவங்கூறப்
புவனமீதினிலயாதுவேண்டினைமுனி புகலெனவினவபாநம்
கவலையற்றியான்காண்பதேபேறெனக் கனிந்துபின்னருஞ்சொல்வான்.

(இ-ள்.) பெருமையுடைய சிவதீர்த்தத்தில் தெய்வவடிவான தன்மமுனிவன் தீர்த்தமாடி நியமத்துடனே புதுமைபொருந்திய சோதியாகிய சிவனிரண்டு பாதமலர்களைப் பூஜைசெய் தர்ச்சித்து நாளுநாளும் நன்மையாக நல்லதவஞ்செய்திருந்தாரப்போது சிவனெழுந்தருளி வந்து காட்சிகொடுத்து வாராய் தன்மமுனிவனே! யுனக்கிந்தப்புவன சக்கரத்தில் யாதுவேண்டித் தவஞ்செய்தாய் அதைச்சொல்லுவாயாவென்றுவினவ முனிவன் சொல்லுகிறான் சுவாமி மனக்கவலையில்லாமல நான்உம்முடைய பாதாரவிந்தத் தரிசனங் காண்பதுவே நல்லபேறெனக்கென்று சொல்ல மனங்கனிந்து பின்னையுஞ் சொல்லுகிறான் அந்தமுனீஸ்வரன்—எ-று. (௭)

விமலனின்னையேவெரின்புறந்தாங்கவும் வெரிநபுறந்தனிருயகி
லமலவல்லிசேடேச்சனைப்போலவு மருள்கெனவருள்கூர்ந்தா
ரொழுலமாற்றியவிச்சிவதீர்த்தமிவ் விகத்திலென்பெயராகக்
கமலநாயகவுனைப்பரவினரெனக் கைதொழுகவும்வேண்டும்.

(இ-ள்.) விமலமூர்த்தியே உம்மை என்முதுகின் புறத்திற சுமந்திருக்கவும் அப்படியென்முதுகின் புறத்திற் றரியேசுமப்பதற்கு நிர்மலஞான மகாலக்ஷ்மியுடைய

ஆதிசேஷனைப்போ லெனக்கு அதிகபலன் கொடுத்தருளுமென்றுவேண்ட அப்படியே கிருபைகூர்ந்தருளினார் எனது மலமகற்றிய விந்தச்சிவதீர்த்தம் இகலோகத்தி லென்பெயராக விளங்கும்படி யுமையொருபாகரே கிருபைசெய்தருளும் உம்மைத்தொழுதவர்கள் யென்னையுங் கை தொழுவதாகவுங் கிருபைசெய்தருள வேண்டுமென்று சொன்னான் அந்தமுனீஸ்வரன்.—எ-று. (ச)

என்றிரந்தவர்க்கிவ்வரங்கொடுத்தவ னென்றும்வெள்விடையாகக்
கொன்றைசூடியஃதருளினனாகையாற் குளிர்ச்சுனைசிவதீர்த்த
மன்றுதொட்டதுதன்மதீர்த்தப்பெய ராயினவதிற்றோய்ந்து
மன்றலர்த்தநாரீசனைப்பணிநதவர் வடிவமீசனைப்போல்வார்.

(இ-ள்.) என்றிப்படி யாகத் தன்மமுனிவனானவன் இரந்து கேட்டபடியே இவ்வரங்கள் கொடுத்து அநவனவறைகரும் வெள்ளைவிடையாக வடிவுகொண்டு தம்மைத்தாங்குவதாகக் கொன்றைமாலைசூடிய பரமேஸ்வரன் கிருபைசெய்தருளினார். ஆகையால் குளிர்ச்சியுடைய சிவதீர்த்தச்சுனை யன்றுமுதல் தன்மதீர்த்தமென்னும் பெயருண்டாய்ச்சு அதலயாதொருவர்வந்து ஸ்நானஞ்செய்து மணமபொருந்திய அர்த்தநாரீசுரரைத் தோத்திரஞ்செய்து பணிந்தார்களாகில் அவர்கள் யீசுரனைப்போல வடிவமெய்துவார்கள்.—எ-று. (ரு)

தன்மனும்வாவியிற்புனல்மூழ்கினார் தன்மமொனறொருகோடி
நன்மைபெற்றிடுமதுவொருமலையென நவில்வர்நனிதோய்ந்தோர்
துன்மனத்தினிற்சோரனாய்வேறொரு துணிவினிற்புகுந்தாலு
மன்னுதண்சிவதீர்த்தமுன்வெளிப்படில வைகுவன்சிவலோகம்.

(இ-ள்.) தன்மதீர்த்தமென்னும் பெயராய்விளங்கிய அந்தச்சுனைப் புனலின் மூழ்கினவர்கள் செய்த தன்மங்கள ஒன்றொரு கோடிதன்மமாக நன்மைபெற்று விளங்கிய தொருமலையென்று சொல்லுவார்கள மிகவும் தோய்ந்தவர்கள் துற்புத்தியான மனத்தோடுஞ் சோரனாகி வேறொரு துணிவுகொண்டு புகுந்தாலு மன்னுதற்கரிய குளிர்ந்த சிவதீர்த்தம் அவர்கள் கண்முன் வெளிப்பட்டுக் கண்டார்களாகில் சிவசாலோகபதவியைப்பெற் றமேபனம் வைகிவாழ்வார்கள.—எ-று. (சு)

இறையவன்றருமிச்சுனைக்கொருபெய ரிடபதீர்த்தமுமாகும்
மறையவன்சதுர்மறைவளர்ந்திடத்தினம் வந்துமூழ்கிடவேண்டு
முறைபயம்பொழிசுரபியொன் றக்கரை யுதவினொலொருகோடி
நிறைசெழுங்கபிலைகளாலய நிறைத்தனபலன்போலும்.

(இ-ள்.) இறையவன் றந்தருளிய அந்தச் சிவதீர்த்தச் சுனைக்குப பின்னையுமொருபெயா இடபதீர்த்தமென்றுஞ் சொல்லலாகும் மறையவனான பிரமதேவன் நாலுவேதமும் வாததிக்கும்படியாகத் தினமவந்து அந்தச்சுனையின் மூழகுவன் பால்மிகவும பொழியும் பசுவொன்று அந்தச்சுனைக்கரையிற் றானங்கொடுத்தால் நிறைந்த செழுமையுடைய ஒருகோடிகபிலைபபசுக்கள் சிவாலயங்களில் நிறைத்துவைத்த பலன்களாக வாததிகரும்.—எ-று. (எ)

அந்தவந்தவண்புனற்சுனைமூழ்கியா னருளுமைந்தபிஷேகஞ்
சந்தனங்கள்கற்புரங்களோடாமலை சம்புவாமுமைபாகத்
தெந்தையுந்திறன்முருகருமினியகே சவருமின்புறவாட்டில்
மூந்தவங்கவர்பெறும்பலனுலக மூன்றினுமொழிந்தடங்காதால்.

(இ-ள்.) அழகிய வந்த வளமைபொருந்திய புனல்நிறைந்த தீர்த்தச் சுனையில்

யாதாமொருவர்வந்து மூழ்கி மனமகிழ்ச்சியாகப் பசுக்கள் கொடுக்கின்ற பால்முதல் ஐந்துவகையுஞ் சிவன்றிருமேனிகுளிர அபிஷேகஞ் செய்து கர்ப்பூரம்விரவிய திவ்விய சந்தனக் குழம்புகளால் நாககிரி நாதீசருக்கும், எந்தையாகிய அர்த்தநாரீசருக்கு ந, திறலுடைய முருகருக்கும், இனிதாகிய ஆதகேசவருக்கும் இன்பமுறும்படியாக அபிஷேகஞ் செய்தார்களாகில் முந்தி யங்ஙன மவர்கள் பெறும்பலன்களை இவ்வளவென்று திரிலோகத்தார்களாலுஞ் சொலவிமுடியாது.—எ-று. (அ)

தன்மதேவதைத் தவஞ்செயுஞ்சுனையருட் சங்கரன்சுனைதோய்ந்தார்
பொன்னிறந்தருஞ்சுனையதுபொற்சுனை பொற்சரோருகதீர்த்தங்
தன்மவல்வினையனைத்தைப்புங் கழுவினன் கதிதருங்கனதீர்த்த
நன்மையோருருவாகியதீர்த்த நன்கனவிடைச்சிவதீர்த்தம்.

(இ-ள்.) தருமதேவதை தவஞ்செய்யுஞ் சுனையாகி யருள்மிகுந்த சிவதீர்த்தச் சுனைநீர் தோய்ந்தவர்கள் பொன்னிறமாவர்கள், அந்தச்சுனை பொற்றாமரைத தீர்த்தமென்றுஞ் சொலலப்படும், பூருவ கர்மமான வினைகளனைத்துந் தீர்ந்து நல்லசிவகதி கொடுக்கும் நன்மையாகிய தன்மமே யொருவடிவாகிய தீர்த்தமென்மையாகிய வெள்ளைவிடைச் சிவதீர்த்தம் மிகவும் மகிமையாய விளங்கிற்று.—எ-று. (கூ)

பலபலன்றரப்பகர்ந்ததீர்த்தங்களைப் படிந்தவர்படித்தோதும்
கலனுறத்தினங்கேட்பவர்சிவபுரி நாடுவரென்றும்வேதங்
கலைதெரிந்துணர்சூதரன்றோதினர் காசிகாண்டமுங்காந்த
நிலைதரித்திடுபுராணநூலோதிய நிலைமையென்றுலகத்தே.

(இ-ள்.) அநேக பலன்களைத் தருவதாகச்சொன்ன தீர்த்த மான்மியங்களைப் படித்தவர்கள் படித்ததன பொருள்விளங்கச் சொல்லுமவர்கள் சுகமாகத் தினமுங் கேட்பவர்களனைவருஞ் சிவலோகஞ் சேர்வார்களென்று வேதாகமங்கள் சொல்லும் பின்னையுங் காசிகாண்டமும் நிலைமையுடைததாகிய காந்தபுராண நூல்களு மோதின பலன்கள் உலகததில்யாவர்க்கும நிலைமையாக வுண்டாகுமென்று சகல கலையுந் தெரிந்துணர்ந்து சூதமுனிவர் சொன்னார்.—எ-று. (௧0)

சிவதீர்த்தச் சருக்கம்முற்றும்.

ஆகச்சருக்கம், உ௮-க்கு, திருவிருத்தம், எ௱கூஉ.

# குமார தீர்த்தச்சருக்கம்.

சிவதீர்த்தம்புக் காடிப்பின்கும ரன்றீர்த்தந்தோய்ந்து
தவநீர்மையிலக் கரையானதிற்சடாக் கரமுந்தனியோதிப்
பவநீடிகல்விட மாதொருபங்கன் பஞ்சக்கரமோதிப்
புவனேசுரிமந் திரமொடுபோற்றப் புத்தியுமுத்தியுமாம்.

(இ-ள்.) சிவதீர்த்தத்திற் றீர்த்தமாடினபின்பு குமார தீர்த்தத்தில் மூழ்கி நேமநிஷ்டைமுடித்து அந்தத் தீர்த்தக்கரையிற் சடாக்ஷரத்தை உச்சரித்துப் பாவ விநாசமாகத்தக்கதாக உமையொரு பாகன் பஞ்சாக்ஷரத்தையு முச்சரித்துப் புவனேஸ்வரிமந்திரத்தோடு செபித்துத் துதிசெய்தவர்க்குப் புத்தியுமுத்தியு முடனே சித்திக்கும்.—எ-று. (௧)

குமரன்றீர்த்தம் வந்ததெமக்கிது கூறுதியெனமுனிவோ
ரமருஞ்சூதருரைப்பனசோணித வணிநகரத்தொருவன்
சமரந்தருவா ணசுரனெனன்போன் சங்கரனைப்பணிய
வெமரிப்படியர்ச் சித்திலர்யாதுனதெண்ணமெனப்புகல்வான்.

(இ-ள்.) குமாரதீர்த்தம் வந்தவரலாற்றை யெங்களுக்குச் சொல்லு மய்யாவென்று கேட்கச் சூதமுனிவர் சொல்லுகிறார், சோணிதாபுரத்தில் அதிபதியா யிருக்கின்ற புஜபலபராக்கிரமத்தை யுடைய வாணசூரனென்பவன் சிவனை யநவரதகாலமும பூசித்துவணங்க வெம்மடியார்களி லிப்படி பர்ச்சனை செய்தவர்களில்லை. ஆனதால் உன்னுடைய மனோபீஷ்டமான வரமென்னவென்று சிவன்றோன்றிக் கேட்கச் சொல்லுகிறான் வாணசூரன்.—எ-று. (உ)

கையாயிரவுர வாணன்சிவனைக் கண்டுகனிந்தேத்தி
யையாமகபதி யஷ்டவசுக்க ளயன்முதலவர்பாலின்
மெய்யாயுதமென தயிரிதருவகை வெற்றியெனக்காகச்
செயயாயிதுவரமடி யர்க்கெனவருள் சிவனப்படியீந்தான்.

(இ-ள்) ஆயிரங்கைகளையுடைய வாணசூரன் றோன்றிய சிவபிரானைக் கண்டு கருணையுடனே வணங்கித்தோத்திரஞ் செயது சுவாமி யிந்திரன் அஷ்டவசுக்கள் பிரமதேவன் முதலானதேவர்கள் பூமியில மனிதாகள இவர்களுடைய ஆயுதங்களாலெனக்குப் பிராணச்சேதம் வராமல் வெற்றியுண்டாக மெய்யாகிய வரங்கொடுத்தருளுமென்று சொல்லக் கிருபைகூர்ந்து அந்த வரமெல்லாங் கொடுத்தார்.—எ-று. ()

சோணிதநகரினி லிவ்வரமுடையான் சுராதியர்புகழத்
தாணுவையீராஞ் ஞறுகரத்தாற் றகவர்ச்சனைசெயுநாள்
பூணும்விசையத் திருமாலுனதொடுபோர்செயுமக்காலங்
காணுதியெமதறு முகனொடுயாமுங் கடிதணுகுவம்வெருவேல்.

(இ-ள்.) சோணிதாபுரத்திற் சிவன்கொடுத்த வரப்பிரசாத பலத்தினாற் றேவர்கள் முதலாகிய அனைவர்களும் போற்றிசெய்ய அரசாட்சிசெயதுக்கொண்டு சிவமூர்த்தியைத் தன்னுடைய ஆயிரங்கைகளாலும் அர்ச்சனை செய்யுங் காலத்தில் ஒருநாள் சிவன்றோன்றிகாட்சிகொடுத்து வாராய் வாணசூரனே வெற்றியுடைய விஷ்ணுமூர்த்தியானவர் உன்னுடனே யெதிர்த்து யுத்தஞ்செய்வார் அப்போ துனக்குச் சகாயமாக நமது குமாரககடவுளோடு நாமும் விரைந்து உதவிசெய்கிறோம். காண்பாயாகச் சற்றும் பயப்படாதேயென் று உறுதிசொன்னார்.—எ-று. (ச)

எனவரனோதினனென் றுயர்சூத ரியம்பச்சவுனகர்கேட்
டனகனன்மாதவ வாணர்கரியுட னடுவினையென்கொலென
மனனுறவோதுவ தோதுவமத்தெய்வ வருடமோராயிரமாய்க்
கனவனுருத்தன் காரணமாயன் கண்டகனைப்பொருவான்.

(இ-ள்.) என்றிப்படிச்சொன்னார் சிவனென்று உயர்ந்த தவமுடைய சூதமுனிவர்சொல்லச் சவுனகராதி முனிவர்களகேட்டு நிர்ம்மலனாகிய சூதமுனிவரே அந்த வாணசூரனுக்கு விஷ்ணுவுடனே போர்செய்யவேண்டிய முறைமையென்ன அதைச் சொல்லுவீரென்றுகேட்க, உங்கள் மனதுக்குத் தெரியும்படிச்சொல்லுகிறோம், தேவாண்டிலே ஆயிரம்வருடம் அழகிய அனுருத்திரன் நிமித்தமாக மகாவிஷ்ணுவானவர் வாணசூரனுடனே யுத்தஞ்செயவாரென்றுசொன்னார் சூதமுனிவர்.—எ-று. (ரு)

எவ்வகையெனிலுட் கன்னிகைகரியவ னெழில்மகவனுருத்தன்
மைவிழிமூடுங் கனவின்மணப்பவம் மகிணற்கவண்மயலா
மிவ்வகைசித்திரரேகையறிந்து படத்தெழுதினளிவரி
லெவ்வெவரெனவனு ருத்ரனையோதின ளேகியெடுத்துய்த்தாள்.

(இ-ள்.) முன் னடந்த விபரம் யெப்படியெனில் வாணசூரன்மகளாகிய உடற்கனையென்பவள ஒருநாள் நித்திரைசெய்யும்போது கிருஷ்ணன்மகனை அநிருத்திரன் அவள் சொற்பனத்தில்வந் தவளைப் புணர்ச்சிசெய்ய வவனழகைக்கண்டு மிகவும் மோகித்து மூர்ச்சிப்பதுகண்டு அவளைப்பெற்ற தாயாகிய சித்திரரேகை யதுவறிந்து மகள் மயல்தீரும்படியாக் அன்பத்தாறு தேசத்து ராஜகுமாரர்களைப் படங்களிலெழுதி இவர்களி லினைச் சேர்ந்தவனெவ னென்றுகேட்க அழகிய அநிருத்திரன் வடிவெழுதிய,படத்தைக் காண்பித்தவுடனே கள்ளவண்டைவிட்டு சொகுப்பொடிதூவி மயக்கஞ்செய்து நித்திரைசெய்கின்ற அநிருத்திரனைக் கட்டிலோ டெடுத்து வந்து மகளுடனே சேர்த்தினள்.—எ-று. (௬)

சித்திரரேகையெடுத்தனுருத்தன் றிகழ்பஞ்சணைமீதே
நித்திரையொடுவுடற்கன்னிகைகண்டனை நெடுநாளதிமோகம்
வைத்தபிணிவனல தறிகில ஏரிய மைந்தனும்வயிறூர்ந்தான்
அத்தகைவாணனறிந்தவனொடுமிக லாடிச்சிறைபோட்டான்.

(இ-ள்.) சித்திரரேகையானவள் அநிருத்தனைக்கொண்டுவந்து பஞ்சணைமெத்தையின்மேலே நித்திரையுடனே யுடற்கனையைமருவி யிருக்கும்படி செய்துவைத்தாள். அவர்களிருவரும் பிரியாமல நெடுநா ளதிமோகமாகிக் கலாச்சிசெய்திருந்தபோது அந்தப் பெணவயிறறிற புத்திரனுற்பத்தியானான். அது வாணசூரனறிந்து அநிருத்திரனோடு போர்செய்து சிறையிட்டான்.—எ-று. (எ)

இவ்வகையவரித யத்தினிலெண்ணி யெழுந்தனனெதிர்போந்து
பௌவமினைத்தென வாணனைமுன்னிப் பற்பலவமர்செய்தா
னவ்விடைமுருகன்கணபதியைம்முக னவருதவியினேகத்
தெவ்விடையவரவ ருக்கொருவிபாஞ் செய்தனனெடுமாயன்.

(இ-ள்.) இவ் வரலாறெல்லாங் கிருஷ்ணமூர்த்தி இருதயத்திற் றெரிந்துகொண்டு மகா கோபத்துடனே கடல்கொதிக்தாற்போலும் அளவில்லாதசேனைகள் புறப்பட்டு ச் சோணிதாபுரத்தை யணுகிச்சூழ்ந்து வாணசூரனை யெதிர்த்துப் பலவிசசித்திரமான யுத்தஞ்செய்தான். அதுவேளையில வாணசூரனுக்கு உதவியாக முருகவேள் கணபதி பரமேஸ்வரன் யிவர்கள்வந்து மூவரும் போர்செய்தார்கள். அப்படிபோர்செய்யு மவரவருக்குத் தக்கவகை விவரஞ்செய்தமைத்தான் மாயவனான கிருஷ்ணன்.—எ-று.

செய்துசமர்க்கெதிர் வாணனையடருஞ் செங்கட்கரியோன்முன்
வெய்தும்பரசிவ னெதிருற்றமர்முனை வினையிற்சிலசெய்யக்
கைதவமுற்றொரு மாயவிதத்தாற் கண்டகன்வாணன்பா
லெய்தியவன்கர முற்றுமறுக்கு மெல்லையில்வெள்விடையோன்.

(இ-ள்.) அவரவருக்குத்தக்க விவரஞ்செய்தமைத்துப் பே ர்முனைந்து வாணசூரனை யடர்க்கு போர்செய்யுஞ் செந்தாமரைக்கண்ணனான கிரு ஷ்ணனுக்கு முன்னே பரமசிவன் வந்தெதிர்த்து விச்சித்திரவகையாகச் சில யுத்தஞ் செய்யாநின்றார். அது கண்டு கபடமாய் வேறொரு மாயாசொரூபமாக வாணசூரன்பக்கத்தில்வந்து அவன் கைகள்முழுதும் அறுத்தார், கிஷ்ணன் அதுவேளையில, அங்ஙனஞ் சிவன்றோன்றினின்று சொல்லுகிறார்.—எ-று. (௯)

எம்மைப் பூசித் திடுகையிரண்டு மினி தினில்விடுகவெனுஞ்
செம்மைத் திருமொழி யாலடுகரியவர் திண்கையிரண்டீந்தார்
கொம்மைக்கரமோ ரிரண்டாவரியொடு கொடுவெஞ்சமர்பின்னுந்
தம்மிற்புரியத் தடிதுமென்னளவிற் றய்வந்தடி வீழ்ந்தாள்.

(இ-ள்.) எம்மையவன் பூசைபண்ணின கையிரண்டையும் அறுக்காமல் விட்டுவி டுமென்று அன்புடனே சொன்னார். அவரது திருவார்த்தைக்கு மனதிரங்கித் திண்ணி ய கைகளிரண்டும் அறுக்காமல விடுவிட்டார் அப்படிவிட்ட விரண்டு கைகளாலும் கிருஷ்ணனுடனே கொடிதாகிய யுத்தம வாணாசுரன் செய்வதுகண்டு அந்த விரண்டு கைகளையும் அறுத்துவிடுவோமென்று அறுக்கவருமளவில் அவன் றயானவள்வந்து அவன்பாதத்தில் விழ்ந்து யுத்தத்தை விலக்கினாள்.—எ-று. (கூ0)

அன்னவனைக்கொல் லாதமர்வினையு மகன்றரி யனுருத்தன்
பின்னவனுதவுஞ் சிறுமியைநன்கலி யாணம்பெரிதுற்றான்
கன்னியிடத்தனு மிருடிகள்கணமுங் கணபதிமு தலோரு
முன்னியடைந்தனர் குமரச்சுனையிலவ் வாணனுமுடன்வந்தான்.

(இ-ள்.) அப்போது சிவனமுதலாகிய அனைவர்களும் யுத்தத்தை விலக்கிச் சமாதானஞ்செய்து அச் முகூர்த்தத்தில் அந்த அநிருத்தினுக்கு வாணாசுரன் மகள் உடற்கன்னையை அழகியகலியாணஞ் செய்வித்துக்கொடுத்து கிருஷ்ணனுடனே கூட் டி யனுப்பிவைத்தான். அங்ஙனம பரமேஸ்வரனு மிருடிகள் கூட்டங்களுங் கணப தியார்முதலான தேவர்களனைவர்களுங் குறிப்புடனேவந்து நாககிரியினுற்ற குமாரதீ ர்த்தக்கரையிற் சேர்ந்தார்கள் அவர்களுடனே வாணாசுரனும வந்தான்.—எ-று.(கக)

உடன்வருமிருடிக ளனைவரும்வாண னுயித்தப்பரிசிப்பால்
தடநிறையுங்கும ரன்றீர்த்தத்திற் றரும்புனலுறமூழ்கி
யடிதொழுதிடவந் தீசுரவெனவென் றுதரமொழிகூறித்
திடனுறுகுமான் றீர்த்தககிழ்பாற் சிவபூசைகள்செய்தார்.

(இ-ள்.) அங்ஙனம் வந்துசேர்ந்த இருடிகளனைவரும் வாணாசுர னுயிர்த்த பரிசி ப்பிறற் சுத்தராக நிறைந்த நீரையுடைய குமார தீர்த்தத்தில் மூழ்கிவந்தீசுரர் பாதா ரவிந்தத்தைப் பிரதக்கணஞ்செய்து நமஸ்கரித்து அரகரமகாதேவாவென்று தோத்தி ரஞ்செய்து குமாரதீர்த்தத்தின் கிழக்குப்புறத்திற் சிவனைப பூசைசெய்தார்கள். எ-று.

எந்தையாம்வந்தீ சுரனைப்பூசித் திருடிகள்குகைதோறு
மூய்ந்தனரனைவரும் வாணன்குமர னுதவுஞ்சுனைமூழ்கி
வந்துமைபங்கனை யர்ச்சனைபண்ணி வந்தீசனையேத்திச்
சிந்தைமகிழ்ந்தொரு தீர்த்தமமைத்துத் தினம்பூசனைசெய்தான்.

(இ-ள்.) எந்தையாகிய வந்தீசுரனைப் பூஜைசெய்து இருடிகள் குகைதோறும் புகுந்து சிவயோகஞ் செய்திருந்தார்கள். வாணாசுரனுங் குமாரதீர்த்தத்தின்மூழ்கி வ ந்தீசுரனைப் போற்றிசெய்து அர்த்தநாரீசுரனைப் பூசித்து மனமகிழ்ச்சியுடனே தன் பெயரால் அங்கொருதீர்த்தஞ்செய் தமைத்துத் தினமும்பூஜைசெய்யா நின்றான்.

அய்யவவந்தீசுரர்வருகாரண மருடருசூதவெமக்
குய்யவிளம்புதியென்னவுரைப்ப தூரைப்பனபுவிவாழ்கத்
தூய்யதிருக்கயிலாயந்தனிலச் சுரர்முதலனைவோருஞ்
செய்யவருந்தவ மகவுதவெனவச் சிவனைத்தொழுபோதில்.

(இ-ள்.) அந்த வந்தீசுரன் வந்த காரண மகிமையைச் சொல்லுமய்யாவென்று முனிவர்கள் கேட்கச் சொல்லுகிறேமென்று சொல்லுகிறார் சூதமுனிவர் இந்தலோகமெல்லாம் வாழத்தக்கதாக மேன்மையான ஸ்ரீகைலாசத்தில் தேவர்கள் முதலானவர்களும் அரியதவங்கள்செய்து நாங்களுய்யும்படியாகப் புத்திர சந்தானவரங் கொடுத்தருளுமென்று பரமேசுரனை அப்போது வணங்கித்துதித்தார்கள்.—எ-று. (க௪)

மண்டலமிசையத்தெட்சணவரையென் றொருவரைமணிவரையீ
தண்டரநம்முனிவரர்யாரணனறு முகவன் முன்னவன்வந்
தெண்டிசையுந்தொழவினிதுளதுமையவ ளெம்பங்குறைவித்தின்
புண்டரிகத்திலிருப்பமவ்வந்தீ சுரனைகத்தொழவே.

(இ-ள்.) வாரீர்தேவர்களே! யிந்தபூமண்டலத்தின்மீது தெட்சண கைலாசமென்றொரு திருநாககிரியுள்ளது அங்ஙனம முனிவர்கள் விஷ்ணு, பிரமன், வேலவர், விநாயகர் எட்டுதிசை யவர்களும்வந்து தொழும்படியாகியஸ்தலம் அந்தஸ்தலத்திற பார்வதி நம்மிடப்பாகத்திற் பிரியாமலிருக்கின்றாள் பொற்றாமரைப்பூம்பொருட்டினமேலெழுந்தருளி யிருக்கின்றோம் எம்மையும வந்தீசுரனையும் பூஜைசெய்வார்க ளென்றுசொன்னார் பரமேஸ்வரன்.—எ-று. (கரு)

அக்கிரிமிசையொருநாளன்னங்க ளருந்துதல்விட்டுவலம்
புக்கெமைவந்துபுகழ்ந்தவர்புத்திரர் மித்திரர்பொலிவரென
நக்கனுரைத்தனனவ்விரதப்படி நகம்வலம்வருபவர்தாந்
தக்கநெறித்திறமுலகத்தவர்புரி தவமிருதெனமொழிவாம்.

(இ-ள்.) அந்தக்கிரியின் மீது யாதாமொருவர்வந்து உசிதமான தீர்த்தங்களில் மூழ்கி நேமத்துடனே ஒருநாள அன்னமுதலாகிய பதார்த்தங்க ளுணபதுவிட்டு உபவாசமாக நமதுதிருக்கோவில் வலமவந்து நம்மைச்சோடச வுபசாரங்களாற றொழுவார்களாகில் அவர்கள் நினைத்தபடியே புத்திரமித்திர களத்திராதிகளுஞ் சகல பாக்கியமும் பெறுவார்களென்று சொன்னார் பரமேஸ்வரன அவ்வகை விரதப்படி கிரிவலம் வருபவர்கள் தகைமை நெறிமுறைமைத்திறமும உலகத்தார்கள் செய்யுந் தவங்களும் யின்னபடியென்று சொல்லுகிறோம்.—எ-று. (கசு)

குமரன் சுனையிற்காலையின்மூழ்கிக் குமரனைமுன்போற்றி
யமரொண்சரவணபவவென்றறக் கரமுமக்கரையோதித்
தமருந்தந்தையுமன்னையுநீயென் றவனியென்வீரங்
கவருந்தாசொடுமுதநினமன்னங் கடிவன்றுயிலறவே.

(இ-ள.) குமாரதீர்த்தத்தி லுதயகாலத்துமூழ்கித் தீர்த்தக்கரையில் நேமமுடித்து சரவணபவாநமாவென்று சடாக்ஷரத்தை யுச்சரித்துச செபஞ்செய்து தந்தையுந்தாயுந் தமரு மென்தவமுஞ் சகலமு நீயென்று சிந்தித் துதித்திய யீரச்சீலையுடனே யாதாமொருவர் மூன்று நாளைக்கு ஆகாரம் நித்திரை யிவையிரண்டும் விட்டு உபவாசஞ் செய்வார்களாகில்—எ-று. (கஎ)

முத்தினமாலயம்வலம்வந்தக்கிரி முறைமுறைவலம்வந்தே
நித்தமும்வந்தீசுரனையுளத்தி னினைந்தடிநின்றேத்தி
அத்தகைகணபதியைக்கண்டேத்துக வாதியினடுவிற்றன்
சித்தமகிழ்ந்திப்படித்தவமுயல்பவர் செல்வர்தமைப்பெறுவார்.

(இ-ள்.) மூன்றுநாளும் விரதஞ்செய்து வந்தியா பாஷாணக்கிரியைச்செய்து முறைமுறையாக வலம்வந்து சிவாலயத்தையும் வலம்வந்து நித்தமும் வந்தீசுரனை யு

ளத்திநினைந் தடிபணிந்தேத்தி அப்படியே கணபதியாரையுங் கண்டுதொழுது அர்த்தநாரீசுரரையுந் தரிசனஞ்செய்து வணங்கி மனமகிழ்ச்சியுடனே இந்தப்படி தவஞ் செய்பவர்கள் நல்ல சற்புத்திரரைப் பெற்று வாழ்வார்களென்று திருவுளம் பற்றியருளினார் பரமேஸ்வரன்—எ-று. (கஅ)

எனவரன்வானவர் யாவருமேத்தி யிறைஞ்சியகாலையவர்
கனவரதமுநலதவமுஞ்சிந் தையி லானவுமன்னவுமெய்க்
கனவனமகவும்பெறுகுவிர்ளாகக் கனகிரிகயிலையெனத்
தினமுறைபகர்வதெமக்கிடமானது செல்லுமினெனவிமையோர்.

(இ-ள்.) என்றிப்படி யீசுரர் சொன்னவுடனே தேவர்களனைவருங் கைதொழுது உய்ந்தோமுய்ந்தோ மென்றார்கள். அப்போதுசுவாமி தேவர்களே நான்சொன்ன பிரகாரம் அந்தஸ்தலத்தில் அனவரத காலமும் நல்லதவம் புரிவீர்களாகில் நீங்கள் மனத்தில்நினைத்த காரியங்களுஞ் செயமாகிப் பாவவிமோசனமுமாகி அவரவருக்கான புத்திரர்களையும் பெற்றுவாழ்வீராக, திருநாககிரி, தெட்சண கைலாசகிரியென்று சதாகாலமும் வேதங்கள் முறையிடுகிறது யுமக்கிஷ்டமாகிய ஸ்தலம் அது அங்ஙனஞ் செல்லுமின்களென்று விடை கொடுத்தருளினார் அப்படியே தேவர்களெல்லாம் உடனே யந்தஸ்தலத்துக்கு வந்தார்கள்—எ-று. (கக)

வந்துநினைத்தவரந்தருகுவடும் வடிவேலன்வரமும்
நந்தவனந்திகழ் சஞ்சீவியுமுள நாகக்கிரியகலா
வெந்தையெம்முருகன் சுனைதருநீர்த்த மெண்ணுயிரநீர்த்தஞ்
சந்ததமாகும் பலபலனுதவுஞ் சத்தியமென்றனரே.

(இ-ள்.) தேவர்களனைவரும்வந்து யிஷ்டகாமியங் கொடுக்கப்பட்ட மேரு சிகரமும் வடிவேலருடைய கிருபாகடாட்சமுங் கற்பகத்தருக்கள் நிறைந்த நந்தவனமுந் திகழ்ந்துவிளங்கிய சஞ்சீவிகளும் உண்டாகும் நாககிரியைப் பிரியாமல் எம்முடைய சுவாமியாகிய முருகவேள்செய்த குமாரதீர்த்தமுதலாய் எண்ணுயிர தீர்த்தங்களுஞ் சதாகாலமும் மூழ்கித் தவஞ்செய்து வேண்டிய பலன்பெற்றார்கள்; மற்றும் யாதொருவர் நினைத்த காரியங்களெல்லாங் கூடிவரும் இது சத்தியமென்றார் சூத முனிவர்.—எ-று. (உ0)

வேறு.

குமரன்றீர்த்தத் தொருதுளியுள்ளே கொள்வாரேற்
குமரன்பெறுதற் குரியவர்நன்மைக் குலமாதர்
குமரன்கொற்றம் பெறுகுவர்கொற்றவர் குலமானூற்
குமரன்பாதங் கூடுவராறக் கரங்கூறில்.

(இ-ள்.) குமாரதீர்த்தத்தில் ஒருதுளிசல முட்கொள்வார்களாகில் குமாரரைப் பெறுவதற்குரியவர்கள், நல்லபிராமணகுல ஸ்ரீசனங்களான பெண்கள் குமாரசுவாமியினுடைய சவுரியமும் பெறுவார்கள், அரசர்குலமானால் சுப்பிரமண்ணியர் பாதஞ் சேர்வார்கள் சடாக்ஷர தியானஞ் செய்வார்களாகில்.—எ-று. (உக)

கார்த்திகைமதியிற் கந்தன்சுனையின் கண்மூழ்கி
யேத்திநம்மானைச் சண்முகனைப்போற் றியமாந்தர்
பேர்த்தொருசென்மம் பெரிதரசாளும் பீடோங்கி
வாய்த்துடலிடையார் நரைதிரைமருவார் வடிவாவார்.

(இ-ள்.) கார்த்திகை மாதத்திற் றிருக்கார்த்திகை தினத்தில் யாதாமொருத்தர்

வந்து குமாரதீர்த்தத்தில்மூழ்கிச் சண்முகக்குமாரனையும், நாகேசுரனையும் போற்றிசெய்தார்களாகில் மறுபிறப்பில் மன்னவர்களாகி பூலோக சக்கரமெல்லாம் அரசாட்சியாக ஆளுவார்கள். மிகவும் பெருமையுடைத்தாய மேனியிடையார்கள் நரைதிரை பொருந்தாது நல்லவடிவாக வாழ்வார்கள்.—எ-று. (உஉ)

மாதரும்கவும் வளமிகுசிதியும் வளர்சிரும்
போதருமிலையும் புல்குவா ராரற் புணர்நாளிற்
காதலின்முருகை யம்மந்திரவுரை கண்டார்க்கும்
வீதமர்தீப மளித்தார்க்கும்பழ வினைபோமால்.

(இ-ள்.) திருக்கார்த்திகை நாளில்வந்து குமாரதீர்த்தத்தில்மூழ்கி சுவாமி தரிசனஞ்செய்வார்களாகில், நல்ல ஸ்ரீ ஜனங்களும், நல்லபிள்ளைகளும், திரவியங்களும், நல்லசீரும் பெரும்பெற்று யெக்காலமும் வாழ்வார்கள். முருகனை நினைத்து சடாக்ஷரமந்திரத்தை யுச்சரித்துக்கொண்டு வேலவனைத் தரிசித்தபேர்களுக்குச் சுகந்த புட்பமாலைகள்சாத்தி தூபமநிறைத்தபேர்களுக்கும் பூர்வசென்மாந்திர கருமங்களெல்லாம் நிவாரணமாகும்.—எ-று. (உ௩)

மன்னவர்மலைவுறும் வயவுனைவெல்லும் வலிவேண்டிற்
பன்னறைபுழுகொடு சந்தனகுங்கும பன்னீரால்
முன்னுனைகோரோ சனைமுருகர்க்கு முழுச்சாத்திப்
பொன்னடிபணியிற் பொருபடையோடும் புவிகூடும்.

(இ-ள்.) மறுமன்னனை வெற்றிகொள்ளும்படி வலிமைவேண்டினால் வந்து குமாரதீர்த்தத்தில்மூழ்கிய புண்ணியதினமான திருக்கார்த்திகைநாளில் வாசனைபொருந்திய புனுகு, சவ்வாது, கோரோசனம், குங்குமப்பூ, பச்சைக்கர்ப்பூரம், வாசனைத்திரவியமுங் கலந்த திவ்வியசந்தனங்களாற் செங்கோட்டு வேலவருக்கு முழுக்காப்புச்சாத்தி புட்பமாலையும்புனைந்து தூபதீப நைவேத்திய வுபசாரங்கள்செய்து தரிசித்து அவர் பொற்பாதாரவிந்தங்களைப்பணிந்து போற்றிசெய்தார்களாகில் மாற்றானை வெல்லும்படியாகச் சவுரியமும், ஆயுதங்களுஞ், சேனைகளுங் கைசேரப்பெற்று வெற்றிகொண்டு பூமண்டலத்தை ஒரு குடைக்கிழேயடக்கி ஆள்வார்கள்.—எ-று. (உ௪)

தன்மந்தருவைக் காசிவிசாகந் தனில்வேலோர்
நன்மங்கலசுனை மூழ்கிமகிழ்ந்தர்ச்சனைநாடித்
தென்மணபழமொடு பாயசமேற்றிச் சிறுதுண்டாற்
குன்மமுதற்றம் முதரப்பிணிபல குணமாமால்.

(இ-ள்.) புண்ணியதினமாகிய வைகாசிமாத மதியம் விசாக நட்சத்திரத்தில் நல்ல மங்களாகரமான குமாரதீர்த்தத்திலே மூழ்கி நேமத்துடனே மனோபக்தியாக சுவாமிகளுக்கு அர்ச்சனைசெய்து, தேங்காய, பழம், பாயாசம், நிவேதித்து அதிற் சிறிது பிரசாதம் உண்டார்களாகில் வயிற்றில் வலிக்கப்பட்ட குன்மமுதலாகிய பிணிகள்யாவுங் குணமாகிச் சுகமாயிருப்பார்கள்.—எ-று. (உ௫)

பொற்கலை குங்கும கலைசெம்பட்டுப் புனைவாக்கிற்
புற்பலசெல்வம் பாரித்தந்தகப் பகைதிருங்
கற்புரசந்தன புனுகால்முருகன் கழல்சாத்தில்
வெப்புளைமேக மெய்த்துயர்தாகங் காசம்போம்.

(இ-ள்.) நேமத்துடனே சுவாமிகளுக்குச் சொர்ன்னப்பட்டாடை குங்குமவஸ்திரம் அணிந்து, துளிர்ப்பட்டுகள்சாத்தி அலங்காரஞ்செய்து உபசாரத்துடனே

வணங்கி வாழ்த்தினர்களாகில் பலசெல்வங்களும் படைத்து வாழ்வார்கள் இயமன் பகையுந்தீரும் கர்ப்பூரம், புனுகு, விரவிய சந்தனத்தால் முருகர் திருமேனி குளிரச் சாத்தித் தரிசனஞ்செய்வார்களாகில் அவர்களுக்கு வெப்பு, உளைப்பு, மேகஞ், சருவாங்க விரணத்துயரம், அந்தராதாகங், காசரோகமுந் தீர்ந்துபோம்.—எ-று. (உ௬)

சோதிபதத்தொரு சொர்னப்புட்பந் தொடைசாத்தில்
மாதுயரகலும் பாதகமிலர்மக வான்போல
ராதுகுபேரன் பெறன்மிகுசெல்வத் துயர்வாருங்
காதலர்கல்வி யுடன்கட்டழகின் கைசேர்வார்.

(இ-ள்.) குமாரதீர்த்தத்தில்மூழ்கி நேமத்துடனே சிவதரிசனஞ்செய்து சுவாமி பாதங்களில் ஒரு சொர்னபுட்பம் புட்பமாலை சாத்தினர்களாகில் மிகுந்த வியாதிநீங்கும். அவர்கள்செய்த பாதகங்களும். நிவாரணமாகும். இந்திரனைப்போல் போகபோக்கியங்களனுபவிப்பார்கள். குபேரனைப்போல் மிகுந்த செல்வத்தைப்படைத்து ஓங்குவார்கள். நல்ல புத்திரரும் வித்தைகளும்பெற்றுச் சுற்றத்துடனே கட்டழகாகப் பூமியில வாழ்வார்கள.—எ-று. (உஎ)

இத்திறமுதவுங் குமரன்றீர்த்த மெனும்பெயரோடுபினுஞ்
சித்திகொடீர்த்த மெனும்பெயருடையது தேவேந்து
மத்தருவும்வந் தமையவிளங்கிய வத்தன்மேல்பாற்
சத்திரத்தீர்த்தக் கீழ்பாலுளவது சண்முகதீர்த்தம்.

(இ-ள்.) இதகியாதி பலனுங்கொடுக்கப்பட்டது குமாரதீர்த்தமென்றொருபெயர், பின்னுஞ் சித்தியாதீர்த்தமென்னுமொரு பெயருடையது. இந்திரலோகத்துக் கற்பகத்தருக்களனைத்தும் வந்தமர்ந்து வசித்திருக்கின்றது. அதின்மேற்பாகத்தில் சத்திரதீர்த்தத்தின் கீழ்ப்பாகத்திலுள்ளது அழகிய சண்முகதீர்த்தம.—எ-று. (உஅ)

அந்நாள்வேதியன் முதலந்தணருக் கருள்சத்திரமாக
மின்னார்வேலவர் வேதவதிஷ்டன் மிகவும்பரிவுறவே
பின்னுள்வருதே னுவையவணிறுவிப் பெரியவருக்கீந்து
மின்னாரிமையொரு பங்கனைவந்தனை மலரடியர்ச்சித்தான்.

(இ-ள்.) அந்தகாலத்திற் பிரமாமுதலாகிய அந்தணர்முனிவர்களுக்குச் சத்திரங்கட்டி அமிர்தபோஜனங் கொடுப்பதாக நினைத்து மின்னொளிபொருந்திய வேலாயுதககடவுள் வேதவதிஷ்டன் மிகவும் பரிவுகூர்ந்தருளிய காமதேனுவை யங்ஙனம் வரவழைத்து நிறுத்தி அளவில்லாத மகா சனங்களுக்கெல்லாஞ் சத்திரபோஜனங்கொடுத்தருளி மின்னிடையாளான உமையொருபாகனை வந்தனையோடர்ச்சனைசெய்தார.—எ-று. (உ௯)

அன்றுமுதற்சத் திரதீர்த்தப்பெய ராங்காயினவங்க
ணின்றுயர்கற்பக ஞானப்பாதவ நிறைதிக்காயதரு
நன்றிகொள்கூல விருக்கமெனும்பெயர் நாலுகமும்முறையே
துன்றியிவ்வளவும் விளங்கின்குமர னெழிற்சுனை மேற்பாலாய்.

(இ-ள்.) அன்றுமுதற்கொண்டு சத்திரதீர்த்தமென்றும் பெயராயிற்று. அங்ஙனம் உயர்ந்து நிற்கின்றது. கற்பகம், ஞானப்பாதவம், திக்கெல்லாம் நிறைந்த தருவு, அழகிய கூலவிருட்சம் என்றிப்படி நாலுயுகமும் முறையே பெயர்களாய் விளங்கிச் செறிந்து இந்நாள்வரையிற் புகழ்ச்சியாயிருக்கின்றது. அழகிய குமாரதீர்த்தத்துக்கு மேற்பாகத்தில்.—எ-று. (௩௦)

வேலவர்சுனைமூழ் கித்தருநிழலில் விரதியருக்கன்னஞ்
சீலமோடொருபிடி யுதவிலோர்கோடி சிவக்கியானியர்கொள்ளப்
பாலமுதங்கள் படைத்தபலன்கள் பலிப்பாகும்மென்றே
யோலமெடுத்துரை யோதினருண்மை யுண்மையெனச்சூதர்.

(இ-ள்.) குமாரதீர்த்தத்தில்மூழ்கி நேமத்துடனே விரதமாக அந்த கூலவிருட்சத்தருநிழலில் மாவிரதியர்களுக்குச் சுத்தமாக ஒருபிடி யன்னங்கொடுத்தார்களாகில் ஒருகோடி சிவயோகிகளுக்குப் பாலமிர்தங்கள் படைத்தபலன்கள் பலிப்புண்டாகுமென்று ஓசையுடனே இது வுண்மையென்றுசொன்னார் சூதமுனிவர்.-எ-று.

இருசுடரைப்பணி யிடர்செயுநாளினி லித்தீர்த்தமதாடி
யுரதருவின்கீழ்த் திலவோமஞ்செயி லொன்றுக்காயிரவாண
டரனசலத்தி லிருப்பரமுன்றா லாக்கருடான்புரிவார்
பாகதியும்பலனுஞ்சிவசிவவது பகரத்தொலையாதால்.

(இ-ள்.) சந்திராதித்தர்களை இராகு கேதுகள்பற்றிய கிராணபுண்ணியகாலத்தில் குமாரதீர்த்தத்தில்மூழ்கி. அந்தகூல விருட்சத்தருநிழலின்கீழ் திலமாகிய வெள்ளெள்ளிலே ஓமஞ்செய்வார்களாகில. ஒரு எள்ளுக்கு ஓராயிரந் தெய்வவருடங் கைலாசகிரியி லிருப்பார்கள். அங்ஙனம் பிராமணாளுணங்களுக்குத் தானங்களை கொடுப்பார்களாகில் அவர்களுக்குண்டாகும பரகதியும் பலனுஞ் சிவ சிவா அது சொல்ல முடியாது.—எ-று. (௩௨)

அங்கவிருமர புஞ்சிவலோகத் தடைவது திண்ணமொரோ
ரிங்கிதகோதா னம்புரிவார்புவி யிறைவனெனப்பெறுவார்
முங்கியதன்கீ ழிடபம்விடுவா ரவர்முதற் பிதிர்க்களெலா
மங்கையோர்பங்கன் சிவலோகத்தினி வைகுவவாழ்குவரே.

(இ-ள்.) அப்படிச்செய்த புண்ணிய புருஷர்களுடைய இரண்டு மரபுஞ் சிவலோகஞ் சேர்வது நிச்சயம் நிச்சயம் அந்தத்தரு நிழலில் இனியகோதானஞ் செய்வார்களாகில் அவர்கள் பூலோக அரசர்களாகி யாள்வார்கள் பின்னுங்குமார தீர்த்தத்தில்மூழ்கி அந்தத்தரு நிழலின்கீழ் சுவாமிபேர்சொல்லி ஒருஇடபகன்றை சூலமிட்டுவிடுவார்களாகில அவர்கள் பிதிர்க்களெல்லாம உமையொரு பாகருடைய சிவலோகபதத்தில் வைகிவாழ்வார்க ளென்றுசொன்னார் சூதமுனிவர்.—எ-று. (௩௩)

திகழ்தைமாதத் தமவாசைமுதற் சிவராத்திரியளவாய்க்
குகனன்சுனைமூழ் குவரெனில்மாகங் குளித்தவர்பலனுகுந்
திகழுமிக்காலையின் மூழ்கினர்பாவஞ் சதசென்மத்திலையென்
றகமகிழ்வுற்றிரை யாடினர்சூத ரருட்சவுனகர்கேட்ப.

(இ-ள்.) திகழ்ந்து விளங்கிய தைமாசத் தமாவாசை முதலாய் சிவராத்திரி பரியந்தம் வந்து குமார தீர்த்தத்தில் மூழ்குவாராக ளாகில் மாமாங்க தீர்த்தங் குளித்தவர்கள் பெறும் பலனுகும் இப்படிக்கொத்த புண்ணியதினங்களில் மூழ்கினவர்கள் பாவங்கள் தீர்ந்துபோகும் நூறுசென்னம் புண்ணிய புருஷர்களாய் வாழ்வார்களென்று மனமகிழ்ச்சியாக சவுனகராதி முனிவர்கள கேட்கச்சொன்னார் சூதமுனிவர்.

தீரனுடுகேவா டாவிடிலொருவன் றன்கைப்பொருளீந்து
மாரனுதமலைச் சுனைபடிவிக்கினும் வருமப்பலனென்று
ரானுதக்கணமாடி தைபுதய மாவங்கதிர்நீண்டி
லானுளறுமுக வன்சுனைமூழ்குவ ததிகப்பலனுமால்

(இ-ள்.) தான்முழுகினாலுஞ் சரியே அப்படிமுழுகக் கூடாதாயின் ஒருவன் கையிற பொருள்கொடுத்து மூழ்கச்செய்தாலும் அந்தப்பலன் அவர்களுக்கு வரும் உத்திராயணந் தட்சணாயணமாகிய ஆடிச்சங்கிரமம், தைசங்கிரமம், கிரகணபுண்ணிய ஸ்தலங்களிலும் குமாரதீர்த்தத்தில் மூழ்கினால் அதிகபலனுண்டாகுமென்றார் சூதமுனிவர்.—எ-று. (கூ)

கூலவிருக்கம் குலவுகிழக்கிற் குமரன் றீர்த்தமுடன்
ஞாலம்பணிமுருகன் புகழோதியன் ஞைக மலைபோற்றிச்
சீலமிருங்கதை செப்பினர்கேட்குஞ் சீலவருட்பாலோர்
கோலமிருந்து நினைத்தன பெறுவார் குறைவறவாழ்வாரே.

(இ-ள்.) கூலவிருட்சத்தின் கீழ்ப்பாகத்திற் குலவிய குமாரதீர்த்த மகிமையையும் உலகம்பணியு முருகன்புகழையுஞ சதாகாலமுந் தோத்திரஞ் செய்து உசிதமிருந்த புராண சரித்திரஞ் சொலலுமவர்கள நல்லவடிவுபெற்று இஷ்டகாமியார்த்தங்கள் குறைவில்லாமற் புவியில் வாழ்வார்கள்.—எ-று. (கஎ)

குமாரதீர்த்தச் சருககம்முற்றும்.

ஆகச்சருக்கம், உஅ-க்கு, திருவிருத்தம், எாகூஉ.

---

# பாவநாசதீர்த்தச் சருக்கம்.

குமார தீர்த்தத்தின் மூழ்கிக குளிர்ப்புனற் பாவநாசத்
தமாரவாதைகணைமாற்றி யாடுக வாடுங்காலை
யெமாரிடத்தவளைப்போற்றி யியன்றன முன்வைத்தேது
பமார்வணிப்பரனையேத்திப் பகர் சவுராதிகொண்டே.

(இ-ள்.) குமாரதீர்த்தத்தில் முழுகினபின்பு யாதாமொருவர் காமவிகாரமில்லாமற் குளிர்ந்தபுனலை யுடைய பாவநாச தீர்த்தத்திற தீர்த்தமாட வேணடும் அப்படிதீர்த்தமாடும்போது நமதிருடிகளைப் போற்றிசெய்து தன்னாலியன்றது முன்வைத்து நிவேதித்துத் தூபதீப சவாசததிர உபசாரஙகளுடனே நாகபூஷணனான பரமேசுரனைப்பணிந் தேததி கீராடுக.—எ-று. (க)

பாபநாசத்திலாடிப் பாபநாசங்களாகக்
கோபனணிய வாய்பஙகன் குரைகழல் கும்பிட்டோதி
தாபனுதேலைமாற்றுந் தற்பணமுதவித்தானம்
பூபனுதரத்துநல்கிற் புண்ணியம் பிதிர்க்கோர்கோடி

(இ-ள்.) பாவநாசமாகும்படி பாவநாசத்தில் மூழ்கி இந்திர கோபம் காணும்படிஅழகிய வதரமுடைய உமையொருபாகனது சத்திகைகப்பட்ட வீரக்கழலணிந்த இரணடுபாதங்களைக் கும்பிட்டுத் தோத்திரஞ் செய்து இமலோகத் தெல்லையை மாற்றுவதானபிண்டப் பிரதானமுந் தர்ப்பணமுஞ் செய்து பக்தியுடனே தானங்கொடுத்தால் அவர்கள் பிதிர்க்கள கோடிதலைமுறைக்குஞ் சுவர்க்கஞ் சேர்வார்கள் செய்த தருமமொன்றொருகோடியாய் விர்த்திக்கும்.—எ-று. (உ)

எனச்சவுனகற்குச்சூத ரியம்புதல் கேட்டு நீத்தோர்
கனத்துறும் பாவநாச காரணம் பகர்தியென்ன

வனத்திருநாகவெற்பு மலரவன் காப்பாமாகம்
நினைத்துறுகுரோச மைந்தின் னேமியானுறைந்து நீங்கான்.

(இ-ள்.) என்றிப்படி சவுனகராதி முனிவர்களுக்குச் சூதமுனிவர் சொல்லக் கேட்டு அந்தமுனிவர் மகிழ்ச்சியுடனே பெருமைபொருந்திய வந்த பாவநாசத் தீர்த்தத்தி னுடைய காரணமகத்துவங்களைச் சொல்லுமையா வென்று கேட்கச் சூதமுனிவர் சொல்லுகிறார், வாரீர் முனிவர்களே அழகிய திருநாககிரியைப் பிரமதேவன் காத்தருளா நின்றார், கிரியைச் சூழ்ந்து நினைப்பதற்கரிய பஞ்சகுரோசத் தொலையளவும் பிரியாதபடியாக மகாவிஷ்ணு காத்தருளா நின்றார்.—எ-று. (ங)

மூண்டகன் மகவான் ஞான முதல்வனு முனிவர் யாருங்
கொண்டினி துறைவர்வெய்யோன் குளிர்மதி காந்தரீசர்
மண்டுபன் னொருவரொட்டு வசுக்களஸ்வினிவானோர்க
ளுண்டென விருந்தார்காந்த ருவர்தம தணங்கொடுய்த்தார்.

(இ-ள்) பிரமதேவன், தேவேந்திரன், தேவர்கள், முனிவர்கள், யோகியர், சூரியர்மற்றுஞ் சந்திரசூரியர் கந்தர் பதினொருகோடி ருத்திரர்கள் அஷ்டவசுக்கள் அஸ்வினிதேவதைகள், கின்னரர், கிம்புருடர்கள், கெருடர், காந்தருவர்கள், சித்தர், வித்தியாதரர்கள் மற்றும் அனேகந்தேவர்களெல்லாந் தங்கள் தங்கள் பத்தினிகளுடனே திருநாககிரியி லுறைந்து வசித்திருக்கின்றார்கள்.—எ-று. (ச)

இவரிவரர்த்தநாரீ சனைப்பணி மலையிலேத்தித்
தவநெறிபுரிந்துவாழுந் தகைமையராகச் சூழ்ந்தார்
புவனமும் விண்ணுறும்போற்றும் புயங்கவெற் பினிலத் தீர்த்தம்
நவமணிக் கழுநீர் நெய்தல் நனிகொள் சேதாம்பல் நீங்கா.

(இ-ள்.) இவர்கள் யாவரும் நாககிரியில் அர்த்தநாரீஸ்வரனைப் பணிந்தேத்தி க்ஷேமத்துடனே நெறிமுறைமையாக வாழ்ந்திருக்கும்படி தகுதியர்களாகச் சூழ்ந்திருக்கின்றார்கள். மண்ணும்விண்ணும் புகழப்பட்ட அந்தக்கிரியிற் பாவநாச தீர்த்தம் நவரத்ன மணிகள் பொருந்திச் செங்கழுநீர்ச் சேதாம்பல் செந்தாமரை நீலோற்பலங்களும் பிரியாமலிருக்கின்றது.—எ-று. (ரு)

இயக்கர்தங் கன்னிமாரோ டினிதுசந்ததமு மூழ்கி
நயப்புனற் றலைமேற்கொண்டு நந்தனவனப் பூக்கொய்து
செயக்கர மழுவோன் பாதஞ் சிவசிவ வெனப்பூசித்து
முயக்கிவர் மகளிரோடு முனிவரர் தவங்க ணீங்கார்.

(இ-ள்.) இயக்கர்கள் தங்கள் பத்தினிகளுடனே இனிதாகவந்து நாககிரியிற் பாவநாச தீர்த்தத்தில் மூழ்கி நியதிமுடித்து அத்தீர்த்தந் தலைமேற் புரோட்சித்துக் கொண்டு நந்தவனங்களில் புஷ்பங்களெடுத்துப் பறித்துப் பகுகியுடனே வெற்றிமழுவேந்திய கைகளையுடைய சிவன்பாதாரவிந்தங்களைச் சிவசிவா வென்று பூசித்து இஷ்டகாமியம் பெற்று வாழ்ந்திருக்கின்றார்கள். முனிவரர்கள் முயங்குந் தனபாரங்களையுடைய பத்தினிமார்களுடனே அத்தீர்த்தத்திற் குளித்து நியதிமுடித்துப் பிரியாமல் அரியதவங்கள் செய்திருக்கின்றார்கள்.—எ-று. (சு)

யாவரே யெனினுமந்த வெழில்வரை யினிநாள் மூன்றி
னுவலன் வைகிப்பாவ நாசதீர்த்தத் திலாடிக்
காவலின் பரனைப்போற்றிக் கடன்பல கழித்துவெற்பில்
மேவியங்கிழிகா லென்கால் மிதித்தன பொறுத்தியென்ப.

(இ-ள்.) யாராலும் அழகிய திருநாககிரியின் பேரில்வந்து அன்புடனே மூன்றுநாள் வாசஞ்செய்து பாவநாச தீர்த்தத்தின் மூழ்கி நியதிமுடித்து நித்தியகன்மக்கடன் பலவுங்கழித்து இறையவனுன பரமேஸ்வரனைப் போற்றி செய்து வணங்கி வாழ்த்தி நாலாபுரள்கிரியி னின் றிறங்கி யடிவாரகதில் வந்துநின்று பெமதுகால்களால் மிதித்தகுற்றங்களைப் பொறுத்தருள வேண்டுமென்று தண்டனிட்டுத தோத்திரஞ் செய்வார்கள்.—எ-று. (எ)

என்றணி மலையின் கீழ்வந் திறைவனைக் குருவைப்போற்றி
நின்றவந் நிலையேமூக்கால் நெறிபுற வலம்வந்தேத்தி
யன்றவ ணிருந்து நூற்றெட் டாமெழுத் தைந்துங் கந்தர்
நன்றிகொ ளெழுத்தோராறும் நனிபெறச் செபித்துச் சொல்வார்.

(இ-ள்.) என்றிப்படி வணங்கினவர்கள் நாககிரி யடிவாரத்தில்வந்து அங்குமிறைவனைப்போற்றிக் குருவை வணங்கி நின்ற நிலையே நெறிமுறைமையாக மூன்று பிரதட்சணஞ்செய்து துதித்து அன் றங்ஙனமிருந்து பஞ்சாக்ஷரங்களையும், ஷடக்ஷரங்களையும், பெருமைபெற நூற்றெட் டுருசெபஞ்செய்து முடித்துப் பின்பு சொல்வார்கள்.—எ-று. (அ)

பணிமலைப் பாவநாசப் பனிப்புனற் றிறமும் வந்த
வணிவகைப் படியுஞ்சொல்வாஞ் சவுனக ராதிகேண்மின்
றிணிவுள கைலைச்சாரிற் செழுந்திருத் தீர்த்தஞ்சூழ
நணுபிரமாச்சிரம நன்குள தவத்தின் மேலோர்.

(இ-ள்.) அந்தத் திருநாககிரியிற் குளிர்ந்த புனலுடைய பாவநாச தீர்த்தமகிமையும், அதனுலாகிய காரணார்த்தங்களும் சொல்லுகிறேனுஞ் சவுனகாதி முனிவர்களே கேண்மின்களென்று சொலலுகிறார், சூதமுனிவர். திண்மையுடைய கைலாசகிரிச்சாரிற் செழுமையுடைய நதிதீர்த்தங்கள்சூழ்ந்து விளங்காநின்ற பிராமணாச்சிரமங்கள் அழகியதாகவுள்ளது அங்ஙனந் தவமகிமையுடைய பெரியோர்கள் வசித்திருக்கின்றார்கள்.—எ-று. (கூ)

செறிந்துட னிருந்தகாலை திடமதியெனும்பேராளன்
குறிந்த சூத்திரன்வந்தநதக் குழாநதனைப்பாதம்போற்றி
யறிந்திட வடியேனுங்க ளருநாவத்தொழிலையெல்லாம்
பிரிந்திடா தியாகம் பண்ணும் பெற்றியற் கருளவேண்டும்.

(இ-ள்.) அந்த ஆச்சிரமங்களில் அரியதவ முனிவர்கள்நெருங்கிப் பயிலாநின்ற காலத்தில திடமதியென்னும பெயரையுடைய ஒரு சூத்திர னங்ஙனம்வந்து முனிவர்கூட்டங்களைக்கண்டு தணடனிட்டுப் போற்றிசெய்து சொல்லுகிறான். வாரீர் சுவாமிகளே! அடியேனுக்குத் தங்களுடைய நெறிமுறைமைத் தொழில்களையெல்லாம் யானறிந்துகொள்ளும்படி தெரியப்படுத்திப் பிரியாம லுங்களுடனே யாகாதிகிருத்தியங்கள் செய்யும்படிக்கு அனுக்கிரகஞ் செய்தருளவேண்டுமென்றுசொல்லிப் பின்னையுஞ் சொல்லுகிறான்.—எ-று. (௧௦)

மாமுனிவரரேயுங்கள் மந்திரமுபதேசித்துத்
தேமலர்க்காவினும்பார் செறிந்தவரிடத்திற்கூடிச்
சேமவைதீகபாகஞ் செய்தருச் சனைகள் செய்து
காமுறவடியன் றன்பாற் கனிந்தரு ளுதிவென்றேத

(இ - ள்.) மகா முனீஸ்வராகளே உங்களுடைய காயத்திரி மந்திரங்களை

அடியேனுக் குபதேசஞ்செய்து தேன்பொழியும் புட்பகாவனத்திற்செறிந்த இருடிகளுடனே நானுங்கூடி ரகசியமான வைதீகபாகத்தோ டர்ச்சனைகளைச்செய்து யோக்கியனாகும்படிக்கு யென்னுடைய யன்புக்கிரங்கி யென்னையுமொரு முனிவனென்று சொல்லும்படியாகத் தங்கள் மனங்கனிந்து கிருபாகடாக்ஷஞ் செய்தருளவேண்டுமென்றுசொன்னான் திடமதி.—எ-று. (௧௧)

சூத்திரன்றனக்கு வைதி கத்துள வுபதேசங்கள்
சேர்த்திட லாகாதெங்கள் சேர்வைசெய் திருத்தியஃதே
யேத்துதலுனக்கு நல்ல யாகமுந் தவமுமென்று
தீர்த்தரா ரிடத்துமேலோர் திடமதிக் குரைத்தபோதில்.

(இ-ள்.) சூத்திரனுக்குப் பிராமணாள்செய்யுங் காயத்திரி மந்திரவுபதேசங்கள் செபங்கள் தவங்கள்யாவுஞ் சொல்லக்கூடாது. எங்களைத் தரிசனஞ்செய்து வணங்கியிருப்பதே யுனக்கு நல்லயாகமுந் தவமுமென்று பூசுராரகிய ஆரிடத்தின் மேலோர்க ளப்போது திடமதிக்குச்சொன்னார்கள்.—எ-று. (௧௨)

அதையுளத்தடைத்துத் தூரத் தாச்சிர மத்தின்பாங்கே
மதுதிகழ் சோலைவாவி வளந்தரு பொருணீர்வைப்புப்
புதிதுறவைத்துத் தெய்வ பூசையும் பண்ணிப்பிண்டக்
கதிபலவியற்றியாங்கன் கனிந்தவன வைகுநாளில்.

(இ-ள்.) ஆரிடத்தார்சொன்னதை மனதி லடக்கிவைத்துக்கொண்டுபோய் தூரத்திலே ஒரு ஆச்சிரமத்தின்பக்கத்திலே தேன்வழிந்தொழுகிய பூஞ்சோலைகளும், வாவிகளும் வளம்பொருந்திய பலபொருள் விளையும் யேரிநீர்வைப்பும் புதிதாக வுண்டுசெய்து அங்ஙனம் தெய்வபூசைகளும் பண்ணிப் பிண்டப்பிரதானங்களுஞ் செய்து முத்திமோக்ஷத்துக் கேதுவாகிய பலவகை மார்க்கங்களு மியற்றி யங்ஙன மனமகிழ்ச்சியுடனே தி-பதி யென்பவன்வைகி வாழ்ந்திருக்குநாளில்.—எ-று. (௧௩)

திடமதிக்கமலன்வெற்பிற் செழுந்தவர்தெளியச்சொல்வார்.
வடமொழிவேதநூல்மந் திரந்தெய்வபுராணம்யாகம்
நெடிதுசூத்திரரார்செய்ய நெறியலச்செய்வித்தார்க்குங்
கடிதுசெய்தார்க்கும்பாவங் கழிந்திடாத்தொலையாதந்தோ.

(இ-ள்.) கைலைச்சார்பில் செழுமையுடைய ஆச்சிரமத்தில் தவமுனிவர்கள் சொல்லுகிறார்கள் வாராய் திடமதியே வடமொழி வேதநூல் யாகமந்திரங்களைக் காயத்திரி செபதபங்களைத் தெய்வபூஜை புராணயாமங்கள் யாகங்கள் இவையாவு மிகவுஞ் சூத்திரர்செய்வது நெறிமுறைமையல்ல அப்படிசெய்வித்தவர்களுக்குஞ் சீக்கிரஞ் செய்தவர்களுக்கும் பாவங்கள் சம்பவிக்கும், அந்தப் பாவங்கள் எளிதிலேதொலையாது.—எ-று. (௧௪)

கயிலையாச்சிரமந்தன்னிற் கனமறைமுனிவர்யாரு
மியல்புறக்கனிகாய்ச்சாகை யெழிற்கிழங்கவன்பால்வேண்டிப்
பயில்வுறுங்காலைவேத பாரகன்சுமதியென்பா
னியலுறவவன்றனன்ப னுயினனிவனைப்போற்றி.

(இ-ள்.) கைலாசகிரிச் சார்பிலிருக்கின்ற ஆச்சிரமங்களில் மகிமையுடைய மறைமுனிவர்கள்-யாவரும் புசிக்கும்படிக்கு இலைகாய் கனிகள் கிழங்குகள் வேண்டி அந்தத் திடமதி யிடத்திற்போய்ப் பழக்கஞ்செய்து வாங்கிக்கொண்டு போவார்கள் அக்காலத்தி லொருநாள் ஒருவேதபாரகன் சுமதிமுனி யென்பவன் இயல்புடனே ய

வனுக்கு மிகுந்தசினேகிதனுனன் அவனைப்போற்றி செய்து திட்டமதி சொல்லுகிறுன் எ-று. (௪௫)

எமக்குந்தியற்கையெல்லா மியம்பிநல்லியக்கஞ்செய்தே
யமைத்திடற்குபதேசத்தை யருள்கெனவறைதலோடுங்
கமைத்தொழிற்சுமதிகாலங் கழிந்திறந்தனந்தபாவஞ்
சுமைப்பெறுநிரயந்தோய்ந்து சொற்றெகாபிறவிசேர்ந்தான்.

(இ-ள்) சுமதி முனிவரே! உங்களியல்பாகிய தொழில்களை யெல்லாம் எனக்கு உபதேசஞ் செய்து அமைந்திருப்பதாகக் கிருபைசெய்தருளு மென்று வணங்கினனைக் கண்டு மனதிரங்கித் தங்களுடைய வேதாகம மந்திரகாயத்திரி செபமும் தேவபூசை யாகாதி கிருத்தியங்களை செய்யுந் தொழில்களை யெல்லாந் திட்டமதிக்கு தெரியப்பட உபதேசஞ் செய்தருளினன். பின்பு சுமதிமுனியென்பவன் காலங்கழித்து இறந்துபோனன். அளவிலலாத பாவம்பிரவேசித்ததுச் சுமை தலையாக இயமலோகத்தில் நணணி நரகங்களில விழுந்தழுந்திச் சொல்ல அளவிலலாத சன்மங்க ளொடுத்தலைந்தான்.—எ-று. (௪௬)

பிறந்திறந்தனந்தசென்மம் பெருங்கடைப்பிறப்பின்பின்னர்
துறந்துசூத்திரனுய்வைஸ்யத் தோற்றமாயரசனுகி
யறந்திகழ்மறையோனுந்தி யடைந்தனளடைந்துபெற்று
நிறைந்திடுமிருநாலாண்டி னெறியுபவீதஞ்செய்தான்.

(இ-ள்.) பிறந்திறந் தனந்தகோடி சென்மங்களெடுத்த பின்பு ஒருபிறப்பிற் கடையவனுகவும், பின்பு சூத்திரனுகவும், பின்பு வைசியனுகவும்,பின்பு அரசனுகவும்பிறந்து பின்பு புண்ணிய தேகமான பிராமண யோனியை யடைந்து நலல சற்புத்திரனுகப் பிறந்து சகல சாஸ்திரங்களுங் கற்றுத் திகழ்ந்து விளங்கி எட்டுப்பிராயத்தளவில் எக்கிஞோப வீதந்தரித்தருளினுர் சுமதமுனி.—எ-று. (௪௭)

செய்கபின்சுமதிதன்னைத் தின்பதுபோலநாடி
வெய்தெனப்பிரமஹத்தி விழுங்குவபோலப்பற்றிக்
கைதரித்திடாதுகொள்கக் கனிந்தவனறந்தைநிர்ப்பான்
பொய்தவிர்கும்பயோனி பொதியமீதடைந்துபோற்றும்.

(இ-ள்.) எக்கிஞோப வீதஞ் சாத்தியருளினபின்பு சுமதிமுனிவனைத் தின்பது போல் நாடி வெவ்விய பிரமஹத்தி விழுங்குவதுபோற் பிடித் துபத்திரஞ்செய்து தரிக்கொள்ளாது மேற்கொண்டதாலே அதுகண்ட தகப்பனுனவன் மிகவுமிரங்கி இவன் பிரமஹத்தி தோஷத்தைத் தீர்ப்பானென்று பொய்ப்பிலலாத தவமுடைய பொதிய மலையிற்சென்று அகஸ்தியமுனிவனைக்கண்டு தரிசித்துப் போற்றிசெய்து சொல்லுகிறுன்.—எ-று. (௪௮)

போற்றியென்னுயிரோயெங்கள் பொருளெனுந்தருமப்பேறே
யாற்றலம்புயத்தானுன்னை யடைந்தனமருளவேண்டும்
பேற்றிலென்மகவைப்பற்றிப் பிரமராக்கதன்மேற்கொண்டா
னூற்றமொன்றருள்தித்தென்னுற் குரவவிப்பிரமவாழ்வே.

(இ-ள்.) போற்றிபோற்றி என்னுயிர்த்துணையாய் விளங்கும்படியான தருமப் பேறே யாற்றலுடைய வுமது பாதாரவிந்தத்தை யடைந்தேன். கிருபைசெய்தருள வேண்டும். யான் தவஞ்செய்துபெற்ற இந்த ஒருபுத்திரனைப் பிரமராக்ஷதன்பிடித்துமேற்கொண் டுபத்திரஞ்செய்கின்றுன். இது நிவிர்த்தியாக ஒருண்மை யனுக்கிர

வித்தகப்படர்தியென்ன வேதியன் மகவினோடு
முய்த்தனன் பாவநாச முரசவெற்பினிற்போய்த் தோய்ந்தான்.

(இ-ள்.) அர்த்தநாரீஸ்வரருடைய கிருபையருளினாலே உசிதமாக உண்டாகிய தீர்த்தஞ் சுத்தோதகமான பாவநாசதீர்த்த மென்னும் பெயரை யுடையது அதனைக் கண்டமாத்திரத்திலே இவனைப்பற்றிய பிரமஹத்தி தோஷமுந் தீர்ந்து போகும் வேத வித்தகனான நீ அங்கேசெல்வா யென்று அகஸ்தியமுனிவர் விடைகொடுத் தருளினார் அந்தப்பிராமணன் தன்மகனுடனே கூடிச்சென்று திருநாககிரியிற் பாவநாச தீர்த்தத் தில்வந்து தீர்த்தமாடினான்.—எ-று. (உச)

தோய்ந்தபின்பிரமராக்கன் சூறைமாருதமுன் பூளை
யேய்ந்தனனிருவோரும்போந் திமையவர்தமக்குநேரான
ராய்ந்திடநகரின்வாழ்ந்தா ரர்த்தநாரீசன்பாதஞ்
சேர்ந்துறவிருந்தாரந்தத் திடமதிசெயற்கைசொல்வாம்.

(இ-ள்.) அப்படிதீர்த்தமாடினபின்பு சூறைக்காற்றில் பூளைப்பூப் போவதுபோல பிரமராட்சதன் விட்டோடிப் போனான் அவர்களிருவரும் சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு புறப்பட்டு தெய்வரூபமாக தமது நகரத்திற்சென்று சேர்ந்துவாழ்ந்திருந்தார்கள் அந்தியத்தில் அர்த்தநாரீஸ்வரர்பாதஞ் சேர்ந்து வீற்றிருந்தார்கள் இனி அந்தச் சூத்திரன் திடமதிசேர்க்கையைச் சொல்லுகிறோமென்று சொல்லுகிறார் சூதமுனிவர்.—எ-று. (உரு)

எண்ணிலிநரகத்தெய்தி யிழிந்தசெந்துக்களாய்
நண்ணியபிறப்பிலோய்ந்து நன்கதிகிடைப்பதாக
விண்ணிடைப்பருந்தாய்நாக வெற்பிலிற்றுகித்தேகி
தண்ணுறற்பாவநாசத் தடங்கரைதருவிற்சார்ந்தான்.

(இ-ள்.) திடமதியென்பவ னிறந்து அளவிலாதகாலம் நரகத்தில் வீழ்ந்தழுந்தி இழிவான ஜெந்துக்களாய் நாறுகிடபிறந்திறந்து திளைத்து முன்செய்த புண்ணியஞ் சற்றுண்டாகி நல்லகதி கிடைப்பதாக ஒருபருந்தாய்ப் பிறந்து ஆகாசமாகப் பறந்து வந்து தாகமிகுதியாய்ச் சலபருகவேண்டித் திருநாககிரியில் வந்தெய்திக் குளிர்ந்த புனலுடைய பாவநாசதீர்த்தக்கரை யருகில் நின்றவொருமரத்தில் வந்துசயந்தான்.

தண்புனலாடுவோர்தஞ் சட்டகப்புனல்மேற்பட்டு
விண்படர்ப் பருந்தாய்வந்த வியனுரு மாறிச்செய்த
திண்படிறுயபாவச் செயர்க்கையுந் தீர்ந்துதெய்வ
வண்புதுவடிவம்பெற்று வானவர் மகளிர்சேர்ந்தான்.

(இ-ள்.) அங்ஙனந் தீர்த்தமாடுவோர்களுடைய தேகசலந் தெறித்து இதன்மேற் பட்டு ஆகாசத்திற் பருந்தாகவந்த வுருவமாறிப்போய் திண்ணியதாக முன்செய்த கொடிய பாவதோஷங்களுந் தீர்ந்து வளளியதெய்வருபம் வடிவுபெற்று தெய்வப் பெண்களிற் சேர்ந்தான்.—எ-று. (உஎ)

வானவர்விமானத்தேறி வானனுடாசின்பாங்கி
னானகத் துரிவாச நறுமலர்த் தருக்கிழெய்திக்
கானகந்தருவகீதங் களிந்துறக் கேட்டுமுன்னை
யானவந்தண்சிறெல்லா மருட்டிடமதியும்பெற்றான்.

(இ-ள்.) தேவர்களுடைய புட்பகவிமானத்தி லேறித்தேவராஜனான இந்திரன் அருகிற திவ்விய வாசனைபொருந்திய கற்பகதருநிழலில் வந்தெய்திக் கந்தருவர்முதலானபேர்கள வீணைகான கீதங்களும்பாட மனமகிழ்ச்சியாகக் கேட்கேந்து முன்

னே யந்தப்பிராமணன் பெற்றசிறப்பெல்லாஞ் சுமதியென்பவன் பெற்றுவாழ்ந் திருந்தான்.—எ-று. (௪௯)

சுமதிதன் பிரமலோகச் சூழலிற்புகுந்தான்பின்ன
ரெமதுமெய்ச்சிவலோகத்து மெய்தினனென்பர்முன்னோர்
விமிதமாம்பாவநாச வியன்கரைவிதிமாலீசன்
றமதிடமெனவேயென்றுந் திடம்புனற்கரைக்கணீங்கா.

(இ-ள்.) சுமதிமுனியென்பவன் முன்போலத் தன்னுடைய பிரமாச்சிரமச் சூழலிற் புகுந்துறைந்தான் பின்பு நமது சுவாமியினுடைய சிவலோகபதவியும் பெற்றானென்று முன்னோர்கள் சொல்லுவார்கள் ஆகையால் அற்புதமான பாவநாச தீர்த்தக்கரையிற் பிரமா, விஷ்ணு, ருத்திரன் முதலான தேவர்கள் தங்கள் தங்களிடமென்றெண்ணி யந்த தீர்த்தக்கரையினிடத்தைவிட்டுப் பிரியாமலிருக்கின்றார்கள்.—எ-று.

பாவநாசத்தின தீர்த்தம் பரிசித்தானகளுக்கம்போற்
பாவநாசத்தின் றீங்கி லகப்படான் பலரோடொப்பான்
பாவநாசத்தினல்லாற் பதங்கள்சேர்ப் பட்டதெய்தான்
பாவநாசத்தியாளன் பதமுடி பரிப்பன்றுனே.

(இ-ள்) பாவநாச தீர்த்தத்தை யாதொருத்தர் பரிசித்தார்களாகில் அவர்களுடைய தேகம் பொன்வண்ணமாகத் தெய்வவடிவெய்தி துக்கசமுத்திரத்தி லகப்படாமலும் பலரோ டொப்பில்லாமலும் பாவவிமோசனங்களான சுவபதஞ் சேர்வார்களன்னியிலே அதின் முடைப்பட்ட பதங்களிற் சேராது உமையொருபாகருடைய பாதமலர்களைச் சிரசின்மிசை தரித்துக்கொள்வார்கள்.—எ-று. (௫௰)

அதன்புனற் றிவலைசற்றே தெறிப்பினு மகலாப்பாவ
விதங்கள்விண் ணடுக்கும்பஞ்சின் வெவ்வழற் பொறிபட்டொப்பாம்
பதம்பணிந் திறைவைப்போற்றிப் பாவநாசத்தின் பாங்கே
யிதம்பெறுந் தவதானங்கள் செய்தவரெம்பிரானார்.

(இ-ள்.) தண்ணிய அந்தப்பாவநாச தீர்த்தச் சலத்தினுடைய திவலை சற்றேயாதொருவர்மேலே தெறித்தாலுஞ் சாதபாவகங்கள் அண்டமுட்டிய பஞ்சுமலையில் அக்கினிப்பொறி பட்டாலெப்படியோ அப்படி விமோசனமாகும். இறைவனாகிய சுவாமி பாதாரவிந்தங்களைப் போற்றிசெய்து அந்த தீர்த்தத்தின் பக்கத்திலே இன்பமாகிய தவதானங்கள் செய்தவர்கள் எமக்கு சுவாமியா யிருப்பாரென்று சொன்னார் சூதமுனிவர்-எ-று. (௫௧)

பாவநாசத்தையந்தப் பணிமலைச்சயம்புநாதன்
கோவைவா யணங்கைச்செவ்வேற் குமரனை மூததோன்றன்னைக்
காவலா மனங்கொண்டார்க்குங் கருதியிச் சருக்கங்கற்ற
வாவலாருளருக்கெய்து மருட்பல னனந்தகோடி.

(இ-ள்) பாவநாச தீர்த்தத்தை நாககிரியீசுரனைக் கோவைக்கனி போன்ற அதரமழகிய உமாதேவியைச் சவுந்தரீகமான கூரியவேல்பிடித்த குமாரகடவுளை மூத்தநாயனாரைத் தரிசித்து பக்தியுடனே ரூபத்தியானங்கள் செய்து மனத்திலுட்கொண்டபேர்களுக்கு நல்லகருத்துடனே பாவநாச தீர்த்தச்சருக்கத்தை ஆசையுடனே கற்றவர்கள் கேட்பவர்களுக்கு முண்டாகிய அருட்பலன்கள் அனந்தங்கோடியாகுமென்றுசொன்னார் சூதமுனிவர்—எ-று (௫௨)

பாவநாசதீர்த்தச்சருக்கம், முற்றும்.
ஆகச்சருக்கம், ௫௦ க்கு திருவிருத்தம்-அ௱௬௰.

# தன்ம தீர்த்தச்சருக்கம்.

தரும்பலன் பாவநாசந் தன்னிடை மூழ்கிப்பின்னர்
திரும்புகயாருந்தன்ம தீர்த்தமதாடவேண்டி
வரும்பலதீர்த்தமீதாம் பாவங்கள் மாற்றித்தன்மப்
பெரும்பலனுதவித் தீர்த்தப பெயரது பிறங்கிற்றம்மா.

(இ-ள்.) நல்லபலனை யுண்டாக்கப்பட்ட பாவநாச தீர்த்தத்தில மூழ்கின பின், யாதாமொருவர் தன்மதீர்த்தத்தில் மூழ்கவேண்டும் பலதீர்த்தங்களின மேலாகிய பாவங்களைத் தீர்த்தும் புண்ணியபலன்களைக் கொடுப்பதால் தன்மதீர்த்தமென்னும் பெயராய் விளங்கிற்று.—எ-று.

கங்கைநல் யமுனைகோதா விரிசிந்து நனகாவேரி
தங்குநீர் நருமதையிரேவதி சரஸ்வதி சேதுமாகந்
இங்கிதத்தேவ தீர்த்தந் தியாவுமவ் வரமதுபாவ
நங்கண தன்மதீர்த்த நாயகமாற்றுமென்றே.

(இ-ள்.) கங்கை, யமுனை, கோதாவிரி, சிந்து, காவேரி, நர்ம்மதை, சரஸ்வதி, சேதுதீர்த்தம், மாமாங்கதீர்த்தம், இவைமுதலாகிய இங்கிதமான தெய்வதீர்த்தங்களெல்லாம்வந்து பொருந்த பாவங்களை விமோசனஞ்செய்யுந் தருமதீர்த்த நாயகனே யென்று புகழ்ந்துகொண்டன.—எ-று. (உ)

ஆடியும்புகழ்ந்துந்தங்க ளகத்தவ ரவர்தோய்பாவ
மோடவெய் தனையகன்றுய்க்கு முருத்திரர் முதலோர்தேவ
ராடலும் பாடலியாவு மருச்சனைவிதமுந் தம்பாற்
கூடுமுத்தொழிலு மென்மேற் றன்றிக்கோணெறிக்கொளாதால்.

(இ-ள்.) தீர்த்தமாடியுந் தோத்திரஞ்செய்தும் தீர்த்தங்கள் மனமகிழ்ச்சியுடனே மூழ்கிப் பாவங்கள விமோசனமாகிய விதமுல அதனால் சுகமாயிருக்கும் உருத்திரர்கள் முதலான தேவர்களாடல் பாடல் யாவும் செய்யது அருச்சனைவிதங்களுமியற்றித் தங்களிடத்திற்கூடிய முத்தொழிலுமென்மேல் கூடுதலேயாகும்படி குன்றுத லில்லாமல நெறிமுறைமையாகக் கொள்வார்கள்.—எ-று. (௩)

முன்னோர்நாள் மகவான்வந்து முழுகவே பிரமஹத்தி
பின்னையாய்த்தெய்வசெங்கோற் பெருந்தொழில் புரிந்துவாழ்ந்தான்
என்னுமா மறைகளென்றார் சூதமாமுனிப்புங்கன்றே
தன்னிலைச் சவுனகாதி யருந்தவ ரருளின கேட்பார்.

(இ-ள்.) முன்னொருநாளில் அந்தத் தன்மதீர்த்தத்தில் தேவேந்திரன்வந்து மூழ்கினவுடனே அவனைப்பற்றிய பிரமஹத்திதோஷம பின்னபட்டுத் தீர்ந்து தெய்வலோகத்தரசு நடாத்தும் பெரியதொழில முறைமையாகிய செங்கோல்செலுத்தி வாழ்ந்திருந்தானென்றுசொல்லும் மகாவேதங்களென்று சொன்னார். சூதமுனிவர் அதுகேட்டபின் வரலாறு சொல்லுமையாவென்று தன்னிலையுடைய முனிவர்கள் கேட்கச்சொல்லுகிறார்.—எ-று. (௪)

துறவினர் மொழியமுற்றுந் துகளறக்கேண்மி னென்றே
நிறைமறைச்சூதர்வாய்மை நிகழ்த்துவர் மகவான் றன்னைக்

சங்கமேந்திய விஷ்ணுவானவர் தனது மருமகனாகிய முருகருக்குப் பால்க்கடலை கொடுத்ததுபோலும் அழகிய கொம்புகளையுடைய நெடிய காமதேனு மூலையிற்சுரந்தருளிய பாலூறி வருவதாகையால் பால்தீர்த்தமென்று பெயராயிற்று.—எ-று. (

முன்னரன்னையெனவுலக முற்றுமுழுதகடைக்கிப் பெற்றபேதை
தன்னையொருகணப்பொழுதிற் றுதிப்பார்க்குத்தருங்கருணைச் சவுந்த
மன்னுகைலாயவரை மணந்தகன்றுகாஞ்சியிடம் வைகிமேற்பால்
பன்னுமறைநாகமலைப் பாற்கனையைக்காண்பதற்குப் படர்ந்தவேலை.

(இ-ள்.) முன்னாளில் உலகமாதா வென்னத்தக்கதாக அண்டபுவனங்களுமுழுதுந் தன்வயிற்றில் அடக்கிப்பெற்றருளிய மஹாதேவி தன்னை நினைத்தபேர்களுக்கு ஒரு நிமிடத்தில்வந்து வரங்கொடுக்கப்பட்ட கிருபைகூர்ந்த கண்களையுடையவளு கைலாசத்தில் மணம்பொருந்திய பரமேஸ்வரனைவிட்டு நீங்கிக் காஞ்சிபுரத்தில் சிவபூஜைசெய்து தென்மேற்பாரிசத்தில் வேதங்களால் துதிக்கப்பட்ட திருநாககிரியில் புத்திரனைக் காணுங்கருத்தாக அப்போது பிலத்துவாரவழியே வந்தாளாம். எ-

தமதுகருணைப்பெருந்தாய் வருநெறிகண்டறுமுகவர் சரணம்போற்ற
வெமதுயிருக்குயிரனையா யெனும்பரிவினணைத்தமலை யினைத்தபார
வுமையவள்தன்றிருமுலைப்பா லொழுகியதனிடைபரந்து முலகையின்று
விமிதமுளதிருதிருப்பாற் சுனையென்றும்விளம்பியப்பேர் விளங்கிற்றம்மா

(இ-ள்) அப்படி உமாதேவியாகிய கருணாம்பிகையென்னும் தாயார்வருகிற நிமுறைமைதெரிந்து சண்முகக்கடவுளவர்சென்றுகணடு உமையவள்பாதங்களை வணங்கிப்போற்ற மிகுந்த வன்புடனே யென்னுயிருக்குயிராகிய குமாரக்கடவுளே யென்று இரக்கமாக மார்போடணைத்து மலையினைப்போலும பாரிய தனபாரங்களையுடைய உமையவள் திருமுலைப்பால் சுரந்தொழுகி மலையெங்கு மூறிப்பரந்து வீழ்ந்து பெருகாநிற்கும். அற்புதமாகிய உமையவள் திருமுலைப்பால் சுரந்தூறி அமுதமாக விளங்கியபடியினாலே அன்றுமுதல் அதற்குப் பெயர்திருப்பாற் சுனையென்று பெயராய்விளங்கிற்று.—எ-று. (

அன்னகமலையிலகு மமுதசுனையெனும்பெயரு மறைதலாகும்
பொன்னுகவானவரும் புரந்தரனுமுனிவரரும் பொய்கைநீங்கார்
தன்னகத்துள்ளிருக்குந் தாயளித்ததீர்த்தமென்றுந் தருமத்தேனும்
நன்னகமலையானை பாலபிஷேகம்புரிந்த நலமீதென்றும்.

(இ-ள்.) நாககிரியில் அந்தத் தீர்த்தமானது அமுதச்சுனை தீர்த்தமென்னும் பெயரும்பெற்று திகழ்ந்திருக்கின்றது. பொன்னுலகத்துத்தேவர்களும், யிந்திரனும் முனிவர்களும், அங்ஙனம்பிரியாமல் வசித்திருக்கின்றார்கள். தன்னுடைய திருவயிற்றினியுள் ளிருந்தூறிய முலைப்பாலானபடியால் மாதாவாகிய உமையவள் கிருபையினாலே அமுததீர்த்தமென்றும் புண்ணியரூபமாகிய காமதேனு நாகீச்சரனைத் தமது சுரந்த பாலால் அபிஷேகம்புரிந்த வண்மையினால் பால்தீர்த்தமென்றும், பிரசித்தியாய் இருக்கின்றது.—எ-று. (௪௭)

முத்தமெல்லாங்கொழித்துநவ ரத்நமணியருவிநீர் முதிராநிற்கும்
சுத்தமெனும்பெயரதற்கே யலதுவேறொருதீர்த்தஞ் சொல்லலாமோ
வத்தகயமன்றுதொடுத் தின்றளவுமமரமுத நிறமதாகு
நித்தனணிதிருமேனி நிகரொன்பதலந்தொருபேர் நிகழ்த்தலாமோ.

(இ-ள்,) முத்தமணிகளைக்கொழித்து நவரத்தினமணிகளையுடைய மலையருவி யூறிப்பெருகி வாராநிற்கும். ஆகையால் சுத்தோதகமென்னும் பெயரதற்கு

ல்வதல்லாமல் வேறொரு தீர்த்தங்களைச் சொல்லலாமோ. அத்தன்மையால் அமுத லின்றளவுந் தேவாமுத நிறமாயிருக்கும். நிர்த்தனான பிரமேஸ்வரன் அழ திருமேனியை பொய்ப்புச்சொல்லுவதேயன்றி மற்றொருபேர் சொல்லக்கூடி கூடாது.—எ-று. (௫)

தீர்த்தந்தனில்கங்கை யமுனைகோதாவிரிவந் தாடியாடித்
த்தீர்த்தந்தனிற்பூச நாளிலெவர்க்குந்தீர்த்தம் தலத்திலீயும்
த்திகொண்டனங்கனெனக் காமனைவெல்லாதுவிழிக்கனலால்வென்றோர்
ய்த்தீர்வையெனலாகும் பானிறத்தாற்பாற்றீர்த்தம் விளங்கிற்றுமால்.

(இ-ள்.) அந்தத்தீர்த்தத்தில் கங்கை, யமுனை, கோதாவிரிமுதலான தீர்த்தங்க ளெல்லாம் தைப்பூசத்தில்வந்து தீர்த்தமாடி யாவர்க்குமூழ்கப பருகத்தீர்த்தம்பாலிக் மன்மதனை நெற்றிக்கண்ணாலெரித்த பரமேசுவரனுக்குப் பால்வண்ணனென்று யாராகையால் சிவன்றிருமேனி நிறம்போலும், பாலநிறமாயிருக்கிறபடியினாலே தீர்த்தமென்று உலகில் விளங்கியதாம்.—எ-று. (௬)

அமுதநெடுஞ்சுனையிற் பனித்தீர்த்தமெடுத்ததனைப் பாலன்றன்னை
அமுதபிரளயத்தை நிகராகப்பொழிந்திறைஞ்சும் விரதப்பாலோ
விடமருந்தினுமமுதமெனலாகு முளத்தயாவும்		[கும்
காலமுறுமிருத்தியும் கொடும்பவமுங்கொடுங்கனன்முன் குவிபஞ்சேசாக்

(இ-ள்.) நெடிய பாற்சுனையில் குளிர்ந்ததீர்த்தமெடுத்துக் குமாரக்கடவுள் திரு னியில் அமுதபிரளயத்தை நிகராகப்பொழிந் தபிஷேகஞ்செய்து போற்றிவண ம் விரதபான்மையுடையவர்கள் அவ்வாறு செய்வார்களாக. யாதொருத்தர் லம்போலும் விஷபட்சணம் பண்ணினாலும், அத்தீர்த்தமுட்கொள்ள அமுதபா செய்ததபோலாகும் மனமயக்கமுந்தீரும் பலவிதமாகிய அவமிருத்தியுவுங் யபாவங்களும், வடவாக்கினியிலிட்ட பஞ்சுமலைபோலும் நிவர்த்தியாகும்.

ரியானுமரியுடன்வந் தவளானுமரனுமளித்ததீர்த்தம்
ரியாடல்நாகமணி வெற்பருவியாகவிழும் விளைவுகேட்டார்
ரியாதபாதகச்சொற் படர்கோளார்பவத்துயரப் படலமுள்ளா
ரியாடல்நமன்படைப்போ ரிகல்கொளார்கேட்பதுனைவா ரணங்களாமால்.

(இ-ள்.) விஷ்ணுவாலும், விஷ்ணுவுடன் பிறந்தவளாலுஞ் சிவனாலுங் கருணை ய்துண்டாக்கிய தீர்த்தம். படம் விரித்தாடப்பட்ட நாகமாணிக்க மணிநிறமழகிய கிரி யருவியாகப் பெருகியிறங்கும் விளைவாகிய பாற்சுனையி னோசையைக்கேட் கள் கொடியபாதகச்சொல்லுகளையும், பொய்மொழிகளையுங்கேளார்கள். செனன துக்கசாகரத்திலு முழுகார்கள். எரிகின்ற நெருப்புப்போலும், குரூரத்தையு ய யமன் படைப்போரில் விளைவுங்கேளார்கள், கேட்பது வேதாகமபுராணப் சங்கமாம். எ-று. (௮)

பயதீர்த்தந்தனில்மூழ்கிப் பயந்தபிதிர்க்கன்னமறைப் படியேசெய்து
நயதீர்த்தமுடன்கொண்டு நான்மறையோர்க்கேதேனு நல்குந்தானஞ்
செயதீர்த்தமுடியுடன்வாழ் திண்கைலேநிலையாகுஞ் சேயோன்வெற்பும்
வயதீர்த்தம்போற்றுதலு மனத்துநினைத்தனவுமரன் வரமுஞ்சேர்க்கும்.

(இ-ள்.) அப்படிக்கொத்த திருப்பாற்சுனைத் தீர்த்தத்தில் மூழ்கிப்பெற்ற பிதிர்க் களுக்கு வேதமொழிப்பிரகாரம் அன்னமுதலாகிய பதார்த்தங்களபடைத்து திர்ப்தி செய்து தீர்த்தமுட்கொண்டு சதுர்மறை வேதியர்களுக்கு யாதானுமொரு பொருளி

யன்றமரத்திரம் ஞானங்கொடுத்தவர்கள் தெய்வதீர்த்தமுடியுடைய பரமேசுர
ழ்வுற்ற திருக்கயிலை நிலைபெற்றுவாழ்வார்கள். கந்தகிரியும் பெறுவார்கள்.
ர்கள் புகழ்ந்து துதிக்க, மனத்தில் நினைத்தகாரியமுஞ் சித்திக்கும். சுவாமி வ
சாதமும்பெற்று வாழ்வார்கள்.—எ-று.

இக்கிரதீர்த்தத்தை யிருவிழியிற்கண்டுண்ட விகத்துளோர்கள்
மொய்க்கிரமொழித்தாயார் முலைக்கிரமுணவறியார் முகுந்தநாறி
மெய்க்கிரமுடன்றுயில்வார் மிடைத்துயிலினடைத்தபவ விளைவின்றே
கைக்கிருமழுவுமொரு கைக்கிளையுநாற்புயமுந் தவினிற்சேர்வார்.

(இ-ள்.) அந்தக் கிரதீர்த்தத்தை இரண்டுகண்கள் குளிரக்கண்டு தீர்த்தம்ப
யிகலோகத்தார்களனைவருங் கிளிபோலு மொழியுடைய தாய்மார்கள் முலை
முண்ண வறியார்கள் விஷ்ணுபள்ளிகொள்ளுந் திருப்பாற்கடலில் விஷ்ணுசா
பெற்று யோகநித்திரைசெய்வார்கள். மிடையாகிய மயல் துயர்களேதுவாக
பாவவினைக்கடலில் மூழ்கார்கள் ஒருகையில் மழுவும். ஒருகையில் நாணும்,
யவரத மிரண்டுமாகச் சதுர்ப்புயமும் பெற்றழகுபெற விளங்காநிற்பார்கள் -

புண்டரிகப்புரத்திலந்தப் புண்டரிகப்பாதர்மைந்தன் புலம்பஞேக்கி
யண்டரிகத்தருள்கூர வளைத்தனர்பாற்கடலரிபு மரன்பாங்காமும்
விண்டலத்தேனுவுங்குமார் விரும்பவரவகிரியினில் விதித்ததென்றே
திண்டகைநீர்புணர்முன் னூற் செயல்வழியிற்செப்பியனை சேர்ந்துநீங்க

(இ-ள்.) வியாக்கிரமபுரியில் வியாக்கிர பாதர்குமாரன் அழுதுபுலம்புட
பார்த்து யிகபரசாதகமாகச் சிவன்கருணைசெய்து திருப்பாற்கடலை யழைத்
ணக்கொடுத்தார். விஷ்ணுவும், உமையவளும், தேவலோகத்துக் காமதேனுவுங்
ரர் விரும்பும்படியாக நாககிரியிலுண்டாக்கிய தீர்த்தமென்னத்தககதாகத்
மைத்தகைமையுடைய நெடியபுராண முன்னூல்கள்சொல்லுஞ் செயல்வழிய
சொல்லியபிரகாரம் திருமாலானவர் எப்போதுஞ்சேர்ந்து பிரியாமலிருப்பார்.எ

எழுவகைதீர்த்தமுந் தினந்தம்மிறைதீர்த்தமெனமூழ்கிற் கியலுந்தீர்த்தம்
வழுவறக்கர்விரிநதியெப் பொழுதும்பாதாளவழி வந்துதோயுஞ்
செழுமலர்க்கொன்றைச்சடையான் றிருமுடியிலொருபங்கு மிதனேர்பங்
வழுவறவேநிற்குமென்றால் மலைபொழிகிரச்சுனையாம் வழங்கற்பாற்றே.

(இ-ள்.) சப்தமஹாதீர்த்தங்களுந் தினமுந் தங்களுக்கு மேலான தீர்த்தமென
வந்து மூழ்குவதற்கு விசேஷமகிமையுடையது பால்தீர்த்தம் வழுவில்லாமல்
வேரிநதி யெப்போதும் பாதாளவழியாகவந்து தோய்ந்துநிற்குஞ் செழுமையு
பொற்கொன்றை மாலைசூடிய சடையனுன பரமசிவன் திருமுடியில்மருவிய க
சிவன்சடையி லொருபங்கும் அந்தப் பால்தீர்த்தத்தி லொருபங்குமாகப் பிரியா
கலந்துநிற்கும். ஆகையால், நாகமலை பொழியப்பட்ட கிரதீர்த்தத்தின்பெருமை
நம்மாற்சொல்லும் பகுதியல்லவென்று சூதமுனிவர் சொன்னர்.—எ-று. (கூ

பாலாழியிடைபயில்பண் ணவனளந்தபடியனைத்தும் பரிவாற்சுற்றி
மேலாயதீர்த்தத்தின் விரும்பியமாகந்தோய்ந்து மிந்தத்தன்ம
மாலாலமுண்டபிரா னர்த்தநாரீசனரா மலையைச்சுற்றிச்
சேலாறும்புனற்கிர தீர்த்தமொருக்கால்மூழ்கிற் சித்தியாமால்.

(இ-ள்.) பாற்கடலிற் றுயில்பயின்ற விஷ்ணுவானவர் அளந்த மண்டலமெல்
லாம் பரிவாகச்சுற்றி மேலானதீர்த்தங்களில்மூழ்கி விருப்பமாக மாமாங்கதீர்த்தங் கு

அநேக் தானதன்மங்கள்செய்தும் இகலோகத்தார்கள் ஆகிகால விடநகர்
வெம்பிரானுன அர்த்தநாரீஸ்வரர் பிரிடாமலிருக்கின்ற திருநாககிரியைச்
சயல்பொருந்திய புனலுடைய கிரதீர்த்தத்தி லொருதரமுழுகினுல் அரதப் பல
னம் சித்தியாகிவாழ்வார்கள்—எ-று. (கஅ)

ஈானமாடகத்தா னம்பரிதானங்குலகன் னிகையாதானம்
ம்பாற்சுனையிற் படிந்துகரையிற்கொடுத்த புவியோர்க்கெல்லா
ானவானுலகு மாமடவார்சூழலுஞ்சா மளபாய்மாவுஞ்
ராவுன்றுயிர்காம தேனுவும்பெற்றரசிருப்பர் தேவர்போற்ற.

இ-ள்) கோதானஞ் சொர்ன்னதானம், அசுவதானங் குலவுசிதமான கன்னி
னம், பூமிதானம், இவையெல்லாம் திருபபாறசுனையின்மூழ்கி தீர்த்தக்கரையில்
யார்களுக்குக் கொடுத்தருளிய உலகத்தார்க்கெல்லாம் உயர்ந்த தானமான
லோகமும், அறமகளிர்சூழலும் விரைந்துபாய்கின்ற நீலவர்ன்னக்குதிரையுங்
ப்பசுவென்று சொல்லப்பட்ட காமதேனுவுஞ் சொந்தமாகப்பெற்று அரசா
ய்து தேவர்கள் போற்றிசெய்ய வீற்றிருப்பார்கள்.—எ-று. (கக)

கிரதீர்த்தச்சருக்கம் முற்றும்.

ஆகச்சருக்கம்.—கரு.க்கு திருவிருத்தம் உஎ எட.

# சண்முகதீர்த்தச்சருக்கம்.

றுந்தண்சுனையினரும் பலனுரைப்பன் தன்மசக ளுயவேந்தன்
னந்தகாலநெடுங் குவலயமெல்லாம்புரந்தான் குமாரனில்லா
லிங்கவகிலதலம் புரப்பதனுக்கியாரெனவேந் திரக்கங்கூர்ந்து
றுமடவியர்புணர்ந்தும் நொய்திலொருங்கவலையென நுவல்வதம்மா.

(இ-ள்.) மிகவுங் குளிர்ச்சியுடைய ஆருஞ்சுனைதீர்த்தத்தின் மகிமையும் அரிய
னுஞ் சொல்லுகிறேம் தன்மசகராஜனுனவன் அளவில்லாதகாலம் இப்பெரிய
டலமுழுதும் அரசாட்சிசெய்து பிற்காலத்திற்கு இந்தமண்டலத்தை ஆளும்ப
தப் புத்திரசந்தானமில்லாதபடியினுலே இராஜா மனங்கரைந்துருகி நூறுபெ
ளை மணஞ்செய்து புணர்ந்தும் ஒருபிள்ளை யில்லாமற்போச்சுதே இனி யென்ன
வெனன்று துக்கித்தான்.—எ-று. (க)

னுயகாலேமணமடவா ரிதற்கானதருமமியற் றுதிநீயென்ன
ங்கர்ணும்புருடர்துலா பாரமஸ்வமேதயவித் தருமயாகம்
ங்காணும்பிதிர்முறையோர் சிறப்பவறுவகையிரதச் சிரார்த்தமற்றும்
ங்காணுந்தருமங்கள் மந்த்ரசெபமனந்தவகை மகிழ்ந்துகூர.

(இ-ள்) தன்மசகராஜன் பிள்ளை இல்லையென்று துக்கித்தபோது தேவிமார்
சொல்லுகிறார்கள். புத்திரசந்தான முண்டாகும்படியாக அதற்கான தானதரும
ளைச் செய்வீராகவென்றுசொல்ல அப்படியே சொர்ன்னபுருட துலாபாராதானம்
மேதயாகம் தென்புலத்தாராகிய பிதர்க்கள் மனங்களிகூரத் திவசதினங்களில்
றுவகை இரத பதார்த்தங்களாலுந் திருத்தியாகும்படி சிரார்த்தங்கள் மற்றும் பல
னதருமங்களுஞ்செய்து அநேகவித மந்திரசெபங்களும் மனமகிழ்ச்சியாகக் கரு
கூர்ந்து செய்தான்.—எ-று. (உ)

அத்தருமத் தாற்றன்மசகன்றேவி முதற்கொடியோ ரரசையீன்றாள்
புத்திரற்குச்சந்த்ரகுமாரப்பெயரைப் பொருத்தினரப்புதல்வன்றன்னை
யுத்தமத்தாற்றொண் ணூற்றொன்பதின் மருந்தாமுறுகருணை யுவப்பிற்பே
வைத்திடுநாளொருதேளம் மகவினைத்தீண்டியதன்னைமா வருத்தங்கூர.

(இ-ள்.) அப்படிச்செய்த புண்ணிய தபோபலத்தினாலே தன்மசகராஜன் தே
மார்களில முந்தின பட்டப ஸ்ரீதேவி ஒருபுத்திரனைப்பெற்றாள். அந்தப்பிள்ளை
சந்திரகுமாரனென்னும் பெயரிட்டு மற்றும் தொண் ணூற்றொன்பது தேவிமார்க
உத்தமகுணமான தங்கள் கருணைப்பிரியத்தினாலே நன்றாய்ப்போற்றிவைத்து வரு
கின்றநாளில் ஒருநாள் அந்தப்பிள்ளை வருத்தப்படத்தக்கதாகத் தேள்கொட்
யது —எ-று.

மதலைவருந்தும்படியால் மங்கையர்நூற்றுவருமிகவருந்துமோதை
யதனையறிந்தரசனன்று படுந்துயரந்தளவிதென்னவறைதன்மேயா
சதமணிமந்திரஅவிடதத்தினாற் கணப்பொழுதிற்றணிப்பித்தான்பின்
னுதவருமைந்தன்பேறுபேறன்றே மற்றையர்க்குமுறுஞ்சேய்வேண்டும்

(இ-ள்.) அந்தப்பிள்ளையானது தேள்கடியால் வருத்தப் படுவதுகண்டு பெ
கள்நூறுபேரும் மனதுநொந்து அழுகின்ற சத்தத்தை தன்மசகராஜன் அறிந்து
ப்பிள்ளையின் வருத்தத்தை சதவிதமணிமந்த்ர அவிழ்தங்களால் ஒருவிநாடிப்பொ
தில் தணிப்பித்தான். பின்பு இப்போதுண்டாகிய ஒருபுத்திரனைப் பெற்றபேறு
ல்ல இந்தப்பெண்களுக்கெல்லாம் புத்திரசந்தான முண்டாக வேண்டுமென்று
ல்லிப்பின்னையும் அரசன் சொல்லுகிறான்.—எ-று.

யானும்விருத்தாதிபனு மேந்திழைநூற்றுவருமுதிர் வெய்தினார்பான்
றானுதவுபலனனந்தந் தாபதர்சொற்படியமைத்தேன் மறையோர்கேண்
மேனையிவரிவர்க்குமக வெய்தவொருப்பணிலையோ வியம்புகென்ன
ஞானவானொருவன்மன்ன நூறுகுமாரரைப்பெறுவீர் ஞாலங்காப்பார்.

(இ-ள்.) தன்மசகராஜன் தன்சமுகத்திலிருந்த வேதியர் கூட்டங்களைப் பா
து யானும்விரத்த ராஜனானேன். தேவிமார்கள்நூறுபேரும் முதிர்ச்சியடைந்தா
யான்செய்த தானதர்ம்ம பலன்கள்அநேகவிதமாகத் தபோதனர்களானபெரியோ
ள்சொற்படியாகச் செய்தமைத்தேன். அதனாலொருபுத்திரனைப் பெற்றோ,மற்றுமி
பெண்களுக்கெல்லாம் புத்திரசந்தான முண்டாகத்தக்க தபோபலனில்லையோ செ
லுவீர்களென அங்ஙனமவர்களில் ஞானவானொருவன் ஓஓ அரசனே நீர்நூறுபி
ளைகளைப் பெறுவீர் அவர்கள்இந்த உலகத்தையாளவாராகள் இதற்குவிபரஞ் சொ
கிறேனகேளுமென்று சொல்லுகிறான்.—எ-று.

சேடகிரியெனுமர்த்த நாரீசர்வெற்பில்மறை தேவர்கூடி
நீடுதவம்புரிகுவரான் னெடுங்கிரியிற்சுனையாறொன் றாகக்கூடி
யோடுமதனுறுபகுப்பா முறுபுனற்றீர்த்தந்திருக்கார்த் திகையாமின்னு
ராடியதுநீருமவண் சென்றாடி லுமக்குமக வனந்தம்வேண்டும்.

(இ-ள்.) சேஷகிரியென்று பெயர்விளங்கும். அர்த்த நாரீஸ்வரர்யெழுந்தருளி
கிரித்தலத்தில் வேதியர் தேவர்கள்கூடி நெடியதவஞ் செய்வார்கள். அந்தக்கிரியி
ட்த்தில் ஆறுசுனை ஒன்றாகக்கூடி அதனுட் பகுப்பாகியுற்றிருக்கும் அந்தநளிர்ந்த
தீர்த்தத்தில் திருக்கார்த்திகைப்பெண்கள் வந்து நீராடிபேறுபெறறாாகள். நீரும் அந்

ல சேர்ந்து அந்தச்சுனைத் தீர்த்தமாடினால் உமக்குவேண்டிய புத்திரர்களு ாகுமென்று சொன்னார்.—எ-று (சு)

டுமெனவுரைத்தமறைபு புரோகிதனுமெலவிபலநூற் றுவருமீண்டி
டரவமலேயிடத்திற் குறித்தவறுதீர்த்தகரைக் குழுக்கொண்டுய்தார்
டகையவேதியரும் தெய்வமகபூசைசிவ பூசைநாளு
டகையிற்புரிபவரு மாசிமொழிநதருந்தவரோ டுடன்வந்தாரால்.

இ-ள்.) என்றிப்படிச்சொன்ன வேதபுரோகிதனும் ராஜஸ்தரீகள் நூறுபே ககிரிதலத்திலவாந்து குறிப்பாகிய ஆறுமுகசுனைத தீர்த்தக்கரையில் கூட்டமா ந்தார்கள். அங்ஙன மேலோரான பெரியோர்களு, மறையோர்களுந தெய்வ ஜை சிவ பூஜை வழுவாமல தவஞ்செயபவர்கள் அனைவரும ஆசீர்வாதஞ்சொ ியதவமுனிவர்களுடனே வநதாரகள்.—எ-று. (எ)

க்கபுரோகிதரில்மறை வியந்தசதுர்வேதாங்கி யென்பான்றன்சொல்
த்தனைநீர் டித் தன்மசகாபனுஞ்சந்த்ர குமாரன்றனும்
கனை மீகியநூறு மடவியருமுடனிருந்தி மகயாகஞ்செய்
ாக்கவறுசுனைமூழ்கி யுயர்ந்தோர்க்கு மாதான முதவுகினாருன.

(இ-ள்) மேன்மையான புரோகிதரில வேதவேதாங்கியாகிய சதுர்வேதாங்கி ன்பவன் சொற்படியே தகைமையான சுனைகளில தீர்த்தமாடி தன்ம சகாராஜ , பிள்ளை சந்திரகுமாரனும மைதீட்டிய கண்களுமுடைய நூறுபெண்களுடன்வந்து ிரகாமேஷ்டியாகஞ்செய்து ஆறுமுகசுனைதீர்த்த மூழ்கி பெரியோர்களுக்கு தானங்களுதவினான்.—எ-று. (அ)

நவிசெய்யவ்வோமத்தி னுயத்தருளுஞ்சுதையமுத மொருநூற்றன்ன
ந்நடைவெண்ணகைநூறு மெல்லியலாருக்களித்த வேதவோமத்
தமுளவேதாங்கியெனும் தேசிகனப்படியருளச் சிறந்தநூறு
தயத்துவிளங்களிறு போலுதித்தார்வளர்ந்துலக மனனராணர்.

(இ-ள்.) அப்படிசசெய்த புத்திரகாமேஷ்டியாக ஓமகுண்டத்திலுதித்த சுதை த்தை அன்னம்போன்ற நடையும வெள்ளிய நகையுமுடைய ராஜ ஸ்தரீகள் பெண்களுக்கும கொடுத்தருளச்செய்து வேதமந்திரவோமம் உசிதமாகசசெ முடித்த சதுர்வேதாங்கியென்னுந்தேசிகனுடைய கிருபையினாலே சிறப்புடை ரஜன் நூறுபெயரிடத்திலும் மதோன்மத்தமான இளங்களிறுகள்போலும நூறு ராகள் பிறநது வளாநது உலகமன்னர்களானாரகள.—எ-று. (கூ)

ச்சூதருரைத்தபின்ன ரிலக்குநைமி சாரண்யத் திருந்தோர்கேட்ப
ாச்சூதகருயினடைச்சொ லயபிகைபங் கடைந்தபிரா னகலாதோங்கப்
ாச்சூதமூலக்குறப்பெண்பொருந்துருகனிருப்பவாரப்பொருப்பில்வேதக்
ாச்சூதவத்தீர்த்தந் தனிலிருது மகவுதவுங் கதையாதென்றா.

(இ-ள்.) என்றிபபடிச் சூதமுனிவர் சொன்னபின்பு விளங்கிய நைமிசாரணிய முனிவர்களனைவருங் கமலமுகிழ்போன்ற தனபாரமுங் குயில்போன்ற மொழியை முடைய அழகிய உமாதேவிகருத்தமது வாமபாகங்கொடுத்து அர்த்தநாரீஸ்வரராக ழுந்தருளிப் பிரியாமலுயர்ந்தோங்கித திணைப்புனத்தில் மருவிய வள்ளிமணவாள ன குமாரக்கடவுளும் விளங்கியிருக்கின்ற நாகிரியில வேதமோதிய பெருமையு டய சூதமுனிவரே! அந்த ஆறுமுகசுனைத் தீர்த்தத்தில் புத்திரசந்தானப்பேறு தருங் தயா தென்று முனிவர்கள் வினவிக்கேட்டார்கள்.—எ-று. (ய)

முனிவரவர்கேட்பவருட் சூதர்மொழிவாராறுய் முளைத்ததீர்த்தம்
கனிமுருகையரன்பயந்த வந்நாளிற்கார்த்திகைமங் கையர்கொங்கைக்கா
யினியவறுமுகமெய்தி யிறைறவனருட்படிவளர்ந்த விகல்வேற்கந்தர்
துனியகலச்சூர்தடிந்து தோய்ந்தாறுமுகத்திறுக்குந் தொகைநீகண்டாய்,

(இ-ள்.) முனிவர்கள்கேட்கக் கிருபையுடைய சூதமுனிவர் சொல்லுகிற அந்தத்திருநாககிரியில் ஆறுசுனை யொருசுனையாக உதித்த தீர்த்தம். கனிவாகப் மேஸ்வரன் கந்தசுவாமியைப் பெற்றநாளில் கார்த்திகைப்பெண்கள் முலை முனைவேண்டி ஆறுமுகவடிவுமாகி சிவனுடைய அருளினாலே வளர்ந்த வே யுதக்கடவுளால் தேவர்கள் துயரந்தீரச் சூரனைச் சங்கரித்த பாவதோஷம் நிவிர் யாகவந்து தீர்த்தமாடும்போது ஆறுமுகத்துக்குக் கணக்காக அவர் கிருபையினு ஒருசுனையி லாறுசுனை யாகும்படி விதித்தருளினர்.—எ-று.

கண்டமுதற்றொடங்கியது சண்முகதீர்த்தங்களென்றுங் கழறலாகும்
புண்டரிகன்முதற்றேவர் புகுந்துதினமூழ்கியங்ஙன் போற்றிநீங்கார்
பண்டருமாதவர்மடவார் படரகலமூழ்கினர்கள் பாங்கினாலும்
திண்டலத்தின்கார்த்திகா தீர்த்தமென்றுஞ் செகமனைத்துஞ் செப்புமாலே.

(இ-ள்.) ஆறுமுகக்கடவுள் கண் டுண்டாக்கிய தீர்த்தத்தை அன்றுமுதலாகச் முகதீர்த்தமென்றுஞ் சொல்லலாச்சுது. அத்தீர்த்தத்தில் பிரமதேவன் முதலான வர்கள் புகுந்து தினமுமூழ்கி யங்ஙனம சிவனைப்போற்றிசெய்து பிரியாமலிரு ரூர்கள். முனிவர் பத்தினிகள ஆறுபேரும்வந்து தங்கள் துயரந்தீர மூழ்கினபடி திண்மையுடைய இந்தத்தலத்தில் கார்த்திகா தீர்த்தமென்றும் செகமெல்லாம் ங்கிற்று.—எ-று.

அத்தீர்த்தப்பயனதனு லருளியநூற்றொருபால ரவனியாள
வைத்தீசன்பதம்பரவ மன்னுவித்துமுருகனர்த்த நாரீசன்பேர்
முத்தியிலந்தணரால் மொழிவித்துச்சிவபூஜை முறையும்பூட்டிச்
சத்தீதுபின்னசத்தீ தேவுணர்த்தித் தன்மசகன் றவமேற்கொண்டான்

(இ-ள்.) அந்தச்சண்முகதீர்த்த மகிமையினாலேவசித்த ராஜகுமாரர்கள் நூற்றொ ருபேரும் இந்தமண்டலத்தைப்போற்றிசெய்துமுருகவேள் அர்த்தநாரீஸ்வரரின் திரு ப்பெயர்கள், முத்திவளாக்கின்ற அந்தணர் மறைமுனிவர்கள் வாக்கினாலே சாற்று வித்து சிவபூஜை முறைமையும்பூட்டி சத்து அசத்து இவ்விரண்டும் தெரியும்படி அறிவுண்டாக்கி மக்களை அரசாளவைத்து தவமேற்கொண்டிருந்தான் தன்ம சக ராஜன்.—எ-று. (௧௩)

புரிந்தருள்சண்முகதீர்த்தம் புகுந்தாடிப்பணிப்பொருப்பிற் றவங்கூர்போதந்
தெரிந்துமங்கைபங்கனையுஞ் சேவைசெய்துமுற்றியனுட் டெய்வலோகம்
புரிந்தனனப்பொழுதுமைந்தர் நூற்றொருவர்தந்தைக்கும் பயந்ததாய்க்கும்
விரைந்துபிதிர்க்கருமமுற்றி வெற்பிலிறையைத்தொழுது வியந்தார்வேந்தர்.

(இ-ள்.) அந்தப்பிரகாரஞ் சண்முக தீர்த்தத்தில்புகுந்து தீர்த்தமாடி நாககிரியில் வாசமாகவிருந்து தவங்கள்செய்து ஞானோதயம்பெற்று உமையொருபாகனையுஞ் சேவைசெய்துவணங்கி விரதமுற்றியநாளில சொர்க்கலோகபதஞ்சேர்ந்தான் தன்ம சக ராசன். அப்போது பிள்ளைகள நூற்றொருவரும்வந்து தங்களைப்பெற்ற தந்தை, தாய் இருவருக்கும் பிதிர்க்கருமங்கள் யாவுஞ்செய்து முடித்து நாககிரியீஸ்வரரை இராஜ குமாரர்கள் வணங்கித் தோத்திரஞ்செய்தார்கள்.—எ-று. (௧௪)

ந்துபானுக்குமிக்க வேலவருக்குமனந்தகயிங் கரியமாக்கி
ந்தசிவபூஜைமுரு கேசருக்குநற்றிருநாள் நாகேசர்க்கு
ந்திகழ் வேதாகமத்தின் வண்ணமிகத்திருவிழா வளங்களாக்கி
த்துதன்ம சகனூற்றி னெருவரெனப்புவிபுரப்ப நகரின்மீண்டார்.

(இ-ள்.) தோத்திரஞ்செய்து வணங்கிப் பரமேஸ்வரனுக்கும் வேலவருக்கும் னக கயிங்கரியங்கள்செய்து பத்தியாக சிவபூஜை கட்டளை நடத்துவரும்படி வித்து முருகருக்கும், நாகேசருக்கும், வேதாகமப்படி திருவிழாநடத்தி வள யாக நயப்புடனே சிவனருள்பெற்று தன்ம சகநூறறொருபெயர்களும் உல யாள மீண்டுபோய்த் தங்கள் நகரஞ்சேர்ந்தார்கள்.—எ-று. (௧௫)

றைநாமந்தரித்த நூற்றொருவேந்தருநூற்றோர் வெற்புப்போலக்
ண்டகயவாலயமுங் கோபுரமும்மண்டபமு மகஞ்சூழ்சோலைச்
ண்டிகழவியற்றினர்நூற்றொருவரில்முன்னுதித்தவந்தத்திறல்வேந்தற்குத்
ண்டுகதிர்மணிமகுடஞ் சூட்டினர்செங்கோல்நெறித்தொல் புவியில்வா
[ழ்ந்தார்.

(இ-ள்) இராஜகுமாரர்கள் சுவாமியினது பெயர்பெற்ற நூற்றொரு இராஜ ராகளும், நூற்றொருமலைபோலத் திருக்கோபுரங்களுந் திருமதிலமண்டபங்க ந்தவனப்பூஞ்சோலைகளும், மேன்மையாய்விளங்கச் சிவபுண்ணியங்கள்செ சிவகிருபையினாலே நூறறொருவரில் முன்பிறந்த திறமையுடைய இராஜனுக் பிரபைபொருந்திய மகுடஞ்சூட்டினார்கள். செங்கோனீதி நெறிமுறைமையாக ட்சிசெய்து பூமண்டலத்தில் வாழ்ந்திருந்தார்கள்.—எ-று. (௧௬)

சண்முகதீர்த்தச்சருக்கம் முற்றும்.

ஆகசருக்கம். ௱எ-க்கு திருவிருத்தம். ௬அ௮.

---

## சருவதீர்த்தச் சருக்கம்.

ர்த்தராஜனென்றொருபெயர்விளங்கியுந் தீர்த்தசேகரனென்றும்
ர்த்தைகூறியசர்வதீர்த்தந்தனை மனனிடைநினைவானோர்
ர்த்தரும்பிறவிப்பெருஞ் சூதகப் பெருங் கடல்கடந்தேகச்
சீர்த்தயங்கிய திருக்கயிலாயமே திருமனையெனவாழ்வார்.

(இ-ள்.) தீர்த்தராஜனெனறும், தீர்த்தசேகரனென்றும், யாவருக்குஞ்சொல்லப் பெயர்பெற்று விளங்கிய சர்வதீர்த்தத்தை மனதிலநினைத்தவர்கள் மறுபிறவியா ன பெருஞ்சூதகப் பவக்கடலைக்கடந்து சென்மசாபல்லியமாகி வளமையுடைய ஸ்ரீ கைலாசமே திருவீடாகச்சேர்ந்து வாழ்வார்கள்.—எ-று. (௧)

அன்னதுத்தரக்கீட்புறத்தமைவுறவழகியசெழுந்தீர்த்த
மன்னெறிப்படவுரைத்தன மதனிடைமுறைமுறை யுறமூழ்கிற்
பின்னவன்குலப்பாதகமிலக்கசென் மந்தனிற் பெரிதோங்கி
மன்னுகின்றவெந் துயரறுஞ் சிவன்பதம் வாழ்வினுக்குரித்தாவார்.

(இ-ள்.) அந்தச் சர்வதீர்த்தம் வடகீழ்ப்பாரிசத்தின் அமைவாக அழகுபொருந்தி யிருப்பது செழுமையுடைய தீர்த்தமகிமைகள, நெறிமுறைமையாகச்சொன்னோமே

யவற்றையெல்லாம் வரிசைவரிசையாக மூழ்கினபின்பு சருவதீர்த்தத்தில் மூழ்வர்கள் கொலைபாதகங்களெல்லாந்தீர்ந்து லட்சுமிசென்மங்களிலும் பெருமைபெற்றோங்கி வெவ்விய துயரங்களெல்லாம் நிவாரணமாகிச் சிவன்பதத்திற்சேர்ந்து வாழ்ந்திருப்பதற்கு மிகவும் உரியவர்களாவார்கள்.—எ-று.

என்றுரைத்தபின்சூதனைமாதவ ரிருடிகளனைவோருந்
தன்றுறைப்புனற்சர்வதீர்த்தத்தினிற் றகைமையைவிரித்தோதென்
றென்றுரைத்தனர்சவுனகர்கேட்டியென் றெண்மறைத்துறைச்சூதர்
குன்றிடாவகைகூறினர்யானது கூறுவன்சிறிதுகேண்மோ.

(இ-ள்.) என்றிப்படிச் சூதமுனிவர் சொல்லக்கேட்ட மாதவரான முனிவர்கள் அனைவோரும் குளிர்ந்த புனலுடைய சர்வதீர்த்தத்தின் தகைமையை விரித்துச் சொல்லுமையாவென்றுகேட்க; அப்படியே சவுனகாதி முனிவர்களே கேளுமின்களென்று வேதநெறிமுறைமையுடைய சூதமுனிவர் குன்றுதலில்லாமற் சொல்லியருளினார். அப்படியே உலகத்தார் கேட்கும்படியாகச்சொல்லும் புராணிகர்கள்.—எ-று.

கவுரிபங்கினன்கனிந்துறையசலமே கவுரிபங்கினனேறும்
பவுரிவண்புனற்சர்வதீர்த்தந்திருப் பச்சைமால்வடிவென்று
மிவுரைதன்னிலோர் பேதமற்றெண்ணுவார்க் கிகபரமிரண்டெய்தி
யவுரியாடையன் ஆட்கவாடைய னருட்பதத்தடைவாரால.

(இ-ள்.) உமையொருபாக ரெழுந்தருளிய, கிரியே! உமையொருபாகரென்று சர்வ தோஷங்களைத் தீர்க்கின்ற, வள்ளிய புனலுடைய சர்வ தீர்த்தம் நீலமேனியனான திருமால் வடிவென்றுஞ், சொல்லிய வேத வாக்கியங்களை பேதகமில்லா மனத்தையுடையவர்களுக்கெல்லாம் இகபரசாதக பலன் பெற்றுவாழ்ந்து, பின்பு புலியுரியாடையனான சிவன்பதமும், பொன்னுடையவனான விஷ்ணுபதமும் அனுக்கிரகப்படி சேர்வார்கள்.—எ-று

கெங்கையச்சுதன்வடிவுதன்கெங்கையே கீசன்மாமுடிக்காந்தை
சங்குசக்கரன்சங்கரனெனவிரு தகையலவதுகேண்மி
னெய்குமாலுறைநெய்யென பூமரு வெனத்திலநெய்போலத்
தங்குபாங்கறிந்தொன்றெனுங்கங்கையைச் சர்வதீர்த்தமதாகும்.

(இ-ள்) கெங்கா நதியே! விஷ்ணுவடிவமாகும். அதனுலந்த கெங்கையொரு பொருளான பரமேஸ்வரன் திருமுடியில் பெண்ணுருவமாக அமர்ந்து சங்குசக்கரபாணியென்றும், சங்கரனென்றும் இரண்டு தகைமைப்பொருளல்ல. அவைகேண்மின்கள் யெங்ஙனமெனில் பாலிற் கலந்திருக்கும்நெய்போலவும், பூவின்மணம்போலுமெள்ளுமெண்ணெயும்போலும் தங்கிக் கலந்திருக்கிற பான்மையால் அறிந்துணர்ந்தபெரியோர்களொன்றென வெண்ணுவார்கள். ஆகையால், கங்கையே சர்வதீர்த்தம்.—எ-று. ரு

சருவதீர்த்தமென்றொருபெயரொடுத்தரன் சருவமா நதிவிண்ணின்
சருவதீர்த்தம்வந்தாடவுமன்னவர் தங்கள்வெம்பிறப்பாய
சருவதீமையைத்தணிப்பவும்பணிமலைத் தடத்துநற்றடமாகிச்
சருவரூபமாய்ச்சருவதன்மங்களாய்த் தழைத்ததன்வடகீழ்பால்.

(இ-ள்) சர்வதீர்த்தமென்றொரு பெயர்விளங்கத்தக்கதாகச் சிவன்கிருபையினாலே சர்வமாநதிகளும், விண்ணுலகத்தில் சர்வதீர்த்தங்களும் வந்து தீர்த்தமாடவும் இந்த மண்டலத்தார்களுடைய வெய்யபிறப்பென்னுஞ் சர்வதீமைகளையுந் தணிப்ப

வும் திருநாககிரியின் தீர்த்தங்களில் மேன்மையாகிய தீர்த்தமாகிச் சர்வ ரூபமாய் வ்வபுண்ணியங்களாய்க் கிரியின் வடகீழ்ப்பாரிசத்தில் தழைத்திருக்கின்றது. ()

பதீர்த்தமீதாடியபலனதிற றருதலால் நவதீர்த்தம்
பிடந்தமக் கெனத்தினம் டருதலால் சகலபாதகதிமை
வினைத்துய ரகற்றலாற்பணிமலை யுச்சியுத்தரகீழ்பால்
கசுனைக்குநம்பெரியவர்சருவதீர்த் தப்பெயர்பகர்ந்தாரால்.

(இ-ள்) சருவதீர்த்தங்களிலே தீர்த்தமாடிய பலனெல்லாம் இந்த சர்வதீர்த்த கொடுக்கிறபடியால் உலகத்தில் நவதீர்த்தங்களும் புகலிடந் தமக்கிதுவென்று தின ருந்து தோய்வதால் சகல பாதகத்திமைகளும் பழவினைத்துயரங்களும் தீர்க்கின்ற யாலும், நாககிரியுச்சிக்கும், வடகீழ்ப்பாரிசத்திலே விளங்கியிருக்குஞ் சுனைக்கும் ந பெரியோர்கள் சர்வதீர்த்தமென்னும் பெயர்சொன்னார்கள்.—எ-று. (எ)

ன்றுபத்துடன் மூன்றுகோடிச்சுனை முறைமுறைமுதற்றேவ
ன்றுதங்க ளர்ச்சனையினுற்சுனையெலாம் விதித்தார்பின்
ற்றனிப்பொருட் பணிமலைத்தலத்தினிற் சகலதீர்த்தமுமொன்றாய்த்
ரன்றுறத்தனவமரர்யாவரு மதிற் றோய்ந்தரன்பணி கூர்ந்தார்.

(இ-ள்) முப்பத்தமூன்றுகோடி தீர்த்தங்களை முறைமுறையே, முதலாகத் தே ள் இயற்கையாய்த் தங்கள் தங்கள் அர்ச்சனைவிதியினால் சகல தீர்த்தங்களையும் த்தார்கள். பின்பு தான் தனிப்பொருளென்னும் நாககிரிதலத்தில் சகலதீர்த்தங்களு ன்றாய்த் தோன்றுவதாகியுறும்படிச் செய்தமைத்தார்கள். அதனில் தேவர்கள் ரும் தீர்த்தமாடிச் சிவபூஜைபணிவிடைகள் செய்து களிகூர்ந்திருந்தார்கள். எ-று

த்வர்க்குழாம் மறையவர்திருக்குழாம் மாநிலநரர்யாரும்
பர்தமுற்றவண் வந்துநாகத்தனிப் பொருப்பினைவலமாக
ாதரித்துமச்சுனையனந்தங்களி னுடியாபுறகாகக்
காதையம்பதிகுலவியசருவதீர்த் தத்தினிற்குளிப்பாரால்.

(இ-ள்) மாதவர்கூட்டங்களும் வேதியர்கூட்டங்களும் மண்டலத்தில் மனிதர்க ானைவருஞ் சிவஞானபோதமுற் றங்ஙனம் வந்து திருநாககிரியை வலமாகச் சுற் நமஸ்கரித்து அன்புடனே யந்தச்சுனைகள் அனேக தீர்த்தங்களிலும் தீர்த்தமாடி பின் கோதை நகர்குலாவிய சர்வதீர்த்தத்தில் குளிப்பார்களாக.—எ-று. (௯)

ழுந்தவந்திரதீர்த்தமதாகிய வெழிற்சுனைதனில்மூழ்கி
வந்துவந்தனைமூற்றிமாதொருபுற மணந்தபாகனைவேற்கைக்
கந்தனைத்துணைநாற்பதுமந்தனைக் கைதொழுதருஞ்செய்து
தந்தையாலுயர்தென்புலத்தவர்கடன் செய்வதுசெயலென்றார்.

(இ-ள்.) அப்படி அழகிய தீர்த்தமாடிச் சர்வதீர்த்தத்தில் யாவரும்வந்துமூழ்கி வந்தனை வழிபாடுசெய்து உமையிடப்பாகங்கலந்த அர்த்தநாரீஸ்வரன் வேல்பிடித் த கைகளையுடைய கந்தசாமி இவர்கள் பாதாரவிந்தங்களைக் கைதொழுதுபோற் றித் தன்மதானங்கள்செய்து மனோகரமிகுந்த தென்புலத்தாரான பிதிர்க்கள் கட ன் முடிப்பது விதிமுறைமையென்று சூதமுனிவர் சொன்னார்.—எ-று. (௫௦).

இப்பெருந்தடத்தீர்த்தமுற்றிருந்ததம் மிடத்தினில்நினைந்தாடி
வெப்பெரும்புனலேனுமப்பலத்தினை யெளிதினிற்றருமென்று

மெய்ப்பெருகதிரொழிப்பனவென்றும்வ் விமலனன்புளொன்று
மொப்பிலாமறைச்சூதான்றேதின ருரைப்பதற்கெளிதன்றே.

(இ-ள்.) இப்படிப் பெருமைபான சர்வதீர்த்தத்தை யாதாமொருவர் தூ ஞற்றிருக்குந் தலங்களிலுண்டாகியிருந்த ஜலங்களி லெதுவானாலும் அதுவே வதீர்த்தமென்று நினைததுத் தீர்த்தமாடினார்களாயில், அந்தப்பலன்களை யெளிதிற் டுக்குமென்றும் அவரவ ருடம்பில் பெரிய வினைத்துயரங்கள் தீருமென்றுஞ், சிவ கன்புடையவர்களௌனறுந் தமக்கொப்பில்லாத வேதியரான சூதமுனிவ ராதி சொன்னா. அதன்மகிமையைச் சொல்லுதற்கெளிதல்ல.—எ-று. (

தீண்டினார்பலன்செங்கையுட்கொண்டபேர் செய்பலனதன்மூழ்கி
வீண்டினார்பல னதனிடைப்புண்ணிய மியற்றினார்பலன்யாவு
மீண்டினுமனத்தெண்ணியிதெனவுரைத் திடவொணாத்தனபாரம்
சேண்டரும்பிறைச் சென்னியலாலொரு தெய்வமேயறியாரால்.

(இ-ள.) அந்தச் சர்வதீர்த்தத்தைப் பரிசித்தவர்கள்பலனுஞ், செவ்விய வ ளியெடுதது உட்கொண்டவர்களபலனும், அதில் தீர்த்தமாடவென்று வந்துசே வர்கள்பலனும்,மூழ்கினவாகள்பலனும அங்ஙனந் தாம்மதானங்கள் செய்தவர்கள் னும் இவையாவும் இவ்வாறென்று நமது மனத்தில் யெண்ணிச் சொல்லவொண் து. அதன் பெருமையை, யோக்கிய விளம்பிறையைத்தரித்த முடியழகிய பரமே வான்பாதமேயறிய வேறொரு தேவாகளும அறியார்கள்.—எ-று. (௰)

சருவதீர்த்தச்சருக்கம் முற்றும்.

ஆக சருக்கம் ௩அ-க்கு திருவிருத்தம். ௪000.

---

# தீர்த்தநிலைச்சருக்கம்.

இந்திரன்றிரு தீர்த்தமிந் திரன்றிசை யிந்திரன்றிசைகாட்டு
மூந்துபாவகன் றீர்த்தமக்கினித்திசை யுறுவினைபல நீய்க்குஞ்
சிந்தைகூர்யம தீர்த்தமந் திசைகனத் தாயுவின் சிறப்பாக்கும்
பந்தமானிரு திச்சூனையத்திசை பகைத்தவர்பகைமாற்றும்.

(இ-ள்.) கிழக்குத்திசையி லிந்திரதீர்த்தமிருக்கும், அதில் மூழ்கின லிந்திரபோக பலனுண்டாம். தென்கிழக்குததிக்கில அக்கினிதீர்த்தமிருக்கும், அதில்மூழ்கினல் பல பல வினைகளையுந் தீர்க்கும். தெற்குத்திசையில யமன்தீர்த்தமிருக்கும், அதில் மூழ்கி ஞ லவர்க்குச் சிறப்பாகிய ஆயுசுவிர்த்திக்கும். தென்மேற்குத்திக்கில் நிருதி தீர்த்தமி ருக்கும், அதில மூழ்கினல் பகைத்துக்கொண்டவர் பகையை மாற்றுவிக்கும். எ-று. ()

வருணதீர்த்தமத் திசையெலாம் வான்மழைபொழிவாக்கும்
விரவுவாயுவின் றீர்த்தமுமப்படி விழுந்தவர்க்குயிர்காட்டுங்
குரவர்சூழ்வடக் குபேரதீர்த்தந்தனக் குலைவதருவடகீழ்பால்
நரர்வணங்கு மீசானதீர்த்தம்பல பலநலந்தருமேலோய்.

மேற்குத்திசையில் வருணதீர்த்தமிருக்கும், அதில்மூழ்கினல் அவர்களிருக்கின ற திசைகளெல்லாம் நல்லமழைவளஞ்சுரக்கும். வடமேற்குத்திக்கில் வாயுவுதீர்த்தமி

அதில்மூழ்கினுல் யிறந்தவர்களுக் குயிர்கொடுக்கும், வடக்கிகுத்திசையில் கு தீர்த்தமிருக்கும் அதில் மூழ்கினுல் அவர்களுக்குத் திரவியகுவிதலுண்டாகும். கிழக்குத்திக்கில் ஈசானதீர்த்தமிருக்கும், அதில்மூழ்கினுல் பலாஸ்மையுந்தரும். களேயென்று சூதமுனிவர்சொன்னுர்.—எ-று. (௨)

ருவில் சூரியன் றருசுனேச் சூரிய புட்கரணித்தீர்த்தம்
ருவுவெம்பிணி குட்டமென் பனவெலாம் விடவருடருஞ்சோமன்
திருச்சுனே சந்திரபுட்கர ணிமபெயர் தனேப்பூணும்
குமாரமுதந்தருஞ் சுரம்விடம் பாரோகியதாமால்.

(இ-ள்.) ஒப்பில்லாத சூரியனுண்டாகியசுனே சூரியபுட்கரணி தீர்த்தமென்று யாராய விளங்கியிருக்கும். அதில மூழகினுவர்களுக்குப் பயங்கரமான வெவவி பிணி பீடை குட்டமுதலாகிய சகலரோகங்களுந்தீரும், சாதிரனுண்டாகிய சுனே ரபுட்கரணி தீர்த்தமென்றும்பெயராய் விளங்கியிருக்கும. அதில மூழகினவாக கு அமுதபானஞ் செயததுபோலுங் கொடிதாகிய சுரஙகளும, விஷஙகளும், டோடிப்போகும்.—எ-று. (௩)

மதீர்த்தமப்பங்கயத்திருவிடாப் பதிமதிபுனேவோனேக்
றெரணி தனேத்தினங்கைதொழுங் கனிவுறத்தவஞ்செய்யும்
ற்புநீர்புகுந்தாடினுர் நினேத்தன புரககுமாவருள்புட்டுங்
பெருந்தலே முறையெலாந்தனக்குவை மனக்கவையறச்சேர்வார்.

(இ-ள்.) பதுமதீர்த்தமென்றெருதீர்த்தம் அது பஙகயததிருவாகிய லட்சுமிதே ருபையாலுண்டாகியது. அநத லட்சமியானவள பரமேஸவரனேயும, உமாதே யும, தினந்தினங் கனிவுடனே தொழுதுவணஙகித தவஞ்செயதிருககின்று ழகிய லட்சுமிதீர்த்ததகில மூழகினவர்கள நினேசதகாரியங்கடிவரக கருணே ரட்சிக்கும், விஷ்ணுகடாக்ஷம பெறுவாாகள். அவர்கள் தலேமுறையெலலா தனக குவிதலுண்டாகிச சற்றஞ் சிநதையிலலாமல் வாழ்வாாகள.—எ-று. (௪)

தகன்னியர் தருந்திருத்திர்த்தமா சத்தியுந்தவப்பேறு
த்தவஸ்யமுந் தருமெழுமுனிவரர் விரவியபெயர்தீர்த்த
தியோகமோடாகமமுறைவே தாந்த சித்தியுமாக்குந்
தனுமது சத்திருடித்தடந் தீர்த்தமென்றுரைசாற்றும்.

(இ-ள்.) சத்தகன்னிகளுண்டாக்கிய திருககீர்த்தம், பிரசித்தியாய விளங்கியிருக் அதில்மூழ்கினுல் அதிக சத்துவமும், தபோபலனும், வசியங்களு மெளிதிலுண் ாகும். எழுமுனிவர்கள் செய்ததீர்த்தம் பிரசித்தியாய விளங்கியிருக்கும். அதில் ழ்கினுல் வேதாகமமுறை தெரிகின்றவறிவும, வேதாநதசித்தியும், யோகசித்தியும் ாகசித்தியுங்கொடுக்கும். அதற்குப்பெயர் சித்திகளேயுடைய சததவிருடியர் தீர்த்தமெ று மேனூல்களசொல்லும்.—எ-று. (௫)

ராமதீர்த்தமென் றெருதிருத்தீர்த்தம தெண்ணிலிபதஞ் சேர்க்கும்
ராவிலன்றுதறுகப்பிரமந்தனேப் பயக்குமப்பதங்கூட்டு
பிராவணப்பகை தடிந்துசா னகியுடனிராமனுதனேத்தாபித்
தரரம்லேப்பர மனேப்பணிந் தன்றுகண்டருளிய சுனேயாமல்.

(இ-ள்.) இராமதீர்த்தமென் றெரு திருத்தீர்த்தம். அதுவந்த வரலாறு யாதென் இராவணனேச்சங்கரிதது இராமர் சீதாதேவியுடன்வந்து சேதுவி விராம லிங் கத்தைத்தாபித்துப் பூஜைசெய்து பின்பு திருநாககிரியிலவந்து நாகேஸவரனேக்கண்டு

பணிந்து தோத்திரஞ்செய்து உண்டாக்கியதீர்த்தம், அதில்மூழ்கினல் அவர்களுக்கு தாரகப்பிரமபோதகமுஞ் சிவலோகப்பலனுஞ் சிவசாயுச்சியமும் பெற்றுவவார்கள்.—எ-று.

மயேந்திரச்சுனை யொன்றுளவதுமயன் மலைப்புயவிலங்கேசன்
வியந்ததம்பதி யனுமர்தீவிளைத்ததை வியல்பெற வழித்ததைக்காக்க
நயந்துரைத்தொரு கணத்திலொன் றன்னது நன்கியற்றுதற்காகிப்
பயந்துவந்து செங்கோடனைப்பணிந்தநாட் பயந்ததண்சுனைதீர்த்தம்.

(இ-ள்.) மயேந்திரதீர்த்தமென் றொருதீர்த்தம் பிரசித்தியாய் விளங்கியிருக்கு மலைபோலும் புயங்களையுடைய விராவணனிருந்த இலங்காபுரிமுழுதும் அனுமதீயிட்டு அழிந்தநகரத்தை நயப்பாக நினைப்பினாலும், வசனத்தினாலும் முன்போல ஒரு நொடிப்பொழுதில் அழகுபெற வுண்டாக்கும்பொருட்டு, மயனெனவன் மிகுந்த வன்புடனே செங்கோட்டீசுரனைக்கண்டு சேரிசித்துவணங்கி சுவாமிகிருபையிலே சிருஷ்டிக்குஞ் சித்தியெல்லாம் பெற்றுக்கொண்டநாளில் உண்டாக்கியதீர்த்த சுனைத்தீர்த்தம்.—எ-று.

அம் மயேந்திரச்சுனைபடி பவர்நினைத்தனமுடித்தருளாக்கும்
விம்முசித்திர விசித்திரத்தொழில்பல விளைத்திடு மதற்கப்பாற்
செம்மலாயசாம்புவச்சுனை யதிற்சில வெண்டினந்தினமூழ்கும்
மம்மஞானமுமதிவித மறையும்பே ராண்மை யுந்தருந்தோய்ந்தால்.

(இ-ள்.) மயேந்திர தீர்த்தச்சுனையில்படிந்து மூழ்கினவர்களுக்கு நினைத்ததெல்லாம் கைகூடிவரும். சகல சித்தியும்பலிக்கும். விசித்திரத்தொழில்களெல்லாம் துசெயலாயுண்டாகி விர்த்திக்கும். அதற்கப்புறம் அறிவையுடைய சாம்புவன்செய்தீர்த்தம், சாம்புவதீர்த்தமென்றுபெயராய் விளங்கியிருக்கும். அதிற்சில காடியினங்கள் தினந்தினம் வந்துமுழுகும். அந்தச்சுனையில் மூழ்கினவர்களுக்கு ஆண்மைப்பெருமை அதிர்ச்சியமான வேதாந்த மெய்ஞ்ஞானவறிவுண்டாய்ப் பேரின்பமுத்தியுங்கிடைக்கும்.—எ-று.

தீர்த்தவன்னிலை செப்புவர் மால்சுனைச் சிவாலயக் குடக்கம்மேற்
கார்த்தபங்கயத் தீர்த்தமவ்விடைவரு ணன் சுனையதன்மேல்பா
லேர்த்த சத்தகன்னியர் சுனைசந்திர புட்கரணிபுமேல்பாற்
றூர்த்தடம் புனலிதன் குடவதற்குள சத்தமாரிஷித் தீர்த்தம்.

(இ-ள்) இனிஇவ்வாறு மகிமைவிளங்கித் தீர்த்தங்களிருக்கும் நிலைகளைச்சொல்லுகிறோம். சிவன் சன்னதிக்கு மேற்குப் புறத்திலிருப்பது விஷ்டணுதீர்த்தம். அதற்கு மேற்காகவிருப்பது செங்கமலத்தீர்த்தம. அதற்கு மேற்பக்கத்திலிருப்பது வருணதீர்த்தம். அதற்கு மேற்பாரிசத்திலிருப்பது சத்தகன்னியர்தீர்த்தம். அதறகு மேற்காகவிருப்பது சந்திரபுட்கரணிதீர்த்தம். அதற்கு மேற்பாகத்திலிருப்பது சத்தமஹாவிருஷிதீர்த்தம்.—எ-று. (௯)

ஆதிகோவிலின் கிழக்கு நாகச்சுனை யதன்கிழக்கறுதீர்த்த
மீதுவாண தீர்த்தங்குமரன்சுனை விசாலமப்புறங்கீழ்பா
லோதுமிச்சுனைக் கோர்கணைத்தூர மாதபன்றரு முயர்தீர்த்தங்
காதலீரிதன் றென்கிழக்காகுநங் காளிதந்தருடீர்த்தம்.

(இ-ள்) ஆதிமூர்த்தியாகிய சுவாமி கோவிலுக்குங் கிழக்குப்புறமிருப்பது நாகதீர்த்தம். அதற்குக் கிழக்காகவிருப்பது சண்முகதீர்த்தம். அதற்கு மேலேயிருப்பது

தீர்த்தம். அதற்குக் கிழக்கே சிலதூரத்திலிருப்பது குமாரதீர்த்தம். அதற்குங் கே ஒரு அம்பெறூரத்திலிருப்பது சூரியபுட்கரணிதீர்த்தம். அதற்குத் தென்கி கவிருப்பது காளிதீர்த்தம் —ஏ-று (ய)

ற்குமோர்கணைத் பிரமக்கினிச்சுனை வடக்கபனருடேர்த்த
ற்கரன்றிருச் சுற்றுளாமிதன்வடக் கிந்திரன் றீனத்தீர்த்தம்
த்த கீழ்மயேந் திரமதன்கீழ்ச்சாம் புவச்சுனையதன்கீழா
த்தனக்குப்பொன் சுனைவடகிழக்கெய்து மைங்கரனதுதீர்த்தம்.

(இ-ள்) அந்தகளிதீர்த்தத்துக்கு தென்கிழக்காக ஓரம்பெறூரத்திலிருப்பது கினிதீர்த்தம். அதுநிற்க சிவன் கோவிலுக்கு வடக்குப்புறந் திருமகிற சுற்றுக்கு ாகவிருப்பது பிரமதீர்த்தம். அதற்கு வடக்காகவிருப்பது இந்திரதீர்த்தம். அதற்குங் ாகவிருப்பது மயேந்திரதீர்த்தம். அதற்குங்கீழாகவிருப்பது சாம்புவதீர்த்தம். அதற் ழாகவிருப்பது குபேரதீர்த்தம். அவைநிற்க சுவாமி கோவிலுக்கு வடகிழக்குப் லிருப்பது கணபதிதீர்த்தம் —ஏ-று. (யக)

னதீர்த்தத்தி னடுகெம்பா நதி யதற்கயல்பவாச
ளிதன்கிழக் கிற்சிவதீர்த்தமிவ் வரபுனற் கிழக்காகத்
னலந்தரு சருவதீர்த்தமுந்தன்ம தீர்த்தமு மதன்றற்கீ
ன்னுமிங்கிதன் கீழ்வயிரவச்சுனை யெனுங்கனதிருத்தீர்த்தம்.

(இ-ள்) அந்தக்கணபதிதீர்த்தத்துக்குப பக்கமாகவிருப்பது அம்பாநதித்தீர்த்தம் ற்குக்கிழக்குப பக்கமாகவிருப்பது சிவதீர்த்தம் அதற்குக் கிழக்காகவிருப்பது சரு ்தம். அதற்குக்கீழாகவிருப்பது தன்மதீர்த்தம். அதற்குக்கீழாகவிருப்பது வயிரவ ம்.—ஏ-று. (யஉ)

வடகிழக்கினி னடிமலையதிலொரு நிறைதரு மலர்தீர்த்தம்
டவுகங்கையும் யமுனையுஞ் சரஸ்வதி நதியுமங் கவண்டோன்று
மிடமிதற்குமே ரீசன்வாவிப்புன லிதற்கோ ரம்பெறூரங்
கடவுள் பாற்சுனை யதன்குடக் காவருள் காமதேனுவின் றீர்த்தம்.

(இ-ள்.) திருக்கோவிலுக்கு வடகிழக்குப்புறம் அடிமலையில ஒரொழுங்காக றைநிறையா யிருப்பது கங்கை, யமுனை, சரஸ்வதியென்று மூன்றுதீர்த்தம விளங தோன்றும். அதற்குமேலிருப்பது ஈசானதீர்த்தம். அதற்குங் கிழக்கே ஒரு அம் பாரத்தி லிருப்பது பாற்சுனைதீர்த்தம். ஈசானதீர்த்தத்துக்கு மேற்பாரிசத்தி ப்பது தெய்வப்பசு வுதவிய காமதேனுதீர்த்தம.—ஏ-று. (யங)

தீர்த்த நிலைச்சருக்கம் முற்றும்.

ஆக சருக்கம் ௩௩-க்கு திருவிருத்தம். ௧௦௧௩.

---

# சிங்கவன்மர் சருக்கம்.

வேதவியாசர் விளம்பின வெல்லாஞ்
சூதர் பகர்ந்தனர் அறவினருட்கொண்
டீதுவிட்கதி யினிதிலே முனிவோர்
நாதபிழைத்தன மெனவுரைநவில்வார்.

(இ-ள்.) முற்காலத்தில் வேதவியாசர்சொன்ன புராணகதை யனைத்தும் முறை ாகச் சூதமுனிவர்சொன்னார். சொன்னவற்றையெல்லாம் முனிவர்களகேட்டு

கூடக வங்கையர் சு நதி யிசைப்பார்
நீடகர் விஞ்ஞையர் மநஞ்ச நெகிழ்ப்பார்.

இ-ள்.) அந்நகரத்தி லரங்கமண்டபத்திலும் பாடகம்பொருந்திய பாதங்க டைய ரம்பாஸ்ரீகள் அனேகவிசித்திரமான நிர்த்தனஞ்செய்வார்கள். கூடகம் ந்திய கையழகிய சிலபெண்கள் சித்திரமண்டபங்களில வாசிக்கும் வீணை இ யகளைக்கேட்டு விஞ்சையர்களின் மனதுருகி மோகிப்பார்கள்.—எ-று. (சு)

வரைபொரு மாட மணித்தல மீதே
தரைபொருமங்கையர் தம்விளையாட்டா
நிரைபொரு கந்துகம் நீள்மதியைப்போய்
மரைமுக மென்றனர் வடுவென நகுமால்.

(இ-ள்.) மலைபோலு முயர்ந்த மாடமாளிகைமீதில் பூலோக மங்கையர்கள் விளை ரத்தினமணிபபந்துகள் சந்திரமண்டலத்தைத்தாக்கி அங்ஙனம்வருகின்ற சசந்திரனைப்பார்த்து ஸ்ரீ சனங்களுடைய முகத்துக்கு ஒப்பென்று மேலோர் சொல்வார்கள். ஆ ஆ! இதில் களங்கமிருக்குதென்று நகை_துப் பழிப்பதுபோ பிரகாசிக்கும்.—எ-று. (எ)

சித்திரமுத்தொளி சிந்திய பந்து
கைத்தலம் வந்த கவினகதிர் மதியம்
வத்திர மொத்தில வடிவுற வவர்பா
லத்திரமுறுகை யடையென லாமால்.

(இ-ள்.) சித்திரமெழுதி யலங்கரித்த மேநிலைகளில் சிலபெண்கள் விளையாட் முத்துமணிகளாற்செய்த அழகிய பந்தடிக்கும்போது எங்கி மேலேமட்டு மீண்டு பந்துகள் அந்தப்பெண்கள் கையில்வந்துசேர்தல், குளிர்ந்த நிலவானது கதி வந்து உங்கள முகத்துக்கு ஒப்பாகாததால் அதன்களங்க மறும்படியாக ர்கள் கைசேர்ந்து அடைக்கலம் புகுந்ததுபோலும்—எ-று. (அ)

இரேவைநதிப்புன லின்விளையாட்டின்
பாவையனைக் கண் டப்பனிமொழியார்
தர்வுநதிப்பொரு டனையெதிர் நலகிப்
பூவவர் தாளிற் போடுவதிரைநீர்

(இ-ள்) பின்னுஞ் சிலபெண்கள் அந்நகரஞ்சூழ்ந்த ரேவைநதிச்சலத்தில் த்து விளையாடும்போது ஜலக் கன்னிகையர்கள் நதிப்பொருளை யெதிர்வைத்து வருவதுபோலும், புட்பங்களையும், பொன்மணிகளையுங் கொண்டுவந்து விளையா ம்பெண்கள் கால்களிற் போடாநிற்கும் நதி நீர்த்திரையலைகள்.—எ-று. (கூ)

குங்கும சந்தனம் வண்களை குழைந்த
மங்கையர் தங்கள் மணாளரோடாடு
மிங்கித மன்மத னிரதியொடேகி
யங்கவை கண்டுத னாண்மை வெறுப்பான்.

(இ-ள்.) குங்குமகளபந்திமிர்ந்த ஸ்ரீ சனங்களெல்லாம் தங்கள் தங்கள் பிராண நாயகரோடுங் கூடிப்பிரியாமல் நீராடுவார்கள். அவர்க ளிங்கிதமான அழகும் பிரி யமையுங்கண்டு மன்மதவேள் இரதிதேவியுடனே அங்ஙனஞ்சென்று திகைத் நின்று தன்னுடைய ஆண்மையை வெறுப்பான்.—எ-று. (ய)

சோலைகள்வானந் தொடநிமிரடைவின்
காலையு மாலையு மிருதாவுங் காணு
ராலயதீபமு மாரமுமணியும்
ஞாலம் விளக்குவ நன்கதி ரொளியால்.

(இ-ள்.) அந்த நகர்சூழ்ந்த கறபகச்சோலைகள் அண்டத்தையளாவி நிமிர்ந்தோங்கிச செறிந்திருக்கின்ற நீங்காத நிழல்களாற காலைபபோது மாலைப்போது சந்திர சூரியப் பிரபைகளுங் கண்டறியாாகள். தேவாலயங்களில் விளங்கிய வொளிகளும், முத்தாரங்களும், மாணிக்கமணிகளும், பூமியில சுடர்விளககக் கதிரபை பொருநதியது.—எ-று.                (ம

ஆரமு மாரமு மாரமு நிறையும்
பாரமும் பாரமும் பைங்கடை காட்டுங்
கோரமுங் கோரமுங் கொற்றவரேற
வீரமும் வீரமும் வெம்புயங் காட்டும்.

(இ-ள்.) அந்நகரததில் ஆரமாகிய முத்துமணிகளும், ஆரமாகிய சந்தனக்கட்டைகளும, ஆரமாகிய மணிமாலைகளும், எஙகும் நிறைந்திருக்கும். பாரமாகிய துணி நிறைந்த மூட்டைகளும், பாரமாகிய பலபொருள் வியாபாரங்களு, மழகிய அங்காடிக் கடைக ளெனதத்திலும் விளங்கியிருககும் கோரமாகிய ஆணமையுடனே, கோரமாகிய குதிரைகள் மேறகொணடு வீதிகள்தோறும் உலாவிவருவாாகள். அரசர்கள் வீரமாகிய சவுரியமும், வீரமாகிய வெற்றிகளும் விளங்கும மன்னவா புயஙகளில.—எ-று.                (ம

இவ்வளமேவு செயங்கல விறைவன்
றுயவனமேவிய சூரிய குலமன்
கைவளமேவிய காரினை கொண்டோன்
மைவள மேவிய மால்சிங்கவன்மன்.

(இ-ள்) இப்படி வளமைபொருந்தி யழகிய செயங்கல நகரினிராஜனானவன் இந்திரபோக வளமபெற்ற சூரியகுலவுசிதன் பொழிகின்ற மேகம்போலும், பொழிந்திடாநின்ற தியாகக கைகளையுடையவன் நீலமேக வணணனை விஷ்ணுமூர்த்தியைப்போலும, அழகுடையவன சிஙகவன்மராஜன்.—எ-று.                (மக

நீதியினுலர சர்நெறி முறையால்
வேதபுராண வியன்றெழில முறையால்
மாதருமப்பெயர் மிதமக மதனுல்
மேதினியிற்பொரு விலன்விற லுடையோன்.

(இ-எ) நீதியினு லரசாட்சி நெறிமுறைமையாலும், வேதாகமபுராண வித்தியா கோஷடியினுலும, உத்தமசனஙகளுககுத தானதர்மங்கள் செய்வதினுலும், யாகஙகள், வேள்விகள, நிறைவேறச் செய்வதினுலும், ஆண்மையினுலு மிதப் பூமண்டலததில் ஒருவருந தனககொப்பில்லாதவன வீரபராக்கிரமததையுடைய அந்தச் சிங்க வன்மராஜன் —எ-று.                (மச

மூவிரு மன்னரில் முன்னவனன்னேன்
காவலினுரியவை காவலர் தொழிலால்

மாவருகானக மாவினைமீண்ட
வேவரும் வேட்டையி லேகுத லுற்றான்.

(இ-ள்.) அறுவகைச் சக்கரவாத்திகளிலு முதன்மையான சிங்கவன்மரா இந்தப் பூமண்டலத்தைப் பரிபாலனஞ்செய்து ரட்சிப்பது காவலராகிய இரா ஜதொழின்முறைமையானபடியால் உலகத்தில் புலி, கரடி முதலான துஷ்ட மிருகங்களா லுபத்திரமிருந்தபடியினாலே சொல்லுதற்கரிய மிருகவேட்டையாடச் சேனை பரிவாரத்துடனே புறப்பட்டுப்போவதற்கு யெத்தனித்தான்.—எ-று. (ரு)

காளகமுட்டிய காளுடைகொண்டான்
சூளமு டியம்பொன் றுவர்த்துகில் வேய்ந்தான்
தாளடிபாதுகை சன்மம்விசித்தான்
வீளைமீது வியன்படை சேர்த்தான்.

((இ-ள்.) வச்சிர கவசந்தரித்தும், சொர்ன்னமுடிசூட்டியும், சிவந்த பட்டாடையுடுத்து ரத்தினக்கச்சைகட்டியும், கால்களில் வீரக்கழல்பூட்டி, தோற்கவசந் தொட்டிறுக இடையி லுடைவாள்கட்டி, கைகளில் மேலான வில்பிடித்து, முதுகி லம்புறாத் தூணியுங் கட்டினான்.—எ-று. (௬)

வெளியிடை வேல்வதொ ரிவுளியும் வெகோன்
றளியவை யெதிரெதிர் தாண்டவோர் மாவு
மளிரடுபொங்குற வவையவ வய்வே
லொளிதிகழ் படையோ டேய்ந்தன னரவேர்ன்.

(இ-ள்.) ஏகவெளி யிடங்களில் மிருகங்களைச் செயிப்பதாகக் கற்கரடு, வே யாறுகளுந் தாண்டிப்பாயகின்ற வொரு குதிரையும் பிரியாமல் பக்கத்தில் சூழுங் காவல நீலவர்ன்னக்குதிரை மேற்கொண்டு வெற்றிமாலைசூடி மின்னப்பட்ட கூரிய வேல் கையிலேந்தி ஒங்கிய சிங்கவன்மராஜன். அலங்கிரதமாகப் புறப்பட்டான்.

கண்ணியும் வலையு மெடுத்தக் கடாவுந்
திண்ணிய கரியுமவ் வேடுவர் திரளு
மெண்ணில வெண்ணில வீசனை யெண்ணார்
விண்ணிடை யடர்நமன் விளைவினெழுந்தார்.

(இ ள்.) கண்ணிகளும், வலைகளும் சுமந்துகொண்டு வரப்பட்ட வெருமைக் கடாக்களும, திண்மையாக வுயர்ந்தோங்கிய யானைகளும், வேட்டைக்காரராகிய வேடர், வேட்டுவர் கூட்டங்களு மியவளவென் றெண்ணுதற்கரிதாகிய வனந்தம் போகள் வீராதிவீரர்களும், பல ஆயுதங்களெடுத்த காலாட்படைகளு மெதிர்த்து வந்த யீசுரனையு மெண்ணுதவர்களாய வெற்றிக்கொடிகள் ஆகாசமநெருங்கி அடர்ந்துவரப்பட்ட எமகூட்டங்கள்போலும் வெளியாகப் புறப்பட்டார்கள்.-எ-று. ()

வேலம்பொடுபிறை வாய்விசிகத்தோ
டாலம்பொதிவெறு மரவம் புறனர்
கோலுங்குந்தங் குறியகதைக்கப்
பாலங்கொண்டவர் பலரொடு சென்றான்.

(இ-ள்.) மூவிலைவேல்களும், வில்லம்புகளும், பிறைபோன்ற சினுக்கம்புகளும், விஷம்பூசிய பட்டாக்கத்திகளும், ரேசிசங்களும், யீட்டிகளும், குறுந்தடிகளும், வளைதடி சக்கரங்களும், கவண்களும, பிண்டிபாலங்களும கைக்கொண்டு அணி யணி

யாய் வரப்பட்ட பதாதிகளுடனே மிருகங்கள் சஞ்சரிக்கின்ற கானகங்களில ட்டை செயிர்க்கச்சென்றன சிஙகவன்மன.—எ-று. (

அடவியில் வினைமிருகங் களடர்ந்த
கடனில நிடையடு கைகள் வகுத்தான்
தடவினைமிருக மடப்பலசாய்த்தான்
வடநிலைகேசனோர் மாவொடு சென்றான்.

(இ-ள்.) கானகத்திற்புகுந்து துஷ்டமிருகங்கள் வெளிப்படும்படி பதா ளைக்கொண்டு காட்டைக் கலைத்துவிடச்செய்து கடல்சூழ்ந்த வுலகத்தினிடத் சேனைகளை யணிவகுத்து அங்கங்கே கட்டாகநிறுத்தி வலைகள்கட்டி வில் லம்பு லான பலவாயுதங்களாலும், அடர்ந்து வரப்பட்ட மிருகங்களைச் சங்கரித்தன. தவேளையில் வடதிசைத தேசாதிபதியான சிங்க வன்மராஜன் அங்ஙனம் ருக்குஞ் சிக்காமல் தப்பித்து விரைந்தோடுகின்ற ஒரு மானைத்தொடர்ந்து சென்(

மானையம்மாவினி லேறி மறித்தான்
கானகமூடு கடாங்க டுகைத்தான்
சேனைக ளேனையர் வேட்டை செயிர்த்தா
ரேன மொன்றெருடுசிங்க வன்ம னெதிர்த்தான்.

(இ-ள்.) கோரமாகிய குதிரைமேலேறிச்சென்று விரைந்தோடுகின்ற மா யெய்தான். இன்னம் வனங்களில் திரியப்பட்ட மும்மதம்பொருந்திய அ யானைகளையுங்கொன்றான். சேனைவீரர்கள் அங்கங்கே விரைந்தோடுகின்ற கங்களையெல்லாங்கொன்று வேட்டை செயிர்த்தார்கள். அதுவேளையில் குரூர வெதிர்த்துப்பாயவருகிற ஒரு காட்டுப்பன்றியுடனே சிங்கவன்மராஜன் அடர்ந் திர்த்தான்.—எ-று. (ட

மண்டலமண்டம் வனங்கண்டுங்கக்
கொண்டெனவந்து மிடைந்ததோரேனங்
கண்டவன் வில்லிடு கணையோட்டுக்கி
மண்டினன் மண்ட விரைந்தது மாதோ.

(இ-ள்.) அண்டங்கள புவனங்களெல்லாம் நடுநடுங்கத்தக்கதாக கார்மே போலும், கோபித்தடர்ந்துவந்து எதிர்த்த ஒரு பன்றியை அரசனபார்த்து வ் விற்பூட்டிய மூனையம்புகளா லெய்து மண்டிப்போராடினான். அப்படி யடர்ந் தன்னைக் கொல்லவருவதுகண்டு சவுரியமானபன்றி யங்ஙனம் விரைந்தோடிய

விரைந்து விரைந்து விழுந்து விழுந்தே
பரந்திரவோடிய பன்றிபுறம்போய்
நெருங்கவகப்படு மாறெனநின்றே
தரங்கமன்னுறமுன் றண்டியதம்மா.

(இ-ள்) விரைந்து வேகமாக ஓடியும் விழுந்து யெழுந்தும் அகப்படாமு டிய பன்றி புறகொரு சார்பில்போய் நெருங்கி யகப்படும்போல் யெதிர்த்துநின்று ராஜனுடனே போராடிப் பன்றி தாண்டின.—எ-று. (உ0)

கூடவிரைந்த கொடுந்தொழில் வீர
அ ர்டவ ரங்ஙன மங்ஙன நின்றார்

வாட்டில் சிங்கவன் மன் பின் விடாதே
யோடினவி்விளிய வுடற்றுவ னெனறே

(இ-ள) கூடத்தொடாந்து விரைந்தோடிவந்த வீரர்களெல்லா மிளைத்து கே நின்றுவிட்டார்கள். சற்றும் வாட்டமில்லாத சிங்க வன்மராஜன அநதப் யைப் பின்ருடாநது விடாமலோடி பன்றியை யெவவிதததிலும கொலலு னன்று முடிகிறுன.—எ-று.	(உ௪)

அன்னிலேகேழ லறிந்து செறிந்து
மன்னியகதிமதி வரவறியாத
நன்னிழலடவியி னணணி நடுங்கி
முன்னியபிருகு முனிகதெதிர யெபாயத்தால.

இ-ள்.) சிங்க வன்மாரஜன் தன்னைக கொலலும்படியாகத தொடாநது வருவ னைடு அந்தப் பன்றியானது நெருங்கி யமாசசெறிவை யுடைய சாதிராதித்தா வர யாத நிழலாக விருணட ஒரு கானகததிறபடிநது நடுங்கி யநயனந தவருசெய நத பிருகுமுனிவனுக கெதிராகசசோநதது.—எ-று.	(உ௫)

போயுடையேனந்த வானவிப்பூப
னேயவோா வாளியி லெயதறுணித்தான
நாயகமுனிவனின் நளினமலர்த்தாள்
வேய வடைந்தவென் வெம்முயிர் காப்பாய

(இ-ள்) சோநத பன்றியானது சுவாமி! இநத ராஜனவன் என்னை மபி லெய்து கொலலவதாகத தொடாநதுவநதான தவநாபகனுகிய முனீஸவரரே! நா ம்முடைய பாதததில அடைககலமாக வநதடைநதேன் என்னைககாத திரடசிப் யாகவென்று சொல்லி பது —எ-று	(உ௬)

எனறுவராக மிறைஞ்சியடைந்த
வனறபயத்தை யளித்தருள் முனிவன்
றுன்றியெமமிடநஞ் சூழலடைந்தா
ரொன்றுமில் வினையென வுறுதி மொழிந்தான்.

(இ-ள்) என்றநத வராகமானது வணங்கி சரணகதியென்றடைநததுகண்டு பயஙதநகொடுதது கிருபையுடன் பிருகுமுனிவன, வாராய பனறியே! அடை மாக நம்மிடததில அடைந்த வுனககு ஒரு அபாயமான வினையொன்றுமிலலை. னைக்காத்திரட்சிக்கிறேும் பயப்படாதேயென் றுறுதிவார்ததை சொன்னுர்.

பிருகு மஹாமுனி பெட்புரை யேனந
தெருமவர் வேதிர செப்பியகாலை
வரிசிலையொடுசிஙக வன்மன் விரைந்தே
யருகுற வடியி லடைந்தன னந்தோ.

(இ-ள்.) பிருகு மஹாமுனிவன் உறுதியாய்ப் பிரியவசனஞ்சொல்லிப் பன்றி து பயத்தைத் தீராததவேளையில் அம்புபூட்டிய வில்லுடனே சிஙகவன்மராஜ வாநது முனிவ னருகில பக்கமா யடைந்து நின்ற பனறியைக கொலவதற்கே அநயனம வநதுசோநதான்.—எ-று.	(உ௮)

அடைந்த முனிக்க ணடைந்தவ்வேன
முடைந்திடவாளி யுடற்றுதனேக்கி

மிடைந்த மனத்தனவ் வியன் முனிமன்னு
தொடர்ந்திருதைப்பொரு சூட்சியை விடுவாய்.

(இ-ள்.) முனிவன் பக்கத்திலின்ற பன்றி சாகும்படியாக அம்புதொடுத் தெய்யாநின்றான். சிங்கவன்மராஜன் அதுகண்டு கலங்கிய மனத்தனாகி முனிவனை சொல்லுகிறான். ஓய் அரசனே! நீ தொடர்ந்துவந் திந்தப் பன்றியை யெய்துகொல்கிற நினைவை விட்டுவிடுவாயென்று முனிவன் சொல்லுகிறான்.—எ-று. (௨

எவரெவரேனு மடைக்கலமென்றா
லவையுயிர் கவர்த லறத்தொழி லன்றால்
நவையிது விடுகென நண்ணில நண்ணல்
கவர்மனனாகியோர் கணையில் வதைத்தான்.

(இ-ள்.) ஆராகிலும் அடைக்கலமென்றுவந் தடைந்தால் அவர்களை யுயிர்க்கொலைசெய்வது தர்மம நீதியல்ல! ஆகையா லிந்தப்பன்றியைக்கொல்லும் நினைவைவிடு? உனக்கு நல்லதல்லவென்று முனிவன்சொல்ல, அவற்றையெண்ணாமல் மூகமாகக் கோபத்துடனே கொலைசெய்யு மனத்தனாகி ஒரு சுடுகணை தொடுத்தெ சிங்கவன்மன் பன்றியைக்கொன்றான்.—எ-று. (

கணைப்படுகேழல் கலங்கியம்முனியின்
றுணையடிக்கீழ்விழு துன்பமுணர்ந்தே
யணையெமதாகா வேனமடர்த்தா
யிணையிலை புனதற மினிதருளென்றான்.

இராஜனெய்த அம்புவாதுபட்டு ஊடுருவப் பன்றியானது மிகவுங்கலங்கி முனிவனது துணையடிக்கீழ விழுந்த துன்பத்தையறிந்து ஓய் அரசனே! நம்மிடத்தில் அடைக்கலமாக வந்தடைந்த பன்றியைக்கொன்றுபோட்டாய், உனக்கொருவருமிணையில்லை, உன்னுடைய தர்ம்மநீதியும, தயையும, பளர நன்றாயிற்றென்று சொல்கிறார்.—எ-று. (௧௧

என்றுடன்பிருகு யிருந்தவன்விசய
மன்றல்கொள்சிங்கவன மன்மனம்வெருளா
வொன்றியபுலியுரு வாகியிம்மிருகந்
தன்றசைபெறுதிநீ யென்றுரைபித்தான்.

(இ-ள்.) அரியதவத்தையுடைய பிருகுமுனிவன் இப்படிச் சிலவார்த்தைசொல்லி வெற்றியுடைய சிங்கவன்மராஜனைப்பார்த்து மிகவுங்கோபித்து, ஓய் அரசனே நீ இந்தக்ஷணமே ஒரு புலிவடிவாகி இந்த மிருகத்தின் மாமிசத்தைக்கொள்வாய் நீயென்று சபித்தார்.—எ-று. (௧௨.)

பிருகுவிளம்பிய பேதமில்சாபம்
வருவனபின்சிங்க வன்மனறிந்தே
யிருடிகளைப்பெரி யவரையிகழ்ந்தா
ரரிதரிதுய்குவ தென்றயர்வுற்றான்.

(இ-ள்.) பேதகமில்லாமல் பிருகுமுனிவன் சொல்லியசாபம் தன்னைப் பின்பற்றி வருவதுகண்டு சிங்க வன்மராஜன் யோசித்துத் தவமுடைய விருடிகளையும், பெரியோர்களையு மிகழ்ந்தவர்கள் பிழைப்பது மிகவும் அரிதரிதென்றுசொல்லிக் கவர்ச்சியுற்றயர்ந்தான்.—எ-று. (௧௩)

அய்யவோ ரொருத் தருள்புரிகருணை
வய்பகமன்னரில வைத்தருளடியே
னய்யவோர் வாழ்வினி யுதவுதி யெனவோர்
வெய்யபெரும்புலி வெவ்வுருவானன்.

(இ-ள்) அய்யா முனிவரரே! ஒரு பன்றி குமனத்தரக்கிக் கருணைசெய்து பனை இந்த மன்னடலத்தாசர்களில வைத்திரட்சிபும் இப்போது அடியே னுய யாக வாழவென எருத கயைசெய்து காத்திரட்சிப்பீராகவென்று சொல்லிச் வன்மராஜன் வெட்டதாகிய ஒரு பெருமபுலி வடிவமானன்.—எ-று. (௩௪)

அவ்வுருவாகிய வரசன் விளம்பும்
வெவ்வுரை முனிவர் வியன்றவமவள் வா
யுய் மிருக முடற்று மிருந்தால
வவ புமதென்றிது வேட்டையில் வந்தேன்.

(இ-ள்) அப்படி புலிவடிவான சிஙகவன்மராஜன் வெய்தாகிய வார்த்தை சால்லுகிறன் இந்த அகோரமான காட்டிடததில வசித்துத தவஞ்செய்யும் வர்களுககு மிருகங்களால மிருக விபகை றுண்டாகுமென்று அது நிமித்தமா முனிவர் தவம நிறைவேறும்படியாக மிருகவே டைக்கு வந்தேனென்று சொல்லு றன்.—எ-று. (௩௫)

வந்திகல்மன்னரில் மாறுவிளைத்தே
புந்தியசேனை யுடன்றனகொல்லே
முந்தியெழுந்தனை முனிவதுகண்டு
சிந்தைவெருண்டர சியலொடுசென்றே.

(இ-ள்.) பலமன்னர்போலும இந்தப் பன்றியானது வந்தெதிாத்து சேனை ர்க ளனேகம்பேர்களைக்கொன்று பின்னையும குரூரமாகக் கொலைபுரிவதுகண்டு ன் மனவெருட்சியுடனே ராஜவீரம்விடாமல முடுகித்தொடர்ந்துவந்தேன்.—எ-று

சென்றவர்சென்றவர் சோவிழுந்தார்
நின்றிடில்வன்றவ நிலையிதுகொலுமென்
றென்றிமுனிந்துன துறைபுளின் வந்தேன்
வன்றிறலேன மடைந்ததுமறியேன்.

(இ-ள்.) என்னுடன் தொடர்ந்தோடிவந்த வீரர்களெல்லாம் அங்கங்கே விழுந் விட்டார்கள். நாமும் பின்னிட்டுநின்றால் வனத்தில் முனிவர்கள் தவநிலை குலைத் துக்கொல்லுமென்றெண்ணி ஒருபிடியாக வயிரங்கொண்டு கோபித்து உம்முடைய ச்சிரமத்தில் வந்தேன். முனீஸ்வரரே வலிய திறமையுடைய மிருதப்பன்றி யும மிடத்தில அடைக்கலமாக வந்துசேர்ந்தது மறியேன் என்றான்.—எ-று. (௩௭)

விதிவலியாலுன துரைசெவிகேளே
னதுபிழையாற்புலி யிதுவுருவானேன்
மதியிலியுன்சர ணங்கொள்வராகஞ்
சதிபடவெய்வது தவறுளதாமால்.

(இ-ள்.) விதிவசத்தால் உமது வார்த்தையைச் சற்றுங் காதில கேளாதவனு னேன். அது பிழையினல் நீர சபித்தபடியே இந்தப் புலியுருவானேன். சுவாமி முனீஸ்வரரே! உமமைச் சரணமென்றடைந்த பன்றியைச் சதியாகக்கொன்றது குற் றம்.—எ-று. (௩௮)

கிலும் சிரேஷ்ட்டமான ஒரு நதியுள்ளது. மிருகசாதிகள், பட்சிசாதிகள், விரு
சாதிகள், இவையெல்லாம தெய்வவடிவாக விளஙகியிருக்கும். இரத்தினக்கோண
யணிந்த தனங்களையுடைய வரமகளிரெல்லா மெந்நாளுந் தஙகள் தங்கள் நாய
ருடனேகூடி தீர்த்தமாடுவதாய் இருப்பது.—எ-று. (ச

குடநதியெனவே பஞ்சவரைக்குட் கூடினகுறுமுனிவன்
கடமுறுபுனலது கணபதியருளின காரணநதியெனலாய்ப்
படர்பவகிரியம் பாதகமகலப் படர்வன திவலைக்காற்
றுடல்படும்வரசிவ லோகந்தமதென வோடுவர்நீடுவரே.

(இ-ள்.) அந்த நதி குடகதேசத்தி லுறபத்தியாய்ப் பஞ்சகிரி பஞ்சகுரோசத் தெ
ல்லைகருள் பெருகிவரும். அகத்தியமுனிவன் கைககமண்டலச்சலம், கணபதியரு
சிவனுத்தாரப்படிக்குக் கோடியுருக்கொண்டு கவிழ்த்துவிடப்பட்டது. மஹா மகிமை
யுமுள்ளது. தீராதபாவமும், நரகவேதனைகளுந் தீர்க்கப்பட்டது சிறுகாற்றினுடே
யதின் திவலைதெறித்து ஒருவர்மேனியிற பரிசித்தவுடனே யவர்கள் சிவலோகத்
தமது லோகமென்று விரைந்துசெல்பவர்கள். அங்ஙனம் நெடியகாலம் வசித்திரு
பார்கள்.—எ-று.

காவிரிநதியின் கீட்டிசையோசனை காண்பதோர்வரைநாமம்
மூவுலகிற்றெய்வ நதியொடுதேவொடு முத்திமுளைத்தனவாய்க்
காவுலவியபல கற்பகமுளவாய்ந காமிதத்னவுளதாய்ப்
பூவுலகிற்பொன் மலையாயதுசெங் கோடதுபுதுமலையே.

(இ-ள்.) அந்த நதிக்குப்பெயர் காவேரி நதியென்று யாவரும் புகழப்பட்
டது. அந்த நதியின் கிழக்குத்திசை யோசனைதூரத்தில் காணப்பட்டதொரு கிரிஸ்த
ம. அதனுக்குப்பெயர் அனந்தம. திரிலோகத்திலு முண்டாகிய தீர்த்தங்கள்யாவுஞ்
செறிந்திருப்பதாய், தேவாதிதேவன் யெழுநதருளியிருப்பதாய், சகல பாவங்களையுந்
தீர்த்து முத்திமோக்ஷங் கொடுப்பதாய், பலபல கறபகப் புட்பகாவனங்கள் நிறைந்
திருப்பதாய், யிஷ்டகாமியார்த்தந் தருவதாயப் பூலோகத்தில பொன்மலையாகிய
மஹாமேருகிரியின் கொடுமுடிசசிகரமானது புதுமையாய பிரபலமாயிருப்பது தி
ருச்செங்கோட்டு மலையென்றும பெயருடையது.—எ-று. (ரு)

மரகதவடிவென மணியொளிநிறமென மலைவனிதையோர்புறமாய்ப்
புரகனமொடுநிறைபுதியவெண்ணிறமொடு புரிகுழையொடுதோடுங்
கரகதைகாதொடி கனதனமிதழிகொள் கனவுரவதளாடை
யரவணிபதபரி புரவணிமணிமுடி யளகமோடுளமானார்.

(இ-ள்.) மரகதமணியொளி வடிவாகவும், மாணிக்கமணியொளி நிறமாகவும்,
பார்வதாதேவி யிடப்பாகஙகலநது பிரியாமல சாமளவர்ன்னமாகவும் நிறைந்த பா
ல் வர்ன்னமாகவும். நாககுண்டலமும, கனகதாடகம் பொருநதியசெவிகளுந், தெ
ண்டாயு ம் பிடிதத கரமும், தொடிவளைய லணிநத கையும், கொன்றைமாலை சூடிய
மார்பும், முலைமார்பும, வியாக்கிரசரமாம்பரமும், பீதாம்பரமும், வீரககழலணிந்த
பாதமும், சிலம்பணிந்த பாதமும், நாகாபரணங்களும,ரத்நாபரணங்களுந்தரித்த திரு
மேனியும், ரததினமகுடந்தரிதத சடைமுடியும, ஆர்நதொழுகிய கரியகூந்தலுமாக
அழகிய சிவனுருமையு மொனறாய்ககூடி அர்த்தநாரீஸவரராக அந்தத் திருநாககிரி
யி லெழுந்தருளி யிருக்கின்றார்.—எ-று. (சு)

நாகீசுரனெனப் போகீசுரனென நமதீசனைவாழ்த்தி
யாகீசுரருட் சுனைபலகோடியி னவரவர்தினமூழ்கிப்

பாகிர்மொழியுமை பங்கரோட்டறுமுக பாலன் றனையேத்தி
மாகிதமுறும் மந்திரவானவர் மாதவர்தொழுவாரால்.

(இ-ள்.) நாகேசுரரென்றும், யேக பேர்கீஸ்வரரென்றும், நமது பரமேஸ்வரனை த்துவாழ்த்தி வணங்கிச் சிவன்கிருபையிலுண்டாகிய பலகோடி சுனைகளிலும் ரவர் நித்தமூழ்கி பால்போன்ற மொழியையுடைய உமையொருபாகனையும், ச முகக்கடவுளையும் கண்டுசேரிசித்துப் பணிந்து தோத்திரஞ்செய்து சாமவேத கா களால் கீதங்கள்பாடி புட்பாஞ்சலியிட்டுதே தேவர்களு முனிவர்களும் நிறைந் சவிப்பாரகள்.—எ-று. (௫)

இதுமூவுலகையு மீடேற்றும்படி யெய்திப்பணிவெற்பில்
மதமேவியபுலி வடிவாகியசிங்க வன்மானினமானங்
கதமீதறநல் லறிவிற்சென்றே கணபதிசுனை மூழ்கிச்
சுதைமேனியனைச் சோதியையுன்னித் தொல்வரைவலமூன்றாய்.

(இ-ள்.) இப்படித் திரிலோகமு மீடேற்றும்படியாகத் தோன்றியிருப்பது நாககிரிஸ்தலம். அந்த ஸ்தலம் சென்மத்தமான புலிவடிவாகிய சிங்கவன்ம ரா ஜனே இந்தக்கொடிய சாபவிமோசனமாகத்தெளிவிய வறிவினாலே நீயங்ஙனே ஏற்று கணபதிதீர்த்தத்தில்மூழ்கிச் சோதிப்பிரகாசமாகிய வெண்ணீர்த் திருமே ழகிய உமையொருபாகனை மனத்தியானஞ் செய்துகொண்டு அந்தத் திரும ய மூன்றுதரம் வலமாகவருவாய்.—எ-று. (௬)

பணிமலைதனை மூவலம் வந்தேகணை பதிதண்சுனைமுதலா
மணிபெறுநாரா யணதீர்த்தங்கொண் டறுமுகவன் றீர்த்தந்
தணிவறமூழ்கிப் பலபலதீர்த்தந் தனையுட்கொண்டுபரன்
றுணிவுளகுருவுப தேசத்துறுநிலை தொடங்கிமுடித்துளபின்.

(இ-ள்.) திருநாககிரியை மூன்றுதரம் வலமாகவந்து குளிர்ந்த கணபதிதீர்த்த முதலாகி யழகுபெற்ற விஷ்ணுதீர்த்தம். சண்முகதீர்த்தம் மூழ்கியுட்கொண்டு மற்றும் பலபல தீர்த்தங்களும புரோட்சித்துட் கொண்டு துணிவாகப் பரமசற்குரு உபதே சமுறைமை விதிப்படியே தொடங்கி அநன்பின்நியதிகள் முடிப்பாயாக—எ-று. (எ)

ஒற்றைமருப்பனை யுற்றுமகிழ்ந்தங் குவப்புசனையாக
முற்றுபலாக்கனி மாங்கனிதென்காய் முதிர்கதலிக்கனியோ
டற்றையின்மோதன மமுதஞ்செய்தே னபிஷேகத்துடனே
நற்றருடருசோ டசகணபதியி னற்றியானங்கொண்டே.

(இ-ள்.) ஒற்றைகொம்புடைய யானைமுக விநாயகமூர்த்தியைக்கண்டு தெரிசி த்து மகிழ்ச்சியாய் அங்ஙனம் அவர்திருவுள மகிழும்படி பூசார்ச்சனையாகக் கனிந்த ப லாப்பழம், மாம்பழம், வாழைப்பழம், தேங்காய் மற்றும் பலகனிவர்க்கத்துடனே அற்றையில் சமைத்த மோதக மமுதம் மிருதுவாகிய தேனபிஷேகஞ்செய்தவுடனே யலங்கரித்து இலைவயெல்லாம் நிவேதனஞ்செய்து சோடசஉபசாரங்களும் நிறைவே ற்றித்தொழுது கணபதி மந்திரத் தியானஞ் செய்வாயாக.—எ-று. (அ)

பின்குமரன்றீர்த் தந்தனிலாடிப் பெறுசண்முகனையுளத்
துன்புறவெண்ணி யெழுத்தாறும்பக ரஞ்சலிபுரிமுருகாக
கன்புறுபூசனை யபிஷேகத்துட னெய்வேத்தியமேத்தி
நன்புலமாக மயேசுரர்மறையவர் நன்போசனமுதவி.

(இ-ள்.) பின்பு குமாரதீர்த்தத்தில் தீர்த்தமாடி நமைத்துடனே அன்புகொண்டு குமாரக்கடவுளை மனதில் நினைத்து சடாக்ஷர மந்திரங்களை யுச்சரித்து அஞ்சலி யஸ்த

கண்டான் காணு யருநிதி யெய்திய கனபிடிவரியவர்போற்
கொண்டான் மனனிடை கொள்ளா வரவங் கோபுரமுடி தோன்றி
பண்டாகிய வடிவெய்தினர்போலப் பாவித்தான் முனிவன
றண்டாதுறை புரி காவிரிநதியின் றண்புனல் மூழ்கினனால்.

(இ-ள்.) கண்டவுடனே காணாத அருமையான நிதியைக்கிடைக்கப்பெற்ருந்த மிடியையுடைய தரித்திரவான்கள் போலு முட்சொண்டு மனத்தில் அடசாத ஆவல்கொண்டான். அங்ஙனம் திருக்கோபுர முடிதோன்றக்கண்டு முன்சன்கான புலிவடிவுமாறிப் போனதுபோலும் பாவித்தான். பிருகு முனிவன் சொன்னபடியே சிங்கவன்மன் திருக்காவேரி நதியிற் குளிர்ந்த தீர்த்தத்தில் மூழ்கினு

தண்காவிரி நீராடிப்பணிமலை தனைவலம் வந்து முன்னீர்
மண்காவலர் திருவட்டப்பிள்ளையின வண் சரணம் போற்றி
விண்காதல ருமை பாகனை வேலனை வியன்மன முட்கூர்ந்து
பண்காவிய செங்கோட்டிற் பெரியவர் பாதம்பரவினனால்.

(இ-ள்.) குளிர்ந்த காவேரிநீராடித் திருநாககிரியை வலமாகச்சுற்றிவந்து ல்சூழ்ந்த வுலகத்துக் கதிபதிய னவர் திருவட்டப்பிள்ளையாருடைய பாதங்க போற்றிசெய்து சிற்சபா நடராஜரான உமையொரு பாகனையும், வடிவேற்குமாரையும் நினைத்து மனத்துட்களிகூர்ந்து பண்களோடுங் காவியங்களை யோதப்பட் ருச்செங்கோட்டில் பெரியோர்களைக்கண்டு சேவித்தவர்கள் பாதங்களைச் சிங்கவன்மன் பரவிதுதித்தான்.—எ-று.

பரவிப்பிருகு பகர்ந்துள படிகண பதிதீர்த்தந் தோய்ந்து
கரசத்தியைக் கைதொழுதருள்விச் சுவதேவர்க்கரமுற்
றுரசத்திரநதி குமரன் றீர்த்தத் துறுபுனல் மூழ்கியரா
வரையைச் சுற்றினன் மும்முறை யம்முறை வாவிகள் பலதோய்ந்தான்.

(இ-ள்.) தனக்குப் பிருகுமுனிவன் சொன்னபடியே கணபதிதீர்த்தத்தில்மூழ்கி நேமத்துடனே கையில் சத்திவேல்பற்றிய குமாரனைக் கைதொழுது மிகுந்த பக்தியுடனே கற்பகதருநிழலில் காவலாகியிருக்கின்ற விச்சுவதேவனைத்தொழுது வணங்கி ஆசையுடனே சத்திரதீர்த்ததிலும் குமாரதீர்த்தத்திலும் தீர்த்தமாடி ஆசாரமாகத் தினமும், நாககிரியை வலமாக மூன்றுபிரகாரம் சுற்றிவந்து பலபலசுனை தீர்த்தங்களிலும்படிந்து சிங்கவன்மன் மூழ்கினான்—எ-று. (உ௰

எண்ணுயிரதீர்த் தங்களுமிப்படி யினிதினி துறமூழ்கி
யெண்ணரியபங் கனைநாகேசனை யிணையடி தொழுதேத்தி
பண்ணாணர்சங் கமர்பெறுதானம் பாலித் தானதனாற்
றிண்ணுடற்புலி யுருவமொழிந்தொளிர் தெய்வவுருப்பெற்றான்.

(இ-ள்) எண்ணுயிரதீர்த்தங்களிலு மிந்தப்படி இனிதாகமூழ்கி நியதித்தொழில்முடித்து மனோபக்தியாக அர்த்தநாரீஸ்வரனையும், நாகேஸ்வரனையுங்கண்டு, உபயபாதங்களைத்தொழுது தோத்திரஞ்செய்து பண்புடைய பிராமணர்கள், மகேசுரர்கள் மனமகிழும்படி தானங்கள்கொடுத்தான். அதனாலேதிண்மையாகிய புலியுருவமாறிச் சிங்கவன்மராஜன் பிரகாசிக்கப்பட்ட தெய்வ வடிவம்பெற்றான்.—எ-று. (உ௪)

புலியுருவாமொரு புருஷன்வரையிற் பொன்னுருவானதான்
வலியெனநாகீ சரையுமைபங்கரை மைந்தரை வாழ்த்தினராற்

றுயர்சிங்கவன் மன்பிருகுனியின் படிவரமுற்றனனிவ்
விலவ்வானுக குயர்தரவுற்சவ முதவவிரும்பினனால்.

(இ-ள்.) புலிவடிவாய்வந்த ஒரு புருடனான சிங்கவன்மராஜன் திருநாககிரித் தலத்தில் சிவனது கிருபையினாலே பொன்னிறமான வடிவமானான். இது சுவாமியின் மகிமையென்று நாகேசுரரையும், உமையொருபாகரையும், குமாரசுவாமியையுந் வாழ்த்தி வணங்கினார்கள். அப்பலன்பெற்று உயர்ந்த ராஜனானவன் பிருகுமுனிவன் சொன்னபடியே வரப்பெறும்பெற்றான். இவ்வரம் புகழும்படி நாககிரீசுரருக்குப் பிரியமிக வுயர்ந்த வுற்சவஞ்செய்யத்தக்கதாக விருப்பமானான்—எ-று. (உஉ)

அன்னவர் திருப்பணி யாவுமொழிந்தன ரம்மையோர் பங்குடனே
யினனில வனனில வென்னியுமீதிது மிதுசிகர் வரையுளவோ
மன்னவனினபுலி வடிவமகற்றிடி வரையிரு தலதுளமோ
நின்னுருவாழிநின் னிலமும்வாழிநின் னிதியும் வாழியவே.

(இ-ள்.) அந்தத்தலத்தில் வசிக்கும் பெரியோர்களெல்லாஞ் சிங்கவன்மராஜனைப்பார்த்து ஆசிர்வதித்தார்கள். உமை இடப்பாகம்பெற்றுச் சிவனுடனே யேககமாக விருக்கின்ற மகாஸ்தலம் இந்தலோகம். அந்தலோகம் எந்தலோகத்திலாவது இதற்குச் சமானமான ஸ்தலம் இருக்குமோ இல்லையே! சிங்கவன்மராஜனே! உன் புலிவடிவத்தைமாற்றி நல்ல வடிவத்தந்தருளியது, யிந்தக் கிரிஸ்தலமல்லவோ? ஆகையால் உன்னுடைய வடிவம் வாழி. உன்னுடைய தேசம்முழுதும் வாழி. உன்னுடைய திரவியங்களனைத்தும் செழித்து வாழி வாழியென்று புகழ்ந்து வாழ்த்தினார்கள்.—எ-று. (உரு)

எனமறையவரொடு குரவருந்தவ ரினிதுறுசங்கமர்கண்
ணனவரநமுமிவ் வழகரன்விழியட ராமதனன்போலக்
கனமுறவாழ்க விழாவுநடத் துக் கண்ணுதலுக் கதுகேள்
நினதிருமரபினு முறுகதி மிலைமை நிகழ்த்துவ தரிதென்றார்.

(இ-ள்.) என்றிப்படிப் பிராமணருடனே குருக்கணமார்கள், அரியதபோதனர்கள், இனிதாகிய குலிங்கசங்கமான மயேசுரர்கள் இவர்களெல்லாம் சிங்கவன்மனைப்பார்த்து ஐய! சிங்கவன்மராஜனே! நீ யனவரதகாலமுஞ் சிவனுடைய நெற்றிக்கண்ணெருப்பி லறியாத அழகிய மன்மதனைப்போலப் பெருமைபொருந்தி வாழ்கச். சுவாமிக்குத் திருவிழாவும் நடத்தினால் உன்னிரு மரபிலுள்ளவர்கள் பெறும்பலனைச் சொல்லுவதரிதென்று சொன்னார்கள்.—எ-று. (உச)

என்பனமன்னவ னுட்கொண்டருதெம திடமர்குவதென்றே
மன்புகழ்கூர்சிங்க வன்மன்றனது செயங்கலமாபதியிற்
பொன்பொருள் கரியின பிடர்பலதிரள்வரு புரிவுபுகன் றன்னன்
றன்புடனந்தணர் பூசகர்தேசிக ராசிவிளம்பினரே.

(இ-ள்.) என்றிப்படிப் பெரியோர்கள் சொல்லக்கேட்டு மகிழ்வாய் மனதிலுட்கொண்டு அவையெல்லாம் நம்மாலே செய்யலாகுமென்று சகலரும் புகழ்கின்ற சிங்கவன்மராஜன் யேவலாளரை யனுப்பித் தன்னுடைய செயங்கல நகரத்திலிருந்தும் அளவில்லாத சொர்னத்திரவியங்கள் யானைகளின்மேலே வைத்து மிங்கேகொண்டுவந்து சேர்க்கும்படியாக வுத்தரவுசெய்தான். அதுகண்டு மகா சந்தோஷ

மாகிப் பிராமணர்களீ, தானிகர்கள், குருக்கள்மாரான அனைவரும் ஆசிர்வாதஞ் செ ன்றார்கள்—எ-று. (உரு

சிங்கவன்மர் சாபவிமோசனச் சருக்கம். முற்றும்

ஆகச்சருக்கம்-சயிக ச்கு திருவிருத்தம். சஅயச.

---

# திருவிழாச் சருக்கம்.

அச்செயங்கலத்துமின் றனந்தவானைவன்பிடா
மெச்சுமர்த வியமரும் விளங்கு பாரமணிகளுய
கொச்சை யங்குாத்திமேசர் குமாரர் குரர்விரமு
செச்சையம் புயத்தர்பொற் சிலம்பெனக் குவித்தனன்.

(இ-ள்.) சிங்கவன்ம ராஜருத்ராயின்படி அந்தச்செயங்கல புத்திலிருந்து அளவில்லாத ஆனையினபேரிலே யேற்றிக்கொண்டு வரப்பட்ட சொர்ணவயங்களையுந், துலக்கமாகிய நவரத்தின மணிகளையும் ராவெள்ளி மணவாளருமேன். வெட் சிமாலைசூடிய புயங்களையுடைய குமாரர்களுடைய பொன்மலைகள் போலுங் குவி த்தார்கள்—எ-று. (க)

குவித்தவாட்சிங்கரும் குவித்த பச்சை நீலமுங்
குவித்தவார மணியுமூன்று குன்றமொத்த தென்றிடல்
நவித்தடங்கையார்விளங்கு நாகவெற்புமூவரு
மூவத்துவைத்திறைஞ்சுகாட்சி யென்னவோதுமுலகமே.

(இ-ள்.) அப்படிக் குவித்துவைத்த சொர்ணங்களுங், குவித்துவைத்தநீலமரகதமணிகளுங், குவித்துவைத்த முத்துமணிகளும் மூன்றுமலைபோலத் தோற்றஞ்செய்தது. மான்மறியேந்திய பெரியகைகளையுடைய பரமேஸ்வர னெழுந்தருளிய திருநாககிரிக்குத் திருமூர்த்திகளுடைய காணிக்கையாகக் குவித்துத் தொழுதுவணங்கிய காட்சிபோலுமென்று உலகம் சொல்லுகின்றது—எ-று. (உ)

வரருசிக்குநிகர்படித்த கணிதவாணர்மருவினர்
குரவரிற்றெளிந்தவாகமத்தர் வந்துகூடினர்
திரமயற்குநிகர்கொளோவியத்திரட்செறிந்தனர்
புரவடுக்கடுக்கவல்ல புயபலத்தர்குழுமினர்.

(இ-ள் அப்போதங்ஙனம் வரருசிமுனிக்குச் சமானமானகல்வியுடைய கலைசசாஸ்திரவாணர்கள் வந்துசேர்ந்தார்கள். குருக்கள்மார்களில் தெளிந்த அறிவையுடைய ஆகமர்கள்வந்து கூடினார்கள். திரமான செய்வமயனுக்கு நிகரான சிற்பாசாரிகள்வந்து செறிந்தார்கள். வரிசையாக எடுத்து அடுக்கியடுக்கி வைக்கத்தக்கவல்லவர்களான புஜபலமுடைத்தான பேர்களும் வந்துகூட்டமிட்டார்கள்—எ-று. (ங)

மலைபிணித்தபோதும்வென் னுகத்திழுப்பவல்லதா
யலைபிணித்தபோலும்வெம் பகட்டுவெள்ளமார்த்தன

சிலைபிணித்தநுதமபிங்கர் தேரிரும்புகொல்லர்க
ளுலைபிணித்துநன்முகூர்த்த மொன்றுசெயவமென்னவே.

(இ-ள்) மலையைக் கட்டிவைத்தபோதும், பிடரிக ளிலங்கங்களை யெய்தவப்பூட்டி யவுடனே யிழுத்துக்கொண்டு வரப்பட்ட வலுவுடையதாய சரிய மலைகளைக் கட்டினது போலும் குரூரமான கடாக்களை கட்டினகூட்டங்கள் பண்டிகளை இழுத்துக் கொண்டுவந்து ஆரப்பித்து விறபோன்ற நுதலழகிய வுமையொருபாகர் தேருக்குச் சேர்க்கும் யிரும்புகளை ஈட்டியடித்த தக்கதாகக் கருமார்களால உலைகள் சேர்த்து நல்லதொரு முகூர்த்தத்தை செயவோமென்று சிங்கவன்மன் நினைத்தான—எ-று (௪)

அந்தநாரிகணபதிக் கருச்சனைத்தொழிற்புரிந்
துத்தமர்த்தினைந் துவைப்ப வோரருந்தேர்தொடங்கினர்
சித்திரச்செழுமபொனுலும் வெள்ளியாலுஞ்செயதனர்
முத்துரத்னவச்ரமிட் டிழைத்திழைத்துமுற்றினர்.

(இ-ள்) முந்தி அர்த்தநாரி கணபதி யாருக்குச் சோடசவுபசாரங்களால் பூசித்து வணங்கி உத்தம சுபதினத்தில முகூர்த்தமிட்டுவைத்து உயர்ந்த தேர்களைச் செய்யத் தொடங்கினார்கள் விசித்திரமாகச் செழுமையுடைய பொன்னினுலும, வெள்ளியினுலும முத்துமணிகளை ரத்தினமணிகள் வச்சிரமணிகளை வைத்திழைத்து முடித்தார்கள்.

முற்றுமாமணிக்கொடிஞ்சில் முருளமிந்துசூரியன்
பறுநாவாத்தமற்று படாகனறவகலயத்
தெற்றிலாழிப்பாதலத்துச் சேடனுச்சிசெறிதலாய்ச்
சுற்றுதோவிசாலமெண டிசைகளும்வீறுகொற்றமே.

(இ-ள்.) அப்படி அழகிய தேர்கள் செய்துமுடிந்தது தெய்வமணிகளால் முகுளிதமானகொடிஞ்சிலகளும், ரத்தினககலசங்கள சூட்டிய ரவணிதங்களும, சந்திரசூரியப் பிரபைகளைப்போல இருபொழுது மிருட்படலைநீக்கி யெப்பொழுதும் பகற்காலமாகவே தோன்றப் பாதலத்தில ஆதிசேடனுச்சி மருட்டச்செறிவதாக வுயர்ந்தவண்டிலகளாகப் பூட்டிய வட்டமாகச் சுற்றுப பிரகாரம பொருந்திய தேர்களினுடைய விசால த்திக்குகளெலலாம நிறைந்து பரவியிருப்பதாய்ச சீர்கொடிகளு மேற்றிவைத்து அலங்கிருதமாகத் தோன்றச் செய்துமுடித்தார்கள். (௬)

மகரசூரியன்விளங்கி மருவுதை மதிகருளிந
திகழுறுநவளாதினத் திரேவதிக்கடுத்தநா
ளுகம்விளங்கவிகமவிளங்க வுபரிவிளங்க மறைவலோ
ரகம்விளங்க வருள்விளங்க வணிவிழா தொடங்கினன்.

(இ-ள்.) மகரராசியில் சூரியன் மருவிவிளங்கத், தைமாதத்தில் சந்திரன் வளர்கின்ற பொருந்தியநாளகளில விரோதமில்லாத ரேவதி நட்சத்திரத்தில யுகதர்ம்மமும, யிகலோகமும், சகலசிவ ஆகமங்களும், மறைவலலோரான வேதியாகூட்டங்களும் விளங்கச் சுவாமியினது கிருபைமுதலாகியயாவும். அலங்காரம்பொருந்திய திருத்தோ திருவிழாசெய்யச சிங்கவன்மராஜன் தொடங்கினான்.—எ-று. (௭)

இம்முகூர்த்தமீதுநா ளிவற்றிஞகவீசுரன
விம்மிதஞ்சிறந்தவா லயம்விளங்கியேறவே

செம்மல்வென்றியேறவீறு செல்வமேறநல்லரு
ளும்மைபங்கரேறவோ ரணிப்பதாகையேற்றினான்.

(இ-ள்.) இந்நாள் முகூர்த்தத்தில். கொடியேற்றம் யிந்தநன் முகூர்த்தத்தில் ம தோற்சவமென்று யாவரு மறியும்படி விதிவிதானமும, இராமசாந்தியுஞ்செயபூ நாக ரியீசுரர், மனோரம்மியமாக விம்மிதஞ்சிறந்த சருவாலயங்களெங்கு மேன்மை யாக விஜயங்களும், மிகுந்த செல்வங்களுந் தழைத்தோங நன்மையான வருளுடைய உமையொருபாகரேற வழகிய வொரு மணிப்பதாகைக் கொடியேற்றஞ்செய் தருளினா தான் சிங்கவன்மன்.—எ-று. (௮)

ஐங்கரற்கோ ரிரதமுஞ்சொல் லறுமுகற்கோரிரதமுஞ்
சங்கரற் கோரிரதமுஞ் சமைந்த மூவனாத்திர
ளிங்கிதங்கொள்கைலமேரு விமையமெனவிமையவர்
பொங்குநன்புதங்கநின்று புட்பமாரிபொழியவே.

(இ-ள்.) ஐந்துகரங்களையுடைய வாரணமுகப்பிள்ளையாற்கு ஓர் இரதமும், சண்முகற்கோர் யிரதமும், அர்த்தநாரீஸ்வரர்க்கோர் இரதமுமாகச் சமைப்பித்த யிரதங்களமூன்றும, கைலாசகிரி, மகாமேருகிரி யென்னப்பட்டு நின்று இரசள்பெ ருஞ் சோன்றிவிளங்கத் தேவர்கள் மனோகரமாய்ப் புட்பமாரிபொழிந்து புகழ்ந்தார் கள்.—எ-று. (௯)

காவணங்க ளாவணங்கள் கனகதோரணம்பெறக்
கோவிணங்குபொற்குடைக் கொடித்திரட்குழி இவர்ப்
பூவணங்கிளட்டமங் கலத்திருப்பொருந்தவே
ளேவணங்கவோகத்தை யோகங்களாக்கினார்.

(இ-ள்.) எங்கும் காவணப்பந்தரிட்டு வீதிகளெல்லாங் கனகமயமான தோர ணங்களகட்டித் தேவநகரம்போலத்தோற்ற நகமெய ம் பூரணகும்பம், கவரி, சொர்ணகொடி, குடை, கன்றுமுடி, சந்தனகுகே லயங்கள், கமுகு, கரும்பு, வா ழை, தென்னம்பாளைகள தொங்கவிட்டு அஷ்டமங்கலங்களால், லட்சுமீகரம்பொ ருந்த திருவோக நகரத்தை மிகுந்த அழகுபெற அலங்கிருதஞ்செய்தான்.—எ-று.(௰)

ஒருமருப்பருக்குநாழி குமாருக்குதவிங்
ஙிருமருப்பணிக்கடம்ப ரினியபூசைநனிபுரிந்
தருமருப்பருக்கவேணி வடுகார்ச்சனைக்குளாய்
வருமருப்பருட்கமன்ன வரத்து பூசையேத்தினான்.

(இ-ள்.) ஓரறைக்கொம்புடைய யானைமுகத்து விநாயகமூர்த்திக்குத் தேங்கா ய்களுடைத்து, நிவேதனஞ்செய்து, வாசனையுடைத்தான கடம்பமலர் மாலைசூடிய பு ன்னிரண்டு புயக் குமாருக்கு இனிதாகப் பூஜைபுரிந்து அருமையான வெள்ளெரு க்கமலர்மாலைசூடிய சடையுடைய பரமேஸ்வரனுக்கும் பூஜையும் வயிரவார்ச்ச னையுஞ்செய்து பசைஞைசசெயித்த மன்னவனான சிங்கவன்மராஜன் வாத்துப் பூ ஜையுஞ்செய்து வணங்கித்துதித்தான்.—எ-று. (௰௧)

இந்திராதிலோகபால ரெய்துபூசைசெய்துநாற்
புந்திவேதரால்விளங்கு புண்யயாகநண்ணவே

தந்திரங்களால்தொலிப்ப யாகசாலைதருதொழிற்
சிந்தைமுற்றியுந்திவந்த திசைமுகற்பணிந்தனர்.

(இ-ள்.) இந்திராதி அஷ்டதிக்குப்பாலகருக்குப் பூஜைபுரிந்து போதமாகிய வேதியரால் விளங்கும்படியாக புண்ணிய ரவுபாசனஞ்செய்து யாகங்கள் நிறைவேற வேதாகம மந்திர தந்திரங்களால ஓசைமுழக்கமாக யாகசாலையிற் செய்யுந்தொழில் முறைமை யாருக்கினொலாந் தேவர்கள் சந்தோஷமாகும்படி நிறைவேற்றித்தருமா லுந்தியில்வந்த சதுர்முகப்பிரமமாவையும் பூசித்துவணங்கினன்—எ-று. (௰உ)

பிரம்மபோசனங்கள்கோடி கோடியிற்பெருக்கினன்
வரமயேசுரற்குமா மடத்தருக்குமன்னினா
றெருநிறைந்தகளபகுங்கு மம்பன்னீர்கள்சிதறினு
னிரவிபோலமணிகடீப மேற்றியேற்றமேற்றினன்.

(இ-ள்.) கோடிகோடி பிராமணாகளுக்குப் பெருக்கமாகப் போசனங்கள் சமர்ப்பித்து மயேசுரருக்கும், மடாதிபதிகளுக்கும், அப்படியே போஜனஞ்செய்வித்து ச, தெருவெங்கும் நிறைந்து மணங்கமழுக களப குங்குமம், பன்னீர்க்குழம்புகள் யிறைத்து, சூரியப்பிரகாசம்போல ரத்தினமணித தீபங்களும் அளவில்லாத தெய் தீபங்களு மேற்றிவித்தனன.—எ-று (௰௩)

முப்பயங்கனமுப்பழங் கரும்புபாகுமுறிகொடே
னப்பமப்புறப்பரப்பி லாரவாரவருளினு
னிப்படிச்சிறப்புநல்கி யிப்படிச்சிறப்பமே
லொப்பறச்சிறந்ததேர்க ளோளிவடந்தொடங்கினன்.

(இ-ள்.) மூன்றுவகை வர்க்கங்கள், முபபழங்கள், கரும்புகள், பால், தயிர்கள், உசிதமான சாககனை, தேன், அப்பவர்க்கம், வடை, பருப்பு, பாசயாசங்கள முதலான பதார்த்தங்களெலலாஞ் சமர்ப்பித்துச் சுவாமிகளுக்குத் திருப்ததியாக நிவேதனஞ்செய்வித்தான. பரிபூரணமாகச் சகல சிறப்புஞ்செய்து மண்டலமெல்லாம்புகழ ஒப்பில்லாம லுயர்ந்த தங்கசிறில ஒளிபெருந்திய வடங்கள்பூட்டி நடத்ததொடங்கினன் சிவசவனமாரா்ன்.—எ-று. (௰௪)

கனககோசிகந்தயங்கு கனகசல்லிசல்லியிற்
புனையுமாரவாரமாலை பொற்சதங்கைகிண்கிணி
நினைவிதத்ததண்டையேம நிறைபதாகைமாலிகை
புனையோராழியிரதமீ தெனக்கனம்புதுக்கினன்.

(இ-ள்.) சொர்ன்னப்பட்டாடைகள் கனகசல்லி, சங்கிலிகள், விசித்திரமான ரத்தினமாலை, முத்துமாலைகள், சொர்ன்னச சதங்கைகள், கிண்கிணிகள் விசித்திரமான தண்டை, சொர்ன்னச்சரிகை நிறைநத துவசங்கள, சரப்பணிமாலைகள், புட்பமாலைகள், இவைகளெலலாஞ்சூட்டிச் சூரிய ஜெற்றைவண்டில் தேரிது வென்னும் படியாகக் கனம்பொருநதப் புதுமையாக அலங்கிரதஞ்செய்தான்.—எ-று. (௰௫)

பாம்பணிந்தநாகவீச ரென்றுடன்படர்ந்தபொற்
காம்பணிந்தவாலவட்டக் கணமடர்ந்தநிறைநிலாக்
கூம்பணிந்தெனத்தனூர் குடைகள்கோடிகுழுமியாழ்த்
தேம்பணிந்தளங்கள்பாடல் தேவர்கினனரத்தரே.

(இ-ள்.) நாகாபரணந்தரித்த நாகேஸ்வரரென்று வுடனபடாந்து வருவதுபோலச் சொர்ன்னக்காமபணிந்த ஆலவட்டத் திரட்சிகளும், பூரணச்சந்திரன் குவிந்தது

தேர்நடக்கிற வண்டிவோசைகள் சமுத்திரகோஷம்போலு முழங்கிவிளங்க மனோ பத்தியாகச் சற்றும் இடையூறில்லாது சிங்கவன்மராஜன் திருத்தேர் திருவிழா நடத்தினன்—எ-று. (௨௰)

கொங்குமண்டலங்கள்செய்து கொண்டபுண்ணியங்கள்பா
ரெங்கு மண்டலங்களுக்கு மண்டருக்கு மில்லையால்
சங்கரற்கு வந்தசங்க மத்தர்வேத முனிவர்போர்த்
துங்கமன்னர் தேவர்மேவு தொல்லிடங்களானதால்.

(இ-ள்.) கொங்குமண்டலஞ் செய்து கொண்ட புண்ணியங்கள் பூமண்டலங்களுக்குமில்லை, தேவர்களுலகத்திற்குமில்லை. ~~சங்குசக்கர மூர்த்தியாகிய~~ பரமேசுவரனுக்கு ஒப்பாகி யுபாங்க முருலிங்க சங்கமங்களும், வேதமுனிவர்களும், போர்த்தொழிலில் வீரமுடைய அரசர்களுந், தேவர்களுமருவி நிறைந்திருந்தால் பூர்வபுண்ணியஸ்தலமானதென்று சூதமுனிவர் சொன்னார்—எ-று. (௨௧)

பனிமலைப் பரப்புரந்த பாரமேரு கங்களின்
மணியணிக்கொள் சிங்கவன்மர் வன்செயங்கலத்தினில்
தணிவிலாத் தலங்களத் தலந்தவிற் கொணர்ந்தநீ
ளணிகொள்சங்க மர்க்குநம்மேரு பார்க்குமாக வருளினன்.

(இ-ள்.) அந்தநாககிரி அடிவாரச் சாரலில தேவபுரம்போலும் அழகிய திருச்செங்கோட்டுத் திருவேரக நகரங்களில் வந்துவசித்த திருவிழா நடத்திய மணிப்பணியணிந்தழகிய சிங்கவன்மராஜன் தன்றுடைய செயங்கல புரத்திலிருந்து குறைவில்லாமல் வெகுதனங்கள் வரவழைத்து தானமிருக்கின்ற நீறுபூசிய சங்கமர்க்கும் பிராமணருக்கும் மகாதானங் கொடுத்தருளினன்.—எ-று. (௨௨)

அன்ன சத்திரங்களன்ன நவமடங்க ளாலயந்
தென்றூல்வேத கூட்டம் வேதியர்க்குசும் வான்மனைத்திரள்
மன்னு செல்வ வகரநாவ லர்க்கிருக்கை நால்வகை
வன்ன வீதி கோடி கோடி மாககர்ப்படுத்தினன்.

(இ-ள்.) அன்னசத்திரங்களும், அனேக திருமடங்களும், திருவாலயங்களும் தென்கலையோதுவார் திருக்கூட்டங்களும், சேர்ந்ததிருமாளிகைகளும், பிராமணருக்கு வாழ்வுபொருந்திய மனைகளனேகங்களும், செல்வம் நிறைந்த அக்கிரகாரங்களும், நாவலர்களுக்குத் திருமாளிகைகளும், சமர்ப்பித்தருளி நால்வகை வரணத்தார்கள் விளங்கிய வீதிகள் கொடிமண்டபங்களும திருச்செங்கோட்டு மஹாஸ்தலத்தில் விளங்கியிருக்கச் சிங்கவன்மராஜன் செய் தமைத்தான்.—எ-று. (௨௩)

பாவைமார்முன் னூற்றோடாறு பத்தர் சித்திரத்தரா
யாவவாலை யத்திருக் கமைத்தன னெந்நாளிலும்
பூவினோடு நானகற் பூரங்கதம்ப குங்குமந்
தேவிபங்கருக்கும்வே லவர்க்குமிக்க செய்தனன்.

(இ-ள்.) மனோபத்தியோடு கட்டழகான பெண்கள் முன்னூற்றறுபதுபேர் சுவாமிதிருவாலயத்தில் சதாகாலமுஞ் சேவித்துக்கொண்டு வாழ்ந்திருப்பதாகவும், யெந்தக்காலத்திலும் நடந்துவரும்படி திவ்வியசந்தனங், கற்பூர, குங்கும, கதம்ப, வர்க்கங்களும் அனேக புட்பமாலைகளும் உமையொருபாகருக்கும் வேலவருக்கும் மிகுந்த சிறப்பாகச்செய் தமைத்தான்—எ-று. (௨௪)

அனந்த சத்திரங்களங்க ணங்கு ளங்க ணாக்கின
னினைந்த போது நாளிலாயிரம்பொனின் குடங்களால்
வனைந்த காவிரிப்புனல் கிரிப்புனலொன்றுயிர
மனந்தம்வே லவர்க்குமத்த நாரியர்க்கு மாட்டினான்.

(இ-ள்) அனந்தஞ் சத்திரசாலைகளை அங்கங்கே உண்டாக்க வியைசான் நினைத்த போதேயெல்லாம் நாளொன்றுக்கு ஆயிரஞ் சொர்ணக் குடங்களால் புனிதமான காவேரி தீர்த்தங்களுங் கிரிதீர்த்தங்களும் ஆயிரங் குடஞ் சலங்களாக வேலவருக்கும் அர்த்தநாரீசுவரருக்குந் திருமேனிகுளிர சிவசுவன்மன் அபிடேகஞ்செய்தான். (உ௫)

புழுகு குங்கு மங்கள் சந்த னங்கள் கர்ப்புரங்கள்மேல்
முழுகிவெள்ளம் வெற்பிலோட முழுமணித் துகிற்புனைந்
தெழுமிரா று கதிருக்கிந்திரத் தச்சோதிமேவிட
முழுகுசென்னி யிற்கவிப்ப முகணாற் களித்தனன்.

(இ-ள்.) புனுகு, குங்குமங்கள், சந்தனம், கற்பூரங்கள், குழம்புகளெல்லாஞ் சுவாமிகள் திருமேனிமுழுகி மலையொரு மேருபோலும்படியாக அபிடேகஞ்செய்து நிறைந்த மணிகள்கோவைத்த துகில்களைத் தரித்துப் பனிரண்டு சூரியருதித்த சோதியபிரபைபோலுங் கதிர்விரிகின்ற ஆபரணங்களைப் பூண்டு நவரத்தின மழுத்திய சொர்ணகிரீடமுங் கிரியம்பகனைப் பமேலவைந்து குருதரித்தருளினான்.—எ-று.

வாலிதேவ சுராசுரேனை வரகணங்கள்மலையினாற்
பாலின்வேலைகடையவந்த பாரவாரவமுதெனத்
தாலமன்னமணிகளேம தாலமாயிரந்திவி
லேறமாநெய்வேத்தியங்க ளோதநிவேத்தியேந்தினான்.

(இ-ள்.) வாலி, சுக்கிரீவன், சுராசுரர்களெல்லாங்கூடி திருப்பாற்கடலை மந்தரகிரியினால் மர்த்தனஞ்செய்தபோது அப்பனம் உதித்தெழுந்துவந்த சேவாமுர்தம் போலுந் திவ்விய அமுதபோஜனமுதலாகிய சகல பதார்த்தவர்க்கங்களும் பொன்மணித்தாலங்கள் ஆயிரந்தாலங்களில் நிறைய அமைத்து மஹா நிவேதனஞ்செய்து ஏலதாம்பூலஞ்சமர்ப்பித்து சோடச உபசாரங்களுஞ்செய்து புட்பாஞ்சலியிட்டு வணங்கித் துதித்தான்.—எ-று. (உ௭)

ஏத்தியத்நாரிலிங்க போற்றியெந்தைபோற்றிவெங்
கூற்றுதைத்தசரணபோற்றி குன்றபோற்றிகொன்றையாய்
போற்றிநாகவெற்பபோற்றி புனிதபோற்றிபுலிதவிர்த்
தாற்றநந்தவையபோற்றி யைம்முகத்தபோற்றியே.

(இ-ள்.) அர்த்தநாரீஸ்வரனே! போற்றி என் பிராணேசுரனே! போற்றி கொடிய காலனையுதைத்த கமலபாதனே! போற்றி, கொன்றைமாலைசூடிய சடைமுடியுடையவனே! போற்றி, திருநாககிரிக் கர்த்தனே! போற்றி, நிஷ்களங்க சுத்தனே! போற்றி, யென் புலியுருவத்தைத்தவிர்த்து நல்லவடிவு தந்தருளிய அய்யனே! போற்றி ஐந்து முகமழகிய சிவனே! போற்றிபோற்றியென்று தோத்திரஞ்செய்தான்,—எ-று.

கந்தபோற்றிபன்னிரண்டு கைத்தலத்தபோற்றிவேற்
குந்தபோற்றிதெய்வசேனைக் கொழுனபோற்றியறுமுகக்

தெந்தைபோற்றிசிந்தூரத் தெழிற்புயத்த்போற்றிநா
மைந்தபோற்றிவள்ளிபங்க் மயிலிடத்தபோற்றியே.

(இ-ள்.) சந்தசுவாமியேபோற்றி, பன்னிரண்டு கையனேபோற்றி, வேலாயுதக்கடவுளேபோற்றி, தெய்வசேனை மணவாளனேபோற்றி, குமாரசுவாமியேபோற்றி, சிந்தூர சந்தன களபந் தரித்தழகிய மார்பனேபோற்றி, சிவ னுமை மைந்தனே போற்றி, வள்ளிபங்காளனே, மயில்வாகனக்கடவுளே! போற்றிபோற்றியென்று சிங்கவன்மராஜன் குமாரசுவாமியைப் போற்றிசெய்து வணங்கினான்.—எ-று.(உ௯)

எனவணங்குசிங்கவன்ம னியையகண்புணர்ந்துநா
கனகவர்த்தநாரிநாதர் கந்தனைப்பயந்நதே
வனகர்கொங்குநாடர்கோதை யைமுகத்தருள்புரிந்
துனதுசிந்தையுற்றநல் வரங்கள்கேளென்றிருதினார்.

(இ-ள்.) என்றிப்படிவணங்கிப் போற்றிசெய்த சிங்கவன்மராஜனுடைய மனோ பக்தியறிந்து நாககிரி யாத்தநா ரீஸ்வரசுவாமியார், கந்தசுவாமியைப்பெற்றருளிய அனகர், கொங்குநாட்டதிபர், கோதைநகர்க் கிரியிலெழுந்தருளிய ஐந்துமுகக்கடவுளான உமையொருபாகர் கிருபைசெய்து உன்னுடைய மனதில் நன்மையான வரங்கள் கேளும் அரசனே யென்றசுவாமி சொன்னார்.—எ-று. (௩௰)

அன்னகாலைசிங்கவன்ம னடியன்மண்டலந்தனி
லென்னில்வேறோதிபரின் றெனக்கோர்மைந்தனுதவென
மன்னசத்யவன்மனென்னு மைந்தனித்தலம்புரந்
துன்னில்வீறுமீறுமெம் முபயதாளெனச்சொன்னார்.

(இ-ள்.) அப்போது சிங்கவன்மராஜன், சுவாமீ! யடியேன் அரசாட்சியாக ஆளப்பட்ட மண்டலத்தில் பிற்காலத்தில் அரசாளும்படியாக வேறொரு மன்னவர்களில்லை. ஆதலா லெனக்கொரு சற்புத்திரனைக் கொடுத்தருளுமென்றான். அப்படியே சுவாமியும் வாராய் சிங்கவன்மராஜனே, சத்தியவன்மனென்றொரு பிள்ளையுண்டாகி யுன்னிலும் அதிகமாக இந்த வுலகத்தை யாண்டிருப்பான். பிற்காலத்தில் நமது உபயபாதஞ் சேர்வானென்று சுவாமி சொல்லியருளினார்.—எ-று. (௩௧)

அத்தநாரிமுத்தரீபு மவ்வரங்கள்பெற்றபின்
சித்தமிட்டகாமியஞ் சிவனடிமையானபேர்க்
குத்தமத்தினுதவிதாக வோங்கவீரகத்துவாழ்
முத்தர்தாள்வணங்கிநின்று மொழியுமாசிவேண்டினான்.

(இ-ள்.) அர்த்தநாரீஸ்வரர் கொடுத்தருளிய வரங்களெல்லாம் பெற்றுக்கொண்டபின்பு சிவனடியாரான பெரியோர்களுக்கு இஷ்டகாமியார்த்தங்களெல்லாமுதவிசெய்து உத்தமசித்தனாகி நாககிரிசூழ்ந்த திருவேரகத்தில் முத்தராகிய பெரியோர்கள் பாதங்களை வணங்கிநின்று அவர்கள்சொல்லும் ஆசீர்வாதங்கள் விரும்பி வேண்டினான் சிங்கவன்மராஜன்.—எ-று. (௩௨)

ஆசிகூறவளவிலாத வன்னசொன்னகோடிநந்
தேசமீதுசேருமென்று சேனையானைபுரவிதே

ரேசில்சேனையென்றோர்வெள்ள மீறிலாதுசூழ்கவே
மாசில்தீரசிங்கவன்மன் மாநகரப்படர்ந்தனன்.

(இ-ள்.) அந்தத்தலத்திலிருக்கும் குருக்கள்மார் முதலாகிய மேலோர்களெயாவரும் ஆசீர்வதிக்க. அவர்களுக்கு அளவில்லாத அன்னதானங்கள் கொடுத்தருளியபின்ட கமதுதேசத்துக்குப்போய்ச் சேர்வோமென்று சேனை, யானை, குதிரை, சதுரங்கசேனை ஒருவெள்ளம் அளவில்லாமல சூழ்ந்துவர தனது தேரின்மீதேறி நிஷ்க்களங்க சுத்தமனத்தனான சிங்கவன்மராஜன்தனது மஹா நகரத்திற்குச்சென்றான்.—எ-று. (௫௩)

படர்ந்துஞானிபிருகுதாள் பணிந்திவ்வாறெலாமுறைத்
தடர்ந்தபாதவம்புயந்த னணிமுடிக்கணிந்துபார்
திடந்தயங்குரோவைசூழ் செயங்கலத்தடைந்துபொன்
னிடங்கொள்சிங்க வாகனத்திருந்துபார்புரந்தனன்.

(இ-ள். அப்படிசசென்று ஞானமூர்த்தியான பிருகுமுனிவனைக்கண் டவர்பாதத்தை வணங்கி யிங்ஙனம் நடந்தவரலாறெல்லாஞ் சொல்லி அவர்பாதாம் புயத்தைத் தன்னழகிய முடிக்கு முடியாகவணிந்து மிகவுந்திடம்பொருந்தி விளங்கிய ரோவைநதி சூழ்ந்த செயங்கல புரத்திற்சேர்ந்து லட்சுமி தேவிக்கிடமான சொன்ன சிங்காசனத்திலிருந் திவ்வுலகத்தை யாண்டிருந்தான் சிங்கவன்மராஜன்.—எ-று. (௫௪)

புரந்தரனிருக்கைபொற் புரந்துபார்நிரந்தரம்
வரந்தயங்குசத்யவன்ம மைந்தனைப்பயந்துதன
னுரந்தரத்தனுலகையாள வுதவியத்தநாரிதாள்
சிரந்தரப்பொருந்திநல்ல செல்வமெய்திவாழ்ந்தனன்.

(இ-ள்.) நிரந்தரமாக இந்தப்பூமண்டலத்தைத் தேவேந்திரனைப்போல அரசு புரிந்து வாழ்ந்திருந்தான். அதுகாலத்தில் சிவனுடைய வரப்பிரசாதத்தினால் சத்தியவன்மன் என்னும் புத்திரனைப் பெற்று வளர்ந்து பகுத்தறிவுண்டாகிய பக்குவத்தில் தன்னுலகத்தை யவனாளும்படியாக முடிசூட்டிவைத்து நாககிரி அர்த்தநாரீஸ்வர சுவாமி பாதங்களைச் சிரத்திலும் மனத்திலும் பொருத்தி சிங்கவன்மராஜன் வாழ்ந்திருந்தான்.—எ-று. (௫௫)

சிங்கவன்மர்காதையைத் தினந்தினம்படித்துளோ
ரிங்கிதத்துவந்துகேட்கு மினியரத்தனாரியார்
துங்கநல்வரம்படைப்பர் சோதிவேலரருளினா
லெங்கணுஞ்சிறந்திருப்ப ரிடர்கள்தீர்ந்துவாழ்வரே.

(இ-ள்.) இந்தசிங்கவன்மராஜனகதையைத் தினந்தினம் படித்தபேர்கள்மனதன்புடனே ஆசையாகக் கேட்கின்றவர்கள் யெல்லாம் அர்த்தநாரீஸ்வரசுவாமி கடாக்ஷத்தினாலே மேன்மையாக நல்லவரப்பிரசாதங்களைப் பெறுவார்கள். சோதிப் பிரகாசமான வேலருடைய திருவருளினாலே யெங்கெங்குஞ் சிறப்புபொருந்தி யிருப்பனவுமன்றி சகலமான இடர்களுந்தீர்ந்து வாழ்வார்கள்.—எ-று. (௫௬)

திருவிழாச்சருக்கம் முற்றும்.

ஆகச்சருக்கம் ௪௨-க்கு திருவிருத்தம் ௲௨௰.

---

# பாண்டவச் சருக்கம்.

நாகாசலம்நா னிலம்வந்தனவும் நாகிசன்
மாகாரணமும் பூசைபுரிந்தார் வளமுற்று
மோகாதரவள் ளிக்கினிதாகிய முருகேசன்
சேகார்வினைவென் றனவும்வரவுஞ் செயல்யாவும்.

(இ-ள்.) அந்தத் திருநாககிரி கொங்குமண்டலத்தில்வந்த வரலாறும். சுவாமி உமைக்கு அர்த்தபாகங்கொடுத்ததும். அர்த்தநாரீஸ்வரராக எழுந்தருளிநின்ற காரணங்களும். பூஜைபுரிந்து நல்லவரங்கள் பெற்றவர்கள் வளமைமுழுதும் வள்ளியம்மனுக்கு ஆசையுடைய முருகவேள் வயிரவர்க்கமான சூரர்களை வெற்றி கொண்டதுவும். அவர் அங்ஙனம் எழுந்தருளிநின்ற செயல்களனைத்துஞ் சொன்னீ ரென்று முனிவர்கள் சொல்லுகிறார்.—எ-று. (௧)

தெய்வக்கிரிபோற் செங்கோடுதவுந்தெண்டீர்த்த
முய்வித்தனவுஞ் சிங்கவன்மங்கோ வுயர்சாபம்
நய்வித்ததுவு மவனருள்வளமும் நவில்கின்றீர்
மெய்வித்தகமி னியாதெனமுனிவன் வியந்தோதும்.

(இ-ள்.) தெய்வகிரியான பொன்மேருகிரி திருச்செங்கோட்டு மலைத்தலத்தி லுண்டாகிய தெள்ளிய தீர்த்தங்களினுடைய வரவுமகத்துவமும், சிங்கவன்மராஜனு டைய புலியுருவான சாபம் நிவாரணமும், அவன்செய்த கயிங்கிரியங்களனைத்தும் எங்களுக்குத் தெரியப்படச்சொன்னீர். இனி மெய்வித்தகமான மகிமைகள் யென் னசொல்வீரென்று முனிவர்கள்கேட்கச் சூதமுனிவர் மகிழ்ச்சியுடனே சொல்லத் தொடங்கினார்.—எ-று.

வெண்ணிறமன்னன் வியந்தருளைவரை வெம்பூசற்
குண்ணிறையுரமின் றக்கபடச்சூ தாடிக்
கண்ணிறைநகருஞ் சதுரங்கத்தினிற் கையாவும்
பெண்ணிறையுங்கொண் டார்நீதகமன் பெருவேந்தர்.

(இ-ள்) வெண்ணிறமேனியான பாண்டுராஜன் அருமையாகப் பெற்றபுத்திரர் கள் ஐவரையும் வெம்மையாகிய போர்பொருதி வெல்லும்படியாக வலிமையும் அறி வுமில்லாமல் கபடமாகச்சூதாடி அவர்களுடைய நகரங்களையுஞ் சகல பொருள் க ளையுஞ் சதுரங்கசேனைகளையுங் கவர்ந்துக்கொண்டு பெண்களி சிரோன் மணியான கற்புடைய திரௌபதையை மானபங்கமுஞ் செயதார்கள். திருதராட்டிராஜன் பெ ற்ற புத்திரரான துரியோதன ராதியர்கள்.—எ-று. (௩)

அக்காலையில்வீ மனுமர்ச்சுனனு மமரிற்போ
யக்காளையர்நூற் றுவரைத்துஞ்சப் பொருவோமென்
றிக்காரணமுற் றனர்தருமன்கண் டினிதாற்றித்
தக்கான்பெரிதொரு தந்தைகருத்தே தெனவுற்றான்.

(இ-ள்.) அக்காலத்திலே பீமசேனனும் அர்ச்சுனனும் மஹாகோபத்துடனே எதிர்த் திர்தப் பொய்ச்சூதாடின நூறுபேரையும் இறக்கும்படியாகப் போர் பொரு

து கொல்வோ மென்றெழுந்திருக்கக்கண்ட தர்ம்மராஜன் தம்பிமார்கள் கோபத்தை த்தணித்துத் தகைமையுடைய பெரியதகப்பனுருடைய கனத்தை யறிவோமென்று அவனிடத்திற் சேர்ந்தற்ருன்.—எ-று. (ரு)

பன்னிருவருடங் கானமுறைந்தும் பதிநீங்கிக்
கன்னிறைசுரமுத லுறைகுவிர்சிறிதே கண்டாலும்
முன்னுணாநாள்விட வந்திலை முதலாய் முயல்கின்றே
மன்னியதந்தை யுரைத்தனன் மாறு வனமுற்ருர்.

(இ-ள்.) பன்னிரண்டு வருஷம் நீங்கள் நாட்டைவிட்டுக் கானகமே வனவாசஞ்செய்வீராக. அப்போதுங்களை யாரொருத்தர் கண்டாலும் அன்றுமுதல் பன்னிரண்டு வருடம் கானகத்திற்குப் போகவேண்டுமென்று பெரியதகப்பனுர் சொனனுர். அப்படியே பாண்டவர்கள் வனவாசம் போனுர்கள்—எ-று. (௬)

வெவ்வனமுற்று மடைந்தமிடைந்துடல் விழிவார்போற்
செவ்வனநயனன் செங்கோட்டியல்கண் டினிதேறி
மெய்வனமொழிவும் வதிர்ப்புமகன்றவ வெற்பேறிக்
கய்யனநிறையுங் கணபதிசுனையின் கண்ணுற்ருர்.

(இ-ள்.) வெவ்வியவனங்க ளெல்லாஞ் சென்று சஞ்சரித்து உடலம் மெலிந்து விழுவார்களைப்போலே வனவாசஞ் செய்து வரும்போது செவ்வண்ணமான அக்கினிக்கண்ணையுடைய சிவனது திருச்செங்கோட்டி னழகுகண்டு இனிதாக மலைமேலேறி மெய்வருத்தங் குன்றிய துக்கங்களுந் தீர்ந்து அம்மலையிடத்திற் குளிர்ந்த புனலுடைய துதிக்கை கணபதியார் செய்தமைத்த கணபதிதீர்த்தத்தைக் கண்குளிரக்கண்டார்க ளனைவரும்.—எ-று. (௬

கணபதிதீர்த்த முதற்சிலதீர்த்தங் கண்டாடிக்
குணபதிமுதல்வரு மவ்வலன்வந்தார் குளிர்வெற்பில்
வினர்பதிமுருகுடை மெய்ச்சுனைமூழ்கிய வேலோன்ற
ளுணர்வொடுவினவிண் டுவினற்றீர்த்தந் துறைகின்ருர்.

(இ-ள்.) கணபதிதீர்த்த முதலாகச் சிலதீர்த்தங்களைக் கண்டுநீர்த்தமாடி நேமத்துடனே வலப்பிரதக் கணமாகச் சுற்றிவந்தார்கள். பினனுங் குளிர்ச்சியுடைய மலையிடத்தில் தேவர்சேனுபதியான முருகவேள செய்த குமாரச்சுனைத தீர்த்தத்தில் மூழ்கி வேலவர் பாதங்களைத் தியானித்துக் கொண்டு பின்பு விஷ்ணு தீர்த்தக்கரையில் வசித்திருந்தார்க ளனைவரும்—எ-று. (எ)

அரிதருசுனையிற் பரிவொடுமூழ்கி யரன்பாதந்
தெரிவுறநின்று வணங்கியபின்னத் தீர்த்தத்துட்
புரிதருகட்கம் புகல்வனநும்போ ரினமாற்ருர்
சரிவுறவந்நனம் வருகுதும் யானெனச்சாற்றிற்ருல்.

(இ-ள்.) விஷ்ணு தீர்த்தத்திலும் அன்புடனே மூழ்கி சிவனதுபாதங்களைத் தெரிசித்து வணங்கி நின்றபின்பு அந்தவிஷ்ணு தீர்த்தத்தி னுட்புகுந் திருக்கின்ற கட்காயுதஞ் சொல்லுகின்றது, நீங்கள பகைவருடனே போர்செய்யும்போ துங்கள் மா

ற்றார்களனைவருஞ் சரிந்து சாயுமபடியாய் அங்ஙனமுங்களுக் குதவியாகவருகின்றோ மென்று சொல்லியது—எ-று. (அ)

ஐம்பாண்டவருமி த்திசெயமெனநின் றருளேத்தி
நம்பாரொருவயி ரவதீர்த்தம்பொன் னகமீதிற்
செம்பாதியுமெண் ணாயிரதீர்த்தஞ் செறிவாமென்
றெம்பால்வேதவி யாதருரைத்தன ரிதுவாமால்.

(இ-ள்.) அதுகேட்ட பஞ்சபாண்டவர்களனைவரும் இதுமகா அதிசயமென்று மனத்திலெண்ணி இதுவுஞ் சிவன்கிருபை யென்று தோத்திரஞ்செய்து பொன் மலையான செங்கோட்டுமலைமீது அர்த்தநாரீஸ்வரர் எழுந்தருளி யிருக்கிறா ரென் றும் நம்போலவர்க்கு வெற்றிவிஷயங் கொடுக்கின்றது, வயிரவ தீர்த்தமொன்றிருக் கிற தென்றும் கிரியெங்கும் யெண்ணாயிரந் தீர்த்தங்கள் தெரிந்திருக்கிற தென்றும் நம்மிடத்திலே வேதவியாசர் முன்னே சொல்லியிருந்தார். அதுவே யிதுவாமென்று தெரிந்து களிகூர்ந்தனர்கள்.—எ-று. (௯)

எனவயிரவநிர்த் தத்திலிழிந்தோ ரைவேந்தர்
களமுறுகொலவ னைப்பொருபடைபல கண்டாரால்
புனையுறுமூவுல கினுமிதுபுதிதெம் போர்வென்றே
வினையகலும்மிவ் வெற்பினிலெய்தியிவ் விறல்பெற்றோம்.

(இ-ள்.) என்றிப்படிச்சொல்லி வயிரவதீர்த்தத்தில் இறங்கிமூழ்கி யங்ஙனம் வசித்திருந்தார்கள். பாண்டவர்களனைவரும் பெருமையுற்ற மனோசயராஜன் முன்பு கொல்வனைச் செயித்தபடியே பலபடைகளுங் கண்டார்கள். அழகிய யிந்தத்தல மும், தீர்த்தமகிமையும், திருலோகத்திலு மிது புதுமையென்று மெச்சிக்கொண்டு யினி நம்முடைய பகைவரைப போர்க்களத்தில்செயித்து வெற்றிகொள்ளலாம். இந் த மலையில் வந்துசேர்ந்து இவ்வளவு சவுரியம் பெற்றோமென்று மகிழ்ச்சியுற்றார் கள்.—எ-று. (௰)

நாகமலைத்தீர்த் தத்தினிலிப்பல னமதானால்
யோகமலைச்சிவ னைப்போற்றிற்பல னுயர்வாமென்
றேகமனத்துட னைவரும்விரதற் கினிதாய்மின்
பாகமலைக்கரு ளர்த்தநாரீசனைப் பணிகுற்றார்.

(இ-ள்.) இந்த நாககிரி தீர்த்தங்களில் இவ்வளவுபலன் நமக்குண்டானாலும் யோகமிகுந்த கிரியிலெழுந்தருளியிருக்கின்ற சிவனைக்கண்டுவணங்கினால் அதிக பல னுண்டாகுமென்றெண்ணி யேகாக்கிரசித்தமாக ஐவரும் இனிதாக விரதஞ்செய்துக் கொண்டு உமையவளுக் கிடப்பாகங்கொடுத்தருளிய அர்த்தநாரீஸ்வரரைக்கண்டு தெரிசித்துப் பணிந்தார்கள்.—எ-று. (௰௧)

வேதியர்முனிவோர் வேதமுரைக்கும் வினைவெய்தி
வேதவியாசர் விளம்பியபடிவிர தம்பூண்டு
சோதிகொள்பதிணெண் டீர்த்தமுதற்றண் சுனைமூழ்கி
மாதொருபங்கனை வடிவேலனையர்ச் சனைசெய்வார்.

(இ-ள்.) வேதியர்கள் முனீஸ்வரர்கள் வந்துசூழ்ந்து வேதங்களோத வினைவுற்று முன்வேதவியாசர் சொன்னபடியே விரதங்கள் செய்து சோதிப்பிரகாசமாக வி

ளங்கிய பதினெண் தீர்த்தமுதலாசக் குளிர்ந்த சுனைத்தீர்த்தங்களெல்லாமூழ்கி வே மத்துடனே உமைபொருபாகனையும், வடிவேலனையுங் கண்டுதெரிசித்து ஆர்ச்சனை செய்தாக ளனைவரும்.—எ-று. (௰௨)

வந்தனைசெய்தவண் வருமுமைபங்கன் வாகோயிற்
குந்தியகீழ்பாற் றெற்பசயனத் துடலவைகி
சிந்தையராகிச் செங்கோட்டிறையைத் தினமேத்திச்
சந்ததமாயிர நாமத்தாலர்ச் சனைசெய்வார்.

(இ-ள்.) வந்தனை வழிபாடுசெய தங்ஙனம் உமைபொருபாகர் திருக்கோவிலுக குக் கிழக்குப்பாரிசத்தில் தெறப சயனஞ்செய்து தோத்துடனே வசித்து பஞ்சா க்ஷர தியானமுடையவர்களாய செங்கோட்டீசுவரரை தினமுந்தெரிசித்துவணங் கி தோத்திரஞ்செய்து சஹஸ்ரநாமம் சஹஸ்திர நாமங்களா லர்ச்சனைசெய்தார்க ளனைவரும்.—எ-று. (௰௩)

அர்ச்சனைசெய்து பிரிப்பிரதக்கண மவர்வந்தால்
நற்சனகன்சொல் சனற்குமாரன் றெனாகமீதோன்
பொற்சகமோது புலத்தியனவிருசைபர் புகழ்சித்தர்
சொற்சதுர்வேத வியாதரோடாதிகள் சொல்கின்றார்.

(இ-ள்) அப்படி யர்ச்சனைசெய்து பிரிப்பிரதக்கணம் அனைவரும் வந்தார்கள அங்ஙனம் ஜனகன, சனற்குமாரன, தெளமலைபதஞ்சயன், பொன்னுலகம் புகழ பபட்ட புலத்தியன, விருமைசய வசிட்டருந் தந்தர்கள சொலலுதற்கரிய சதுர்வேத வியாசருடனே முனிவர்களனைவரும ஆசீர்வாதஞ்சொல்கின்றார்கள.—எ-று. (௰௪)

அன்னவராசியோ டம்பிகைபங்கனை யடிபோற்றித்
தென்னகர்போயப் பிதிர்கடன்முற்றுஞ் செய்தார்க
ளுன்னியமுருகே சனைவணங்கிச் சுரர்வேதற்
கன்னங்குருபூ சனைசங்கமபூ சனைசெய்தார்.

(இ-ள்.) அவர்கள்சொல்லுகின்ற ஆசீர்வாத வாக்கியத்துடனே அம்பிகைபாக னைக்கண்டவர் பாதங்களைப்போற்றிசெய்து தென்புலம்போய்ச சேர்ந்திருக்கின்ற பிதிர்க்கடன் செய்துமுடித்தார்கள். பின்பு எண்ணுதற்கரிய முருகேஸ்வரனைக்கண்டு வணங்கி பூசுரராகிய வேதியர்களுக்கு சமாராதனைசெய்வித்து குருபூஜை சங்கமபூஜை யும் அனைவரும் செய்தார்கள—எ-று. (௰௫)

செய்துமைபாகன் செயலாற்சேனைத் திருநாடு
மெய்திகழத்தனு புரியும்பெறவருள் விளைவானூர்
பய்திகழ்மலையிற் றம்பெயரென்றும் பகர்தீர்த்த
முய்தரும்படியுமை பங்கனைவேண்டி யுறக்கண்டார்.

(இ-ள்.) அப்படி அர்ச்சனைசெய்து உமையொருபாகருடைய திருவுளச்செய லால். சேனையுந், திருநாடும், மெய்திகழ்ந்த அலகனுபுரியும் பெறறுககொள்ளும்படி யருள்விளை வுண்டார்கள். திருநாககிரியில் தங்களபெயரால யென்றைக்கும் புக ழ்விளங்குவதாகவும் உய்யும்படியாகவும் உமையொருபாகனைவேண்டி யனைவரும் ஒருதீர்த்தங்கண்டார்கள்.—எ-று. (௰௬)

கண்டபெருஞ்சுனை மறையவர்கணமொடு பணிவெற்பைத்
தெண்டனுகந்து வியாதரிராசர் தியானமந்திரமோதத்
தண்டுறைமூழ்கியோ ராயிரமந்தணர் தங்கட்கமுதூட்டிக்
கொண்டலெனத்தா னங்கள்கொடுத்தவர் குகனைத்தொழுகின்றார்

(இ-ள்.) அங்ஙனம் கண்டபெரிய சுனைத்தீர்த்தம் வேதியர்கூட்டங்களுடனே திருநாகிரியை நமஸ்கரித்து வுகந்து வேதவியாசர் தியானமந்திரமோதக் குளிர்ந்த சலத்தில்மூழ்கி விரதமாக ஆயிரம்பிராமணருக்கு அமுதபோஜனமும், மேகம்பொழிவதுபோலப் பலதானங்களுங்கொடுத்து பாண்டவர்கள் குமாரனையுந்தொழுது துதித்தார்கள்.—எ-று (௭௭)

திசைமுகனைச்சிர மீதுபுடைத்தருள் சிறுவிரலின்போற்றி
குசலபரற்குப தேசந்தருமொரு குருநாயகபோற்றி
கெசமுகனுக்கிளை யவகாங்கேய கிரிக்கிறையவபோற்றி
விசயவினைத்தா ருகனைப்படவிடும் விறல்வேலவபோற்றி.

(இ-ள்.) திசைமுகனான பிரமதேவனைச் சிரசின்பேரில் குட்டியருளிய சிறுவிரல்களை யுடையவனேபோற்றி. புகழ்ப்பொருளோர சிவனுக்கு உபதேசஞ்செய்த குருசுவாமியேபோற்றி. யானைமுகப்பிள்ளையார்க்கு இளையவனே, காங்கேயனே, குறிஞ்சிக்கிழவனே போற்றி. வெற்றியினையுடைய தாருகாசூரன் விழும்படியாக விடுத்த வேலாயுதக்கடவுளே! போற்றியென்று தோத்திரஞ்செய்தார்கள்.—எ-று.

சூரன்பாரத் தொல்வினைவாரித் தொலைத்தருள்குகபோற்றி
கோரந்தருமயில் வாகனசேவற் கொடியுடையவபோற்றி
வீரந்தருகிர வுஞ்சந்தெறிபட விடுவேலவபோற்றி
சீரன்புளவள்ளிக் கினிதாகியபன் னிருசெம்புயபோற்றி.

(இ-ள்) சூரருடைய மாய வல்வினைக்கடலைத் தொலைத்தருளிய குகமூர்த்தியே போற்றி. கோரமாகிய தோகை மயில்வாகனனே சேவற்கொடியை உடையவனே போற்றி. வீரவலிமையையுடைய கிரவுஞ்சகிரிபெறித்து நீறாகும்படி விடுத்தருளிய விசயவேலவனேபோற்றி. சிறந்த அன்புமிகுந்த பத்தியுடைய வள்ளியம்மைக் கினிதாகிய பன்னிரண்டு புயக்குமாரனே! போற்றிபோற்றியென்று துதித்தார்கள்.—எ-று. (௭௯)

விண்ணவர்சிறைகள் விடுத்தவபோற்றி விசாலப்புயபோற்றி
நண்ணியவாசவ னல்குயிர்நாயகி நாயகசேய்போற்றி
வண்ணவோராறு முகாம்புயபோற்றி மணிக்குண்டலபோற்றி
புண்ணியவிந்த்ரபுரா திபபோற்றிக் கதிர்ப்புரகுகபோற்றி.

(இ-ள்.) தேவர்கள் சிறையைவிடுத் தருள் புரிந்தவனேபோற்றி. விசாலமாயழகிய மார்பை யுடையவனேபோற்றி. தேவேந்திரன் புத்திரியாகி மணங்கலந்து நண்ணிய தெய்வசேனை நாயகி நாயகச்சேய்போற்றி, சுடர்பொருந்திய ஓராறுமுகம் புயவனேபோற்றி, மணிக்குண்டலங்கள்தரித் தழகிய பன்னிரண்டு செவியனேபோற்றி புண்ணிய புரமான இந்திர புராதிபனேபோற்றி. கதிர்த்த புயாசலக் குகனே! போற்றிபோற்றியென்று தோத்திரஞ்செய்கின்றார்கள்—எ-று (௨௦)

ஐந்துகரத்தினை ஆல்வாயின் மூன் றனல்விழியின் போற்றி
யுந்துபயக்கிரி யன்னிருதாளின் வொருகொம்பினபோற்றி
மைந்துறுபாரத மேருவரைந்தநல் மதகயமுகபோற்றி
யெந்தைகரக்கனி கொண்டவகயமுக னுறுசமரினபோற்றி.

(இ-ள்) ஐந்து கையனே, நான்றவாயனே, திரிநேத்திரனே போற்றி. உந்தி யுயர்ந்த வுபயமலைபோலு மிரண்டு பாதங்களுடையவனே, ஒற்றைக்கொம்பனனே போற்றி. வலியபாரதத்தை மேருகிரியிலெழுதிய மதயானை முகத்தனேபோற்றி யெந்தையாகிய சிவனது கைக்கனிபெற்றுக்கொண்டவனே! கெசமுகாசூரனைச் சங்காரஞ் செய்தவனே போற்றிபோற்றி.—எ-று. (௨௧)

தெசவவதார மெடுத்தடியார்க்கருள் திருவுளவரிபோற்றி
வசையறயாங்கள் வரம்பெறவாயரில் வளர்கரியவபோற்றி
திசைமுகனைச்சிலை வேளைத்தருமொரு திருவுந்தியபோற்றி
குசலவரைப்பெறு கொற்றவராகவ கோகனகைப்போற்றி.

(இ-ள்.) தெச அவதாரமெடுத்து அன்பர்களுக் கருளபுரிந்த லட்சுமி மணாளனே! அரி ஹரி போற்றி, இகழ்வில்லாமல நாங்கள நலவளம்பெற றுய்யும்படியாக ஆயர்பாடியில் வந்துவளர்ந்த கார்மேகவண்ணனான கிருஷ்ண மூர்த்தியேபோற்றி, சதுர்முகப் பிரம்மாவையும், கருப்புவில மன்மகவேளையும் புத்திராகப்பெற்ற திருவுந்திக்கமலனே போற்றிபோற்றி, குசலவர்களைப்பெற்றருளிய கொற்றமுடைய இராமமூர்த்தியே போற்றிபோற்றி, சகஸ்திர இதழுடைய தாமரை மலாமகளே லட்சுமிதேவியே போற்றிபோற்றி.—எ-று. (௨௨)

ஐந்துநிறத்தினே டைந்துமுகத்தினே டழகெழுசிவபோற்றி
யைந்துபுலத்திறை யைந்துபலிக்கிறை யைம்புதகபோற்றி
யைந்துபணப்பணி யைந்துமுடிக்கணி யாதபநிறபோற்றி
யைந்துதொழிற்பெறு மைம்பகவர்க்கிறை யரஹராபரபோற்றி.

(இ-ள்.) ஐந்து நிறமும், ஐந்துமுகமும், அழகும் பொருந்திய சிவசிவா போற்றி. ஐம்புலன்களுக் கிறையவனே! ஐந்துவகைப் பலிக்கிறையவனே! ஐம்பூதநாடகனே போற்றி. ஐந்துபடமுடைய பாம்பினை ஐந்துமுடிக்கு தரித்தருளிய கோடிசூரியப்பிரகாசமான திருமேனியனே போற்றி. ஐந்தொழிலைச் செய்யும் பஞ்சகர்த்தாக்களுக் கிறையவனே! அரஹர பராபராபோற்றி போற்றி யென்று பஞ்சபாண்டவர்கள் துதித்தார்கள்.—எ-று. (௨௩)

என்றுகணுதியை யீராறுபுயனை யிந்திரைமணவெந்தை
மன்றல்செய்நாகக் கிரியுமைபாகனை வந்தனையிற்போற்றி
வென்றிகொளைவர் வரம்பலபெற்று வியாதரோடேகினபின்
நன்றிகொளவர்தரு தீர்த்தநலங்களி னயமிகுதெனநவில்வார்.

(இ-ள்.) என்றிப்படிக் கணுதிபதியையும், பன்னிரண்டு புயக்கடவுளையும், லட்சுமிமணவாளனையும், திருமணம்பொருந்திய திருநாககிரி யுமையொரு பாகனையும் வந்தனையாக வணங்கிப் போற்றிசெய்து வெற்றிகொள்ளப் பட்ட பஞ்சபாண்டவர்கள் ஐவரும் பலபலவரங்களும் பெற்று வேதவியாசருடனே சென்றார்கள். பின்பு நன்மைச்செயலுண்டான வவர்கள் செய்த தீர்த்தமகிமை நலங்களை இன்னபடியென்று சூதமுனிவர் சொல்லுகிறே மென்றார்.—எ-று. (௨௪)

பாண்டவதீர்த்தந் தனிலாடும்படி பார்த்திபமுந்திரமுற்
றீண்டியவாசரியல்படவேணியி லித்தணியெம்பரனே
ராண்டசிவன்றிரு மந்திரமைந்தா லவர்கடந்தோய்ந்து
பூண்டபெரும்புர மேபடைநான்கும் பொலிகுவர்வலிகூர்வார்.

(இ-ள்.) பாண்டவதீர்த்தத்தில் நீராடும்படி பார்த்திபமுற் றங்ஙனஞ் சென்று அரசர்க ளியல்பாகச் சடையில் இளம்பிறையைத் தரித்த எம்பிரானும், எம்மை யாண்டருளியவனுமான சிவனது பஞ்சாக்ஷர மந்திரியானத்தா லவர் தீர்த்தத்தில் மூழ்கினால் அவர்களுக்குரிய பெரிய நகரங்களும், சதுரங்கசேனைகளும் பொலிவுண்டாகப்பெற்று வலுமையோடு வாழ்வார்கள்.—எ-று. (௨௫)

போயபெரும்பொருள் போயபெரும்பதி போயபெருந்தானை
யாயமுதற்படி யதனினுமீமிசை யதிகம்பலனுமால்
மாயவனருடரு மன்பரிவிந்திரன் வரமாருதிநேயஞ்
சேயமருத்துவர் சீர்பெறவென்றவர் தீர்த்தவரங்கொண்டார்.

(இ-ள்.) பின்னையும் அரசர்கள் இழந்துபோன பொருளும், பெரியநகரங்களும், அகன்றுபோன பெரும்படைகளும் முன்னிருந்ததிலும் மேலான பலனுண்டாகும். விஷ்ணுவினருளும் பெறுவார்கள். இந்திரலோக மன்னவனான தேவேந்திரன் மாருதி நேயமுஞ், செவ்விதாகிய தெய்வமருத்துவரிருந் தீர்த்தவரங்களும் பெற்று வாழ்வார்கள் —எ-று. (௨௬)

அவ்வவர்பரவுமைம் பாண்டவர்சுனையினிலாடி னருக்குண்டாயச்
செவ்விதினுறுதிரு வின்னடபுமறுமைச் சேமமுஞ்சேர்ந்துமைபங்
கெவ்வமறப்புணர் ஈசன்பதமுமி ராறுபுயன் சேர்வுங் [ரால்.
கவ்வையிலிருநடை முவர்வியாதருக்குமோர் கண்ணெனவளர்வ

(இ-ள்.) பெரியோர் துதிக்கும் பஞ்சபாண்டவ தீர்த்தத்தில் தீர்த்தமாடினவர்களுக்குச் செவ்விதாகச் சகலசெல்வங்களும் இம்மையிலும், மறுமையிலும், சற்றுமிடையூறில்லாமல் வாழ்ந்து. பின்பு உமைசமேதரான பரமேஸ்வரன் பதமும், பன்னிரண்டு புயக்கடவுள் பதமுஞ் சேர்ந்து வேதவியாதருக்கு மொருநேத்திரம்போல வாழ்வார்கள்—எ-று. (௨௭)

திருச்சிற்றம்பலம்.

பஞ்சபாண்டவச் சருக்கம் முற்றும்.

ஆகச்சருக்கம்-௬௯க்கு திருவிருத்தம். [illegible]

---

# பாண்டசுரர்ச் சருக்கம்.

வரபீர்ண்டவர் வனமீண்டவர் மகிழ்வின்பமை பங்கன்
திரமீண்டிடு மலர்பூண்டிடின் ஜைசராண்டன ரிப்பாற்

பாபாண்டியன் வரவும்பணி பாண்டீசுரன்வரவு
முரமீண்டிய முனிவர்க்கினி துயர்சூத ருரைப்பார்.

(இ-ள்.) சிவனது வரப்பிரசாதம் பெற்ற பஞ்சபாண்டவர்களைவரும் வனவாசம்விட்டு மீண்டு தங்கள்தேசம் போய்ச்சேர்ந்து நிரம்பவும் மனமகிழ்ச்சியாக அர்த்தநாரீசுரருடைய திருமாகிய பாதாரவிந்தங்களை யிருதயங்களில் வைத்துத் தியானித்துக்கொண்டு சத்துருசெயஞ் செய்து நின்ணிய நகராயாண்டிருந்தார்கள். இப்பால் திருநாககிரி தலத்தில மானபரனென பாண்டியராஜன் வந்ததுவும், அவனர்ச்சிக்கப்பட்ட பாண்டீஸ்வர சுவாமி வந்தவரலாறும் இவையெல்லாம் அறிவுமிகுந்த முனிவர்களுக்கு இனிதாக வுயர்ந்த சூதமுனிவர் சொல்லத் தொடங்கினர்.—எ-று. (க)

சேரன்பாண்டி போற்றிய தெளிவுந் திகழ்நீதி
பாரந்திகழ் வளவன்புகழ் படியாட்சியு மாறன்
றோம்புவி முறையும்படி திகழ்வஞ்சியுறைந்த
நேருந்தமிழ் பறனைப்பதி நெறியேயரசுற்றுர்.

(இ-ள்) சேரராஜனும், பாண்டிய ராஜனும், சிவனைப் பூசித்து அரசாக்ஷிசெய்த நீதியும். புலிப்புக்ழ்படைத்த சோழராஜனும் அரசாக்ஷியையு, மூனையும், கருவூர், உறையூர் தமிழ்விளங்கிய மதுரை நகரமும் சிம்மாசனத்திகளா யிருந்து நெறிமுறைமையாக அரசாக்ஷிசெய்து வருகின்றார்கள்.—எ-று. (உ)

இம்முப்பதி மூவேந்தரு மிறைமாட்சிகள் புரிநாள்
செம்மைப்பெறு மறுநீதிகள் சிறிதேமுறை பிறழ்வால்
வெம்மைந்திற லுறுசோழனும் விமலாகினிதெண்ணுன்
மம்மற்பெறு செவ்வந்திநன் மலர்மேல்மனம் வைத்தான்.

(இ-ள்) இந்த மூன்று நகரத்திலும் மூன்றுராஜாக்கள் நீதிமுறைமையாக அரசாக்ஷிசெய்து வருநாளில் செவ்விதாகிய மூவரசர்களின் மனுநீதிகள் சற்றே முறை பிறழ்ந்து வருவதால் வெற்றித்திறலுடைய சோழராஜன் பரமேஸ்வரனுக்குப் பிரீதியானது திவ்விய புட்பங்களொன்று சாறுமென்றுநவனாய் ஸ்ரீகள் மயக்கத்தினுல் அழகிய செவ்வந்திப் பூவின்மேலே யாசைவைத்தான்.—எ-று. (ங)

வைந்நைய்முகற் கலார்ச்சியர் மன்னன் முடிகொண்டான்
முத்துநகைவேல்விழி முகிழ்த்தன மனையாள்
சிந்தனை திறைவனசெயல் நெறியன்றென வருள்பூச்
சித்தன்பினின் மலரன்பணி சித்தம்புரிகுவளால்.

(இ-ள்) ரமான அந்த செவ்வந்திப் புட்பங்களை ஐம்முகனுகிய பரமேஸ்வரனுக்குச் சாத்தாமல் சோழராஜன் முடித்துக்கொண்டான். அதுகண்டு முத்து நிறை போன்ற பல்வரிசையும், வேல்போன்ற கண்களுங், கமலமுகிழ்போன்ற தனபாரங்களையுடைய அழகியராக தேவியானவள் ராஜனைப் பார்த்து இதுநீதியல்லவென்று சொல்வதுங் கேளாததனுல் தனக்குக் கொடுத்த புஷ்பங்களை முடிக்கப் பயந்து மனதன்பினுலே சிவனுக்குப்பிரீதியென்று அதுகாலத்தில் செந்நெயிலர்ச்சித்து விடுவாள்.—எ-று. (ச)

அன்றுளினி லுமைபங்கர்சி ராப்பள்ளியி லார்
பன்றுளினில் வளவன்புரி படிதீதென வுணரா
வொன்றார்புற முனிவென்ப வுணர்ந்தே யவணூரின்
பின்றுடனின் மண்மாரிகள் பெய்வித்தனபெயரால்.

(இ-ள்) அக்காலத்தில் திரிசிரபுரம் மலையிடத்தில் யெழுந்தருளிய உமையொருபாகராகிய பரமேஸ்வரனும் பலனுளுஞ் சோழராஜன் செய்யும அநீதிதெரிந்து சத்துருக்கள் நகரங்களைக் கோபித்தழிப்பதேமனுநீதி யெனறெண்ணி திரிபுராந்தகரானபடியால் அவனிருக்கும் உறையூர் நகரத்தில சிலநாளின் பினபு மணமாரிபொழிவித்தார்.—எ-று, (ரு)

வளவன்றிகழ் கோரப்பரி வயன்மீதுதன மனையோ
டுளவன்பொடு வெரின்மீதுற வுய்த்தே குதலுற்றான்
தளமென்கொடை சிவனுக்கருள் தருமக்கொடி வரலால்
விளைமண்புயல் பரிமீது விழாதே புடை.விழுமால்.

(இ-ள்) மண்மாரிபொழிவதுகண்டு சோழராஜன தனது கோரமென்னுங் குதிரையின்மே லேறிக்கொணடு தேவிமார்களுடனே வெருய்ப் புறப்பட்டு விரைந்து போகா நின்றான். அஙஙனம் புண்ணியஸ்ரீ கூடிவருகிறபடியினுலே பொழியப்பட்ட மண்மாரியானது குதிரைமேல் விழாமல் சுற்றுப்பக்கங்களில விழுந்தது.—எ று.

செவ்வந்தி முடித்தேவிளை செய்வந்திபடித்தோ
னவ்வந்தி மதித்தண்முக வமுதைத்தறை யிட்டான்
பவ்வத்திரை யுட்புக்கெனப் பரியோ ( ரசமிழா
மொய்வந்திடு மண்மாரிகள் மூடிற்றவர் விரியா.

(இ-ள்.) சாமிக்கிஷ்டமான திவ்விய செவ்வந்திப் புஷ்பங்களைத் தானுந தன் சாமானய ஸ்ரீகளுமாக முடித்துக்கொண்டு அநீதி செய்யபபட்ட சோழராஜனவன விரைந்துபோவதற் கெண்ணி பூரணச் சநதிரன போலுமுகமுடைய தனது பட்டஸ்ரீ பூமியில் விழத்தள்ளிவிட்டுக் கடிதாகக் குதிரையை நடததிறன, அப்போது குதிரையும் ராஜனும் அமிழ்ந்தியிறந்து போவதாக மென்மேலு மண்மாரி பொழிந்து மூடிற்று—எ-று. (எ)

தன்மச்சுரு வப்பெண்கொடி தண்காவிரிநெறியி
னன்மைத்தரு புணைபற்றியந் நதியின்கரை சேர்ந்தாள்
வென்மைத்திரு வுதரத்துறு மகவைக்கண்டமறையோன்
றன்மைக்கழைத் தேகிக்கொடு தன தூரி லாதரித்தான்.

(இ-ள்) புண்ணியசுருபியான இராஜதேவி குளிர்ந்த புனலுடைய காவேரியினின்று ஒருபுணையைப்பற்றிக் கரைசேர்நதாள். லட்சுமி போனற வவள் வயிற்றில் புத்திரனிருப்பது கண்டு, அங்ஙன மொருபிராமணன் இராஜதேவியை யழைத்துக்கொண்டு போய்த் தன்னகரத்தில் வைத்துப் பரிபாலனஞ் செயது வந்தான்.—எ-று, (அ)

வைத்தப்பதி யாசன்றிரு மனையினை திருமயிலை
மெய்த்துத்திடு மகவைப்பெறு வித்தான்விறல மகவை:

கைத்தூண்ட நெடுங்கோட்டொரு கரிவந்தனபிடர்மீ
தூய்த்தன்னக ருக்கேதர வுரவோனி லுயர்ந்தான்.

(இ-ள்.) அப்படிப் பரிபாலனம்பண்ணின பிராமணர் தன்னகத்தி லுத்தம குணமான இராஜஸ்திரீ கெற்பமுதிர்ந்து புத்திரனைப்பெற்றாள். பெற்று வளர்த்துக் கொண்டிருந்தகாலத்தில் நெடியதுதிக்கையுடைய வெண்மையாகிய கோட்டுப் பட்டத்து யானை வந்து ராஜகுமாரனை யெடுத்துத் தன் மஸ்தகத்தில் வைத்துக்கொண்டு போய் நகர சிம்மாசனத்தில் சேர்த்தது. அங்ஙனஞ் சிமமாசனமேறியதாக அந்த சோழராஜ குமாரன் தனது தேசத்தை யாண்டிருந்தான்.—எ-று. (௯)

தருமத்திர ளொருவொன்று தழைத்தன்னவோர் சேரன்
வருமர்ச்சனை வகையாலரன் வண்டாமரை யடியுட்
செருமக்கன மலரஞ்சலி செய்தேயிரு பொழுது
மருமைந்தவ முடனந்தர மவரார் நிருவாளுர்.

(இ-ள்) தருமமே யோருருவாய்த் தழைத்தோங்கிய சேரமான் பெருமாள் அன்பினால் சிவனிருபாதாரவிந்தத்தில் அளவில்லாத புட்பங்களைத் தூவி யாசித்து அநுஷ்டியஸ்கர்மங்களைத் திரிசந்தியா காலமுந் தொழுது தோத்திரஞ்செய்து தவம்புரிந்து சுந்தரமூர்த்தி நாயகருடனே பிரியாத நேசமாயினன்.—எ-று (௰)

திரசுந்தர ரொடுசேரமான் சிவலோக மடைந்தே
வரசந்தன வுலாவென்றொரு வண்பாவுடனின்று
ரரசென்பன வஞ்சிக்குற வரிதா யிருநகரும்
விரசுந்தவ மிறைமாட்சிகள் மெலிவானது புவிமேல்.

(இ-ள்) சுந்தரப்பெருமாள் நாயனாருடனே சேரமான் பெருமாள் நாயனார் கைலாசத்திற் சேர்ந்து தானே மொழியசாகப்பாடின ஞானவுலாப் பிரபந்தத்தை சுவாமி செவிக்கின்பமாக அரங்கேற்றினவர்த்தநம் பண்ணிக் கொண்டிருந்தார். இங்ஙனஞ் சோழதேசமுஞ் சேரதேச பிரணமேகரும் அரசிலராய் அநாதைகளாகி, உறையூர் வஞ்சி இருநகரங்களும் அழகுகுறைந்து தவமானம், செங்கோல், திருவிழா மழைமாரிகள் வெள்ளாண்மைகள் குறைந்து சனங்கள் மிகவும் மெலிவானது மிருவர் மண்டலங்களும்.—எ-று (௧௧)

சேரன்பதி சோழன்பதி சேருஞ்செயலற்றபின்
னொருந்தமிழ் மதுரைச்செழி யன்கண்ணகை முனிவால்
நேருங்கன விடையூறுகள் நிகழ்ந்தேபதி மூன்றுஞ்
சோரும்புயல் பொழியாவது தளர்ந்திற்றுலகம்மா.

(இ-ள்) சேரமான் தேசமும் சோழதேசமும் இவ்வாறு மெலிவுற்றிருந்தது, நிறைந்த தமிழ சங்கத்தையுடைய மதுரையில் பாண்டிய ராஜன் கண்ணகை கோபித்திட்ட சாபத்தினாலே மிகவுமிடையூறுண்டாய அரசறறிருந்தது. இராஜர் மூவர் தேசங்களு மனுநீதி முறைமையில்லாத படியினால் பெய்யப்பட்ட மழைவளமுகுன்றி விளைவுகுன்றி சுகமில்லாமல் தயங்கிற்றுலகம் —எ-று. (௧௨)

வஞ்சிக்கிறை கோழிக்கிறை மதுரைக்கிறை மூவர்
நெஞ்சத்துறு கனசஞ்சல நிலையான்மழை வேண்டி

மஞ்சிற்கிறை மகவானிடம் வந்தாரிரு வரும்வான்
விஞ்சைப்புற மகவானடி வெளவிந் தொழுதனரால்.

(இ-ள்) மழைவளங்குன்றி பலகா லமழைவரத கண்டு கருவூர்க்கிறைவனுகிய சேரனும், உறையூர்க்கிறைவனுன சோழனும், மதுரைக்கிறைவனுன பாண்டியனும் ஆக இந்தமூன்று அரசர்களும மனதுகளில சஞ்சலமியராகி யங்ஙனம்மழைபெய்யவேண்டி மேகதறுக் கதிபதியான தேவேந்திரனி டத்திற்கு வநதார்கள். சேரன் சோழனிருவருந் தேவராஜனுன விந்திரன் பாதத்தில் வணங்கித் தொழுதார்கள்.—எ-று. (கங)

எழின்மாறன் வணங்கா முடியெனலால் மலரவனின்
பொழிமாமல ரெனவேயிரு பொற்செங்கை விரித்தான்
மொழிசோழு முடிக்கிள்ளியு முன்னங்கை குவித்தா
ரிழிபாதக மிதுமுற்செய்த தெனவிந் திரனுற்றுன்.

(இ-ள்,) அழகிய பாண்டியராஜன் வணங்காமுடிவேந்தனுன படியினுலே முகிழ்தபுட்பம் அலர்வதுபோல இரண்டுகைகளையும் விரித்தான். சொல்லப்பட்ட சேரனும் சோழனும் நம்முன கை குவிகதார்கள அதுகண்டு இழிவானபாதக மிது முன்செய்த தீவினை யென்று இந்திரன் தெரிந் துணர்ந்தான்.—எ-று. (கச)

வலையப்புய விலவன்னொ வனை யும்வருகென்றே
யலையிற்புரு புயனும்பறி யுடைவெபொழி குகவென்
றிலையிற்பிள வொடுநலகியவ் விருவர்க்குநல களித்தான்
சிலையிற்பொலி செருவெற்றிகொள் செழியர்க்கு வெறுத்தான்.

(இ-ள்) கேயூரந்தரித்த புயங்களையுடைய சேரனையுஞ் சோழனையும் வாருங்களென்று ஆசனங்கொடுத் துபசரித்து பிரியவசனங்கள்சொல்லிக் கடலில் வசிக்கின்ற மேகங்கள் உங்கள் தேசங்களுக்கெல்லாம அடைவாக மழைபொழியச் செய்கிறுமென்று அவ்விருவருக்கும் விசயமுடனே தாம்பூலங் கொடுத்தருளினுன். வில்வலிமையிலே பகைஞரை வெற்றிகொண்டருளிய பாண்டியராஜனுக்கு மழை யுதவாமல் யிந்திரன் மிகவும் வெறுத்தான்.—எ-று. (கரு)

பின்னுள்மழை யுன்னுட்டிடை பெய்விப்பன மண்ணி
னின்னுளமு தாண்டேருறி யென்னேமு நீங்கா
முன்னுக விருந்தானடி முன்னுக நுழைந்தான் [ன்.
பொன்னுட்டன் வெகுண்டான்பின்னர் தென்னுட்டன் வெகுண்டா

(இ-ள்.) வாராய் வணங்கா முடிப் பாண்டியனே! யுன்தேசங்களுக் கெல்லாம் பிற்காலத்திலே மழைபெய்விக்கிறேம். இப்போதிருக்கின்ற திரவியங்களை யெல்லாஞ் செலவு செய்துக் கொண்டிருவென்றுன். அதுகண்டு பாண்டியன் கோபித்து யிந்திரனுக்கு முன்னுக விருந்து மடிபிடித்தான். இந்திரனுமெழுந்திருந்து கிரகத்தினுழைந்தான். பாண்டியன் தொடர்ந்தான. தொடர்வதுகண்டு பொன்னுட்டிந்திரன் கோபித்தான். பின்பு தென்னுட்டுப் பாண்டியன்கோபித்தான்—எ-று. (கசு)

யாமுவரு நின்பால்வர விருவர்க்குமை யுதவிக்
காமுடிய புயலின்பொழி கார்தந்திலை யென்னேன்

றேழூடிய விற்கொண்டன ரெய்யும்பெரும் படைகொண்
டோழூடமர் செய்தாரவ னுயர்வச்சிரம் விட்டான்.

(இ-ள்.) நாங்கள். மூன்றுபேரு முனனிடத்தில் வந்து மழைவேண்டிக் கேட்டால் சேரசோழ னிருவருக்கு மழையுதவி யெனக்குப் பொழியப்பட்ட மழைகொடுத்தா யில்லை. அதுவென்ன காரண மென்று இருவரும் வெகுண்டு போர்செய்யத் தொடங்கித் தங்கள் தங்கள் விலலுக்ளை வளைத்து சரமாரிகளை பொழிந்து தோர்வையில்லாமல் அமர்செய்தார்கள். அவ்வேளையில பாண்டியன் பேரில் தேவேந்திரன் வச்சிரா யுதத்தைவிட்டான்.—எ-று. (௧௪)

அந்தப்படை கண்டேயென தகமீதுள சொக்கே
வந்தித்தன தருளென்கையில் வளையாழியில் விடுகென்
றிந்தப்படை யுன்கைப் படையென்றேவினனிடும்பாய்
முந்தப்படைபடவிந்திரன முடியிற்படடொந்தான்.

(இ-ள்) அந்த வச்சிராயுதம் வருகிற அதிரத்தியைக் கண்டு பாண்டியனென்னிருதயத்திற் பிரியாம லிருக்கின்ற சொக்கேஸ்வரா! என்று வந்தனை செய்து உம்முடைய கிருபையினாலே என்கைவளையைச் சக்கரமாகச் சுழற்றிவிடுகிறேன். இதுவும்முடைய கையாயுதம். யிதுபோய இந்திரனைச் செயிக்கவேண்டுமென்று யேவிவிட்டான். அது சக்கரமாகத்தானே வந்து தேவேந்திரன் மகுடமுடியிற்படவே மிகவும் நொந்தான்.—எ-று. (௧௫)

கூடற்பதி யாசுந்தெய்வ கோலப் பதியரசு
மாட்டிற்திற முறலாலம ரரும்மாமுனிவரரும்
நீடிச்செரு வென்னுமிது நீதிச்செய லன்றென்
றோடிப்பகை தவிரும்படி யுரைகூறி விடுத்தார்.

(இ-ள்) தென்கூடற் பதியரசனும் தேவலோகத்து அரசனும் முனைந்து யுத்தஞ்செய்வது கண்டு தேவர்களு முனிவர்களு மிச் சமர் யெவ்வாறுமோ வென்று பயங்கரமாய் ஓடிச்சென்று நீங்களிருவரு மிப்படி யுத்தஞ் செய்வது நீதியல்லவென்று பகைதீரும்படியாகச் சமாதானஞ் செய்யச் சமனைவிடுத்தாகள்.—எ-று. (௰௬)

அருள்காவன முடையான்செழி யன்மண்டலமுழுது
மொருகால்மழை பெய்யாவண மொழி கென்றுமறித்தான்
வருகாசினி வையைக்கிறை மதுரர்புரி வந்தாங்
குருகாதா முடனேயழ கியசொக்கரை யுற்றான்.

(இ-ள்.) அழகிய கற்பகப் பூங்காவனமுடைய தேவேந்திரன், பாண்டியன் மண்டலமுழுதும் யெந்தக் காலத்திற்கு மழைபெய்யாது விடுக்கவென்று மேகத்தைத் தடுத்து மறித்தான். பூமண்டலத்தில் வைகைக் கிறைவன் மதுரை புரியில்வந்து சேர்ந்து மனதுருகி யன்புடனே அழகிய சொக்கரையுற்று வணங்கிச் சொல்லுகிறான்.

அன்றென்பதி யாசின்றென வப்போதர சாகிக்
கன்றும்பகை வென்றேயறு காற்பீட மமைந்தி

நின்றிந்திரன் முடிமேல்வளை யெறியும்படியதனுல்
துன்றும்புயல் மழைநம்பதி சொரியாது தடுத்தான்.

(இ-ள்.) அர்த்தசாலம் யென்னுடைய நகரத்தில் அரசில்லை யென்று அனை வருந் தயங்கும்போது தேவரீர அரசராய் மறு பகைஞரை வென்று பாண்டிய மண் டலத்தை ஆண்டு அநுகாந்பிடசதி லெழுந்தருளி யிருந்தீர். இப்போது தேவேந்திர ன்முடிமேற்பட்ட கைவளை சக்கரமாக யெறியும்படி கிருபைசெய்தருளினீராகை யால் இந்தப் பாண்டிய மண்டலமுழுதும் மழைபெய்யாமல் தடுத்தான், சுவாமி! யெ ன்று பாண்டியராஜன் சொன்னுன்,—எ-று. (உ௧)

புலிவெங்கொடி யதிபன்பதி பொருநாதிபன் காம
வலிதின்வள முற்றுர்பொழி வான்மாறி வழங்கி
நலியும்பதி கூடற்பதி நன்மாமழை சிறிது
மிலையென்றுதொன் மறைநூலவர் யாரும்படர் கின்றுர்.

(இ-ள்.) புலிக்கொடியுடைய சோழ தேசங்களும், பனைமாலை யுடையசேரமா ந்தேசங்களும் நலமழை பொழிந்து செழித்திருக்கின்றது. இந்தப்பாண்டிய மண் டலமானது மழையில்லாமல மெலிந்து சுகமில்லாம லிருக்கின்றது,என்று மன வியா குலததுடனே பூருவகாலந்தொடங்கி யிருக்கின்ற வேதாகம புராணிகர் யாவரும் யெனனிடத்தில்வந்து அந்தத் தேசங்களுக்குப போவோமென்று சொல்லுகிறார்க ளென்று பாண்டியராஜன் சொன்னுன்.—எ-று. (உஉ)

பொதியக்குறு முனிவன்புகுறு பொற்சங்கமிழந்தால்
மதியிற்பெறு தமிழ்மண்டல மெனும்வண்மையுமொழியும்
விதியிப்படி பிறவாவகை மென்கூடலினரசே
யதிகப்பல னருளாயழ கியசொக்கனீ யெனவே.

(இ-ள்.) பொதியமலையி லெழுந்தருளிய அகத்திய முனிவன் செய்த சங்க மிழந் து விட்டால் அதிக விவேகம் விளங்கிய தமிழ் மண்டல மென்னும் புகழ் வளமையு மொழிந்துவிடும். அசசெயல் நேரிடாமல் மதுரைக் கதிபதியான சுந்தரேசுரரை அதி கமான வளம் பொருந்தும்படி வரப்பிரசாதம கொடுத்தருளுவீ ரழகிய சொக்கேச னேயென்றுன் பாண்டியன.—எ-று. (உ௩)

என்றென்றடி முடிபற்றி யிறைஞ்சுஞ்செழி யனையே
நன்றுன்பதி நவைதீர நலம்பெற்றிட முகிலுன்
குன்றில்வர வுன்சொற்படி கொண்டற் புயல்பொழிய
வின்றென்று விளம்பும்படி வெம்மைத் துனகேண்மோ.

(இ-ள்.) என்றிப்படிப் பலவிதமாகச் சொல்லி சுவாமி பாதங்க ளிரண்டையு ம் தனது முடியிற்றரித்து வணங்கின பாண்டியனைப் பார்த்து சுவாமிசொல்லுகிறார். அப்படியேயல்லது! உன்னுடைய மதுரை தேசங்கள் வறுமை தீர்ந்து நல்லவளம்பெ றும்படி மேகங்கள் வந்து உன்மலையாகிய பொதியத்தில் வசிக்கவும், உன்சொற்படி யே மாதமுன்று மழை பெயயவும், இப்போது நாமொன்று சொல்லுகிறோம். நம்மு டைய மைத்துனனுன பாண்டியராஜனே கேட்பாயாக வென்று சுவாமி சொல்லு கிறார்,—எ-று. (உ௪)

ராஜன் அந்தத் திருநாககிரி தலத்தில் வந்து தினமும் சுனைகளிற் றீர்த்தமாடி நேமசதுடனே யானைமுகப் பிள்ளையாரைக் கண்டு தொழுது தோத்திரஞ் செய்து நெறிமுறைமையரசப் பாண்டிய ராஜன் கிரிபிரதக்ஷணம் வந்தான்.—எ.று. (உகூ)

வந்தாதர நாகேசர் மலர்ப்பாதம் வணங்கி
யுய்ந்தானறு முகனைத்தொழு துமைபாகனை யேத்தி
நந்தாழி யெடுத்தோனடி நளினத்தை யிறைஞ்சிச்
சிந்தாகுல மறஞான தியானத்தோ டிருந்தான்.

(இ-ள்:) அப்படி கிரிப்பிரதக்ஷணஞ் செய்து வந்து பத்தியாக நாகேஸ்வர சுவாமி மலர்ப்பாதங்களை வணங்கி வணங்கி உய்யும்படியாக ஆறுமுகக் கடவுளைக் கண்டு தொழுது உமையொருபாகனையுந் தெரிசித்து வணங்கிச் சங்கு சக்கரரான ஆதிகேசவ மாயன் பாதாம்புயங்களை யிறைஞ்சி யேத்தித் தன்னுடைய சிந்தா குலமெல்லாந் தீரும்படியாக ஞானதியானஞ் செய்திருந்தான்.—எ-று. (௩ய)

கூடற்புரி யரசன் றவ குறிகண்டுமை யொருபங்
கூட்டிற்றிற மறமேவிய வுலகத்தொரு முதல்வன்
நீடெட்டுணி வெனவேண்டிய நினைவேதரு ளுதுமென்
றூடற்பதி மதுரேசனை யருளின்வின வினரால்.

(இ-ள்.) மதுராபுரிக் கரசனான பாண்டியராஜன் செய்யுந் தவங்களைக் குறிப்பினாலேகண்டு மகிழ்ச்சியாக உமைக்கிடப்பாகங் கொடுத்தருளிய உலகங்களுக் கெல்லா மொருமுதல்வனான அர்த்த நாரீஸ்வர சுவாமியார் உன்னுடைய துணிவென்ன? உனக்குவேண்டிய காமியார்த்த நினைவென்ன? அவையெல்லா முனக்குப்பாலிக்கிறோ ஞ்சொல்வாயென்று பரிமாவுடைய மதுராபுரிக் கரசனான பாண்டியனைக் கிருபையாக சுவாமி வினவினார்.—எ-று. (௩க)

அக்காலையில் மதுராபுரி யதிபன்புக லுதல்நீள்
மைக்கார்மது ரையின்மண்டலம் யாவும்மழை தாவு
மிக்காமறு வகைமந்திரம் வியனாறி யுறவுந்
திக்காயிரஞ் சுனையிற்கிரி சேர்நதோயருளடர்ந்தே.

(இ-ள்.) அப்போது மதுராபுரிக் கரசனான பாண்டியன் சொல்லுகிறான். சுவாமீ! மதுரை சூழ்ந்த பாண்டியதேசமுழுதும் மழைபெய்யும்படியாக நெடிய கார்மேகங்கள் நினைத்தபோது வரும்படி அறுவகைமந்திரமும் நான் தெரிந்துக் கொள்ளவும் அனுக்கிரகஞ் செய்தருளும். திக்குக்காயிரஞ்சுனை யுடைய திருநாககிரி அர்த்தநாரீஸ்வரனே! கிருபை செய்தருளுவீ ரென்றான் பாண்டிய ராஜன்.—எ-று. (௩உ)

அனைவேவர முதவென்றபின் னிருமைக்கோர் சித்தன்
றனைநீயறு வகையாகிய தன்மைத்தொகை வகையை
மனமாயுரை யெனவோதினன் மதுரேச னுணர்ந்தே
யெனமாமுகி றனையேதளை யிடும்வித்தை படிததான்.

(இ-ள்.) இந்தவரங் கொடுத்தருளு மென்றான். பின்பு சுவாமி! அங்ஙனம் பிருக்கும் வசித்திருக்கின்ற ஒரு சித்தனைப்பார்த்து நீ யாறு வகையான வசீகர மந்திர

ததொகைவருகைவிதியெல்லாம் நன்மனத்துடனே சொல்லென்ன அவரா யாவுந்தெரிந்துணர்ந்து இனத்துடனே மேகங்களை வரவழைத்து தளையிட்டு பொதியமலையில் வசிக்கும்படி வசியமந்திரவித்தையெல்லாம் மதுரை ராஜனான பாண்டியராஜன் படித்துக் கொண்டான்.—எ-று. (௫௩)

காரைத்தளை யிடும்வித்தைபடித்தே துகை தவர்கோன்
பாரிற்பல கற்றுனியல் பகர்கொற்கைய நிறைபாய்
வாரிப்புவிதனையோர்கொடை வைத்தான் மகவருளென்
றூற்புத குமரத்தட வடியிற்றவ முயல்வான்.

(இ-ள்.) மேகங்களை யழைத்து விலங்கிட்டு வைக்கும் வித்தையெல்லாம் படித்தோதி வசிகர மந்திரமூசலான பலவித்தைகளு மியல்பாகக் கற்றான். கைதவற்கோனாகிய பாண்டியராஜன் சொல்லுதற்கரிய கொற்கையருக்கெல்லா மிறைவனாகிக் கடல் சூழ்ந்த பூமியெல்லாம் ஒருகுடைக்கீழடக்கி அரசாட்சிசெய திருந்தான். பின்புபுத்திரசந்தானம் பெற்றுக்கொள்ளுமபடியாக அற்புதமாக நீர்நிறைந்த குமார தீர்த்தக்கரையருகில் தவ முயல நின்றான்.—எ-று. (௫௪)

வந்திச்சிலை மீதேயொரு லிங்கத்தினை வருக
வந்திப்பிறை யணிவோன்றனை யாவாகன நிறுவிச்
சிந்தைப்படி பெறவர்ச்சனை செய்தேவலம் வந்தா
னந்துக்குழை யுமைபாகர் நயந்தார்வர மீந்தார்.

(இ-ள்) அங்ஙனம் வந்திச் சிலையின்மீது ஒரு சிவலிங்கம் பிரதிஷ்டை செய்து சந்திரசேகரனான பரமேஸ்வரனை ஆவாகனஞ் செய்து நிறுவி மனதொருமிப்பாக அர்ச்சனைசெய்து பிரதக்ஷணம் வந்து வணங்கி வாழ்த்தினான். அப்போது சங்குக் குழையரான உமையொரு பாகர் கிருபை கூர்ந்து பாண்டியனுக்கு நல்ல வரங்களைக் கொடுத்தருளினார்.—எ-று. (௫௫)

அப்போதினி லுமைபங்கரை யம்பொற்பதம் வந்தித்
தெப்போதினு மென்னுவகை யிகத்தே பெறவருளி
மெய்ப்பாகிய பாண்டீசுரன் விமலன்திருநாமந்
தப்பாதுல கேழும்புகழ் தலமொன்றும தானதால்.

(இ-ள்) அப்போது அர்த்த நாரீஸ்வரனை வந்தித்து வணங்கி காலவேற்றுமையில்லாமல் எக்காலத்திலும் யிகலோகத்தில் யாவருஞ் சந்தானம் பெறும் வரப்பிரசாதங்கள் தரும்படி யனுக்கிரகஞ் செய்தருளினார். அங்ஙனம் பாண்டியன் பூசித்தபடியினாலே பாண்டீஸ்வர னென்று திருப்பெய ரேழுலோகமும் விளங்கச் சொல்லுந் தலமென்றார்.—எ-று. (௫௬)

வரபாண்டியன் முருகீசன் மலர்த்தாளினை போற்றி
யுரபாங்குறு தன்தீர்த்தமு மொன்றங்ஙனெடுத்தான்
திரபாண்டிய தீர்த்தப்பெயர் செப்பும் மதில்மூழ்கில்
வரபாங்குறு வசியம்முத லாறும்பலவருமால்.

(இ-ள்.) மேன்மையான வரப்பிரசாதமெல்லாம் பெற்றுக் கொண்ட பாண்டியராஜன் முருகீஸ்வர சுவாமிபாதங்களைப் போற்றிசெய்து பாங்கா யுடர்ந்த மலையி

டத்தில் தன்பெயரா லொருதீர்த்த முண்டாக்கினன். அதின் பெயர் பாண்டிய தீர்த்தமென் றுலகஞ் சொல்லும். அந்தத் தீர்த்தத்தில் மூழ்கினவர்களுக்கு வசியமுதலான ஆறுவகை மந்திரசித்தியும், பலசித்திகளும் வசிகரிகரும் என்றவாறு. (௪௭)

அவ்வித்தைக ளத்தப்பனா யானேத வறிந்தே
கவ்வைத்துய ரறவேமுறை கற்றானருள் பெற்றான்
செவ்வித்தமிழ் மதுரைக்கண செழியன் குரவின்கீழ்
மெய்வித்தகர் மறையோர்பெற மிகுதான மளித்தான்.

(இ-ள்) அந்தவித்தைக ளெல்லாம் அர்த்த நாரீஸ்வர சுவாமி அனுக்கிரகஞ்செய்ய சற்றுஞ் சாஞ்சல்லிய மில்லாமல் மனத்தி லமையும்படி கற்றான். சுவாமி கிருபையும் பெற்றான். அழகிய தமிழ் மதுரைப் பதியரசனான பாண்டிய ராஜன் அங்ஙனங் குராமரத்தின் கீழ் நித்தியரான பெரியோர்களும் மறையோர்களும் பெறும்படிக்கு அளவில்லாத தருமங் கொடுத்தான்.—எ-று. (௪௮)

வரசங்கமர் மறையந்தணர் மகிழ்போசனமடவீ
டரசன்சதுர் மறைவேதியர் கட்காம்பலவுதவித்
திரசங்கநற் றமிழ்த்தென்னவர் திலதன்புகழ்ச் செழியன்
புரசங்க நெடுங்கூடல் புகுந்தானிறை யருளால்.

(இ-ள்.) நல்லவரமுடைய குருலிங்க சங்கமரான மயேசுரர்கள், வேதப்பிராமணர்கள் மகிழ்ச்சியாகும்படி திருத்தியாக அமுதபோசனங் கொடுத்தருளி மடங்கள், கிரகங்கள் அமைத்துவைத்து சதுர்மறை வேதியர்களுக் கெல்லாம் அகரங்கள் செய்தமைத்து ஸ்திரமான சங்கத்தமிழ் நாட்டுத் தென்னவர் குலத்தில் அன்புகள் விளங்கிய செழியனென்னும் பாண்டியராஜன சங்கபுரமான நெடிய மதுரை நகரிற் சென்று சேர்ந்து சிவனருளினால் அரசுசெய்து வாழ்ந் திருந்தான்.—எ-று. (௪௯)

சென்றப்பணி மலைநாயகர் செயலின் செழுமுகில்வந்
தொன்றத்தரு மொருமந்திர வுரையாலெழுமுகிலை
வென்றிச்செழி யன்கட்டி விலங்கிட்டவ னுட்டில்
நின்றெப்பொழு துந்திங்கள்மும் மாரிநிகழ்வித்தான்.

(இ-ள்.) அங்ஙனம் திருநாக கிரியீசுரன் அருளினால் சப்தமேகங்களையு மொரு வசீகர மந்திர செபத்தினாலே வரவழைத்துக் கட்டி விலங்கிட்டு வைத்துக் கொண்டு தென்னாடு முழுதும் நினைத்த பொழுதெல்லாம் மாதமுன்று மழை பெய்யும்படியாக நிகழ்வித்தருளினான். விசயவெற்றியுடைய சோழிய னென்னும் பாண்டிய ராஜன்—எ-று. (௫0)

மறையோர்மன்னர் வணிகேசர்பின் வருமாநிலநார்த்தங்
குறையோர்தின முமைபாகர்செங் கோட்டிற் புகுங்காட்டில்
நிறையோதிய வரமும்மொரு நிலையுமின்பநெறியும்
பிறையோடொளிர் சடிலன் கதி பிறழ் பாதமுமடைவார்.

(இ-ள்.) பிராமணர்கள், அரசர்கள், வசியர்கள், சூத்திரர்கள் இந்நாலு வருணத்தாரும்வந்து தினந் தினந் தங்கள் மனக்குறையெல்லாந் தீரும்படிக்குச் சிவனது

திருச்செங்கோட்டில் வந்து புகுந்த் மாத்திரத்திலே நிறையாகச் சொன்ன அ ரு, மொருமனநிலேயும், பேரின்ப நெறியும் இவையெல்லாம் பெற்றுப் பிறை யொ ளிபொருந்திய செஞ்சடைச் சிவனுடைய பதங்களிற் சேர்வார்கள்.—எ-று. (சக)

வைகைத்துறை வணகாணிய வர்விப்புனல்மூழ்கி
யுய்கைக்குயர் பாண்டீசுர ருளமுற்றவர் கடல்சூழ்
செய்கைப்புவி யாள்வாரவர் சேர்விற்புயலுளதாம்
பொய்கைச்சர வணனன்புளர் பொன்னூடுபுரப்பார்.

(இ-ள்.) வைகைத் துறைகளுன பாண்டியராஜன் கண்டருளிய சுனேயில் மூழ் கி யுயயும்படி யுபர்ந்த பாண்டீசுவரரை உள்ளதகில்நினைத்துத் தியானித்தவர்கள் கடல்சூழ்ந்த விந்தப்பூமண்டல முழுதும் அரசுசெயது வாழுவாரகள். அவாகளிருக்கு மிடத்து நல்லமழை பெய்யும். குமாரருக்கு அன்புடையவாகளாகி பின்பொன்னூட் டிலெய்தி சொர்க்க போகம் அனுபவித் திருப்பார்கள்.—எ-று. (சஉ)

திருச் சிற்றம்பலம்.

பாண்டீசுரர்ச் சருக்கம் முற்றும்.

ஆகச்சருக்கம்சஉ-க்கு திருவிருத்தம் ஙாஉ0.

---

# பணிமலைகாவலர் சருக்கம்.

---

சூதர்சவு னகர்முதலாஞ் சுருதிமறை யவர்க்குரைத்த
காதைமொழிந் தனமிப்பாற் கன்னிபங்கன் திருவிளையாட்
டதெனச்செங் கோட்டிருந்த விருந்தவத்தோ ரியம்பவுணர்ந்
தோ துவன்சிற் சிலவறிந்த நாகவனைச் சிவனருளால்.

(இ-ள்.) சூதமுனிவர் சவுனகாதி முனிவர்களுக்குச் சொன்ன புராணத்தைச் சொன்னேம். அதன்பின்பு உமையொரு பாகன் திருவிளையாட் டிதுவென்று திருச் செங்கோட்டிலிருந்த தவமுனிவர்கள் சொல்ல வறிந்துணர்ந்து நாககிரி யீசுவரர் அனுக்கிரகத்தினுல் யாம் சிலதெரிந்த மட்டுஞ் சொல்லுகிறேம்.—எ-று. (க)

கடையுகத்தில் வர்னவருங் காரணமீதென்னவனந்தப்
படையுயர்ச்சி யசுவபதி பதிவேந்தா மிடைவதனூற்
கொடையுயர்ச்சி கொடியுயர்ச்சி கொண்டலிற் றூரகைத்தாளத்
தொடையுயர்ச்சி யெனமருளுந் தோற்றத்திற் பொலிந்தனவால்.

(இ-ள்.) கடையுகமான கலியுகத்தில் தேவர்களினேவரு மிதுவொரு காரண மென்று ஆச்சரியபபட அளவில்லாத சேனைமிகுதி யுடைய அசுவபதி, கெஜபதியெ ன்னப்பட்ட இராஜாகள் உலகமெலலாம் திக்குவிஜயஞ் செய்து யெங்கும் புகழ்த்தக ததாக நெருங்கிக குடையினுலும், கொடியினுலும் உயர்ந்தருளி மேகங்கள் போலும், நக்ஷத்திரப் பங்திகள போலும், முத்துமாலைகள, வெற்றிமாலையாகச் சூடி உலகத்தா மருளும்படி காட்சியாகத் தோன்ற அரசு செய்திருந்தார்கள்.—எ-று. (உ)

சிறிவட வாமுகம்போற் றென்றிசைப்பிற் பரந்துலகை
நூறிவரும் படைவடக்கின் னென்படைகள் கணக்குகைத்து
மீறுவதவுஞ் சமயமன்றி வேறுசமை யம்புவிமே
லேறவிடே மெனவனந்த யவனர்படை யெழுந்துளவால்.

(இ-ள்.) வடவா முகாக்கினி கொதித் தெழுந்தது போலும். வடதிசையி லிருந்து புறப்பட்டு தென்தேசங்க ளெல்லாம் பரந்து நிபிடிகாரமாக உலகமெல்லாம் நிர்த்தூளியாகும்படி மிகுந்த ரதகெஜதுரக பதாதி யென்னும் சதுரங்க சேனைகளும்; கணக்கில்லாத ஆயுதசன்னகத்துடனே நிறைந்து புறப்பட்டுத் தங்கள் சமயமேலாகும்படியாக மற்ற சமயங்களை யெல்லாம் மீறவிடோம். இந்தப் பூமண்டலத்தி லென்று அனந்தங்கோடி யவனர்கள் படைகளை யெழுப்பித் தொடர்ந்து நடந்தார்கள்.எ-று

வடகட்றென் றிசையெழுந்த வாறெனவெண் கிறியமிழக்
குடகடலு மெழுந்ததெனக் குடதிசையின் மிசையீண்டத்
தடகடல்சூ ழுநிலதலந் தனிலுள ரிதோரயினாந்
தடல்கடவு மறிவிளையாட் டெனவவன ரார்ப்பரித்தார்.

(இ-ள்.) வடசமுத்திரங் கொதித் தெழுந்து, பிரளயகால வெள்ளம் பரந்து, திக்குத் திசையெங்கும் பெருகிவருவதுபோலும். அஷ்டகுல பருவதங்களும் பூமியில் மீளும்படி மேறகடல் கீழ்கடலும் பிரளயமாக வந்தது போலும். எட்டுத் திக்குஞ் சூழ்ந்து எங்கும் பரவி சேறு சமுத்திரத்தின் பெருமைக்கடல் சூழ்ந்த வுலகத்தில் யாவரும், பத்தாவது-கலிக்க அவதாரமாக மஹாவிஷ்ணு திருவிளையாட்டிதுவென் றனைவரும் புகழ மேககெற்சிதம் போலும் வீராதி வீரராகிய யவனர்கள் ஆர்ப்பரித்தார்கள்.—எ-று. (௪)

வில்லவனும் வளவனும்நன் மீனவனும் புறஞ் சாய்ந்து
கொல்லியினும் பொதியினுங்கோ நேரியினுங்குடியேற
நல்லருணம் பரனன்றி நம்வலியால் முடிவிலவென்
றெல்லையில்வன் றுயரீண்டி யெழுவனகேட் டழுங்குவரால்.

(இ-ள்.) சேரன், சோழன், பாண்டிய னென்னும் அரசர்களும் பெருக்கத்தைக் கண்டு தங்கள்சேனைகளுடனே யவரைச் சாயந்து முறிந்தோடிக கொல்லி மலையிலுங் கோநேரிமலையிலும், பொதியமலையிலுங் குடியாகச் சென்றார்கள், மற்ற சனங்களெல்லாங் கலங்கிக் கிருபா மூர்த்தியான பரமசிவன் செயலன்றி நமது வலுமையினு லொன்று முடியா தென்று அளவில்லாத துயரத்துடனே யவ ராப்பரித்து வரும் தொனிகள் கேட்டு நலிந்தார்கள்.—எ-று. (௫)

வேறு.

காசிநீள்மல்லி கார்ச்சுனங்கன கச்சிமெச்சுகே தாரகீ
டாசில்தென்கயி லாயம்வேங்கட மருணைதில்லையோ டானுறைந்
தேசிலாலைய முற்றுமெற்ற வெழுந்தநாசு கொழுந்துபோய்
வீசுதெற்கி னடைந்துதென்றிசை மேவினார்விறலவனரே.

(இ-ள்.) காசிநகர், மல்லிகார்ச்சுன பருவதம், காஞ்சிபுரம், இமயகேதாரம், திருக்காளத்தி, வடவேங்கடம், அருணாசலஞ், சிதம்பரம் இவைமுதலான சிவஸ்தலங்கள் முழுமையுங் கெடுப்பதாக வெழுமபி வந்த யவனர் சேனை முன்னணிபோய்த் தெற்குதிசையில் நெருங்கி மகாஸ்தலங்க ளெல்லாஞ் சின்ன பின்னஞ் செய்து வெற்றிகொள்வோ மென்று வந்தார்கள்.—எ-று. (௬)

கூடல்மாநகர் மீதுபோயெதிர் கூடலார் தமையோட்டவே
பாடலீடின ராலவாயினர் கோயிலுறவி யுளாயினூர்
நீடுவேதியர் நீள்புராணிகர் நேமியாதிபர் நேமியோர்
நாடிநீடுதெய் வீகவீறுள நாடி நீர்வரல்நீதென.

(இ-ள்) மதுரைத்தலத்தில் வந்து சூழ்ந்து யெதிராளிக ளெல்லா மோடும்படியாகக் கூக்குரலிட்டு பற்பல ஆயுதங்களையும் வீசி யுத்தந் தொடங்கித் திருவாலவாய்ச் சொக்கநாதர் கோவிலுட் புகுந்தார்கள். அங்ஙன மிருந்த வேதியர்கள் ஆகமீக புராணிகர், மன்னவர்கள் மற்றும் அனைவர்களுங் கூடி யவனர்களைத் தடுத்து மறித்து இந்தத்தலத்தில் சுவாமிகாரண மகிமையுண்டு. இங்கனம் நீங்கள் நாடிவருவது மஹா குற்றமென்று சொன்னார்கள்.—எ-று. (எ)

எனவுரைத்தபின் மனநடுக்குற யவனருக்கிறை வெகுளியுற்
றுனதுபத்தியு முனதுசத்தியு முலகினிப்பொழு துணர்கவென்
புனைகொள் சொக்கர்த மருள்விளைத்திடு புதுமையிற்சிலவறியனு
மெனனுறத்தெய்வ வலியுணர்த்திடில் மதுரையிற்பதிகுறுகிலேம்.

(இ-ள்.) அப்படி யவர்கள் சொன்னதைக் கேட்டுச் சற்றே மனம் நடுக்கமாகிய யவனருக்கிறையாகிய இராஜன் மகா கோபத்துடனே நல்லது உங்கள் பத்தியு மங்கள் சுவாமி சத்தியு மிப்போது நாமறிகிறோம், அழகிய சொக்கநாத சுவாமி யருள் விளைவை புதுமையாக நாங்கள் சற்றேயறியும்படி தெய்வீக மகிமை காரணந் தெரியப் படுத்தினால் இந்தமதுரைத தலத்தை விட்டு அப்பால போகிறோ மென்று சொன்னார்கள்—எ-று. (அ)

என்றுரைத்தபி னன்றுசொக்கனை யின்பமுற்று வணங்கியே
யொன்றெமக்குற வின்றசித்தியி லொன்றவுற்றருள் கென்றபி
னன்றெனச்சக லங்கள்கற்றவோர் நன்குறுவஞ்சித்தர் வந்தொனனு
ரின்றுசொற்றது வென்றியிற்செய்வ மெனறிசைத்தனனெம்பிரான்.

(இ-ள்.) அப்படி அவர்கள் சொன்ன பின்பு வேதியர் முதலானபேர்கள் அன்புடனே சொக்கநாதர் பாதத்தில் விழுந்து வணங்கிச சுவாமி தேவரீரொரு சித்தியாணகாரண மகிமை யிப்போது செய்தருளுவீ ரென்று சொலல, நல்லது! அப்படியே சகல கலைக்கியானமுங் கற்ற ஒருயேவலாம், வல்லசித்த ரென்றும் பெயரா யுடைத்தாய் எழுந்தருளி வருகிறோம். ஒன்றாராய யவனாகள் சொன்ன காரியஞ் செய்து முடித்து வெற்றிமாலை சூடுகிறோம் யெனறுசொல்லி சொக்கலிங்கமூர்த்தி அபயஸ்தங் கொடுத்தருளினார்.—எ-று. (கூ)

வேறு.

எல்லாம்வல சித்தரெனப்பெய ரினிதோதிச்
சொல்லாலுயர் சுரர்முதலேனையர் சூழ்போதக்
கல்லாரவ லங்கலிலங்குறு காற்பீடத்
தொல்லார்கள் மயங்கவிருந்தன ருமைபாகர்.

(இ-ள்.) அப்போதங்ஙனம் தேவர்கள், முனிவர்கள் சூழ்ந்துவர செங்கழுநீர்மாலைசூடிக்கொண்டு பகைவர் மயங்கும்படி அறுகாற் பீடத்திலே எல்லாம் வல்ல சித்த

றென்னும் பெயருடனே எழுந்தருளி வாதிருந்தார். உமையொரு பாகரான சொக்க நாதர்.—எ-று. ௧0)

யவனர்க்கிறை யும்படைவீரரு மிகல் கூறிக்
கவனப்பரி யேறியசொக்கர் கனம்பார்த்துப்
பவனத்தெழு பூளைகள்போ லிப்பதி யாவுஞ்
செவனற்கிடு வங்கொடுவெஞ்சிவ பொருளென்றார்.

(இ-ள்.) அப்போது யவனர்க் கதிபதியான இராஜனும், படைத்தலைவர்களான வீரர்களும் பகைவார்த்தை சொல்லிக் கவனமாய்ப் பரியேறிவந்த சொக்கருடைய பெருமையைப் பார்த்துச் சீக்கிரம் ஒருதெய்வ மகிமை காரண மெங்களுக் கறியப்படுத்தினால் சரி, இல்லாவிட்டால் சூறைக் காற்றில் பூளைப்பூப் பரந்தது போலுமிந்தத் தலத்தை யெல்லாம அக்கினிப் பிரவேசஞ் செய்து சிவ பொருளெல்லாங் கவர்ந்து கொள்வோமென்று சொன்னார்கள்.—எ-று. (௧௧)

என்னும்பகை மன்னர்முன்னெல்லாம் வலசித்த
ருன்னும்படியே தெனவுமுயர்ந்த கல்யானை
முன்னிங்கள் கரும்புகொடுப்பது முன்வாங்கித்
தின்னும்பொழு திந்தநகர்க்கிடர் செய்யேமால்.

(இ-ள்) என்றிப்படிச் சொன்ன சத்துருக்கள் முன்னே, எல்லாம் வல்லசித்தர் உங்கள் நினைவென்ன? என்னகாரணஞ் செய்யவேணுமென்று வினவ, உங்களுடைய கல்யானைக்கு நாங்கள் கரும்பு முறித்துக் கொடுக்க அதுவாங்கித் தின்றால் இந்தத்தலத்துக்கு இடர் செயவதல்லவென்று சொனனார்கள்.—எ-று. (௧௨)

எனமேவல ரோதநுமிக்கு முறித்திட்டார்
கனமேவுகல் யானையருந்துங் கனநோக்கிச்
சினமேவிய யவனர்பயந்து திடுக்குற்று
றினமேவிய தென்றிசைநோக்கின ரெழுகின்றார்.

(இ-ள்.) என்றிப்படிப் பகைருர் சொல்லிக் கரும்புமுறித்திட்டார்கள். பெருமையா யுடர்ந்த கல்யானை துதிக்கையைநீட்டி, யவன ரிட்ட கரும்பை வாங்கித் தின்றது. அதுகண்டு சினம்பொருந்திய வனர்கள பயந்து மனநடுக்க முற்றுத் துணுக்கமாகத் தங்களினங்களுடனே தெற்குத் திசையை விட்டு வடதிசை நோக்கி யெழும்பி வருகிறார்கள்—எ-று. (௧௩)

வருகின்ற செருத்தொழில் யவனர் மலைந்தோரைப்
பொருகின்றவர் செங்கோடெங்கும் புகவேண்டித்
திருகின்றன ரவ்வளவிற்சிவன் முருகேசச்
னுருகின்றன சிந்தையரிற்சில ருற்றார்.

(இ-ள்) அமரில் வலிமையாக வந்தெதிர்த்த பேர்களைப் பொருதி செயிக்கின்ற யவனவீரர்கள் திருச்செங்கோடு முதலாகிய ஸ்தலங்களைப் புகுந்தழிக்க வேண்டுமென்று யெண்ணி வருகின்றார்கள். அதுவேளையில் நாககிரியில் பரமேஸ்வரன், குமார

க்கடவுள் இவர்களுக்கு மனதுருக்கமாகி பத்தி சிரத்தை யுடையவர்களாகிய அன்பர்கள் சிலபே ரங்ஙனம் வந்து வசித்துற் றிருக்கின்றார்கள்.—எ-று. (௧௪)

அனனார்மலை நாடளவாகப் பொருடேடி
மின்னாரொடும் வெம்பலசேனை யிடைந்நீண்டப்
பன்னாக பணிககாரணிபா கன்பாங்கில்
பொன்னாக வரைக்கணிருந்தனர் புகழ்மிக்கார்.

(இ-ள்.) அப்படிக்கொத்த அன்பர்கள் மலையாளதேச பரியந்தஞ் சென்று பொருள் தேடிக்கொண்டு ஸ்ரீ சனங்களுடனேயுங், கொடிதாகிய பலசேனைக் கூட்டத்துடனேயும் மீண்டுவந் திங்ஙனம நாககிரியி லுமையொருபாகா மலைத்தலச் சாரலில வந்திருந்தார்கள். கீர்த்தியிலும். வலிமையிலு மொப்பாரு மிக்காரு மிலலாத சுத்தவீரர்கள்.—எ-று. (௧௫)

அப்போது துலுக்கர் மலுக்க ரமர்க்கேகு
மெய்ப்பாதக வினைகளறிந்தனர் விறல்வேந்த
ரொப்பாருமில் வீமணனோவண னுமாங்கா
திப்பாரில் மெறுங்கணன் மூவரு மெதிர்சென்றார்.

(இ-ள்.) அதுகாலையில் துலுக்கர், மலுக்கர் முதலாகிய யவனர்படைகள் சட்ல்போலும் வந்து நிறைந்து சனத்தைச் சூழ்ந்து இடுக்கண் செய்யப பட்ட பாதக வினைகளை யறிந்தார்கள். வெற்றியுடைய வேந்தர்களாகிய ஒப்பிலலாத வீமணன், ஓவணன், மெறுங்கண னென்னும் பெயரை யுடைய மூன்று வீரர்களும், யவனர் சேனைக் கெதிர் சென்று மலைந்தார்கள்.—எ-று. (௧௬)

சென்றாரெதிர் வந்ததுலுக்கர் செருச் சேனை
முன்றாவிய வேலகொடும வாள்கொடு மூளைசெய்தே
கொனறார்மறு வானைமுறிந்து குலைந்தோடி
யொன்றாகவிழுந்த பிணக்கா டொருகோடி.

(இ-ள்.) சென்ற வீரர்கள் மலைந் தெதிர்த்துவந்த துலுக்கச் சேனைகள்மேற் பாய்ந்து வேல், வாள் முதலாகிய பலவாயுதங்களெறிந்து வீசிப் பகைவர் சேனைகளில் அளவில்லாத பேர்களை வதைசெயதார்கள். மறறுள்ள சேனைகளெல்லா முறிந்து குலைந்தோடி ஒருவர் பேரி லொருவர் வீழ்ந்து பிணக்காடாக யிறந்தார்கள். ஒருகோடி யவனர்கள்,—எ-று. (௧௭)

யானைப்படை வாளிப்படைபட் டவலறுநின்
றேனைக்குதி ரைப்படைமெய்யி லிளைத்தோடிற்
சேனைத்தலை வன்பாசறையுஞ் சிதைவாக்கி
யேனைப்படை வீருமோட்ட மெடுத்தாரால்.

(இ-ள்.) ஆனைக்கூட்டங்க ளெல்லாம் அஸ்திரங்கள்பட் டேருவி விழுந் திறக்கவும், பின்னணிக் குதிரைப்படையானது சின்னபின்னமாகச் சிதைந்தோடும்படி அஸ்திரப்பிரயோகஞ் செய்து சேனாதிபதி நிற்கின்ற பேரணி முழுதுங் கலங்கப் பாடிவீடு நிர்த்தூளி செய்தபின், மற்றுள்ள வீரர்களெல்லா முறிந்தோடிப் போனார்கள்,எ-று.

மலைபோல்வரு கரிகள் முறிந்திடும் வகைகூறி
லுலைபோரிடை பணிமலையார்முன னுரித்தாரொன்
றலைபோலமத வெள்ளமடங்கிட வமரோர்ந்து
சிலைபோல்வரு தன்படைமுறியச் செருவாடும்.

இ-ள். மலைபோலவருகின்ற யானைக்கூட்டங்கள் [illegible]பட்டுத் தெறிகெட்டு முறைமையைச் சொல்லுமிடத்து முற்காலம் போர்க்களத்தில் நாககிரியீசுரர் நம்மை யுரித்துபபோர்த்தாரொன்று பயந்து கடல்போலும் பெருகப்பட்டமும்மதப் பிரவாகம அடங்கச் சமாசாய்ந்து தமது கூட்டத்தணி யெல்லாமுறியச் செருக்களத்தில கையோயந்து வீழ்ந்துவாடி மயங்கி யிறந்துபோனதுபோலும்.—எறு. (௧௯)

கைபற்றனர் கால்கடிணிந்தனர் கணையாலே
மெய்பற்றனர் கம்பிகொளச்சின விழுகின்றார்
மொய்யப்படவம்பொடு சாய்பவர் முள்ளேனம்
வையத்து விழுந்தனபோல மடிந்தார்கள்.

இ-ள். காலாட்படைகளெல்லாம் மூவரசர்களாலிடும் அர்திரப்பிரயோகத்திலே கைகளற்றவர்களும், காலகளற்றவர்களும், உடம் பெலலாம் அமபுகள் ஊடுருவிததுளைபட்டு கம்பியசசுகள்போல் விழுகின்றவர்களும். அனந்தங்கோடி. அம்புகள உடமபெல்லாம தைத்து சாய்ந்து விழுமவாகள முட்பனறி பூமியில் வீழ்ந்ததுபோலும் அனேகம்போ யவனர்கள மடிந்து விழுந்தார்கள.—எறு. (௨௰)

துண்டம்படு கின்றவர் சென்னி துணிந்தோர்க
ளண்டம்புக நின்று தமங்க மெனக்கூறி
விண்டங்கினர் மண்டலமெங்கும் விழுந்தோர்பால்
கொண்டுந்திய குருதியின்வேலை கொதித்தோடும்.

இ-ள். கண்டதுண்டமாக விழுகின்றவர்கள் தலைகளற்று விண்ணிற்போய்த் தங்கள் தஙகள் தேசம இதுவென்றுசொல்லி விணணுலகம் அடைந்தாகள். பூமியில் விழுந்தபேர்கள் மேனியில் பொங்கிவழிந்து கடல்போலுங் கொதித்துப்பெருகினது ரத்தவெள்ளங்கள்.—எறு. (௨௧)

வேறு.

கூளிகளெமக்கிவை கொடுத்தன ரெனப்போய்
வாளிகள் பறித்தவர் பிணத்தினை மடுக்கும்
காளியை வணங்குவர் களத்துமிவை காணே
மீளிகடமக்குளிவர் மிக்கென விளம்பும்.

இ-ள். அப்படிமடிந்த போர்க்களத்தில் வந்து கூட்டமிட்ட பசாசுகள் நமக்கெல்லாம் நல்லவிருந்து செய்தாாகள்வீரர்களென்று பாடிக்கொணடுபோய் அம்புகளைப்பிடுங்கி இரத்தஙகளைக் குடித்து பிணஙகளைப் புசிக்குங் காளிகாதேவியை வணஙகிச் சிலபேய்கள் சொல்லுவது. முறகாலத்த ராயுதங்களில் இவ்வளவு புசிப்பும் நாமறியோ, மிந்தப் போர்க்களத்தில் நிறையப்புசித்தோம். வெறறிவீரர்கள் மஹாசுத்தவீரர்களென்று புகழ்ந்து சொல்லுஞ் சிலபேய்கள.—எறு. (௨௨)

தக்க னமரிற்பொரு சமர்க்கள மடைந்தே
யொக்கவே மிசைந்தெம துறும்பசி தணிந்தெ
மக்களமிதற்குநிக ரன்றுய ரணங்கின்
மிக்குணவு பெற்றனமிவ் வீரர்வடி வர்களால்.

இ-ள். தக்கன் செய்த யாகத்தை வீரபத்திர சுவாமி வந்தழித்த சமர்க்களத்துக் குப்போனோம். அங்கேவரும் பிணங்கள் புசித்துப் பசிதீர்ந்தோம். அந்தப்போர்க்களமும், இந்தச்சமர்க்களத்திற்கு நிகரல்ல. இங்கே குருதி மாமிசங்கள் நிறையப்புசித்தோ. மிந்த வீரர்களாகிலும் ஆண்மையிலு முயர்ந்தவர்களென்று பேய்களெல்லாங் கொண்டாடிப்பாடிக் கொம்மையடித்தது.—எ-று. (உரு)

குருவற்றன ரகுதிப்பிணை குவையிற்றிரடரவே
வருதுர்ச்சன யவனப்படை மடிவுற்றிடைமுழுகி
செருவற்றனர் புறமுற்றனர் திசைகெட்டவரானோர்
கருவற்றனர் திருவற்றனர் கதியற்றனரெனவே.

இ-ள். திக்கற்றுவிழுந்த அருதிப்பிணங்கள் மலைபோலுங்குவிய துர்ச்சனராகிய யவனர்படையாவு மடிந்து இடையுறமுழுகவே உயுத்தமடங்கிற்று. தெறிகெட்டு திசைகெட் டோடிப் போனவர்க ளனந்தங்கோடி. யவனர்கள் கருவற்றுக் குருவற்றுக் கதியுமற்றார்கள்.—எ-று. (உ௬)

அதுகண்டுள வவனர்க்கிறை யணிவெம்படையுடனே
பதிகொண்டமர் செய்யும்பணி பணிவெற்பை யடைந்தான்
மதிகொண்டுய ரொருமூவர் மலைத்தாள்வரை மாண்டா
ரெதிர்கொண்டுயர் வெற்பேற வெழுந்தார் யவனேசர்.

இ-ள். அவ்வாறானதுகண்டு யவன ராஜன் மஹாகோபத்துடனே கையில்பிடித்த வாளாயுதங்களை வீசிக்கொண்டு, மலைத்தலத்தை வளைந்து, மூவர்வீரர்களுடனே மலைந்து, போர்பொருதி செயித்தார்கள். அப்போதங்ஙனம் அமர்சாய்ந்தனர். வீரர்கள், யவனர்கள் ஆர்ப்பரித்து உயர்ச்சியுடைய மலையின்பேரி லேறும்படியாக யவன ராஜாகளை மடிந்து நடந்தார்கள்.—எ-று. (உ௭)

இகல்வீமனை னெழிலோவண னிடையர்மிரங் கனனே
டகலாதமர் செய்தேபணி யணிமாமலை யடியின்
மிகவாவிகள் விடலாலமர் விண்ணுடு புரக்கு
மகவானறி கின்றான் வெள்ளை மதயானையின் வந்தான்.

(இ-ள்.) வெற்றியுடைய வீமனன், அழகிய ஓவணன், இரங்கனன் இவர்களுடனே பிரியாதபடி யுத்தஞ்செய்து அணிபொருந்திய பணிமலை யடிவாரத்தி லுசிதமான உயிர்களைவிட்டபடியினாலே தேவலோகாதிபதியான தேவேந்திரன் அறிந்து வெள்ளையானையின்மீது வந்தான்.—எ-று. (உ௮)

வந்தன்புடன் மூவோரையு மகிழ்வா லெதிர் கண்டே
சிந்தும்படி யவனர்ப்பொரு திரள்சாய வெறிந்தான்

முந்துங்கண வச்சிரப்படை முரண்முற்று முருக்கிப்
பிந்துஞ்சில யவனப்படை பெரிதந்தக ராஞர்.

இ-ள். அப்படித் தேவேந்திரன்வந்து அன்புடனே மூன்று ராசரையும் மகிழ்ச்சியாக வெதிர்கொண்டு கண்டு மலையேறிவருகிற யவனர் கூட்டங்களெல்லாஞ் சாய்ந்து விழும்படியாகத் தனது வச்சிராயுதத்தைவிட்டு சருவசங்காரஞ்செய்து யவன ராஜர்களையுஞ் செயித்துவெற்றிகொண்டான். பின்னணியில்வந்த யவனர் படைகளெல்லாம் மிகவும் அந்தகராய்ப்போனார்கள்.—எ-று. (௨௭)

அந்தோபணி மலைதன்னை யடைந்தோமிது பட்டோம்
நொந்தோமினி யிடமேதென நொய்யாகி மடிந்தார்
பைந்தோரொடொரு குழைபங்கர் பணிகார்வரையுடையார்
முந்தோகையின மூவர்களுமோர் முத்தித்திற மருள்வார்.

இ-ள். அப்படி நகரகாரி விழுந்த யவனர்கள் அய்யயோ! நாமிந்த நாககிரி தலத்தில வந்துசேர்ந்து அதற்கிடையூறுசெய்தபடியினாலே மிகவும் நொந்துமுடிந்தோம். இனி நமக்குப் பிழைக்க வழியில்லையென்று மனவியாகுலத்துடனே மடிந்துபோனார்கள். அப்போது தங்களை உமையொருபாகர் பெருங்கருணையுடன் மலையிற் சேர்ந்தருளிய மூவரசர்க்கும் மேகவின்பமான மோக்ஷசாமீப்பியசிவபத மருளும்படிக்குக் கருணைகூர்ந்தார்.—எ-று.

படுவாருநும் முயிரும்பல தனமுந் தருகின்றோம்
முடுமாபதி முகவல்லிய ருடனும்பதி யும்வீ
விடுமாவிகள் பெறுவீரென விமலன்புக லுதனும்
கடுவாணவ முண்டோயிரு கழல் வேண்டுது மென்றார்.

(இ-ள்.) சமர்க்களத்திற் பட்டிறந்துபோன படைவீரர்களனைவரையும், உங்களுயிர்களையும், பலநிதிகளையுந் தருகிறோம். சந்திரன்போலு முகமழகிய ஸ்ரீ சனங்களுடனேகூடி யுங்கள் நகரங்களைச் சேர்ந்து வாழுவீர்களாக. இறந்துபோன உயிர்களெல்லாம் பெறுவீர்கள். அப்படி வரந்தருகிறோமென்று சுவாமி சொல்லவு மின்னமுங் கடிதாகிய ஆணவமுண்டோ, தேவரீருடைய சீர்பாதங்களே யெங்களுக்கு வேண்டியதென்று வீரர்கள் சொன்னார்கள். எ-று. (௨௯)

அவ்வாறு பணிக்கார்வரை யானுள்ள முகந்தே
மைவாள்பணி மலைகாவல னென்றே பெயர் வினவிக்
கைவாள்படை யுடனேயடி யார்வல்வினை கடிந்தே
இவ்வார்பணி மலைகாத்தரு ளென நல்வர மீந்தார்.

(இ-ள்.) அந்தப்பிரகாரம் திருநாககிரி ஈசுரன் திருவுள மகிழ்ச்சியாகி முகில் சூழ்ந்த பணிமலை காவலனென்று பெயரிட்டெழுந்தருளி நின்று வந்த அடியார்கள் வல்வினைகளெல்லாந் தீர்த்தருளி நமது அன்பாக அழகிய பணிமலைத் தலத்தைக் காத்தருளுவீரென்று நல்ல வரங்கொடுத்தருளினார் சுவாமி. எ-று. (௩௦)

என்றன்றுமை பாகன்கிரு பையினு லினி தருள
வன்றின்று துடங்கிப் புவி யழிகாலமு மழியா

வென்றன் றிற லொடுமீசன் மலர்த்தாளிணைவணங்கி
னின்றன்புட னடியார்கள் நினைத்தந் திருவருள்வார்

(இ-ள்.) என்றிப்படி யுமையொருபாகர் கிருபானுக்கிரகஞ் செய்தருள ஊன முழுதமின்று வரையில உலகமழிகின்ற காலத்திலும, அழியாமல வலிய திறம்பொருந்திச் சிவனது பாதார விந்தங்களை வணங்கித் துதித்துக் கொண்டு மலைகாவலராக வெழுந்தருளியிரு அன்புடைய அடியார்கள் நினைவின் பிரகாரம திருவருள் கொடுத்தருளுகின்றார்கள். எ-று. (௩௧)

அறுமாமுக னருளாதுமைம் முகநாயக னருளின்
பெறுகாரண வகையாலுமெய் போராவகை யுற்று
ருறுகாரண மிதுவென்றிவ் வுலகோர் பகருகையால்
மறுகாரணம் வேண்டாமிவர் வரமே நல்ல வரமே.

(இ-ள்.) ஆறுமுகக் குமாரருடைய திருவுளக் கிருபையினாலும், ஐந்துமுகப் பரமேசுவரன் திருவருட் காரணமகிமையினாலும், அழிவில்லாமல விளங்கியிருக்கின்றார்கள். இது வொரு காரணம. சிவனது கிருபையினாலுண்டாகியதென்று உலகமெல்லாஞ் சொல்லுகிறபடியினாலே வேறே காரணங்களும வேண்டாம். இந்தப்பணிமலை காவலருடைய வரமே நன்மையானவரம் —எ-று. (௩௨)

வேறு

அணிமலைகாவல னரும்பொற் கொங்கையாள்
பணிமலைகாவலர் பதங்க ளேத்தியே
துணிமலை வெம்பவத் தொலையவாண்டவா
றெணிமலர் வேந்தனு மிருதுவெண்டுமால்.

இ-ள். அழகிய மலை அரசன்மகளை வாமபாகத்திற் சேர்த்தருளிய அர்த்தநாரீஸ்வரருடைய பாதாரவிந்தங்களையும. பணிமலைகாவலருடைய பாதங்களையும் யாதாமொருவர் கண்ணாரத்தெரிசனஞ் செய்து வணங்கித் தோத்திரஞ்செய்தது பிறப்புதோறும வந்து பாராநின்ற வெய்ய பவங்களெல்லாந் தொலைந்துபோக ஆண்டு ரட்சித்தருளவது கண்டு மல வேதனுமிந்தப் பதமவேண்டுவான். —எ-று. (௩௩)

இங்கிதுகதைகேட் டினிதுபோற்றினோ
ரங்கவர்க்குரைநவோ ரறிவிற் கற்றுளோர்
பொங்கு பாவங்கள்போய்ப் புகழுஞ் செல்வமுந்
தங்கிய சங்கரன் சரணஞ் சேர்வரே.

(இ-ள்.) இவ்வா மிந்தப்புராண கதையைக்கேட்டு இன்பமாகப் போற்றி செய்பவர்கள், அவர்களுக்குச் சொல்லுபவர்கள் அறிவினாலே கற்றவர்கள் இவர்களுடைய பாவங்களெல்லாந் தீர்ந்து கீர்த்தியுஞ் செல்வமும பொருந்தி இம்மையில் வாழ்ந்திருந்து மறுமையில மேன்மையுடைய பாதாரவிந்தங்களிற் சேர்வார்கள் —எ-று. (௩௪)

பணிமலை காவலர் சருக்கம முற்றும்.

ஆக சருக்கம ௩௫-க்கு திருவிருத்தம ௩௨௱௩

திருச்சிற்றம்பலம்.

அர்த்தநாரீஸ்வரர் துணை.